உ

ஓம்

குகமயம்

திருமலைக்குமாரசுவாமி

# திருப்புகழ்




குமரன் புகழ் கவிக் கொண்டல்

நகரக்கிழாரென்னும்

நகரம் சங்கரபாண்டியனார்

இயற்றியது.

(1116-ம௵ கார்த்திகைமீ 27-ம௳ திருமலைக் குமரன் முன்னிலையில் அரங்கேற்றியது)

தென்காசி, லோகாம்பிகை பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

1940.

# பொருளடக்கம்.



***

திருநெல்வேலி ஜில்லா போர்டு மாசித்தலைவரும்
மிட்டாதாரருமாகிய ராவ்பகதூர்
உயர்திருவாளர் I. C. ஈஸ்வரன் பிள்ளையவர்கள்
எழுதிய

# முகவுரை.

---

திருவாளர் நகரம் சங்கரபாண்டியனார் இயற்றிய திருமலைக் குமாரசுவாமி திருப்புகழ் நூலை நான் பார்வையிட்டேன். திருமலைக்குமரன் பாற் பேரன்பு பூண்டு இந்நூல் யாக்கப்பட்டமையால் படிப்பவர் மனதைப் பிணிக்குந் தகைமையுடைய தென்பதற்கு ஐயமில்லை. அருணகிரிநாதர் காலத்திற்குப்பின் திருப்புகழ் பாடினார் யாருமில்லை. திருமலைக் குமரன் மேற்றிருப்புகழ் பாடினாருமில்லை. இவ்விரு குறையுந் தீர்த்த பெருமை இந்நூலாசிரியருக்கே உரியது. நூல்முழுதும் சந்தப்பாக்களால் ஆகி இன்பச்சுவைபயக்கும் பண்புடையதாய்க் குமரக்கடவுளின் சிறப்பையும் பேராற்றலையும் அருட்பெருங் குணத்தையும் விதந்து ஓதுகின்றது. கடவுள் வழிபாட்டில் ஈடுபட்டவர்கள் தவிர தமிழிலக்கியமறிவாரும் பலபல தமிழ் நயங்களைக்கண்டு களிக்கலாம். பாக்களின் நடையும் செவ்விதாக அமைந்து விளங்குகிறது. நூலாசிரியரின் அறிவாகிய ஊற்றில்தோன்றி ஆற்றுப் பெருக்காய் ஓடி பக்தியென்னும் வயலிற் பாய்ந்து பேரின்பப் பயிர் விளைவிக்கும் பான்மையது. சந்தப்பாக்கள் தவிர மற்றும் பலவிதப் பாக்களும் அனாயாசமாய் இயற்றும் வல்லமையுடையவரென்பதும் இவர்களியற்றிய பிற நூல்களால் தெரியலாம். தென்னாடெங்கும் இன்றும் புகழ் ஒலிக்குந் தமிழ்க்கவி சொக்கம்பட்டித் தானாதிபதி பொன்னம்பலம் பிள்ளையவர்களின் வழித்தோன்றலாகிய இப்பாவலர் நன்னயம் பயப்பப் பாடுவது ஓர் வியப்பல்ல. இதுகாறும், இத்துணைப் பெருமை வாய்ந்த புலவரைத் தமிழுலகம் அறியாதிருந்ததே வியப்பு.

குமாரனுக்கு அகத்தாலும் புறத்தாலுந் தொண்டு செய்வதையே உயிர் நிலையாகக் கொண்ட இவர்கள் எதிர்காலத்தில் தமிழுலகுக்கும் பக்தியுலகுக்கும் பயனளிப்பாரென்றும் இவர்களியற்றிய மற்ற நூல்களும் பண்டைப் பெருநூல்கள் போல இன்னும் மிகுதியாய் இசைபெற்று நிலவுமென்பதும் எனது பூரண நம்பிக்கை. இப்படியே குமாரனும் அருள்புரிவாராக.

இலஞ்சி,
22—11—40.

*I. C. Iswaran Pillai.*

அண்ணாமலைப்பல்கலைக்கழக உறுப்பினரும் தமிழ்ப்பேறறிஞரும்
ஹிந்து சமய பரிபாலன போர்டின் மாஜி மெம்பருமான
உயர்திரு T. K. சிதம்பரநாதமுதலியார் அவர்கள் B. A. B. L.
எழுதிய

## முகவுரை.

நாற்பது ஐம்பது வருஷங்களுக்கு முன் திருநெல்வேலி ஜில்லாவிற் பல இடங்களிலும் நம்மவர் தமிழை அனுபவித்துக் கற்று வந்தார்கள். முக்கியமாக சங்கரன்கோவில் வட்டகையில் படித்தவர் தொகை மிகுதி என்று சொல்லலாம். இப்போது கூட அந்த வட்டகையில் நம்மவர் தமிழை அனுபவித்துக்கொண்டும் செய்யுள் இனங்களின் அமைப்புகளை அனுபவித்துக்கொண்டும் இருக்கிறார்கள் என்று தெரிகிறது. நகரம் சங்கரபாண்டியனார் இயற்றியுள்ள கொம்பில்லா வெண்பா நிரோட்டகவெண்பா கொம்பில்லா வண்ணம் திருப்புகழ் வண்ணம் இவைகளில் சிலவற்றைப்படித்துப் பார்த்தேன். செய்யுள்களை வாசிக்கும்போது தமிழ்ச்சொற்கள் எத்தனையோ விதமான வின்னியாசங்களுக்கு இடங்கொடுத்து விளையாடுகின்றன என்பது தெரிகிறது. சொல் எல்லாம் எளிமையாகவே அமைந்திருப்பதால் அந்த விளையாட்டுக்குள் இழுக்கிறது. செய்யுளிற் கிடைக்கிற சுகத்தில் இது ஒன்று. இந்தசுகத்தை அடைய விரும்புகிறவர்கள் சங்கரபாண்டி

யரைர் இயற்றியுள்ள நூல்களை வாசித்து அனுபவிப்பார்களென்று நம்புகிறேன். உண்மையிலேயே இந்த விளையாட்டெல்லாம் தமிழர்களுக்கு ஒரு உல்லாசத்தைக் கொடுக்கும், சந்தேகம் இல்லை.

தென்காசி,
15—9—40.

டி. கே. சிதம்பரநாத முதலியார்,

கல்கத்தா பல்கலைக் கழக டாகூர் சட்டவிரிவுரையாளரும் சென்னைக் சட்டக்கல்லூரி மாசிபோராசிரியரும் அண்ணுமலைப் பல்கலைகழகத் தமிழ்ப் பேராசிரியருமான உயர்திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் எம். ஏ. எம் எல். எழுதிய

## முகவுரை.

"திருமலைக்குமாரசுவாமி திருப்புகழ்" என்னும் வண்ணப் பாட்டு நூலானது யாவர்க்கும் இனிது விளங்கும் எளிய நயமான சொன்னடையில் அமைந்துள்ளது. அது பலவகை இனிய சந்தகுணங்கள் அமையப்பெற்றுப் புதிது புதிதான இன்பம் பயப்பது. ஏனைத் திருப்புகழ்போல இன்பச்சுவைகளை மிகைபட இந்நூல்காட்டாமை பாராட்டத்தக்கது முருகப்பெருமான் அன்பர்மனத்தில் தங்கியருளி அவர்நினைத்ததை வெற்றி பெற முடித்தருளும் இயல்பினரென்பதும் புறப்பகையும், அகப்பகையும் நாம் வெல்வதற்கு அவர் பெருந்துணை புரிவாரென்பதும் அவர் பரஞான குருவென்பதும் இந்நூலுள் நன்கு விளக்கப்பட்டன. மலைவளங்கள்பலவும் இந்நூலுட் பலவிடங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளன. மொழியின் தன்மைக்கு நுங்கின் சுவையை உவமை கூறியது முதலிய பலபுதுநயங்கள் ஆங்காங்கு காணப்படுகின்றன. இந்நூல் தமிழ்வாணர்க்கும், முருகன் அன்பர்க்கும் நல்லதொரு புதிய அறிவு விருந்தாகத் திகழற்பாலது.

அண்ணுமலைநகர்,
6—10—40.

கா. சுப்பிரமணியபிள்ளை,
தமிழ்ப் பேராசிரியர்,
அண்ணுமலை பல்கலைக் கழகம்.

சென்னை உயர்தர நீதிமன்றம் வழக்கறிஞரும் சென்னை அரசின் மாசி மந்திரியுமான உயர்திருவாளர் S. முத்தையா முதலியார் அவர்கள் B. A. B. L., C. I. E. எழுதிய

## முகவுரை.

கவிஞன் அல்லாத என்னை முகவுரை எழுதும்படி கேட்பது, சாதாரண மக்களின் அபிப்பிராயமும் வரவேற்பும் எவ்வித மிருக்கும் என்பதை அறியும் நோக்கத்துடன் என்றே நினைக்கின்றேன்.

முருகன் தமிழ் நாட்டின் முதல் தெய்வம். தமிழரின் ஒரே தெய்வமென்று சொல்வாருமுளர். சிவன் குமாரன் என்பார் "பேசின் ஆங்கவன் பாலெடு பேதகன் அல்லன்". ஆற்றில் நீராடி தேனும் தினைமாவும் தின்று மலைகளிலும் காட்டிலும் திரிபவன். எளியர் நண்பன். இவன் வழிபாடே பண்டை நாள் தெய்வ வழிபாடென்பதில் ஐயமில்லை. செந்தமிழ்ப் பாடல் கேட்டுக் களிப்போன். தமிழ் நாடெங்கும் இப்பாடல்கள் பரந்து கிடக்கின்றன. ஆயினும் வித்வான் திரு. சங்கரபாண்டியம் பிள்ளை பாடிய திருப்புகழ் மிகையாகா. இன்றும் என்றும் தமிழ் நாட்டில் அன்பும் அறிவும் அளிப்பனவாகும். இவ்வாசிரியர் கல்வி கேள்விகளில் நிறைந்தவர் என்று தெரிகிறது. இவரது உளமாகிய ஊற்றில் ஊறித் ததும்பி வழிந்ததே இக்கவிகள். இன்சுவை ததும்புகின்றது. நிறைந்த அன்பு மணம் பொதுளியது. எளிய சொற்களும் விழுமிய பொருள்களும் வாய்ந்தனவாகும். அன்பு ரசம் சொட்டச்சொட்ட வருகின்ற இக்கவிகளை குமரன் பணிவார்கள் மகிழ்வுடன் அணைவார்களென்பது என் நம்பிக்கை. அன்பும் ஆனந்தமும் அதிகரிக்கும் என்பதில் தடையில்லை. கவிநயம் பாராட்டற் பாலது. இத்தகைய கவிகள் இன்னும் எத்தனை தோன்றினும் அவை தமிழ்வளர்ச்சிக்குப் பெருந்துணையாகுமென்பதை அறிஞர் ஒப்புவார்கள். இவ்வாசிரியரைப்போற்றி என்பாலும் என்னுளார்பாலும் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

திருமயிலை,
22—10—40.

S. Muthiah.

சென்னை, மயிலாப்பூர் திருப்புகழ் மணியும் உயர்
தர நீதிமன்றம் வழக்கறிஞருமான உயர் திருவாளர்
**T. M.** கிருஷ்ணசுவாமி அய்யர் அவர்கள் B.A., B.L., எழுதிய

## முகவுரை.

ஸ்ரீ அருணகிரிநாதர் பூர்ண அத்துவித நிலையில் நின்று முருகன் அருளால் திருப்புகழ்கள் பாடி வெகுப்ரஸித்தி பெற்றார். அன்னார்துறையில் இறங்கி ஏராளமாய் திருப்புகழ் பாட முயன்றவர் இதுவரை ஒருவரையும் காணோம் என்றிருந்தோம். இப்போது தான் ஸ்ரீ சங்கரபாண்டியனார் என்னும் முருகனடியார் திருப்புகழ்வெள்ளத்தால் முருகனைப் பாராட்டத் துணிந்தார். இதுவும் முருகன் அருளே. மஹா கவி கம்பர் பாடியுள்ளது.

"முத்தமிழ்த் துறையின் முறைபோகிய
உத்தமக் கவிகட்கொன்றுணர்த்துவன்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ".

பக்தர்கள் பாடிய பாட்டுகளுக்கு எவர்தாம் பழுது சொல்ல வல்லார். முருகனே ஏற்றுக்கொண்ட கவிக்கு மறு யார்தான் சொல்லவல்லவர். அடியார்கள் மிகவும் இப்பாக்களின் வெளியீட்டினால் பெருநலம் பெறுவர் என்று நம்புகிறேன்.

"திருப்புகழ் வல்லவர் சீர்பாதத்தூளிஎன் சென்னியதே"
என்று கற்பித்த பெருமையை மேற்கொண்ட

பால விலாசம்,
மயிலாப்பூர்.
25—10—40

அடியேன்
டி. எம். கிருஷ்ணசாமி அய்யர்.

## பதிப்புரை.

திருமலைக்குமாரசுவாமி திருப்புகழ் என்னும் இந்நூலை அச்சியற்ற முன் வந்த தென்காசி, லோகாம்பிகை அச்சுக்கூடத்தாருக்குத் தமிழுலகம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டது. இத்திருப்புகழாசிரியர் இயற்றிய பல நூல்களையும் இதற்குமுனே அச்சியற்றி ஒரு அரும்பணி செய்தார்கள். ஆயின் இந்நூல் அந்த நூல்களைப்போலல்லாமல் அளவில் மிகவும் பெரிதாகி ஆயிரத்தெட்டுப் பாக்கள் கொண்ட பெருநூலானதால் இதைக் கூடிய விரைவில் எவ்விதம் உலகத்தாருக்கு வெளிப்படுத்துவ தென்று கவலையுற்றபோது இந்த அச்சுக்கூடத்தின் சார்பாக மானேஜர் திருவாளர் S. K. சேதுராமலிங்கம் பிள்ளை அவர்கள் உதாரகுணத்துடனும் நல்லன்புடனும் தாமே முன்வந்து கவலையை மாற்றி ஊக்கமளித்தார்கள். குமரன் புகழ் பாக்களாயிருப்பதால் தாம் இதுவரை செய்த அச்சியற்றுந் தொண்டு ஒருபுறமிருக்க இன்னும் அக்கடவுளுக்கு பணியாற்றி வருவோமென்று முதன் முதலில் தங்கள் செலவிலேயே நூலை அச்சியற்றுவிப்பதாயும் நூல் வெளியான பின் கொஞ்சம் கொஞ்சமாய் அச்சியற்றும் செலவைப் பெற்றுக்கொள்வதாயுங்கூறி அச்சியற்றும் வேலையும் உடனே தொடங்கி விட்டனர். அச்சுக்கூடத் தலைவர் திருவாளர் ஆ. உலகநாதபிள்ளை அவர்கள் திருச்செந்தூர்க் கோவிலில் அநேக திருப்பணிகள் செய்தும் கோபுரத்தைப் புதுப்பிக்கும் பணிக்குப் பொருள்தேடியும் பக்தியில் உயர்ந்தும் விளங்கிய திருவிற்றிருவுடை ஆறுமுகச் சாமியின் வழித்தோன்றலாதலின் இவரும் இயற்கையிலேயே குகவழிபாடுடையவர்.

இப்பெற்றியுடைய தலைவரும் மானேஜரும் ஒன்றித்து இந்நூலுக்கென ஓர் அழகிய குமரன் திருவுருவப் படஞ் செய்வித்துக் கூடிய விரைவில் யாவரும் விரும்பும்படியான முறையில் அச்சியற்றிப் பல நிறங்களில் கலிக்கோ பைண்டுஞ் செய்து நூலை வெளிப்படுத்திக் காலத்தினாற் பெரிதாகிச்செய்யாமற் செய்த உதவிக்கு யாங்ஙனம் கைமாறு செய்ய இயலும். தங்கள் தொழில் பெருகவும் எல்லா நலன்கள் பெறவும் குமரனை வாழ்த்துதலே இயன்றதாகும்.

இந்நூலை அச்சியற்ற முதன் முதல் அன்புடன் பொருளுதவி செய்த திருவாளர் சென்னை அட்வகேட் நல்லசிவன் பிள்ளை அவர்களையும் புலியூர் S. கோமதிநாயகம் பிள்ளையவர்களையும் இங்கு குறிப்பிடவேண்டியது மூக்கியதோர் கடமை.

இந்நூலையும் இந்நூலாசிரியர் செய்த பிறநூல்களையும் வெளிப்படுத்தக் காரணமாயிருந்த திருவாளர் நகரம் வே. முத்துவீருக் கவிராயர் அவர்களுக்கும் தமிழன்பர்கள் நன்றி உரியதாகின்றது. இவரன்றி இந்நூல்கள் கதிரவன் ஒளி பார்த்திரா. இந்நூல்களை வெளிப்படுத்த இவர் காட்டிய ஆர்வத்திற்கு ஓர் அளவில்லை வெளியாக்குவதிலும் அவர் எடுத்த உழைப்பு அதிகம். தானும் தமிழ்க்கல்விநலம் நிரம்பப்பெற்று நற்கவி செப்புந் திறனுடையவர். பரந்த நோக்கமும் நல்லறிவும் படைத்தவர். ஒழுக்கம் பொறுமை பக்தியில் உயர்ந்தவர். சோதிட நூலை நன்கு பயின்றவர். இத்திருப்புகழை அச்சியற்றுங் காலை உடல் நலம் குன்றின காலத்தும் மூன்றுமாதமாய் இடைவிடாது அச்சுப்பிழை திருத்தி இவர் செய்த உதவி அருஞ்சால்புடைத்து. எடுத்த கருமத்தைச் செய்யும்போழ்து பிற கருமங்களை நோக்காமலும் தன் கருமத்தை இயற்றுவதிலேயே முழு மனதையும் செலுத்தி இட்டபணியை வெற்றிபெற நிறைவேற்றித் தந்த தகைமையாளர். இவர்போன்றவர்களுக்காகவே 'மெய் வருத்தம் பாரார் பசி நோக்கார் கண் துஞ்சார்.........கருமமே கண்ணாயினார்' என்ற வாக்கு எழுந்ததுபோலும். இந்நூல் முகவுரையைப் பார்வையிட்டு அங்குள்ள கருத்துக்களை த்தர்க்கித்தும் ஊக்கம் தளராது நன்மை செய்த நற்சிலர் இத்தன்மை வாய்ந்த நண்பருக்குத் திருமலைக்குமரன் அருள் சுரந்து எல்லா வளங்களும் ஈந்து அவருக்கும் அவர் உறவினருக்கும் நன்மை பயப்பாராக.

தென்காசி,
1116-ஞ கார்த்திகை 27உ
12—12—1940.

A. C. ஷண்முகநயினார்,
பி. ஏ., பி. எல்.,
அட்வொகேட்.

ஓம்



# திருமலைக்குமாரசுவாமி திருப்புகழ்.

## முன்னுரை.

பதி பசு பாசமென்ற முப்பொருள்களும் என்றுமுள்ள பொருள்கள். கட்புலனாகும் பூதப்பொருள்கள் போலத் தோன்றி நின்று ஒழிதன்மாலையன வல்லாது எவராலும் ஆக்கப்படாதனவும், அழிக்க இயலாதனவுமாகிய ஓர் தனி இலக்கணமுடையன. எனினும் ஒவ்வொன்றுந் தன்னியற்கைக் குணங்களால் வெவ்வேறும். பதி என்பது கடவுள், பசு என்பது ஆன்மா; உயிரென்று சொல்லவும் படும், பாசமென்பது மலம்.

பதி என்றுமுள்ளவர், எங்கும் நிறைந்தவர், எல்லாம் நடத்துபவர், முற்றறிவுள்ளவர், என்றும் மகிழ்ச்சியுடையவர், இயற்கையுணர்வுடையவர், இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவர், சுவதந்திரர், உருவம் அருவம் இல்லாதவர். இக்குணமுள்ளவரென்றுதல் இத்தன்மையரென்றுதல் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடையோராகிய ஆன்மாக்களால் அறிய முடியாது. பதிசெய்யும் நன்மைகளால் ஒருவாறுஊகிக்கலாம். அவருடைய திருவருளால் மட்டும் நன்கு தெளியலாம்.

> மைப்படிந்த கண்ணாளுந்தானுங் கச்சி
> மயானத்தான் வார்சடையா னென்னினல்லான்
> ஒப்புடையனல்ல னொருவனல்ல னோரூ
> ரனல்லனோ ருவமனில்லி

அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு
மவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படிய னிந்நிறத் தனிவ் வண்ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே.

என்பது தேவாரம்.

பதியாகிய இறைவன் தம்பொருட்டன்றி ஆன்மாக்களின் பொருட்டுச் செய்யுந் தொழில்கள் ஐந்து. அவை படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல், என்பன. படைத்தலாவது உலகத்திலுள்ள உயிருள் பொருள்களையும் உயிரில் பொருள்களையும் பிரபஞ்சத்துக்கு முதற் காரணமாகிய மாயையினின்றுந் தோற்றுவித்தல். காத்தலாவது தோற்றுவிக்கப்பட்ட பொருள்களை வேண்டியவரை நிறுத்துதல். அழித்தலாவது இப்பொருள்களை கட்புலனாகாதபடி ஒழித்தல்: அதாவது முதற்காரணத்தில் ஒடுக்குதல். மறைத்தலாவது ஆன்மாக்கள் மீடேறும்படி உலகப்பற்றையும் நன்மை தீமையென்ற கர்மபேதத்தையும் மறைப்பது. அருளலாவது ஆன்மாக்களைப் பாசத்தினின்றும் நீக்கிப் பேரின்பமாகிய சிவத்துவத்தைக் கொடுத்தல். இவ்வைந்து தொழில்களையும் இறைவன்றன் வல்லமையினாற் செய்கின்றான். இவ்வல்லமை திருவருட் சத்தி என்று சொல்லப்படும். பதி என்றுமுள்ள பொருளாகலின் சத்து என்றும், அறிவே உருவமாகலின் சித்து என்றும், சுத்த இன்பமுடையதாகலின் ஆனந்தமென்றுங் கருத்துத்தோன்றச் சச்சிதானந்தம் என்றுங் கூறப்படும். உயிர்களுடன் பொன்னும் ஒளியும் பூவும் மணமும் பண்ணும் இசையும் போல ஒன்றாகியும் வேறாகியும் நிற்பன்.

உயிர் என்றும் அழியாப்பொருள். அது செய்யும் நல்வினை தீவினைகளால் எடுக்கும் உடம்பே அழியும். உயிர் உடம்பை எடுப்பது கடவுளின் விருப்பமேயொழியத் தன் விருப்பமன்று. கடவுள் உயிர்களைப் பாசத்தினின்று விடுவித்து மயக்கந் தீர்க்கவே அவைகளுக்குத் தனு (உடம்பு) கரணம் (மனமுதலிய கருவி) புவனம் (உடம்புக்கு ஆதாரமாகிய உலகம்) போகம் (அநுபவிக்கப்படும் பொருள்) களைக் கொடுக்கின்றார். ஆன்மாவுடன் தொடர்புள்ள பொருள் பாசம். இது ஆணவம் கன்மம் மாயை

யென மூவகைப்படும். ஆணவம் செம்பிற் களிம்புபோல் ஆன்மாக்களுடன் கலந்து அவைகளின் அறிவை மயக்கி மறைக்கும். நல்லுணர்வு வாராமற்றடுக்கும். மிக்க வல்லமையுடையது. எனினும் அறிவில்லாதது (சடம்). கன்மமென்பது உயிர்கள் மனமொழி மெய்களாற் செய்யப்படும் நல்வினை தீவினைகள். மாயை மிகவும் நுண்ணிய பொருள். உடம்புகளும் உலகங்களும் உயிரில்லாப் பொருள்களும் உயிருள் பொருள்களும் இதினின்றுந்தோற்றுவிக்கப்படுவன. கடவுள் அறிவுடைப்பொருள். பாசம் அறிவில்லாத பொருள். உயிர் தன்னறிவில்லாததால் அசித்துப் பொருள். அறிவிக்க அறிதலால் சித்துப்பொருள் சிதசித்துப்பொருள் என்றுங் கூறப்படும். உயிருக்கு உலகும் கடவுளும் வேண்டப்படும். கடவுளுக்கு உயிரும் உலகும் வேண்டப்படும். உயிரும் உலகும் இல்லாத வழி கடவுளும் வேண்டப்படுவதில்லை. கடவுள் உலகைக்கொண்டே உயிருக்கு நன்மை செய்து ஆட்கொள்ள வேண்டும். இம்மூன்று பொருள்களும் ஒன்றுக்கொன்று இன்றியமையாததாயிருக்கின்றன. உயிர் சடத்துடன் கூடும் போது சடம்போலவும் கடவுளுடன்கூடும் போது கடவுள் போலவும் நின்று, சார்ந்ததன் வண்ணமாயிருப்பது அதின் இயல்பு.

ஆன்மாக்கள் இயற்கையாகவே பாசங்களைச் சார்ந்து நிற்கின்றன. அப்படி நிற்கும் வரை அவைகளாற் கட்டுண்டு அமிழ்ந்தி நல்வினை தீவினைகளைச் செய்து பிறந்து பிறந்து இறக்கின்றன. நல்வினையின் பயனுய்த் துறக்க வின்பமும் தீவினையின் பயனுய் நரகமும் பெற்று மீண்டும் உலகிற்பிறந்து உழல்கின்றன. தீவினையாகிய இருப்பு விலங்கும் நல்வினையாகிய பொன் விலங்கும் உயிர்களைப் பாசத்துடன் பிணைக்கும். நல்வினைப்பயனுற்பெறுந் துறக்கவின்பமுந் தீவினையாற் பெறும் நரகமும் சின்னுளிருந்து கழிந்தபின் உலகிற் புகுத்திவிடும். ஆகவே பாசத்தைக் கடப்பது இவ்விருவினைகளையும் வெல்வது. இருவினை யொப்பு மலபரிபாகம் என்று பெறப்படும். இப்பாசமாகிய ஆணவம் மாயை கன்மமெனு மும்மலங்களினின்றும் நீங்குவது இறைவன் திருவருள் கொண்டே. இறைவன் என்றும் இரக்கமுள்ளவராகலான் ஆன்மாக்கள் பேரில் அருட்

பெருங்கருணை கூர்ந்து அவை உய்யும் வண்ணம் பிறப்பு இறப்புகளை ஈந்து பாசத்தின் தீக்குணத்தையும் தம்முடைய அருட்குணத்தையும் உணர்த்துகின்றான் இப்பாச நிலையினின்றும் விடுதலையடைந்த நிலைக்கே வீடு என்று பெயர். வீடெய்வது எளிதன்று. நல்லொழுக்கம் வழுவாதொழுக அறம் வளரு மென்றும் அறம் வளரப் பாவந்தேயுமென்றும் பாவந்தேய அறியாமை நீங்கு மென்றும் அறியாமை நீங்க நித்தவநித்தங்களது வேறுபாட்டுணர்வும் அழிதன் மாலையவாய இம்மை மறுமையின் பங்களினுவர்ப்பும் பிறவித்துன்பங்களுந் தோன்றும், அவை தோன்ற வீட்டின் கண் ஆசையுண்டாம். அஃதுண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய பயனில் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற்குக் காரணமாய யோகமுயற்சியுண்டாம், அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்றாகிய எனதென்பதும் அகப்பற்றாகிய யானென்பதும் விடும். ஆதலால் இவ்விரண்டு பற்றையும் உவர்த்து விடுகவென்று ஆசிரியர் பரிமேலழகர் கூறுகின்றார். விடாது வந்த பற்றுவிடுதற்கு எல்லாப் பொருள்களையும் பற்றி நின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டு நெறியை நன்னெறியென்று கொள்கவென்றும் எல்லாப் பொருட்குஞ் சார்பாய அச்செம்பொருளை உணர்ந்து இருவகைப் பற்றுமற ஒழுக வல்லரையின் அவனை முன்சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் பின் சாரமாட்டாவென்றும் முறையே

“பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றை
பற்றுக பற்று விடற்கு”

“சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்”

என்று திருவள்ளுவர் திருவாக்கமைத்தார்.

உயிர்கள் பாசத்தினின்றும் விடுபடப் பல்வேறு வகையிற் பிறவிகள் எடுக்கும். அவைகளின் நல்வினை தீவினைகளுக்கேற்பப் பிறப்பின் உயர்வு தாழ்வு அமையும். ஓரறிவுள்ள புல் பூண்டு தாவரமுதல் நீர்வாழ்வன, ஊர்வன, பறப்பன, காட்டிற்றிரிவன ஆறறிவுடைய மனிதர் தேவர் ஈறாகப் பிறவிகள் பல்வேறு வகைப்படும். எண்ணில்லாப் பிறவித் துன்பத்தில் இளைத்தவை மணிவாசகனார்

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்
செல்லா அநின்ற வித்தா வரசங்க மத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"

என்று உருகுகின்றார் ஆகலான் பெறுதற்கரியதும் நன்மை தீமை இதுவெனப் பகுத்தறியக்கூடிய தன்மையுமுள்ள மானுடப் பிறவியில் இறைவனடி சேர்தற்குரிய வழிகளைக் கடைப்பிடிப்பது சீரிய ஒழுக்கமாம்.

இறைவனைச்சேரும் வழிகள்:— அவ்வழிகள் சரியை கிரியை யோகம் ஞானமென நால்கள் அறையும். உயிர்கள் உய்யும் பொருட்டு இறைவன் உருவம் அருவம் உருவருவம் என்ற வடிவங் கொண்டருளுவான். அவ்வடிவங்களில் வழிபடு முறைகளைத் தமிழ் மறைகள் ஓதுகின்றன. இந்த வடிவங்களில் உருவத்திருமேனியை மட்டும் பொருளாகக்கொண்டு காயத்தினால் இறைவனை விதிப்படி வழிபடுவது சரியை. திருக்கோயிலில் அலகிடல் மெழுகல் சிவனடியாருக்குத் தொண்டு செய்தல் முதலியன. கிரியையாவது அருவுருவத் திருமேனியைப் பொருளாகக்கொண்டு அகத்தாலும் புறத்தாலும் இத்திருமேனியுள்ள வடிவத்தை விதிப்படி வணங்குதல். சிவலிங்கத்தை அகத்தும் புறத்தும் பூசித்தல் பூசைக்கு வேண்டும் வசதிகளை அமைத்துக்கொள்ளல் முதலியன. யோகமாவது ஆன்மமே மேலீட்டினால் அறிவு வளரவளர உண்மைப்பொருள் அருவத்திருமேனியென்றுணர்ந்து அகத்தால் மட்டும் விதிப்படி போற்றுதல். ஞானமாவது அகத்தாலும் புறத்தாலும் வழிபடுதலை விட்டு முப்பொருள்களின் உண்மையை ஞானநூல்கள் வாயிலாய்க்கேட்டு சிந்தித்துத்தெளிதல். இம்மூன்றையும் மனிதப்பிறவியின் கண் அநுபவமுடையவர்பாற்கேட்டு அதனால் மெய்ப்பொருளை உணர்ந்தவர் பிறப்பின் கண் வாராத நெறியை எய்துவர் என்று கேள்வி ஞானத்தின் உயர்வையும் அந்த உபதேச மொழிகளை

உள்ளம் அளவைகளானும் பொருந்துமாற்றானுந் தெளிந்து ஆராய்தல் என்று சிந்தனை ஞானத்தின் உயர்வையும் பிறப்பிற்கு முதற்காரணமாகிய அவிச்சைகெட வீட்டிற்கு நிமித்த காரணமாகிய செவ்விய பொருளைக் காண்பதென்று தெளிதல் ஞானத்தின் உயர்வையும் முறையே

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி"

"ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு"

எனத் திருவள்ளுவர் திருவாக்கிட்டார். சரியை கிரியை யோகம் ஞானமென இந்நான்கு பாதங்களும் இறைவன் பால் உள்ளன்பு மேலீட்டினாலே பிறக்கும். இவ்வழிபாடின்றேல் இப் பாதங்களின் பயனாகிய வீடில்லையென்பது உறுதி. ஆகலான் வீடுபெற விரும்புவானொருவன் இறைவனைத்தக்க வழியில் தன் னிலைக்கும் விருப்பத்திற்கு மேற்ப வழிபடுதல் முக்கிய முடைத் தென்பது பெற்றாம்.

இறைவன் உருவத் திருமேனிகள். இறைவன் அருவத்திருமேனி யுடையானெனினும் உயிர்களின் நன்மைக்காகத் தண்ணளி சுரந்து அநேக திருவுருவங்களில் தோன்றி மெய்யன்பர்களுக்கு இன்பம் பயப்பான். இத்திருவுருவங்களில் முக்கியமானவை சிவலிங்கம், உமாதேவி, நடேசர், விநாயகர், வைரவர், வீரபத்திரர், குமாரர் என்பன. சிவனும், நடேசரும் ஒன்று. உமை அவன்றிருவருட் சத்தி. ஏனையோர் அவன் திருக்குமாரர்கள். ஆயினும் அனைவரும் சிவனைவிட்டு வேறு காமல், அவனிடமிருந்து தோன்றிய திருவருட் சக்திகளென் பது முடிந்த முடிபு. மக்கள் தங்கள் மனதுக்கும் அறிவிற்குந் தக்கதொரு திருவுருவத்தைத் வழிபடுவர்களாயின், இறைவன் அவ்வுருவத்தின் வாயிலாய் அருள்புரிவான்.

"யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனுர் தாம் வருவர்" என்று சிவஞான சித்தியாரிலும்

"ஆருருவ வுள்கு வாருள்ளத் துள்ளே
யவ்வுருவாய் நிற்கின்ற வருளுந்தோன்றும்" என்று அப்பமூர்த்தியாலும்

"எவ்வெவர் தம்மையேனும் யாவரே யெனினும் போற்றின்
அவ்வவரிடமாக் கொண்டே யவர்க்கருடருவாய் போற்றி" என்று கந்தபுராணத்திலுங் கூறப்படுவது இதற்கு மேற்கோள்களாகும்.

குமரனுஞ் சிவனும் ஒன்று:—

திருப்புகழென்னும் இந்நூல் நுதலும் பொருள் இறைவன் உருவத்திருமேனிகளில் ஒன்றாகிய குமாரரென்னுங் கடவுள் பற்றியே. இறைவனுக்கு நான்கு திருக்குமாரர்களுண்டெனினும் சுப்பிரமணியமென்னுந் திருமகனர் இக்கலியுகத்தில் மெய்யன்பர்களுக்கு விரைவிலே இன்னருள் சுரக்குங் கருணைக்கடலாம் ஓர் பேரண்ணலாய்த் திகழ்வது கண்கூடாதலால் குமாரர் எனப் போற்றப்படும் ஓர் தனிப்பெற்றி வாய்ந்தவர். சுந்தரமூர்த்தி நாயனரும் இவரைப் பிள்ளையாகப் பாவித்து

"திங்கள் தங்கு சடையின் மேலோர் திரைகள் வந்து புரளவீசுங்
கங்கையாளேல் வாய்திறவாள் கணபதியேல் வயிறுதாரி
யங்கை வேலான் குமரன்பிள்ளை" யென்று

ஓதியுள்ளார். அவரிருக்குங் கோயில்களைக் குமாரர் கோயிலென்றும் முருகன் கோயிலென்றும் வழங்குகின்றோம். மலையும் மலைசார்ந்த குறிஞ்சி நிலத்தில் ஞாபகத்துக்கும் சரித்திரங்களுக்கும் எட்டாத காலமுதல் மக்களறிந்த கடவுள் குமரன். காடுங் காடுசார்ந்த நிலமாகிய முல்லைக் கடவுள் மாயோன். கடலுங்கடல் சார்ந்த இடமாகிய நெய்தல் நிலக்கடவுள் வருணன். பழனமும்

பழனஞ் சார்ந்தமருத நிலக்கடவுள் இந்திரன். வங்கிலஞ்சார்ந்த பாலை நிலக்கடவுள் ஆதித்தன். இங்ஙனமே தமிழ் நிலத்தை ஐந் திணைகளாகப்பிரித்து நிலத்துக்கேற்ற வழக்க ஒழுக்கங்களுக்கும் உலவுந்தொழிற்கு முகந்த கடவுள் இவர் இவரெனப் பண்டை நூல்கள் பகரும். இவ்வைதை ஒல்காப்பெரும் புகழ்தொல்காப்பியர் நூலில் பரக்கக்காணலாம். ஆகலின் குமரன் வழிபாடு தொல் காப்பியர் காலத்திற்கு முற்பட்டு மாட்சி பெற்றிருந்ததெனத் தெரிகிறது. தொல் காப்பியக்காலம் இன்னதென ஆராய்ச்சி யுலகம் இன்னும் முடிவு கட்டமுடியவில்லை. ஆராய ஆராய தொன்மையான நூல்களெல்லாம் இன்னுந் தொன்மையான தென்றே யூகிக்கப்படுகிறது. தொல்காப்பிய காலத்துக்கு முன்னிருந்த தமிழ்க்கழக மேடமர்ந்து குமரன் தமிழ் ஆராய்ந்தானெனின் அவன் வழிபாட்டின் றொன்மை இவ்வள வென்று அளக்குங் கருவியொன்றென்பதில்லை.

இது இவ்வாறிருக்க நிலநூல் வல்லாரும் இத்தொன்மைக்கு ஆதரவளிக்கின்றனர். ஆதியில் மக்கள் வாழ்வு தொடங்கப் பட்ட இடம் மலையாயிருந்திருக்க வேண்டுமென்றும், ஆதிமக்கள் வேடர்களாயிருந்தார்களென்றும், கல்லினாலேயே தங்களுக்கு வேண்டிய ஆயுதங்கள் செய்துகொண்டார்களெனவும், வெல்ஸ் முதலிய மேனாட்டுக் கலைஞானிகள் கூறுவர். இம்மலையுங் கல்லுஞ்சேர்ந்த நிலந்தான் குறிஞ்சியெனப்படுவது. குறிஞ்சி நிலமக்கள் தான் வேடுவர்கள். இவர்கள் தங்கள் கடவுளாகிய குமரனையும் ஒரு வேடுவனாகவே பாவித்துத் தாங்கள் வாழு நிலத்துக்கேற்ப "மலை கிழவ" "குறிஞ்சிக்கிழவ" என்று அழைத்து வந்தனரென்றும் அறிகின்றோம். பண்டைப் புலவ ராகிய கபிலரும் "இன்னிசை முரசிற் சுடர்ப்பூட் சேஎய்" என்றார் குமரன் சிவனார் மகனென்பது நாமறிந்த வழக்கெனி னும், அவனுந் தன்றந்தையும் வெவ்வேறு கடவுளல்ல. இரு வரும் ஒருவரே. சிவன் இறைவனும் குமரன் திருவருட் சத்தி யுமாம். மகாசூரனுக்கு வரமீய்ந்த காலை "எத்திறத்தரும் நுங் களை வெல்கிலர் எமது சத்தி வென்றிடும் என்றனன் கண்ணுதற் றலைவன்" என்று கந்தபுராணந் தெரிக்கும். இன்னும் அப் புராணத்தில்

" ஆதலினமது சத்தியறு முகனவனும் யாமும்
பேதக மன்றால் நம் போற் பிரிவிலன்யாண்டும் நின்றான்
ஏதமில் குழவி போல்வான் "

" அருவமு முருவுமாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்களாறுங் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
ஒரு திரு முருகன் வந்தாங்குதித்தனன் உலகமுய்ய "

" காலமாய்க் காலமின்றிக் கருமமாய்க் கருமமின்றிக்
கோலமாய்க் கோலமின்றிக் குணங்களாய்க் குணங்களின்றி
ஞாலமாய் ஞாலமின்றியநாதியாய் நங்கட்கெல்லா
மூலமாயிருந்தவள்ளன் மூவிருமுகங்கொண்டுற்றான் "

" ஈசனேயவனுடலான் மதலையாயினன் காண்
ஆசிலாவவனறு முகத் துண்மையாலறி நீ
பேசிலாங்கவன் பரனொடு பேதகனல்லன் "

எனக்கூறியிருப்பதால் மகன் குமரன், தந்தை சிவனிடமிருந்து வேறுகானென்பது வெள்ளிடைமலை போற்றெள்ளிதிற்றெரியப்படும்.

தவிர, சுப்பிரமணிய பராக்கிரம நூலார் வேறொரு காரணமுங் கூறுவர். தாரகாக்கன் முதலிய அசுரர் புரங்களையுங் காமனையுஞ்சிவன் புன்னகையாலுந் திருவிழியாலு மெரித்தாற்போல குமாரக்கடவுளும் அசுரசேனைகளின் புரங்களையும் அவ்விதமே யழித்தலாலும் சிவனுக்கு முச்சத்தியிருத்தல் போலக் குகனுக்கும் இச்சை கிரியை ஞானமென்று மூன்று சத்தியிருத்தலாலும், வேதங்களும் ஆகமங்களும், அவனே மஹேஸ்வரன், அவனே உமை, விநாயகன், அவனே கந்தன், நீயே ஆண், பெண், நீயே குமரன், என்றலாலும் குமரனுஞ்சிவனும் ஒன்றே

என்பது மறைகளின் துணிபென்றார். அன்றியும் குமான், அயன் அரி அரன் என்னும் மூவருக்கு மேம்பட்டவனென்றும் அவனைக் காண அம்மூவரும் பரங்குன்றிலும் ஆவினன்குடியிலும் காத்திருப்பதாகவும்

"மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
புண்மிசை கொடியோனும் புங்கவ மூர்வோனும்
மலர்மிசை முதல்வனும்
பற்றுகின்று நின்காரணமாகப்
பரங்குன்று" எனப்பரி பாடலிலும்

"பலர்புகழ் மூவருந் தலைவராக
வேமுறு ஞாலந் தன்னிற்றோன்றி
.................................
ஆவினன் குடியசைதலு முரியன்" என்று ஆற்றுப்
படையிலும் போற்றி யிருத்தலானும் இவ்வுண்மை
காணக் கிடக்கின்றது.

இறைவனை ஆண் பாலாகவும் பெண் பாலாகவும் குழந்தையாகவும் விளித்துப்பாடுவது நம் தமிழ்நாட்டுக்கவிமரபு. எவ்வெப் பருவமாக உருவகித்துப்பாடினும் அவ்வப் பருவமாயிருப்பவனும் முழுமுதற் கடவுள் ஒருவனேயாம். ஆகவே இறைவனைக் குமானுக உருவகித்துப் பாடுவதும் கவிமரபுக்கொப்ப முடிந்த தொன்றும். மற்றும், குமான் பிறப்பை ஆராயின் சிவபெருமான் நெற்றிக் கண்ணிற்றோன்றிய ஆறுபொறிகள் வாயுவாற் சுமக்கப்பட்டுப் பின் அக்கினி அவற்றை வாங்கி கங்கையிற் சேர்க்கக் கங்கை சாவணப் பொய்கையிலிட குழந்தை வடிவெடுத்து பூமியில் விளையாடினதென்று கந்தபுராணம் கூறுவதால் குமான் சிவபிரானைப்போல் ஐம்பூதங்களுக்குங் காரணமுள்ளவனென்பது புலப்படும்.

சுமந்தது வாயுவும் அக்கினியும். கங்கையும் பொய்கையும் நீர். விளையாடிய பூமி மண். தோற்றுவித்தசிவன் ஆகாயம். ஆகையால் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமாகிய, ஐம்பூதங்களும் இதனுள்ளடங்கும்.

" வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையு மாயின் மையுமாய்க்
கோனாகியானென தென்றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை " என்பது மாணிக்கவாசகர்

திருவாக்கு

உமாதேவியுடனிருக்கும் ஒருவனும் கந்தனென்பது விளக்க சோமாஸ்கந்த உருவத்திருமேனி உண்டாயிற்று.

அருணகிரியாரும் " மலைமகளுமைதரு வாழ்வேமனோகர மன்றுளாடும் — சிவசிவ, அரஹர தேவா நமோ நம — திரிபுர மெரிசெய்த கோவே நமோ நம" என்று அருளிச் செய்திருக்கின்றார். இது தவிர மணிவாசகப் பெருந்தகையார் தனக்கு இறைவன் திருப்பெருந்துறையில் எழுந்தருளி ஒளிகாட்டியதை இவ்வாறு கூறுகின்றார்.

" செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதே
யுய்யும் வகையி னுயிர்ப்பறியேன் — வையத்
திருந்துறையுள் வேன் மடுத்தேன் சிந்தனைக்கே கோத்தான்
பெருந்துறையின் மேய பிரான்

இங்கு குகப்பெருமான் ஞான சக்தியாகிய வேலாயுதத்தை திருப் பெருந்துறை ஈசனுக்கமைத்துப் பாடியதால் முழு முத லிறைவனுக்கே ஞானமாகிய வேலுண்டென்றும் அவ்வேலே குமாரக்கடவுளாய்த் தோன்றியதென்றும் பெறப்படும். இது காறுங் கூறிய வாற்றான் குமரனும் சிவனும் வேறாகாமல் நின்ற ஒரு கடவுளே என்பது விளங்கும்.

குமரன், முருகன், குழகன் இளைஞன் அழகன் என்னும் பெயர்கள் ஒரு பொருட்கிளவி

குமரன் பண்பு. முருகு என்பது இளமை, அழகு, மணம் இறைமை) எனப் பலபொருளுணர்த்தும் ஒரு சொல். இந்நான்கு

குணங்களும் ஒருங்கே அமையப்பெற்றவன் முருகன் அல்லது குமரன். உலகிலுள்ள எல்லாவுயிர்களுந்தோன்றி யழிவதாலும் இறைவனொருவனே ஆதியந்தமின்றி என்றுமிருத்தலாலும் என்றும் இளமைக் குணமுடையவனவன்.

"மூவாய்பிறவாய் இறவாய் போற்றி"
"அழிவதும் ஆவதுங் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி" என்னுந் தமிழ் மறையாலும்
"மைந்தரேறே" பெரும்பெயர் முருக என்னும், நற்கீரர் வாக்காலும் புலப்படும்.

அழகென்பது இறைவனின் முக்கியதோரிலக்கணம். அஃதும் இயற்கையழகேயன்றிச் செயற்கையழகல்ல. "கைபுனைந்தியற் றாக்கவின் பெறுவனப்பு" என்னும் பெருமையுடையது "அழகனே ஆலவாயிலப்பனே" என்று வாகீசரும் இறைவனழகினைப் புகழ்ந்தோதினர்.

அழகு ஓர் அருங்குணம். அது நம் மனதைக் கவரும். இன்பமளிக்கும். பரவசமாக்கும். கண்களாற்பார்த்தும் மனத்தா லநுபவிக்க அநுபவிக்க நாம் அவ்வழகிலே ஈடுபட்டு அதற்கு ஆளாவோம்.

கோயில்களில் இறைவன் திருவுருவங்களை நறுமணம் நிறைந்த மலராலும் பசிய ஆடையாபரணங்களாலும் அழகு படுத்தி வழிபடுவது இந்தவுட்கருத்தைக் கொண்டென்பது உல கறிந்த உண்மை. இறைவழிபாட்டிற்கு அழகு இன்றியமையா தது.

உன்னைச் சிங்காரித்து வுன்னழகைப்பாராமல்
என்னைச்சிங்காரித் திருந்தென்பராபரமே.

என்று தாயுமானவரும் உண்மையழகின் தத்துவத்தை யறிந்தே கூறியிருக்கின்றார்.

இறைவனை அழகுபடுத்தி வழிபடுவதுமன்றி அவன் எறிபுலாவும் ஊர்திகளையும் உலாவுகின்ற வீதிகளையும் சுத்தமாக்கிச் சித்தரித்து வைத்திருப்பதும் இறைவனின் அழகுத் தன்மை பற்றியே.

கடலினுதிக்கின்ற இளஞ் சூரியன் செந்நிறத்தையுடையவனாகி மேலெழுவெழ கடல்நீர் நீலமும் பசுமையுங் கலந்து விளங்குகின்றமை போல இளஞ்சூரியனை இளையோனாகிய முருகனுக்கும் கடல் நீர்ப்பரப்பை அவன் ஊர்ந்து செல்லும் மயிலுக்கும் உவமித்து பசிய நிறமயிலின் மீதுவிளங்கும் செவ்வொளியினையுடைய குமரனை

உலகமுவப்ப வலனேர் புதிரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற் கண்டா அங்
கோவற விமைக்குஞ் சேண் விளங்கவிரொளி

என்ற நக்கீரர் புனைந்துரையின் அழகு வியக்கத்தக்கதே.

அவன் இயற்கை யழகைக்கண்டு தொழ "நாலாயிரங் கண் படைத்திலனேயந்த நான்முகனே என்று" அருணகிரியார் வருந்துகின்றனர்.

கருணைக்கடலாகிய செவ்விளங்குமரன் ஆறுதிருமுகமும் பன்னிருகரங்களுங் கொண்டு கன்னியரிருவர் இருமருங்கினும் இருப்ப வேல்தாங்கி நீலமயில் மீதேறி அமரர்கள் சூழ்ந்து வலம் வர வருங்காட்சியின் பேரழகை என்னென்றுரைப்பது.

பன்னிருகரத்தாய் போற்றி, பசும்பொன்மாமயிலாய்
போற்றி

முன்னிய கருணையாறு முகப்பரம் பொருளே போற்றி
கன்னியரிருவர் நீங்காக் கருணை வாரிதியே போற்றி

எனக் கந்தபுராணச் செய்யுளாலறியத்தக்கது.

பாரதம் பாடிய பெருந்தேவனார் குறுந்தொகையில்

தாமரைபுரையுங் காமர் சேவடிப்
பவளத் தன்ன மேனித்திகழொளிக்
குன்றிமேய்க்கு முடுக்கைக்குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்

சேவலங் கொடியோன்'' என்று அவன் திருவழகை அழகு பொலிய வர்ணிக்கிறார்.

இயற்கை யழகு பொலிந்து தோன்றுந் தன்மைபோல இயற்கை மணமும் மிளிரும்.

இறைமைத் தன்மை யென்பது வெளிப்படை.

குமரன் சுத்த இன்பமும் அன்புமுடையவன். தூய இளமை அழகு, மணம் நமக்கு இன்பமளிக்கும். அதனால் அன்பு பிறக்கும். அன்பும் இன்பமும் காரிய காரணமாகவும் காரண காரிய மாகவும் மாறி மாறி வரும். அன்பினால் இன்பம் பயக்கும். இன்பம் பயத்தலால் பயந்தார் வழி அன்பு தோன்றும். அன்புக்கடலாகிய குமரனை வணங்கி இன்பம் பெறுதலும், இன்பம் நுகர்ந்து அவன் பால் அன்பு செலுத்துதலும் உயிர்கள் தூயவன்பினால் குமரனாகிய பேரன்பினைக்காட்டுதலும் மெய் யறிவேயாம்.

இவ்வணம் புலன்களுக்கும் மனதிற்கும் இன்பந்தரும் இறைவனை விளிக்க முருகன் அல்லது குமரன் எனுஞ்சொல் மிகவுஞ் சிறந்தது.

இயற்கை வனப்பும் நன்மணமும் இளமையுந் திண்மையும் நிறைந்த குறிஞ்சி நிலமக்கள் தங்கள் நிலத்தின் நற்குணங் களனைத்தையும் திரட்டி ஒரு சொல்லிற்பொருள் கொடுக்கும் முருகன் அல்லது குமரன் என்னும் பெயரால் வழிபட்டது அன்னார் நுண்ணிய அறிவையும், தூயமனத்தையும், அன்பின் மிகுதியையும் உணர்த்தா நிற்கும்.

குமரன் பிறப்பு:— முருகன் பிறப்பைப்பற்றி இரண்டு வகையான கொள்கைகளை நூலில் நாம் படிக்கிறோம்.

பரிபாடலிற் கூறும் வரலாறொன்று. அதற்குப் பிற்பட்ட கந்தபுராணங்கூறும் வரலாறு மற்றொன்று.

பரிபாடல் கந்தபுராணத்திற்கு முற்பட்டதென்று தமிழுலகம் நன்கறியும்.

தேவர்களுக்குச் செய்யும் வேள்வியில் அவிர்ப்பாகத்தை யுண்ட கோபத்தால் ஈசன் உமையோடு புணர்ந்து காமத்தை நுகர்கின்ற வதுவை நாளில் அமையாத புணர்ச்சியை ஒரு நாள் அமைந்தானாக அவன் பக்கலிலே இருந்த இந்திரன் இப் புணர்ச்சியாற் றோன்றிய கருவை அழித்திடு என்று வேண்ட ஈசன் சிதைத்ததாகவும், சிதைந்த பகுதிகளை அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், சமதக்கினி, பாரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன் முதலிய தெய்வ முனிவரெழுவரும் ஏற்று வேள்வித்தீக்கண் பெய்து பின்னர் தங்கள் மனைவியர்களுக்குக் கொடுக்க, அருந்ததியொழிய ஏனைக்கார்த்திகைப் பெண்கள் அறுவரும் அயின்று சூல் கொண்டு இமயத்தில் நீலப்பைஞ் சுனையில் கமலப் பூம் பாயலில் அறுமுகக்கடவுளை ஒருங்கு பெற்றனரென்றும் பெற்ற ஞான்றே இந்திரன் இகல்மிகுதியால் வச்சிரத்தையெறிய அம்மகவு அறுவராய்ப் பின் ஒருவராயினரெனவும் அக்கினியிடஞ் சேவலையும், இந்திரனிடம் மயிலையும், யமனிடம் வெள்ளாட்டு மறியையும் பெற்று அமரர் தலைவராயினர் என்று பரிபாடலில் கடுவன்இளவெயினனார் கூறுகின்றார். இதைத்தழுவியே நக்கீரரும் தமது ஆற்றுப்படையில்

"நெடும் பெருஞ்சிமயத்து நீலப்பைஞ் சுனை
யைவருளொருவ னங்கையேற்ப
வறுவர் பயந்த வாறமர் செல்வ" என்று உரைத்துள்ளார்.

தேவர்கள் வேண்டு கோளுக்கிணங்கி சூரபன்மர் கொடுங் கோலையடக்கியவர்களை வொழிக்க ஒருதிருக்குமாரனைத் தருவோம் என்ற திருவாக்கின்படி இறைவன் தனது ஐந்து முகங்களும் அதோ முகமும்கூடிய ஆறு திருமுகங்களிலுள்ள நெற்றிக்கண் தோறும் அக்கினிப்பொறியைத் தோற்றுவித்து இப் பொறிகளைக் கங்கையில் விடும்படி வாயுவுக்கும் அக்கினிக்கும் கட்டளையிட்டார்.

வாயுதேவன் அப்பொறிகளைத் தலைமேற்றாங்கி ஆற்றாது அக்கினியிடம் கொடுக்க இவனும் தாங்க முடியாது விரைவிற் சென்று கங்கையில் விடுக்க கங்கை சரவணப் பொய்கையிற் சேர்த்தது.

அப்போது ஆறுமுகமும் பன்னிரு திருக்கரங்களுங்கொண்டு முழுமுதற்கடவுள் திருவவதாரஞ்செய்து செந்தாமரை மலர்மீது வீற்றிருந்தார்.

விஷ்ணு முதலிய தேவர்கள் இதைக் கண்டு மகிழ்ந்து கார்த்திகைப் பெண்களை அக்குழவிக்குப் பால் கொடுக்க வேண்ட அப்பெண்கள் அவரை யடைந்து துதிக்க அவர் ஆறு சிறுவர் வடிவங்கொண்டு பாலுண்டபின் தாமரை மலரின்மீது அக் குழந்தைகளைத் துயில் செய்வித்து வணங்கினார்கள். குமரக் கடவுள் ஆறு திருமேனியும் ஆயிரம் பேதமாம் வண்ணம் எண்ணிலாத் திருவிளையாடல் செய்தார்.

பின்பு இறைவன் இறைவியுடன் சரவணப்பொய்கையை யடைந்து தம்முடைய திருமகனைக்கண்டு களித்து அவரைப் பொய்கையினின்றும் எடுத்துவர இறைவிக்குக் கட்டளையிட அவள் அவ்வாறுருவங்களையும் கந்தாவென அழைத்துத் தன திரண்டு திருக்கரங்களால் அன்போடு எடுத்துத் தழுவியதும் ஆறுருவமும் ஒன்றாகி கந்தனெனும் பெயர் பெற்று அம்மையாரிடம் ஞானப்பாலையுண்ணவும், இறைவன் அவரை எடுத்து மார்போடணைத்துத் தம்பக்கலிலிருத்தினார்.

இவ்விரு வரலாறுகளும் முற்பாகத்தில் சில பேதமுடையதன்றி பிற்பாகங்கள் ஒத்துவருகின்றன. ஆயினும் பின் வந்த கந்தபுராணமுடையவர் பரிபாடற் கூற்றை சற்றே திரித்து புராணத்திற்கேற்ப விதந்தோதினார்.

தேவராயினும், மக்களாயினும் இறைவனை உள்ளன்போடு வாழ்த்தினால் அவர்கள் இடுக்கண்களைந்து வேண்டிய வரங்களை வேண்டுமாறு யீவான் என்ற நல்லறிவை உலகமக்களுக்குப் போதிப்பதற்காகவே கந்தபுராண முடையார் புராண மரபுக் கிசையத்திரித்துக் கூறினார்.

ஆயின் முருகனை ஒரு கடவுளெனக் கொள்வது தவறெனவும் அவன் ஊக்கம் ஆண்வினை மனத்திண்மை படைமாட்சியால்ஒப்பற்று விளங்கிய ஒரு அரசகுமாரனெனவும் அவனே தென்றிசை சென்று சூரனென்னும் ஓர் அசுரனை ஒழித்தானென்றும் உடல் நூலின் படியாதல் நிலநூலின் படியாதல் ஒருவருக்கு ஒரு முகத்துக்கும் இருகைகளுக்கும் மேற்பட்டவைகளைக் காணவில்லையெனவும் அப்படியிருத்தலும் இயலாதென்றும் முருகனென்னும் கடவுளுக்கு ஆறுமுகமும் பன்னிருகரமுங் கூறல் அவன் பேராற்றலேயும் பேரறிவையுங் குறிக்கும் ஓர் புனைந்துரையேயன்றி உண்மையன்றெனவும் முழுமுதற் கடவுளின் கட்டிளமைக் கோலமே முருகனென்றும் சில ஆராய்ச்சியாளர் கூறுப எனினும் இதனல் குமரன் சிவனின்றும் வேருகான் என்பதே மறை முகமாகப்பெறப்படுகின்றது.

இவ்விரு வரலாற்றாலுங் குமரன்பிறப்பு மாதாவுதரக் கணிருந்து கருப்பாய சப்பையுறுத்தல், சலம்பூரித்தல், உதராக்கினி சுடுதல், பிராணவாயு முறித்துத்தள்ளுதல், யோனித்துவாரத்தால் நெருக்குண்ணுதல் முதலிய கருவாதனைப் படாமலும் அதோ முகமாய்த் தோற்றாமல் சிவ வீரியத்தால் ஊர்த்துவமாகத் தோன்றுதலையுடைய தெய்வத் தன்மையுடையதென்பது தெற்றென விளங்கும்.

குமரன்றிருமேனி. குமரன் ஆறுதிருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களுமுடையான் என்பது என்னை? ஆறுதிருமுகங்களைப் பலர் பலவிதமாகக் கூறுகின்றனர். ஆதிசத்தி, இச்சாசத்தி, கிரியா சத்தி, பராசத்தி, ஞானசத்தி, குடிலாசத்தி யெனவும் அ. உ. ம். நாதம், விந்து சத்தியென்னும் பிரணவங்களாகுமெனவும் ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்ற முழுமுதலிறைவன் ஐந்து திருமுகங்களுடன் இறைவியின் திருமுகமும் சேர்ந்து ஆறு திருமுகங்களென்றும் ஐஸ்வரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறுகுணங்

களாமென்றும் சடாக்கர மந்திரமென்றும் பலவகையாய்ச் சொல்லப்படுகின்றன.

இவ்வாறு முகங்களாலும் கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு கீழ் மேல் என்னும் ஆறு திக்குகளிலுமுள்ள ஓரறிவுயிர்முதல் ஆறறிவிறுதியாகவுள்ள அறுவகை யுயிர்களும் அறுவகைச் சமயங்களையுந் தாண்டி அறுவகைச் சாத்திரங்களையும் உணர்ந்து வீட்டின்பம் அடைகின்றனவென்று கூறுவாருமுண்டு.

மாயிருண் ஞாலமறு வின்றிவிளங்க
பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுக
மார்வல ரேத்தவமர்ந்தினி தொழுகிக்
காதலினுவந்து வரங்கொடுத்தன்றே யொருமுகம்
மந்திரவிதியின் மரபுளிவழா அ
வந்தணர் வேள்வி யோர்க்கும்மே யொருமுகம்
எஞ்சிய பொருள்களை யேமுறநாடித்
திங்கள் போலத்திசை விளக்கும்மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவு கொளெஞ்ச மொடுகளம் வேட்டன்றே
யொருமுகம்
குறவர் மடமகள் கொடிபோனுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே

என்று நக்கீரர் மற்றொரு முறையிற் கூறுகின்றார்.

அருணகிரியார் தம்முடைய திருப்புகழில்

ஏறுமயிலேறிவிளை யாடுமுகமொன்று
யீசனுடன் ஞானமொழி பேசுமுகமொன்று
கூறுமடியார்கள் வினை தீர்க்குமுகமொன்று
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகமொன்று
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்று
வள்ளியை மணம்புணர வந்தமுகமொன்று

எனக்கூறியுள்ளார்.

அறிவற்றதும் அறிவுள்ளது மானஞால முழுவதிலுங்கலந்து அவற்றை இயக்கு வோனாகிய தலைவனுக்கு ஞாலமே திருமேனி

யாகவும் அதற்கு அடிப்படையாகிய ஐம்பூதமும் உயிருமாகிய ஆறினையும் ஆறுதிருமுகங்களாக வுருவகித்துக் கூறுவார் ஒரு சாரார்.

ஐந்து திருமுகங்கள் ஐந்தெழுத்தாகவும் ஆறுவது திருமுகம் ஓங்காரமாகிய பிரணவ முதுமொழியாலும் குறிக்கப்படும்.

"ஓமெனப்படுங் குடிலையே ஒப்பிலா முருகன்
மாமுகத்து ளொன்றும்" என்பது கந்தபுராணம்.

குமரன்றிருக்கரங்களில் உள்ள தோமரம், கொடி, வாள், குலிசம், பகழி, அங்குசம், மணி, பங்கயம், தண்டம், வில், மழுவென்ற பதினொரு ஆயுதங்களும் பதினொரு உருத்திரர்களென்றும் மற்றொரு கையிலுள்ள வேலாயுதம் சிவசக்தியே அவ்வுருவாக வந்ததென்றும் புராணங் கூறும்

பொன்றிகழ் சடிலத் தண்ணறன் பெயரும்
பொருவிலா வுருவமுந் தோன்று
நன்று பெற்றுடைய வுருத்திர கணத்தோர்
நவிலருந்தோமரங் கொடிவாள்
வன்றிறற் குலிசம் பகழியங்குசமும்
மணிமலர்ப் பங்கயந் தண்டம்
வென்றிவின் மழுவுமாகி வீற்றிருந்தார்
விறன்மிகு மறுமுகன் கரத்தில்

நக்கீரர் முருகாற்றுப்படையில் கீழ்க்கண்டவாறு உரைக்கின்றார்.

விண்செலன் மரபினையர்க் கேந்திய தொருகை
உக்கஞ் சேர்த்திய தொருகை
நலம் பெறு கலிங்கத்துக்குறங்கின் மிசையசை
இயதொருகை
யங்குசங்கடாவ வொருகையிருகை
யையிருவட்ட மொடெஃகு வலந்திரிப்ப வொருகை
மார்பொடு விளங்க வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்பவொருகை

பாடின் படுமணியிரட்ட வொருகை
நீனிற விசும்பின் மலிதுளிபொழிய வொருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்டவாங்கப்
பன்னிருகையும்.

குமரன் சிறப்பு அநேக நூல்களில் விரிவாய்க் கூறப் படுகின்றது. பரிபாடல், திருமுருகாற்றுப்படை பெரும்பாணாற்றுப்படை பொருநராற்றுப்படை சிறுபாணாற்றுப்படைகளிலும் அகநானூறு புறநானூறு முதலிய சங்க இலக்கியங்களிலும் கந்தபுராணமாகிய பண்டைப் பெருநூலிலும் பிற் காலத்திற்றோன்றிய அருணகிரியார் திருப்புகழ் கந்தரலங்காரம் கந்தரனுபூதி, குமரகுருபரர் கந்தர்கலிவெண்பா பகழிக்கூத்தர் பிள்ளைத்தமிழ் இன்னனைய பல நூல்களிலும் மலிந்து கிடக்கிறது. பரிபாடலில் 5, 8, 9, 14, 17, 18, 19, 21ம் பாக்கள் முருகனுக் குரியவை. குமரன் சூரனை வென்ற வரலாற்றை

பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுக மமர்ந்தமருழக்கித்
தீயழறுவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை நுடங்கு சூர்மாமுதறடிந்து — எனவும்
போர் எதிர்ந்தேற்றார் மதந்தபக்
கார்எதிர்ந் தேற்றக் கமஞ்சூல் எழிலிபோல்
நீர் நிரந்தேற்ற நிலந்தாங்கு அழுவத்துச்
சூர் நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்

எனவுங்கூறும்.

பெரும்பாணாற்றுப் படையில்

மள்ளர்மள்ள மறவர் மறவ
செல்வர்செல்வ செருமேம்படுந
வெண்டிரைப்பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் — என உருத்திரங் கண்ணனார் கூறுவர்.

கிரௌஞ்ச மலையைத் தகர்த்தவனென்றும் ஆறுமுகமும் பன்னிரு தோளும் பொருந்தி ஞாயிறு எழுவது போன்ற செந்நிற அழகுடன் தாமரைப்பூவின் கண் பிறந்தானென்றும் சிவனார் மகனென்றும் உண்மையுமா யின்மையுமாயினனென்றும் கீழ்க் கரிபாடல் அடிகள் விளக்கும்.

நாவலந் தண்பொழில் வடபொழி லாயிடைக்
குருகொடு பெயர்பெற்ற மால்வரையுடைத்து
மலையாற்றுப் படுத்த மூவிருகயந்தலை
மூவிருகயந்தலை மூந்நான்கு முழவுத்தோண்
ஞாயிற் றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை
கா அய் கடவுள் சே எய் செவ்வேள்
....................................
......... வாயுமல்ல பொய்யுமல்ல.

குமரனிடம் இரந்து பெற வேண்டுவது இகபோகமல்லாது அவனருளே யென

.........யா அமிரப்பவை
பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பா
லருளுமன்பு மறனுமூன்று
முருளிணர்க் கடம்பினொலி தாரோயே — வெனத்

தன்மையிற் கூறி மக்களுக்குப் போதிக்கும்.

கருடக்கொடியோனும் இடப மேறுவோனும் பிரமனும் ஆதித்தர் முதல் உருத்திரர் ஈறாக முப்பத்துமூவரும் இந்திரன் முதலியோரும் அமரரும் அவுணரும் தவமுதல்வரும் அவனைக் காண பரங்குன்றில் உறைவதால் அது இமயத்தை யொக்கும் அதனால் அங்குள்ள அருவிச்சுனை அவனை யீன்ற சரவணப் பொய்கையொக்கும். குறிஞ்சி நில மக்களாகிய குறவர் நிறைந்த பரங்குன்று வேலனுக்கினியந்தது. வானம் வறண்டு உலகமே அழியினும் நீ என்று மிருப்பாயாக' வெனக் குன்றை வாழ்த்து முறையாற் குமரனை வாழ்த்தும்.

உடம்புணர் காதலரு மல்லாருங் கூடிக்
கடம்பமர் செல்வன் கடிநகர் பேண
மறுமிடற்றண்ணற்கு மாசிலோ டந்த
நெறி நீரருவியசும்புறு செல்வ
மண் பரிய வானம் வறப்பினும் மன்னுகமா
தண்பரங்குன்ற நினக்கு

இப்படியே பரங்குன்றிலுள்ள சோலை வளமுஞ் சுனை வளமும் அருவி மயில் முதலியவற்றினழகுங் கார்கால வருணனையுங் குன்றின் கண் குமர வழிபாட்டின் சிறப்புங், கற்பவர் மனங் குளிரக் கூறப்பட்டிருக்கின்றன. அங்குள்ள மண்டபத் தி லெழுதிய சித்திரங்களின் பொருளும் விளக்கப்பட்டிருக்கிறது. பரங்குன்றினை ஓர் யானையாகவுருவகஞ் செய்திருப்பது புலவர்களுக்கு நல்விருந்தாம்.

பரிபாடற் புலவர்கள் குமரன்பால் ஆழ்ந்தவன்புடையவர்களாகலின் புறப்பொருளை மட்டுமல்லாது அகப்பொருட்டுறையையுங்கூட்டி பலவகை இயற்கை வருணனையுடன் பண்டைத்தமிழில் இனிமை பயக்கத்தங்கள் மனக்கிடக்கையை வெளியிட்டிருக்கின்றனர். காமத்துட்சிறந்தது காதற்காமமென்றும் களவொழுக்கஞ்சிறந்ததென்றும் களவிற்புணர்ச்சியால் வள்ளி சிறந்தவளென்றும் அத்தமிழையாய்ந்தமையால் முருகன் சிறந்தவனென்றும் புகழ்மாலை சாற்றியிருக்கின்றனர்.

.........கேண்மின் சிறந்தது
காதற் காமங்காமத்திற்சிறந்தது
விருப்போரொத்து மெய்யுறு புணர்ச்சி
புலத்தலிற் சிறந்தது கற்பே .........

வள்ளியை மணந்து தேவயானைக்கு ஊடல்விளைத்தாரென்றும் நகைச் சுவை தோன்றச்சில பாக்கள் அமைந்துள்ளன. குமரனைப் படர்க்கையாக்கியும் எதிர் முகமாக்கியும் அளவிலா இசைபாடிப்; உன்னி உன்னி அடுத்தடுத்துக் குமரனை வழிபடுவதின் பயன் அவன் புகழும் வழிபாடும் இன்னும் இன்னும் பெருகவேயெனப் பகரும்.

................ நின்னை
துன்னித்துன்னி வழிபடு வதன்பய
மின்னுமின்னு மவையா குக
தொன்முதிர் மரபினின் புகழின்பலவே.

தலைவியாரால் தூதாக ஏவப்பட்டு பரத்தையரைப் பிரிந்து வந்தானொருதலை மகன் அவளைப் புகழவும் தலை மகள் புலக்க தலை மகன் கூளுறத்தோழிகூளாற்றீங்குவரின் தலை மகள் இறந்துபடுமெனப் பரியத் தலைவியைப் புகழ்ந்து குன்றின் மேலிருக்குங் குமரன் கூளேச்கூளுறின் பரத்தையரன்பு நீங்கு மெனவும் அவனைச்சேர்ந்து ஆற்றுவாயாக மலரையேற்றி அவியை யூட்டித் தாளத்துடன் பாடுளனத் தோழி வாயிலாய்க் குமரன் பெருமையை விரித்து அகப்பொருளிலக்கண மறிவாரகமகிழ அழகுடன் இயம்பும்.

நக்கீரர் தமது ஆற்றுப்படையில் படைவீடுகளைக் கூறிக் குமரன் சிறப்புகளை நவில்வார். ஒரு பற்றுமற்று அருவாய்த் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருளாகிய கந்தழியைப் பெற்றுனொருவன் பெறவிரும்புவானை ஆற்றுப்படுத்தக் கூறிய தோர் உயரிய நூல் ஆற்றுப்படையென்பது. இதனை மெய்யன் புடன் நித்தலும் பாராயணஞ் செய்வார் பகைபிணி மிடி யொழிந்து புலமை ஞானமும் அவன் பதமலர் எய்துவரென்பது ஒரு தலை.

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற்றுப்படையை
தற்கோல நாடோறுஞ் சாற்றினால் — முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த வெல்லாந் தரும்.

இந்நூலிலும் பரிபாடலைப்போல் இயற்கை வளங்களைத் திரட்டி அழகுபெறப் பாடியிருக்கும். முதலாவது பரங்குன்றின் சிறப்புக்கூறும். பரங்குன்றைப் பாடாத பண்டைப் புலவரில்லை.

சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற்
சீர்மிகு முருகன் தண்பரங் குன்றத்
தந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை
யின்றீம் பைஞ்சுனை. — என

அகநானூறில் மதுரை மருதன் இளநாகனார் பாடியிருப்பது குறிக்கற்பாலது இரண்டாவதாக, குமரன் சூரனை மடிக்கு முன் தூதனுப்பத்தங்கி அவனை மடித்தபின் ஆறுமுகமும் பன்னிரண்டு கரங்களும் பொருந்தி யானை மீதேறிப் பாங்காய் வீற்றிருக்குஞ் செந்திலை உலகம் புகழ்ந்த விழுச்சீரலைவாய் என்றுவியர்த்து கின்றார். தாழ்ந்த நீரையுடைய கடலில் வெண்டலையுடைய அலை கொழிக்குஞ் செந்திலிடத்து என்றும் அழியா வழகுடைய நெடுவேள் என

......... தாழ் நீர்
வெண்டலைப் புணரியலைக்குஞ் செந்தில்
நெடுவேள் நிலை இய காமர் வியன்றுறை
கடுவழி தொகுப்ப வீண்டிய
வடுவாளெக்கர் மணலினும் பலவே — எனப்

புறநானூற்றிலும்.

கழனியுழவர் கலிசிறந்தெடுத்த
கறங்கிசை வெரீ இப்பரந்த தோகை
அணங்குடைவரைப்பகம் பொலிய வந்திறுக்கும்
திருமணி விளக்கின் அலைவாய் — என

அகநானூற்றிலும் கூறியிருத்தல் காண்க. மூன்றாவதாகக் கந்தருவரிசைபாட தேவர் கணங்கள்புடை சூழவும் குமரவேளின் வேலின்றிறமை தன்னால் வந்ததெனச் செருக்குற்ற பிரமன் குமரன் சாபத்தால் பூமியில் பிறந்தானகப் படைத்தற்றொழில் இல்லாதொழிய அஃதொழிந்தமையால் காத்தல் அழித்தலாகிய தொழில்களிலவாயினதால் மீண்டும் பிரமனைப் பழைய நிலையிலே நிறுத்த இந்திரன் மாலசிவன் மூவருங் குமரனை வழிபடும் பெற்றி வாய்ந்த ஆவினன் குடியென்னும் பழநியில் அவன் வழிபட்டுச் சிறப்பைக் கூறுகின்றார். பின்னர் உலராவுடையை

வுலாவுடுத்தி சடாக்கரத்தை உச்சரித்து மலர்களாலர்ச்சித்துப் பூசித்துவக்கும் அந்தணர் நிறைந்த ஏரகமென்ற சுவாமி மலையும் குமரன் தங்குதற்குரிய இடமென்று புகழ்வார். இதன் பின் வேடர்கள் உண்டு மகிழ்ந்து தங்கள் குறிஞ்சி நிலத்திற்குரிய தொண்டகமாகிய பறையினது தாளத்திற்கிசைய குரவைக் கூத்தாட நறுமணமுடைய சாதிக்காய் நடுவேயமைந்த மலைப் பச்சை மாலையைப் பணிந்து செந்நிறமுடையானாய் சிவந்த ஆடையுடுத்துக் கச்சைகட்டி வீரக்கழல் பூண்டு வெற்றிமாலை சூடிக்குழலூதித் தகர் பக்கலாக மயிலின் மீதேறி சேவற்கொடியுயர்த்தி யாழ் போன்ற இனிய குரலுடைய மகளிர் பாடக் கூட்டத்துடன் மலைதோறும் விளையாடுங் குமரன்கூத்துக் கூறப்பட்டது.

இறுதியாகப் பழமுதிர்சோலைப் பெருமை பொறித்து குமரன் வழிபாட்டின் இன்றியமையாமையையும் அவன் ஆட்கொள்ளும் முறையையும் புகல்கின்றார். பழமுதிர் சோலை தற்காலம் மதுரைக் கண்மையிலுள்ள அழகர் கோயிலென்னுந் திருமால் தலமாக மாறி விளங்குகின்றது. குமரன் தன்னை விரும்புகிறவர்க்கு வேண்டிய வரங்களை வேண்டிய படி கொடுத்து அன்னார் வணங்கும் இடமெல்லாம் இருப்பான்.

> வேண்டினர் வேண்டியாங்கெய்தினர் வழிபட
> வாண்டாண்டுறைதலு முரியன்.

மெய்யன் பினனாகிய வொருவன் குமரன் தன்மைகளனைத்தையும் அளவிட்டறிதல் உயிர்களுக்கு அரிதாகையால் உன் திருவடியைப் பெறவந்தேன், உனக்கு வொப்பு வொருவருமில்லை.

> நின்னளந்தறிதன் மன்னுயிர்க் கருமையின்
> நின்னடியுள்ளி வந்தனன் நின்னொடு
> புரைகு நரில்லாப்புலமையோய் — எனப்பரிந்து

அறிவு நிரம்பிய புலவன் உன் புகழை விரைந்து உன்னை வாழ்த்தி வருதலான் அவன் உன்னுற்காத்திற் குரியன்

யளியன் றுனே முதுவாயிரவலன்
வந்தோன் பெரும நின் வண்புகழ் நயந்தென
வினியவு நல்லவு நனி பலவேத்தி — எனப்படர்க்கையில்

முறையிடவும் உடனே குமரன் தோன்றி கட்டிளமைக் கோலங் காட்டி நின் வரவை யறிவோம் அஞ்சுதல் விடுதி என்று ஊக்கவும் குமரன் ஒருவனே வீடளிக்கும் உரிமையுடையவன். அவனே அருள் சுரப்பான்.

தெய்வஞ் சான்ற திறல் விளங்குருவின்
......... பெறலரும் பரிசில் நல்குமதி — என்று

விதந்து ஓதினன். ஓதவும் குமரன், நீ செய்த முற்றவத்தினாலே சிவஞானம் இப்போதே வாய்க்க வீடு பெறுவாய்

............ பலவுட
னன்னர் நெஞ்சத்தின் னசைவாய்ப்ப
வின்னே பெறுதி நீ முன்னியவினையே — என்று

குமரன் அருளியவாற்றைக் கூறி அவன் பெரும் புகழிசை பாடியிருக்கின்றார்.

அருணகிரிநாதர் எல்லாத்தத்துவ உண்மைகளையும் புராணக் கருத்துகளையுமுள்ளடக்கி உலகப்படைப்பின் காரணமான வரிவடிவாகிய நாதமும் புள்ளிவடிவாகிய விந்துவுங் கூடிய தத்துவமே, வேதாகமமே, மந்திரமே, ஞானவுருவே, சம்புகுமாரனே, பார்வதி மகனே, மயிலுடையவ, சூர்மடித்தவ, காலணியுடையோய், வீரா, தீரா, ஜோதிமயமே, அம்பலத்தரசே, தேவயானைபாகா — என

நாதவிந்து கலாதி நமோ நம
வேதமந்த்ர சொரூபா நமோ நம
ஞானபண்டித சாமி நமோ நம — என்னுந்

திருப்புகழால் சுருங்கச்சொல்லி விளக்கியுள்ளார்.

குமரன் தத்துவம் :— குமரன் திருவருட்சத்தியென முன் கூறப்பட்டது. இது இச்சை கிரியை ஞானமென மூவகைப்படும். அதாவது ஒரு பொருளை விழைதல் செய்தல் அறிதல் என்னும் மூவகையாற்றல்கள். குமரன் என்பான் கடவுள். வேல் என்பது ஞானம். வள்ளி யென்பது இச்சை. தேவயானை யென்பது கிரியை. இம்மூன்றும் முழுதளிறைவனின் முக்கிய விலக்கணம். அறிதற்கரிய நுண்ணிய குணங்களாம் இம்மூன்றையும் உயிர்கள் நன் கறியாமையால் நேரில் அறிந்து உணரற் பொருட்டு ஞானத்தை வேலாகவும் இச்சை கிரியை இருதுணைவிகளாகவும் உருவகிக்கப்படுகிறதென்பது சமயமறிவார்கொள்கை. இதே போல மயிலும் தன்னறிவு இச்சை கிரியை யற்று இறைவனடி சேர்ந்து இன்பநுகரும் ஒருயிரெனவுங்கொள்ளப்படும். சூரபன்மன், சிங்கமுகன் தாரகன் என்னும் மூச்சூரரும் ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களாகக் கருதப்படும். முன்வினையாலனுபவிக்கப்படும் பயனாகிய பிராரத்துவம், அனுபவிக்காமல் எஞ்சி நின்ற வினையாகிய சஞ்சிதம், இப்பிறப்பிற்செய்த நல்வினை தீவினையாகிய ஆகாமியம், இம்மூவினையின் தொகுதி யெனவே கிரௌஞ்ச மலைபாவிக்கப்படுகிறது. குமரனாகிய கடவுள் வேல் வள்ளி தேவயானை என்னும் முச்சத்திகளால் மயிலாகிய வுயிரின் மும்மலங்கள் என்ற சூரன் சிங்கன் தாரகனை வென்று மூவித கன்மத்தின் றொகுதியாகிய கிரௌஞ்சமலையைப் பொடித்து அவ்வுயிரைத் தன் பாதத்தின் கீழிருத்தி ஆட்கொண்ட பெருமையை விளக்குகின்றதாகவே குமரன் திருவுருவம் போற்றப்படுகின்றது. இத்திருவுருவத்தின் வீரச்செயல்களை கந்தபுராணமுடையார் கதை முறையிலுணர்த்துவார். வீரச்செயல்களனைத்தும் உயிர்கள் பாசங்களினின்று நீங்குவதற்குரிய வழிகளைத் தெரிக்கும்.

மயிலையும் சேவலையும் வேறு விதமாகவுங் கூறுவதுண்டு. மயில் ஆணவத்தை யடக்கும் ஆற்றலையும், சேவல் அருள் ஞானமென்னும் பரஞானத்தை மேற்கொள்ளும் வண்மையையுங் குறித்தலால் மயில் ஆணவமெனவும், சேவல் சிவஞானமெனவும் கூறுவாரும் மயிலால் ஐங்குணத்தையுடைய பிருதிவி தத்துவமும்

சேவலால் ஒலிமயமான நாததத்துவமும் குறிக்கப்படலால் பிருதிவி முதல் நாதமீறாகவுள்ள தத்துவங்கட்கெல்லாந் தலைவரும் அவற்றின் நீக்கமின்றி நிற்பவருந் தாமேயென்பதை விளக்குகின்றாரென்பாரும் மயிலாற் பொருட்பிரபஞ்சமும் சேவலால் சொற்பிரபஞ்சமும் குறிக்கப்படலால் இருவகைப் பிரபஞ்சமும் தம்வயப்பட்டதென்பதைத் தெரித்தபடியா மென்பாருமுளரென்று சுப்பிரமணிய பராக்கிரம நூலார் கொள்வார். ஈண்டு பொருட்பிரபஞ்சமென்றது பிரணவத்தையும் சொற்பிரபஞ்சம் வேதமந்திரங்களையுங் குறிக்கும்.

ஆகவே குமாரதத்துவம் குணப்பொருள்களைக் குணிப்பொருள்களாயுருவகித்தும் குணிப்பொருள்களைக் குணப்பொருள்களாய் விளக்கியும் மனிதவாழ்வைப் பொருந்தி நின்றவோர் பேரிலக்கியமாம்.

குமரனுந் தமிழும். குமரன் தமிழ்த் தெய்வமென்பதும் தமிழ் மொழிக்குத் தலைவனென்றும் இதுகாறுங் கூறிய வாற்றால் அறியக்கிடக்கின்றது. தலைச்சங்க காலத்தில் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்றமெறிந்த குமரவேளும் அகத்தியனாரும் முரிஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனுமென ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர் தமிழ் ஆராய்ந்தனரென்பதும் முற்றறிவுடைய அறுமுகக்கடவுள் தவத்தின் வலியோனாகிய அகத்திய முனிக்குத் தமிழிலக்கணம் ஓர் காலத்து ஒரு முறையானன்றி பல காலத்துப் பன்முறையாற் செவியறிவுறுத்தினாரென்பதுந் தமிழறிந்த நல்லுலகம் ஒப்பும். “ அகத்தியனாருக்குத் தமிழைச் செவியறிவுறுத்தச் செந்தமிழ்ப் பரமாசாரியனாகிய அறுமுகக் கடவுள் வரைப்பு ” எனச் சிவஞான முனிவர் தொல்காப்பியப்பாயிரவிருத்தியிற் கூறுவதும்

“ அறுமறை யாகமங்கமருங்கலை நூறெரிந்த
வகத்தியனிக் கோத்துரைக்கு மருட்குருவாங் குருவை ”

எனச் சிவஞான சித்தியார் பரபக்கத்திற் கூறியிருப்பதும், வின்ஸ்லோ என்னும் கிறித்துவ அறிஞர் தமிழின் தொன்மையை வியந்து கூறுங்கால் கி. மு. 6. 7. நூற்றாண்டில் தமிழ் மொழிக்குத் தந்தையான அகத்தியர் இருந்தாரெனவும் சிவ ஞானி இரண்டாங் குமாரரான கந்தரிடம் அவர் தமிழ் கற்றாரெனச் சொல்லுவதும் எழுதியிருப்பதும் இதற்குச் சான்றுகளாகும். "அன்பின் ஐந்திணையென்றறுபது சூத்திர" மென்று ஆரம்பித்து இறைவனியற்றிய இறையனாகப்பொரு ளென்னுஞ் சீரிய இலக்கண உரை செய்த சங்கப்புலவர் நாற்பத் தொன்பதின்மரும் தத்தம் உரை சிறந்ததென ஆணவமேலிட உண்மையுரை இஃதெனத்தெரிய மாட்டாத பாண்டியவரசன் சோமசுந்தரக் கடவுளை வேண்ட அவன் தன் குமாரன் வைசிய குலத்தில் உருத்திரசன்மனென ஐயாட்டைப் பிராயமாய் மூகைப் பிள்ளையாய் வளர்கின்றான், அவன் பாற்கேட்கவெனக் கட்டளை யிட அப்பிள்ளையை வணங்கி மற்றவுரைகளை வாசிக்க அப்பிள்ளை வாளாவிருந்து நக்கீரர் உரையை வாசிக்க அதைமெச்சித் தலை யசைத்து உடல் புளகித்து கண்களினின்றும் அருவி பொழிந்து உண்மையுரையை விளக்கி நக்கீரர் தமிழைமெச்சினார். கந்த புராணம் அரங்கேற்றப் பட்டபோது 'திகடச்சக்கர செம்முக மைந்துளான்' என்னுங் காப்புச்செய்யுள் முதலடியில் திகழ் + தசக்கரம் = திகடசக்கரமென்னும் புணர்ச்சி இலக்கணமுரண்பா டென்று அவையில் ஒருவர் கடாவைக்கிளப்ப நூலாசிரியர் குமரனைத்துதிக்க அவரும் ஓர் புலவர் வேடத்தில் "வீரசோழி யம்" என்னும் இயல்நூலைக் கொணர்ந்து சந்திப்படலம் 18ம் படத்தில் விதிகாட்டி ஐயந்தீர்த்தருளினர்.

நக்கீரர் பாடிய முருகாற்றுப்படையை மெச்சி அவன் தமிழுக்காக கற்கிமுகி என்னும் பூதத்தைக்கொன்று அது குகைப்படுத்திய 999 தமிழ்ப் புலவர்களையும் விடுவித்தது குமாரக் கடவுளே. மடைப்பள்ளிவென்றிமாலைபாடிய திருச்செந்திற் புராணத்தை வேதியர் இரண்டாயிரவரும் அரங்கேற்ற விடா மற்றடுக்க இது பொறுது வென்றிமாலை புராணத்தைக் கடலில் எறியவும் அதைக் கரைசேர்த்து எங்கும் பரப்பி நூலோருக்கும்

அபயமருளியது குமாரக்கடவுள். சிவனையன்றி வேறு கடவுளைப் பாடோமென்று இறுமாப்புக்கொண்ட பொய்யாமொழிப் புலவரைத் தன்மீது பாடச்செய்து அவனை ஒடுக்கியதும் செவ்விளங் குமரனே. ஒளவைப் பிராட்டியுடன் ஆய்ச்சிறுவனாய் நாவற் பழமீந்து விளையாடி அவளிடம் இனியது கொடியது அரியது பெரியது எவையென வினவி அவள் பாடக்கேட்டு இன்புற்றதுங் குமரனே. புலவருந் தேவருங்கூடிய சபையில் புலமைப் பெருமை யார் உரியவரெனத் தர்க்கம் நிகழச் சிலர் ஒளவையெனவும் அவள் அகத்தியரைக் குறிக்கவும் அகத்தியர் நாமகளைக் கூற நாமகள் உமையைச் சொல்ல உமை சொன்னதும் புலமைப் பெருமை பெற்றதுங் குகனே.

புலவீரென் றனையழைத்தீர் புரந்தரனே யெனவவனும்
பொதிகை வெற்பி

னிலகிய கோமுனி புலவனென்றனு மேயவனுங்
கேட்டிரங்கி நின்று

கலைமகளாம் புலத்தியெனக் கலைமகளுங் கருத்தழிந்து
கௌரி யென்ன

மலையரசன் மகள் புதல்வன் சரவணவேள் புலவனென
வகுத்தா ளன்றே.

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் நூலை அரங்கேற்றும் போதுஞ் சங்கப் பலகையில் வீற்றிருந்து தமிழின் பெருமை தெரித்து மறைந்ததும் இப்பெருமானே. பகழிக்கூத்தர் தன்னைப் பொருது பாடிய பிள்ளைத்தமிழை மெச்சி நோய்நீக்கி அவரைப்பொருட்படுத்தாத திரிசுதந்தரரைச் சினந்து தமது திருமார்பில் அணிந்திருந்த மாணிக்கப் பதக்கத்தை நித்திரையி லிருக்கும் அம்மெய்யன்பர் மார்பிலணிந்து சென்றதும் நங் குமரனே.

குமரன் பேரருளாளராகிய அருணகிரியாரும் குமரனையும் தமிழையும் இணைபிரியாது ஒன்றித்து தமிழ்மொழியின் இளமை

யும் இனிமையும் குமாரனின் முக்கிய இரு குணங்களென்ற உட்கருத்துத் தோன்றும்படி தம்பாக்களில்

"இலக்கணங்களும் இயலிசைகளுமிக
விரிக்கு மம்பல மதுரிதகவிதனை
இயற்று செந்தமிழ் விதமொடு புயமிசை — புனை
வோனே"
சிவனை நிகர் பொதிய வரை முனிவனக மகிழ இரு
செவிகுளிர இனிய தமிழ் — பகர்வோனே,
செந்தில் வாழ் செந்தமிழ்ப் பெருமாளே,
செந்தமிழ் சொல் நாலுகவிதைக்கார,
செந்தமிழ் சொல் பாவின் மாலைக்கார,
கொன்றைச் சடையர்க் கொன்றைத்தெரியக்
கொஞ்சித்தமிழைப்பகர்வோனே,
முத்தமிழை ஆயும் வரிசைக்கார,
மலைமுகஞ் சுமந்த புலவர் செஞ் சொல் கொண்டு
வழிதிறந்த செங்கை — வடிவேலா,

முத்தமிழால் வைதாரையுமங்கு வாழ வைப்போன், எனவும் கூறுகின்றார். பரிபாடல், நான்மறைப் பொருளை விரித்து அவற்றின் இசையை விளக்கும் புலவீரென்று குமானை வாழ்த்துகின்றது. நக்கீரர், நன்மொழிப்புலவரேறு, நூலறி புலவ யெனப் போற்றுகின்றார். இற்றைக்கும் குமரன் தமிழ் மொழியாக்கத்திற்குத்தலைவனாகச் செந்தமிழ் நாட்டின் எத்திசை யிலும் விளங்குகின்றான்.

குமரன் அவதாரங்கள். மதுரையில் இறைவன் சோமசுந்தர பாண்டியனாகவும், உமாதேவி தடாதகைப் பிராட்டியாராகவும் அரசாளு நாளில் இவர்கள் திருக்குமாரராய் அவதரித்து உக்கிரபாண்டியன் எனப்பெயர் பெற்று விளங்கினார். ஒரு நாள் வருணன் உக்ரத்தால் (நீர்) வெள்ளம் மதுரையை வளைக்க உக்கிரபாண்டியன் வேலாயுதத்தை வீசி வருணன் சீற்றத்தை ஒழித்து நகரத்தைக் காத்தருளினார். மற்றொரு நாள் சேர சோழ நாடுகள் மழைபெய்து செழிக்கவும், பாண்டி நாடு வற

னவும் உக்கிரபாண்டியர் இமயமலையில் வேட்டையாடி மேகங்களைப் பிடித்துச் சிறையிட இந்திரன் கோபங்கொண்டு போர் துடங்க அவனை வென்று மழை பெய்வித்து நாடு செழிக்கச்செய்தார். மேருமலையைச் செண்டாலடித்து அங்குள்ள பொன்னையெடுத்து மதுரைக்குக் கொணர்ந்தார். உருத்திரசன்மராகிய மூகைப் பிள்ளையாய்த்தோன்றி தமிழை நிலை நாட்டியது முன் கூறப்பட்டது. சைவசமயாசாரியரில் முதல்வரான ஞானசம்பந்தர் என்றும்ஆளுடைய பிள்ளையாராய் அவதரித்து பார்வதிதேவி ஊட்டிய ஞானப்பாலை உண்டு சமணமதத்தை ஒழித்து சைவத்தை நிலைநாட்டி அநேக அற்புதங்களையுஞ் செய்தருளினார். இந்நூலார் அன்னாருஞ் செயல்களை

அருகமத சமயமது வுயர்வாக மற்றநெறி
யழிய வெனகொடுமை புரிபவரோ டெதிர்த்துவர
வரிய வைகை நதியிலிடு மறையோ குடக்குசெல — வது
ளேடே
அனல்தழைய நடுவிலிட ரவிபோனி றத்தைமையு
மருமை நிறை சிவசமய மதமே நிலைத்தவழி
அமணமத முளகுரவர் கழுவேறிடச்சபத—வுரையாலே
குருவெனவு நிழலமர பணிமாற னுக்குரிய
சுரமகல நலமிலக வணேவோரு மிச்சமய
குலவழியி னிலவிவர வருளே நிறைத்தகுண—மிகலாலே
குலவகில மகிமைபெறு புவிராசர் சொக்கர் சின
கரசபரிமுறையொழுக தவமீறு நற்செழியர்
குலமிலக வளருலக வறமேறிடக்கருணை — புரிவோனே

எனத்திரட்டியிருக்கின்றார்.

கந்தபுராண உட்கருத்து :— குமரன் மகிமையை யெல்லாம் விரித்துரைக்கும் அரும் புராணமாகிய கந்தபுராணம் **10360** பாக்கள் அமைந்து தமிழுலகில் ஓர் பெருங்காவியமாய் நிலவுகின்றது. இதன் செய்யுள்கள். "நவில் தொறும் நவில் தொறும் நாநயமும் நன்னயமும் பயப்பன பயில்தொறும் ஆறுமுகக்கடவுள் திருவடிப்பத்தி விளைவிப்பன" ஆறுமுகக்

கடவுள் வரலாறும் சூரபன்மன் முதலியோர் காசிப முனிவருக்கு மாயை இடம் பிறந்ததும் சூரபன்மன் சிவனிடம் 1008 அண்டங்களை 108 யுகங்கள் ஆளும் வரம் பெற்றவரலாறும் அவன் கொடுங் கோன்மையும் அதைத் தாங்கமாட்டாது தேவர்கள் முறையிட்டுக்கிணங்கி அறுமுகக்கடவுள் அவனை அழித்து தேவர்களை விடுவித்ததும் தெய்வயானை வள்ளிநாயகியை மணந்ததுங் கூறும். சுமார் 1200 வருடங்களுக்கு முன் கச்சியப்ப முனிவராலியற்றப்பட்டது. கம்பராமாயணத்துக்கு முற்பட்ட தமிழ்ப் பெருங் காப்பியம்

இறைவன் குணங்கள்

வேதத்திற்கேள்வியிலாதது, போதத்திற் காணவொணாதது,
வீதித்துத்தேடரிதானது, வாதத்துக்கேயவியாதது.

‘ அருணகிரியார் ’

அரியு மயனு மொரு கோடி — யிவர் கூடி
அறிய அறிய அறியாத அடிகளறிய அடியேனும்
அறிவுளறியுமறிவூற — அருள்வாயே எனவும்
முருகன் றனிவேன் முனி நங்குருவென்
றருள் கொண்டறியாரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றென நின்றதுவே எனவும் புலம்புகின்றார் ஆசிரியர் சகலாகமபண்டிதர்.

மறைபினுலயனுன் மாலான் மனத்தினுன் வாக்கான் மற்றுங்
குறைவிலாவளவினுலுங் கூறொணாதாகி நின்ற
இறைவனர் கமல பாதம் — என்று ஒதி அப்பாதத்தை அடையுமுறை இங்ஙனமென்று,

அருளினாலாக மத்தே யறியலாவளவினாலுந்
தெருளலாஞ்சிவனை ஞானச்செய்தியாற் சிந்தையுள்ளே
மருளெலா நீங்கக்கண்டு வாழலாம் பிறவி மாயா
இருளெலா மிரிக்கலாகுமடிய ரோடிருக்கலாமே — எனக்

கூறியருளினார். இதனாலே இறைவன் இயல்பு சிவஞானத்தால் உணரப்பட்டு ஓதவும்படும். உணர்தற்கும் ஓதற்கும் அரிதான இறைவன் குணங்களை நுண்மாண் நுழைபுல மில்லா நம்மக்கள் தூலமாக அறிவது யாங்ஙனம்? அருளென்பது எளிதில் எய்து தற்குரிய ஒரு பொருளன்று. ஆன்ம பக்குவமுதிர்ந்த உயிர்களே அதை எளிதில் எய்தும். மற்றைச் சிற்றறிவினர்களாகிய உயிர் கள் இறைவன் இயல்புகளை அறிதற்பொருட்டும் அறிந்து அவ னிடம் அன்பு செலுத்துதற்பொருட்டும் பண்டைப் புராணங்கள் அவன் இயல்புகளை குணிப்பொருள்களாக உருவகித்துப் போதிக்கின்றன. புராணங்கள் வெவ்வேறு அளவில் உண்மையை ஆண்டு அஃதின் வாயிலாய் அறிதற்கரிய பெரும் பொருள்களை உணர்த்தும். சில புராணங்கள் உண்மையில் நிகழ்ந்த சம்பவங் கள் போலத்தோன்றும். உயிர்களைச் சூழ்ந்து நிற்கும் ஆணவம் மாயை கன்மமென மூன்று மலங்களையும் இறைவன் அருள் நெருப் பால் எரித்தானெனப்படுவது திரிபுரமெரித்த ஒரு பெருங் கதை யாய் விளங்குகிறது. இம்மூன்று பொருள்களும் அறிதற்கரிய தாகலான் அவற்றை உருவகமாக்கியே பொது மக்களுக்கு உணர்த்த வேண்டியதாயிற்று. வானத்திற் பறந்து செல்லும் மூன்று அரக்கர் பட்டணங்கள் இறைவன் நெற்றிக் கண்ணெருப் பால் எரிந்தனவென்ற புராணக் கதைகளை யாவரும் அறிவர். இக்கதையின் உண்மைப் பொருளைத் திருமூலர்

அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரமாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார் அறிவாரே — என்னும் பாட்

டால் நன்கு விளக்குகிறார்.

கவிகள் உண்மைச் செய்திகளை மிகவும் பெருமைப்படுத்தி தத்தம் திறமைக்கேற்ப கற்பனைகளை மிகக்கலந்து சொன்னயத் தாலும் பொருள் நயத்தாலும் அவ்வுண்மைகளை நன்கு தெரிய முடியாதபடி மறைத்து விடுகின்றனர். உண்மை ஓரளவு; அலங் காரம் பித்தளவு. புராணங்களெல்லாம் உண்மையற்றனவென்று

தன்றுதற்கில்லை. தற்கால ஆராய்ச்சி ஞானத்தின் மிகுதியால் கந்தபுராணம் போன்ற பண்டைப் பெருநூல்களிற் பொதிந்து கிடக்கும் கருப்பொருளெல்லாம் உண்மையான சம்பவங்களெனவே ஊகிக்கவும் அறியவும் கிடக்கின்றன. இத்துடன் சைவசித்தாந்தக் கருத்துக்களையு முள்ளடக்கி கதைரூபமாக யாவரும் அறிதற்பொருட்டு எழுந்த ஒரு பெருநூல். குமரி முனைக்குத் தென்பால் ஒரு பெருநாடிருந்ததாகவும் அந்நாட்டு மக்கள் மிக்க நாகரீக மக்களாய்த்திகழ்ந்தன ரென்றும் அவர்கள் பேசியமொழி தமிழை யொத்திருந்ததென்றும் அந்நாடு இப்போது கடல் கொண்டதென்றும் தெற்கே ஆஸ்திரேலியா மேற்கே மடகாஸ்கர்வரை அந்நாடு பரவியிருந்ததென்றும் இந்த நிலப்பரபுக்குள்ளிருந்த மக்கள்தான் தற்கால உலக மக்களுக்கு ஆதித்தந்தையரெனவும் அந்நாட்டினர் பிற்காலத்தில் வடமேற்கினின்று புகுந்த ஆரியருடன் தொடர்புடையராயிருந்தனரென்றும் சிற்சிலர் கடல் வழியாகவும் நில வழியாகவும் வடமேற்கு நாடுகளிற்குடியேறின ரென்றும் அங்குள்ள மொழிகள் தமிழ்மொழியுடன் ஒருவாறு ஒற்றுமை யுடைய தெனவும் கால்டுவெல் முதலிய மேனாட்டுப் பேரறிஞர் ஆராய்ச்சி செய்து கூறுகின்றார். இஃதிங்ஙனமாகக் கந்த புராணத்திற் கூறிய அசுரர் போரென்பது முற்கூறிய தமிழகத்திலிருந்த ஆதித் தமிழ் மக்கள் இரு பிரிவினர்க்குள் நடந்த போர் என்று கொள்வதில் ஒரு தவறுமில்லை. உண்மைக்கும் பொருத்தமே இப்போருக்குப் பின்னரே இராமாயணக் கதையும் பாரதப் போரும் நிகழ்ந்ததென்றும் அறிகின்றோம். கந்தபுராணப் போர் மிகமிகத் தொன்மையாகலின் அதன் உண்மையும் நன்கு புலப்படாமல் மெலிந்து கிடக்கின்றது. ஆகவே கந்தபுராணம் சரித்திர உண்மைச் செய்திகளை அடியாகக் கொண்ட ஒரு நூலென்று கொள்வதே ஆராய்சிக்கும் அறிவுக்கும் பொருத்தமாகும்.

குமரனும் இளைஞனும். குமரனே இளமைக் கடவுள். ஆகலின் இளைஞர்களனைவரும் தம்மை யொத்த பருவமுடைய குமரன்பற்றுக்கோடல்இயல்பு. இளமைக் காலமே அறிவு பிளிர்தலும் ஊக்கம் திகழ்தலும் அழகு பொலிதலும் வலிமை

பெருகுதலும் உள்ள காலம். கவலையின்றி மகிழ்ச்சியுடன் தங் கடமைகளை ஆற்றி தம்மைப் புகழால் நிரப்புங்காலம். குமரன் கோலம் காண்பவர் மனங்குளிரக் கட்டழகுடன் வலிமை பொருந்தி போராற்றலும் பேரறிவு முடைய இளமைக்கோலத்திற் காட்சிகொடுக்கும்பண்புடையது. இளைஞருக்கும் குமரனுக்கும் குணங்கள் ஒப்புமைபற்றி குமரனே இளைஞராற் போற்றக் கூடிய ஒரு பெருங் கடவுளாகும். அவனையே தங்கள் இலக்கியமாகக் கொள்ளல் அவர்கள் முதற்கடமையுமாகும். அவ்விதமே கொண்டு அவனை வழிபடுவாராகில் இளைஞர்கள் இடர்ப்படும் தற்கால நாகரீகச் சுழியினின்றும் தப்பி நல்வழிப்படுதல் இயலும்.

சடக்கரம்:

குமரன் சிவனின்று வேறு கடவுளாகானென்றும் இருவரும் ஒருவனே யென்றும் நாம் அறிந்து கொண்டமையால் சிவனுக்குரிய மந்திரம் குகனுக்கும் குகனுக்குரிய மந்திரஞ் சிவனுக்கும் பொருந்துமென்றுங் கொள்ளலாம். சிவனுடைய மந்திரம் நமசிவய வென்னும் ஐந்தெழுத்து. குமரனுக்குரிய மந்திரம் சரவணபவ வென்னும் ஆறெழுத்து. இரண்டிற்கும் பொதுவாகி முன்னிற்பது ஓம் என்ற பிரணவம் மந்திரங்களை உச்சரிப்பதில் ஆழ்ந்தமேதார் தத்துவம் மறைந்து கிடக்கிறது. போர்வீரனொருவன் போருக் கழைப்பானாயின் அவன் வீரஞ் செறிந்த மொழிகள் கேட்டாரை ஊக்கிப் போரில் இழுக்கும். நாட்டிற் பெரியார் ஒருவர் இறந்துபட ஒருவன்பரிந்துபேசுவானாயின் கேட்டார்களும் அவனுடன் பரிகின்றனர். நாடகமேடையில் நடிகர் தன்சொற்களாலும் அபிநயங்களாலும் பார்க்கின்றவர்களை மகிழ்விக்கின்றார். பொது மேடைகளில் ஏறிப் பேசுஞ் சொல்லாளர் கேட்கின்றவர்கள்மனதைஎவ்வழிக்குந் திருப்பி விடுகின்றனர். இதனால் மொழிகள் மனிதர்களை இயக்குஞ்சக்தி பெற்றிருப்பது விளங்கும். ஆயின் இச்சக்தி புறத்தினின்றுவருவது. இஃதேபோல அகத்தினின்று வெளிப்படுஞ் சொற்களும் ஒலிகளும் சொல்லுகிறவர்களையே இயக்கும் அதிக வல்லமை பொருந்தியது. எழுத்துக்கள் உயிரின் முயற்சியால் எழுப்ப எழுகின்ற செவிப்புலனாகும் அணுத்திரள் மார்பு, கழுத்து, தலை, நாசி, முதலிய

நான்கிடங்களையும் பொருந்தி நாக்கு, உதடு, பல், மேல்வாய் களின் முயற்சியால் ஓசைகளாய்த் தோன்றிப் பிறப்பனவாகலான் ஒலிக்கும் ஒலியின் கூட்டங்களாகிய மொழிகளுக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. மொழிகள் உயிருடனும் ஊனுடனும் கலந்து பிரிக்க முடியாதபடி நிற்கின்றன. புறத்தினின்றுவரும் ஒலி நம்மை எப்படி இயக்குகின்றதோ அவ்விதமே அகத்தினின்று எழும் ஒலியும் நம்மை இயக்கும். நன்மொழியாயின் நல்வழியில் ஆற்றுப்படுத்தும். தீமொழியாயின் தீக் குணத்தைக் காட்டும். ஆக்கவும் அழிக்கவும் உயர்த்தவும் தாழ்த்தவும் கூடும்.

காமமிகு காதலன்றன் கலவிதனைக் கருதுகின்ற
வேமமுறு கற்புடையாளின்பிணுக்கின் பெய்துவதே
எனவும்
கீழ்ப் பறவைச் சாதிகளும் வேட்டமுறும் பொல்லா
விலங்குகளும்
மெய்ஞ்ஞான நாட்டமுறும் எனவும் புறவொலியின்
வல்லமையையும்
நான் கலந்து பாடுங்கால் நற் கருப்பஞ் சாற்றினிலே
தேன் கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவை கலந்
தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டா மலினிப்பதுவே என

அகவொலியின் வல்லமையையும் ஒரு தமிழ்ப்பெரு நாப்புலவர் பகர்கின்றார்.

மந்திரம் என்பது நினைப்பவனைக் காப்பது என்று பொருள் படும். மந் + திர. ஒருவன் நல்லியல்புடையானாகி நன்மொழி களையே கூறும் ஆற்றலுடையானாயின் அவனுக்கு எவ்வித தீங்கும் வாராவென்பது அனுபவம். அதிலும் உயிர்க்கும் உறுதி பயப்பனவாய் உறுதிமொழியாகிய மந்திரங்களை இடை யீடின்றிப் பயின்று வர "ஒருமையிற்றான் கற்ற கல்வி எழுமைக்கு மேமாப்புடைத்து" என்றபடி எழுகின்ற பிறவிதோறும் நன் மைபயக்கும். நன்மை பெருகிய வழி பிறவியை அறுக்கவுஞ் செய்யும். குமாரமந்திரமாகிய ஆறெழுத்துக்களும் சிவமந்திர

மாகிய ஐந்தெழுத்துக்களும் உயிர்க்கு உறுதிப்பயனளிக்கும் எழுத்துக்களானதால் அவை எழுத்துக்களிற் சிறந்தவையாகும். பயக்கும் பயன் காரணத்துள் காரியம் அடங்கிக்கிடப்பது போல மறைந்து கிடத்தலாலும் தன்னையன்றிப் பிறரால் உரைப்படாமையாலும் மறையெனக்கொள்ளப்படும்.

விஷமுனைப்பையடக்குஞ் சக்தி மாந்தரீகனிடத்தில் இயல்பில் இல்லை. கருடனிடத்தேயுண்டு. மாந்த்ரீகன் தன்னைக் கருடனுகப் பாவித்து கருட பஞ்சாக்ஷரத்தைத் தியானிக்க அவனிடத்து விஷமுனைப்பை யடக்குஞ் சக்தி பிறக்கின்றதென்பது உலகறிந்த உண்மை. உயிரும் தன்னைச் சிவமாகவே பாவித்துத் தியானிக்க அத்தியான காலத்தில் ஆணவமுனைப்பையடக்குஞ் சக்தி பெறலாம் இப்பாவனை சிவோகம்பாவனை யெனப்படும். இப்பாவனையின்போது பாசப்பொருள் மறையும். இறைவன் ஞானசொரூபமே அறிவில் தோன்றும். சிவோகம்பாவனையில் உறைத்து நிற்கும் உயிர் அதிற் சிறிது குன்றுமேல் மீண்டும் ஆணவம் மேலிட்டு அறிவை மயக்கும். ஞான சொரூபம் விளங்காது மறையும். ஆகலின் இச்சொரூபக் காட்சியில் உயிர்நிலை நிற்றற்கு ஐந்தெழுத்தையாவது ஆறெழுத்தையாவது விதிப்படி ஓதுவது முக்கியமாகும். ஒருநூலை நாம் படித்தபின் நுதலிய பொருளை நம்மனதில் நிறுத்த விரும்புகின்றோம். ஆயின் மனது எப்போதும் ஒருவழிப்பட்டு நிற்பதில்லை குறையும் அல்லது காரணமின்றித் திடீரெனமாறும். இவ்வாறு நிகழவிடாமல் தடுப்பதற்கு ஒருவழியுண்டு. நூற்பொருள்களை யுணர்த்துஞ் சொற்களை மனதில் நினைத்துஞ் சொல்லியும் மனதின் தடுமாற்றங்களைத் தடுக்க முயல்கின்றோம். முயற்சித்து வெற்றியும் பெறுகின்றோம். இதுபோலப்பாசங்களினின்று நீங்கவும் நீங்கியவிடத்து மனது மாறுபடாது இறைவனிடத்தே நமது சிந்தனையை நிலைநிறுத்தவும் ஐந்தெழுத்தும் ஆறெழுத்தும் ஓதப்படுகின்றன. இவ்வெழுத்துக்களின் சூக்குமங்களை இங்கு விரிவாய்க்கூற இடமில்லை. சிவஞானபோதம் சிவப்பிரகாசம் திருவருட்பயன் நெஞ்சுவிடுதூது ஆறெழுத்தந்தாதி முதலிய நூல்களிற் காணலாம். அல்லது இவ்வெழுத்துக்களின் பொருளை அனுபோகத்தில் உணர்ந்தார் வாய்க்கேட்டுத் தெளியலாம்.

மந்திரங்களை உச்சரித்தல் மானதம் மந்தம் உரையென மூவகைப்படும். மானதமாவது மனத்தாற் பாவித்தல். மந்தமாவது தன்செவிக்கு மட்டும் கேட்கும்படி உச்சரித்தல். உரையாவது பிறர்க்குக் கேட்கும்படி உச்சரித்தல். இம்மூன்றனுள் மானதமே சிறந்ததாகும். இதில் வாக்கின் கலப்பின்றி மனம் தனித்து அறிவுருபமாய் நின்று பாவிக்கப்படும். உயிர் இறைவனுக்கு உரிய பொருள். ஆகையால் உடம்பினுள்ளே இதயத்தாமரையில் இறைவன் வீற்றிருப்பதாகப் பாவித்து கொல்லாமை ஐம்பொறியடக்கம் பொறை அறிவு உண்மை நோன்பு அன்பு அருள் என்னும் எட்டுப் பூக்கள்கொண்டு திருவெழுத்துக்களால் அர்ச்சித்து அதன் பின் அவற்றினை குண்டலிசத்திவசிக்கும் உந்தியில் ஞான அனலையெழுப்பிப் புருவநடுவின் கண்ணோ அவ்வனலால் உண்டாகும் அமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனைநாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களால் ஓமஞ்செய்து திருவெழுத்துக்களால் சிவோகம்பாவனை செய்வானாயின் அதில் பாவிக்கப்படும் இறைவன் விளங்கித் தோன்றுவான்.

அஞ்செழுத்தாலுள்ள மானுடைமை கண்டானை
அஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி – லஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோசதண்டஞ் சானிக்கில்
அண்டனுஞ் சேடனு மங்கு — என்ற திருவாக்கால்

உணர்ந்துகொள்க.

அகர உகர மகர மூன்றும் சேர்ந்து ஓம் என்றாயிற்று. சித்தர் நூல்களில் இம்முறை மாறி உகர அகர மகர மென்ற வரிசை காணக்கிடக்கின்றது எனினும் இரண்டும் ஒரு கருப்பொருளையே உணர்த்தும். ஒரு முறை உச்சரித்த மாத்திரையே உயர்கதியிற்சேர்ப்பதால் ஓங்காரமெனவும் எல்லாவுயிர்களையும் (பிராணன்கள்) இறைவனிடத்தே சேர்க்கின்றமையால் பிரணவமெனவும் பிறவிப்பெருங் கடல் நீங்கச் செய்யுந் தன்மையால் தாரகமெனவும் பெயர் பெற்றுவிளங்கும். இது முழுமுதல் இறைவனுக்கே பொருந்தும். இதைத் தியானஞ் செய்கிறவன் அவனையடைந்து அவனாகவே திகழ்கின்றான். இந்த எழுத்துக்களின்

மகிமையை உண்மூகமாக அறிவதற்குத் தன்னையறிவதென்றும் தன்னையறிதலே இறைவனைக்காண வழியென்றும் பண்டைத் தமிழ் மறையோர் கண்ட அநுபவம்.

அகர உகர மகரம் முறையே சத்து சித்து ஆனந்தமென்றும் படைத்தல் காத்தல் அருளல் என்ற முத்தொழில்களாகி உலகம் நடத்தப்பட்டு வருகிறதென்றும் ரவி மதி அக்கினி என்று சொல்லப்படும் கலைகளாய் உயிர்கள்தோறும் பிராணனாய் விளங்குகிறதென்றும் இப்பிராணனே சீவன் என்றும் மும்மல மற்ற சீவனே சிவனென்றும் சீவச்செயலொழிந்து சிவச்செயலில் நிற்பதே தவம் யோகம் வீடென்றும் பிரணவத்தின் பெருமையை யோக நூல்களிலும் ஞான நூல்களிலும் எழுதியிருக்கின்றார்கள். உயிருள் பொருள் இல்பொருள் எல்லாம் அழிந்து ஒழிய இறைவன் ஒருவனே ஒரு பெருஞ்சக்தியாய் என்றும் நிலைத்திருக்கும் வலிமையை அறைபிட்டு முழக்குஞ் சொல் ஓம் Aum = I am எனக்கூறுவர் ஆங்கிலதத்துவ ஞானிகளிற்சிலர். பிரணவத்தையும் திருவைந்தெழுத்துக்களையும் நாம் கருதுமிடத்து மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்கினை என்னும் நம் சரீரத்தின் ஆறு ஆதாரங்களிலுள்ள எழுத்துக்களாகச் சொல்லப்படுகிறது. எழுத்துக்கள் நிற்கும் வரிசை கீழ்முக நோக்கிய மூலாதாரத்திலிருந்து மேல் முகநோக்கிய மூலமாகிய ஆக்கினை ஸ்தானம் வரை மேல் நோக்கிச் செல்லும் மேல் மூலத்தில் யகார எழுத்தில் விளங்கும் ஓங்காரம் சிரசையும் கீழ் மூலத்தில் விளங்கும் ஓங்காரம் மர்மஸ்தானத்தையுங் குறிக்கும். பிரணவத்தின் உடலாகிய ஐந்தெழுத்துக்களில் நகாரமும் இடம் வலமாக மாறி சுவாதிட்டானத்தில் எழுத அதுவே இரண்டு கால்களாகவும் மகாரத்தை இடம் வலமாக இணைத்து மணிபூரகத்தில் அடைக்க வயிறாகவும் சிகாரத்தை இடம் வலம் அணைத்து அநாகதத்தில் எழுத இரண்டு கைகளாகவும் இரத்தாசயமாகவும் வகாரத்தை விசுத்தியில் முன் போல் எழுத சுவாசாசயமாகவும் கழுத்தாகவும் யகாரத்தை ஆக்கினையிலெழுத ஓங்காரமாகவும் விளங்கி ஒரு மனுட சரீரத்தின் அமைப்பையும் அங்கங்களையும் காட்டி நிற்கும்.

நவ்விரண்டு காலதாய் நவின்ற மவ்வுவயிறதாய்
சிவ்விரண்டு தோளதாய்ச் சிறந்த வவ்வு வாயதா
யவ்விரண்டு கண்ணதாய மர்ந்திருந்த காரணஞ்
செவ்வியொத்து நின்றதே சிவாய மைந்தெழுத்துமே

என்றது சிவவாக்கியம்.

மனவாசகங்கடந்தார் உண்மைவிளக்க நூலில் இக்கருத்தையே

ஆடும்படி கேணல்லம் பலத்தானையனே
நாடுந்திருவடியிலே நகரம்—கூடு
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகரு முகம்வா முடியப்பார் — என்று

வலியுறுத்துகின்றார்.

தவிர இவ்வைந்தெழுத்துக்களால் குறிக்கப்படும் ஐந்து ஸ்தானங்களிலும் முறையே பிருதிவு அப்பு தேயு வாயு ஆகாயம் என்ற ஐம்பூதங்களும் அடங்கும். முறையே பிரம்மா விஷ்ணு ருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்ற ஐந்து கர்த்தாக்களையும் ஐந்து ஆற்றல்களையும் குறிக்கும். உயிர்கள் உற்பத்திக்குக் காரணமாகிய மூலாதாரத்தின் உட் பொருளாய் விளங்கும் கருவும் ஓங்கார ரூபமாய் நிற்கும். இவ்வண்ணம் தூலம் சூக்குமம் காரணம் என்னும் மூன்று வழியிலும் விளங்கி நிற்கும் பிரணவமும் அது விளங்கி நிற்கும் தூல சரீரமும் ஐந்து எழுத்துக்களாலாகிய சரீரத்தில் விளங்குகின்றது.

கணபதி வடிவம் பிரணவமென்று நூல்கள் கூறும் பிள்ளையார் சுழி (உ) இதற்குச்சான்று. ஒரு காரியத்தை எழுதத் தொடங்கும் போது தலைப்பில் (உ) என்ற அடையாளம் எழுதியே மற்றதை எழுதுகின்றோம். இதில் பிந்து வென்பது (0) என்னும் வட்ட வடிவு. இரண்டாவது தண்டமென்பது (—) கோடுருவமாம் அதாவது பிந்துவும் நாதமும். இரண்டுங் கூடியதே பிள்ளையார் சுழி பிரணவத்தை மந்திர அரசு என உபநிஷத்துகள் முழங்குகின்றன. பிளவாட்ஸகியென்னும் அன்னிய நாட்டு அன்னையுந் தமது புத்தகங்களில் தமிழ் "ஓம்" என்று மந்திரத்தை எழுதிப் பிரணவத்தை உயர்வாகமதிக்கின்றனர்.

சரவணபவ என்னும் குமரமந்திரமும் இதுகாறுங் கூறிய மந்திரத்தையே குறிக்கும். சரம் = நாணல். வனம் = நீர். பவன் = தோன்றியவன். நாணற்பொய்கையில் தோன்றியவன். சரவண பவன் இன்னொரு விதமாகவும் கூறுவதுண்டு. சரம் = நாசி, அண்ணம் = மேல்நுனி, பவன் = பிரகாசிக்கின்றவன் நாசியின் மேல்நுனியை நோக்கி ஒருமுகமாகத் தியானிக்கிறவன்முன் னின்று பிரகாசிக்கிறவன் சரவணபவன். உடலின் ஆறு ஆதாரங்களில் மூலாதாரத்தில் சகாரமும் சுவாதிட்டானத்தில் ரகாரமும் மணிபூரகத்தில்ணகாரமும் அநாகதத்திலும் ஆக்கினை யிலும் வகாரமும் விசுத்தியில் பகாரமும் நிற்கும். இதுவுமன்றி சகாரம் பிருதிவையும் ரகாரம் அப்புவையும் வகாரம் தேயு வையும் ணகாரம் வாயுவையும் பகாரம் ஆகாயத்தையுங் குறிக் கும். ஆக இம்முறையில் ஆறெழுத்துக்கள் ஐந்தெழுத்தின் சூக்குமங்களுடன் இயையும். சரவணபவ என்னும் மந்திரத் தின் உட்கருத்துக்களைச் சித்தர் நூலில் கீழ்க்கண்டவாறு கூறப் பட்டிருக்கிறது.

இம்மாகி இங்ஙாகி இம் இங்ஙாகி இளங்குழவி யமுதகுா
லெல்லாம் வந்து
உம்மதிலே யொடுங்கியது மகாரத்துள்ளே ஊணி
வட்டமிட் டெழுந்த ஈாதவிந்தாய்
மம்மாகி எட்டிரண்டும் லிங்கமாகி மாயையென்ற
திரோதமுய மனமுமாகி
சம்மாகிக் கிலியாகி ஐயுமாகி சரவணபவ ஓம்
சத்தி வேலே.

இச்செய்யுளில் பிரணவத்தின் உட்கருத்துக்களையும் ஆறெழுத் தின் உட்கருத்துக்களையும் மர்மமாகவே கூறியிருக்கிறது. ஆன்ம அனுபவமுடையார்க்கும் ஆன்ம அறிவுள்ளவர்களுக்கு மட்டுமே இதன் பொருள் நன்கு புலப்படும்.

கடவுளின் வழிபாட்டின் நோக்கம் உண்மைப் பொருளாகிய இறைவன் திருவடிசேர்தலென யாவரும் அறிவோம். இறை வுன் திருவருள் ஒன்றே நமக்கு நிலையான செல்வம். பொரு

ளிலார்க்கு இவ்வுலகமில்லாதல்போல அவனருளில்லார்க்கு அவ னுலகமில்லை. அவ்வருளைப்பெற முயற்சிப்பது மக்களின் முக்கிய கடமை. மனிதப்பிறவியின் பயனும் அக்கடமையைக் குறைவின்றி ஆற்றி அவனருளைப் பெறுதலே. அவ்வருளின் த்தையளிக்க இறைவனும் பெருங்கருணைகொண்டு விளங்கு கின்றான் "அவனருளாலே யவனருள் வணங்கி" எனவும் "மெய்யருளாந் தாயுடன் சென்று பின்றாதையைக்கூடி" என வும் பநுவல் பகர்கின்றதால் அவனருளே எதற்கும் வேண்டப் படுமென்பது புலப்படும். அவனருளை நாம் பெறுவோமாயின் அவனும் அதற்கு மாற்றாக நம்மை ஆட்கொள்கின்றான். "தந்த துன்றன்னைக் கொண்டதென்றன்னைச் சங்கரா யார்கொலோ, அந்த மொன்றில்லா வானந்தம் பெற்றேன் யாது நீ பெற்ற தொன்றென்பால்" என்ற மணிவாசகர் வாக்கு இக்கருத்துத் தோன்ற எழுந்ததன்றோ. இனி நாம் செய்யவேண்டியதென்ன? கூர்ந்து ஆராயினும் இறைவழிபாடன்றி ஏனைய விடை காண இயலுமோ?



# திருமலை

குறிஞ்சி நிலக்கடவுளாகிய குமரன் றண்ணளிசுரந்து திருக் கோயில் கொண்டருளுங் குன்றுதோறும் ஆடுந்தலங்களில் திரு மலையென்பது முக்கியமோர் தலமாம். இத்தலம் பைந்தமிழ் பயி லும் பாண்டி நாட்டிலுள்ள பதினன்கு சிவஸ்தலங்களுக்குத் தலையாய் விளங்கும் திருக்குற்றாலத்துக்கு வடமேற்காய் 8 மைல் தூரத்தில் பண்பொழில் ஊருக்கருகே குடபாலில் எழில்மிகுந்து விளங்கும் ஓர் குன்று

இத்தலம் எக்காலத்தில் உண்டாயிற்றென்று ஆராய்ந்து முடிவு கட்டுவதற்குப் போதிய சான்றுகள் ஒன்றுமில்லை. கல்வெட்டுகளா வது ஓலைச்சுவடிக் குறிப்புக்களாவது பிற்காலத்தில் தோன்றிய வேறு ஆதாரங்களாவது இருப்பதாக இதுவரை தெரியவில்லை. ஆயின் இதன் தொன்மையைப்பற்றிப் பரம்பரையாய் வழங்கி வரும் உலகவழக்கு ஒன்றுண்டு. ஆதியில் இத்திருமலைத் தலத் தில் வீற்றிருக்கும் குமரப்பெருமான் அதற்கண்மையிலுள்ள அச்சன்கோயிலுக்குப் போகிறவழியில் புழுதியாற்றுக்கோட்டை தன்னில் ஓர் வனத்தில் கோயில் கொண்டருளியிருந்தார். ஓர் காலத்தில் வருணன் உக்கிரத்தால் மலையில் நீர்ப் பெருக்கெடுத்து குமரன் கோயில் அழியவும் குமரப்பெருமானின் திருவுருவம் கோயிலினின்றும் வெளியேகி அவ்வாற்று மணலில் புதைந்தது. அக்காலத்தில் அகத்தியனார் உரைத்தபடி இத்திருமலையில் குமரனை நோக்கித் தவஞ்செய்து கொண்டிருந்த தெய்வ கன்னி கள் எழுவருக்கும் அங்குள்ள பத்திரகாளிக்கும் பூசைசெய்த உத்தமன் பூவன் பட்டருக்குக் கனவில் தோன்றித் தன்னை எடுத்து இத்திருமலையில் வைக்கும்படி கட்டளையிட்டார். உடனே மெய்யன்பராகிய அப்பட்டர் பயந்து எழுந்து மயிர்க் கூச்சலிட நெக்கு நெக்குருக அவரடிபணிந்து நீர் எங்குற்றீர், இருக்குமிடத்தைக் காண ஓர் அடையாளங் கூறுமென்று முறை யிடவும் அப்பெருமான் நீர் புறப்படுமிடத்திலிருந்து ஒரு எறும்புக்கூட்டஞ்சென்று நாம் இருக்குமிடத்தில் நிற்குமென்

றும் நாம் இதை இந்நாட்டரசன் பந்தளராசனுக்கும் புகன்று வந்தோமெனவும் உணர்த்தினர். பின்னர் பூவன்பட்டர் அரசனைக் கண்டு இதைக்கூற அரசனும் அதை ஒத்துக்கொண்டு இருவரும் குறிப்பிட்ட இடஞ்சென்று குமரன்திருவுருவத்தைக் கண்டு பார்த்து அதைப் பயபக்தியுடன் எடுத்து வந்து குன்றின்மீதுள்ள குவளைப்பொய்கையினருகிற் புளிய மரத்தடியில் வைத்தனர். இதை இன்றும் உத்தண்ட வேலாயுதம் என்று வழங்கு கின்றார்கள். இதற்குப் பின் நெல்லையம்பலம் மயிலப்பன் என்ற குமாரத்தொண்டர் ஓர் ஆலயம் செய்வித்து திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்து வேண்டும் மானியங்களை அளித்தார்.

பந்தள நாட்டிலுள்ள சிவன் கோயிலை மகமதிய அரசர்கள் தென்னாட்டைப் படையெடுக்க வரும்போது இடித்ததாகவும் அக் கோவிலிலுள்ள குமரன் திருவுருவத்தைப் பூசாரிகள் பக்கத்தில் ஓடுகின்ற புழுதி ஆற்று மணலில் ஒளித்து வைத்ததாகவும் பின்னர் அதைக்கொணர்ந்து திருமலையில் பிரதிட்டை செய்ததாகவும் மற்றொரு உலக வழக்கும் உண்டு. பந்தள அரசன் கோட்டையின் சின்னங்களும் இடிந்த சிவன் கோவிலின் சின்னங்களும் திருமலைக்கு வடக்கே அரைமயில் தூரத்தில் இன்றும் காணப் படுகின்றன. இந்த இடத்திலிருந்து பிற்காலத்தில் சில செம்பு விக்கிரகங்கள் அகப்பட்டனவென்றும் அவைகளிற் சிலவற்றைத் திருமலைக் கோவிலில் சுற்றுப் பிரகாரத்தில் பிரதிட்டை செய்திருப்பதாயும் இன்னும் சிலவற்றைச் சேமித்து வைத் திருப்பதாயும் தெரிய வருகிறது.

குமரன் அருளாளர் அருணகிரியார் திருப்புகழில் மூன்று பாக்கள் திருமலையைக் குறிக்கின்றன. இந்தத் திருமலையென்று உறுதியாய்க்கூற அப்பாக்களில் அகச்சான்று ஒன்றுமில்லை. ஆயின் எத்தலமென்று நன்கு புலப்படவுமில்லை. சிலர் இத்தலமென்று கொள்ளுவர். சிலர் முற்காலத்தில் குமரன் தலமாயிருந்து இப்போது விஷ்ணுதலமாக விளங்கும் திருமலை திருப்பதி யென்றும் கூறுவர். இன்னும் சிலர் ஸ்ரீ சைலமென்று வற்புறுத்துவர். எது எவ்வாறெனினும் இத்தலம் அருணகிரிநாதர்

காலத்துக்கு முற்பட்டது இல்லையென்று யூகிக்க இடந்தருகின்றது. இற்றைக்குச் சுமார் ஐநூறு வருடங்கட்கு உள்ளிருக்கலாம். தொண்டன் மயிலப்பன் காலம் மூந்நூறு வருடங்கட்கு உட்பட்டமையால் அவர் இக்கோயில் கர்ப்பக்கிரகம் கட்டி முடித்ததும் மூந்நூறு வருடங்கட்கு உட்பட்டதென்றே பெறப்படும்.

குமரன் உருவம் பிரதிட்டை செய்த பின் அர்த்த மண்டபம் எப்போது யாரால் கட்டப்பட்டதென்று தெரியவில்லை 900 ஆண்டில் இருந்த மன்னர் பெருமாள் நூலிலிருந்து மணி மண்டபம் அம்பலவாண முனிவரென்ற ஒரு சைவப் பெரியாரால் கட்டப்பட்டதென வெளியாகிறது அக்காலத்தில் (1729—1751 கி. பி) இருந்த குறுநில மன்னர்களாகிய வடகரை ஆதிக்கத்தார் இக்கோவிலுக்கு அநேக விதமான தொண்டு செய்திருக்கின்றனர். குன்றின் மேலுள்ள குவளைச்சுனை பெரிதாக்கப்பட்டது. இதற்கு முன் செய்த திருப்பணிக் குறைகளை எடுத்துக் கட்டியும் சுற்றுப் பிரகாரக் குறைவேலையும் செய்து முடிக்கப்பட்டது. இதற்குச் செலவு 7101 பசும் பொன் (1 பொன் ரூ. 2—1—4 இக்காலத்து ஒரு டவுன் போல மதிப்புள்ளது) சுனையின் பக்கத்திலுள்ள சுனைக்கரை மண்டபமும் அதன் பக்கத்தில் பூசுரர்க்கும் சைவருக்கும் சங்கமர்க்கும் பொருந்தினபடி விருந்தளிக்கும் நித்ய சோபன அன்ன சத்திரமும் நாலுகால் மண்டபமுங் கட்டிமுடிந்தன. திருவாபரணங்களும் பாத்திரங்களும் கொடுக்கப்பட்டன. ஒரு நாள் மழை மிகுதியினால் கோயிற்பசுக்கள் தங்க இடமின்றிக் குமரன் சன்னதியில் வந்து தஞ்சமடைய வழிபாட்டுக்கு வந்திருந்த வடகரை அரசி அதைக் கண்டு பொறாது தானணிந்திருந்த ஆபரணங்களுள் திருமாங்கல்யந்தவிர மற்றவை யெல்லாங் கழற்றிக் கொடுத்துத் தானடுத்த முறை குமரனை வழிபட வருமுன் இவ்வாபரணங்களைக்கொண்டு ஒரு பசு மடங்கட்டி முடிக்கவேண்டுமென்று கட்டளையிட அப்படியே முடிக்கப்பட்டது. அது இப்போது உச்சி விநாயகர் கோயிலுக்குப் பின் பக்கம் வடக்கே பார்த்த ஒரு இடமாகும். இக்காலத்தில் வடகரைத் தானாதிபதியாயிருந்த இந்நூலா

சிரியரின் முன்னோர் அருங்கவிப் புலவர் பொன்னம்பலம் பிள்ளை மிகுதியான பொருள் செலவு செய்து ஒரு மடமும் அன்ன சத்திரமுங் கட்டி அநேக திருப்பணி செய்தார்.

கி.பி 1752 முதல் 1760 க்குள் பண்பொழிலில் திருமலைக் குமரனுக்குத்தேர் செய்வித்து மகோற்சவம் சிறப்பாய் நடைபெறும் வண்ணம் வடகரையாரால் வசதிகள் செய்து கொடுக்கப் பட்டன. இதன் பின்னர் சுக்கிரவாரந்தோறும் ஏழைகளுக்கு அரிசி கொடுப்பதற்காக சுக்கிரவார மண்டபங் கட்டப்பட்டது. வள்ளல் பிச்சைப்பிள்ளை கட்டிய தைப்பூச மண்டபம் இதென்றுவது சான்றோர் மடம் ஒன்றிருந்திருப்பது எதென்றுவது தெரியவில்லை. நித்தியதானந்தருமன்னக் கொடியும் பிச்சைக்கட்டளை மடமும், அறைக்கட்டளை மடமும் வள்ளியம்மை ஆதிமடம் சொக்க நாதன் மடம் இருந்திருப்பதாகத்தெரிகிறது. இவைகளெல்லாம் இப்போதிருக்குங் கோயிலைச் சேர்ந்த மண்டபங் கட்கு இடங்கொடுத்து விட்டனபோலும். சுனைக்கரையில் வசந்த மண்டபமொன்று இருந்திருக்கிறது. கருணிகர் புன்னைவனம் பிள்ளையும் சங்கரநாராயணபிள்ளை இருவரும் குகனுக்கு மண்டபங்கள் அமைத்திருக்கின்றார்கள். கோயிலைப்பற்றி இவ்வளவு விவரங்கள் நாம் அறியக் கிடக்கினும் கட்டிட மாறுபாடுகளால் திட்டமாக இது இன்னதெனக் கூறமுடியவில்லை.

மலை ஏறும் வழியில் மலைமத்தியிலிருக்கின்ற மடம் நந்த கோபாலர்களால் கட்டப்பட்டதெனவும் அக்காலத்திலேயே சரவணப்பொய்கை யொன்று மலையடிவாரத்தில் இருந்ததாகவும் தெரிகிறது. சரவணப்பொய்கை இப்போது தூர்ந்துபோய் விட்டது. அடிவாரத்திலுள்ள சொக்கலிங்கக் கணபதி மிகவும் தொன்மையானவர்.

பிற்காலத்தில் மறவர் குலத்துதித்து குமரனையே தன் உயிரென நினைத்து துறவறம் பூண்டொழுகிய சிவகாமிப் பரதேசி யென்னும் உத்தமி கோயில் சுற்றுப்பிரகாரக் குறைகளைப் பூர்த்தி செய்து வேறு கட்டிடத் திருப்பணிகளும் செய்தார். தொண்டன் மயிலப்பன் இக்குமரனுக்குக் காணிக்கையாக அளித்த

மயிலப்பபுரம் கிராமம் 150 கோட்டை நஞ்சை நிலங்களேயும் அதைச்சேர்ந்த இதச சொத்துக்களேயும் சிலவிடர்கள் வெளவி அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். இந்த உத்தமி அந்தக் கிராமசாசனத்தை எங்குந் தேடி அகப்படாமல் மனங்கலங்கு நாளில் தென்காசி ஆலயம் கட்டிய காசிகண்ட பராக்கிரம பாண்டியன் தத்துவ விசாரணே செய்வதற்காக நிறுவிய தத்துவப் பிரகாசர் ஆதீனத்தின் தலைவர் தன் வசமிருந்த மயிலப்பபுரம் கிராமசாஸனத்தை சி வ கா மி ப் பரதேசிக்குக் கொடுத்தார். அதைக்கொண்டு விவகாரத்தால் அவ்விடர்களே வென்று அக் கிராமச் சொத்துக்களனேத்தையும் மீட்டினுர். இ த ஞ ல் இக் கோவிலின் மகிமை இன்னும் அதிகமாக நாடெங்கும் பரவிற்று. இவ்வுத்தமி பூதவுடம்பை நீத்து புகழுடம்பெய்தி திருமலேக் கடுத்த கீழ்புரம் வண்டாடும் பொட்டலில் சமாதி நிலேயிலிருப் பதை இன்றும் காணலாம். சிவகாமிப் பரதேசிக்குப்பின் இக் கோயிலில் அமைக்கப்பட்ட கட்டிடச்சீர்திருத்தங்கள் யாவர் களும் அறிவார்களாதலால் அவற்றை இங்கு கூறவில்லே. திரு மலேமேல் இப்போதிருக்கின்ற கோயில்களே இந்நூலாசிரியர் கீழ்வருமாறு பாடுகின்ருர்.

வெற்றிபெற வருளுக்ர வயிரவ
　வெற்மை வடகுண　　திசையாளா
மிக்ககுளல் வளமுற்ற கனிகைகள்
　மெச்சு சனேகுட　　முடையோனே
பற்றலர்கள்பணி கொற்றை பயிரவி
　பச்சை நிறமினி　　பெழில்காளி
பட்பினமை தலேவுற்ற சினகர
　பத்தி வடகுட　　முடையோனே
உற்றதளி நெடிதிட்ட நிருதியி
　லுச்சிகணபதி　　யமைவாகி
உத்தமர்கள் பலபத்தி நிறைபவ
　வொப்பிலூ மரர்கள்　　துதிபேண
செற்றை வருதரு வுற்றபொழில்மலி
　செச்சை திருமலே　　நடுவேநீள்

சித்திதளிய தில் பொற்பின் மயில்மிசை
செக்கர் நிறமிளிர் பெருமானே.

இத்தலத்திலுள்ள குமரன் பிறதலங்களைப் போலல்லாது இளமைக் கோலத்திலிருப்பதால் மெய்யன்பர்களுக்கு குழவி மனம்போற் கரவாது வேண்டியதை வேண்டியவுடன் ஈயும் வரதனாய் விளங்குவதுடன் அநேக அற்புதங்களையும் செய்து திகழ்கின்றான். சுமார் இருபது வருடங்களுக்கு முன் தண்டபாணிதேசிகரென்னும் ஓர் புலவர் துறவறமே நல்லறமென்று எண்ணி இல்லறந் துறந்து பழைய நல்வினைப் பயனால் குமரனருள் நிரம்பப்பெற்று இத்தலமேகி குமரனை வணங்கிப் புளகித்து மெய்மறந்து கீழே விழ மலையினின்றும் உருண்டு தன் தலத்தில் தனக்கொரு ஊனமின்றி எழுந்தவரலாறு யாவரும் அறிந்த விஷயம். இவரே புலவர் புராணம் பாடிய முருகதாச சுவாமிகள். சென்ற வருடத்தில் ஒருவன் தன் வயிற்றுநோய் பொறாது இக்குமரனை உள்ளன்புடன் தொழுது தன் நோய் நீங்கப்பெறின் நாவை அறுத்துக் காணிக்கை செலுத்துவதாக பிரார்த்தனை செய்துகொள்ள அவனுக்கு உற்றநோய் நீங்கவும் அவன் தன் நாவை அறுத்து குமரன் முன் வளங்கிட நாவும் அன்றே வளர்ந்து அவன் சுகமுற்றது கண்கூடாகக் கண்ட காட்சி. இன்றும் எத்தனையோ அன்பர்கள் அவனை வணங்கி விரும்பிய வரங்களைப்பெற்று உய்கின்றார்.



## நூற்சிறப்பு

அழகு செல்வம் உயர்வு என்னும் பல் பொருள் தரும் திரு வென்னும்பதம் தேவர்கள் அடியார்கள் நூல்கள் தலங்கள் முதலிய பொருள்களுக்கு முன்னின்று அவற்றின் மகிமையை உணர்த்தும் ஓர் தமிழ்ச்சொல். திருமால் திருவள்ளுவர் திருக்குறள் திருமலை என்பது போல, ஈண்டு திருப்புகழ் என்பதில் குமரன் புகழ் பாடும் நூலுக்கு முன்னின்று அந்நூல் உயர்வைத்தெரிக்கும். திருப்புகழ் என்பது இறைவன் புகழையே பாடும் நூலெனினும் சிறப்பாகக் குமரன் புகழ் பாடும் நூலென்பதே உலகவழக்கு. தேவாரமென்புழி முழு முதற் கடவுளைக் குறிக்குமாறு திருப்புகழ் குமரனைக்குறிக்கும். இஃதன்றித் திருக்குறளென்பது எண்ணிலாக்கவிஞர் குறட்பாவியற்றினரேனும் நூலின் உயர்வு நோக்கி திருவள்ளுவர் செய்த குறளையே குறிப்பது போலத் திருப்புகழ் அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழையே குறிக்கும். அருணகிரியார் காலம் சுமார் 450 வருடங்களுக்கு முற்பட்டதெனத்தெரிகிறது. இவர் காலந்தொட்டு இற்றை வரை அவர் பாடியதுபோல எவருந் திருப்புகழ் பாடியதாகத்தெரியவில்லை. குமரனைப்பற்றிப் பிற்காலத்தில் பற்பல நூல்கள் அறிஞர்கள் பலராலியற்றப்பட்டிருப்பினும் அருணகிரியார் திருப்புகழைப்போல ஒரு திருப்புகழும் தோன்றவில்லை. இப்போது தான் அக்குறை நீங்கியிருக்கிறது. தற்காலத்தில் இக்குறையை நீக்கியிருக்கும் பெருமை திருமலைக் குமாரசுவாமி திருப்புகழ் என்னும் இவ்வரிய நூலை இயற்றிய நகரக்கிழாருக்கே உரியது. இந்நூல் ஆயிரத்தெட்டுப் பாக்கள் கொண்டு முழுமையும் திருமலைக் குமரனையே பரிவது. அருணகிரியார் வாக்கைப்போன்று இந்நூலும் மதுரம் பழுத்துத்தேன் துளிக்கும் பல்வகைச் சந்தச் சுவைவாய்ந்து கற்பார் மனதைக்கவரும் பான்மையது. "கேட்டார் பிணிக்குந்தகையவாய்க் கேளாரும் வேட்பமொழிவதாஞ் சொல்" என்னும் திருவள்ளுவர் வாக்குக்கு இந்நூல் ஒரு சிறந்த உதாரணமாகும்.

இந்நூலாரும் அருணகிரியாரைப்போலவே திருவருள் பெற்றுப் பாடினுரென்பது நூலிற்காணப்படும் சில சொற்களால் தெரிகின்றது. "கனவினிலமுத முதவிய குமர கன மிருநனவில் வரவேணும்" "தின தினமென் சொப்பனத்திலே வருமுருக" "என் கனவினில் வந்திருந்து செந்தமிழ் வழங்குகின்ற குருநாதா" என்பனபோன்ற வாக்குகள் பயின்று வருவதால் இவர் திருவருள் நிரம்பியவரென்பது விளங்கும். தவிர, திருமலைக் குமரனைப்பற்றிய அந்தாதி, கொம்பில்லாவண்ணம், கொம்பில்லா நிரோட்ட வெண்பா, வயிரவர் பிள்ளைத்தமிழ், அலங்காரப்பஞ்சகம், மயில்விண்ணப்பம் இன்னனைய பல அரிய நூல்களையும் அனுயாசமாய் உருகிப்பாடி யிருப்பது மன்றி அந் நூல்கள் படிப்பவர் மனதையும் உருக்குந் தன்மையவாய் விளங்குதலாலும் நன்கு அறியப்படும்.

ஆயின் அருணகிரியாரைப் போலக் குமரன் தலங்கள் தோறும் சென்று திருப்புகழ் பாடாமல் எத்தலத்திலிருப்பவனும் ஒரே குமரனெனப் பொருள்படும்படி பலதலங்களையுந் தமது பாக்களிற் சேர்த்தும் விட்டும் ஈற்றடியில் திருமலைக் குமரனையே விளித்துப்பாடியிருக்கின்றார். அருணகிரியார் பாக்களில் வடமொழியும் தென்மொழியும் பாலும் பழமும் போல் விளங்க இந்நூலில் தென்மொழி நிறைந்து பழமுஞ் சுவையும் போற்றிகழ்கின்றது. இன்னும் இவர் சிற்றின்பத்தை ஓரளவிலே நிறுத்திப் பாடியிருப்பது மெச்சத்தகுந்தது. இந்நூல் குமரக் கடவுளை வழிபடு காலங்களில் மந்திரம் போல் ஓத மிகவும் பொருத்த முடையது. குமரன் திருவடிப்பத்தி ஞானப் பயிர் வளர்த்தற்கு ஓர் நற்கருவியுமாகும்.

இந்நூற் பாக்கள் உயிர்க்கு உறுதி பயக்கும் உண்மைகளை உரைப்பனவாய் சொன்னயம் பொருணயம் நிறைந்தனவாய் உயர்வுற்று விளங்குகின்றன. இவ்வுண்மைகள் நூல் முழுமையுங் கலந்து வருவதினுலும் அவற்றின் இயல்புகளை முன் கூறப்பட்டிருப்பதாலும் அவைகளை உரைக்கும் பாக்களின் அடிகளை மட்டும் பொறுக்கித் தனியே தொகுப்பது மிகையென்றஞ்சி விடுத்தாம்.

நமது புலவர் இயற்கை வருணனை மிகுதியாகப் பயின்று வருதல் நோக்கத்தக்கது. வயலூரின் சிறப்பையும் பொழிலூராகிய பண்பொழிலின் சிறப்பையும் முறையே:

கயல்கள் மிகவே நிறைந்த வயல்கள் மிகவே பொலிந்து
கதிர்கள் மிகவே செறிந்த வயலூரா எனவும்
கமுகுபல மாவுதெங்கு அமராநலகேற நின்று
கமழு பலமே வழங்கு பொழிலூரா—எனவுங் கூறுகின்

றார். நீர் நிறைந்து கயல் மீன்கள் விளையாடவும் விளைந்து திரண்டு கனத்த குலைகள் தாங்கிய நெற் பயிர் நிறைந்த வயல்களையுடைய வயலூரென்றும் கமுகு பலா மா தென்னை முதலிய மரங்கள் வானோங்கி வளர்ந்து மணம் பொருந்திய பழங்களை வழங்கும் பொழிலூரெனவும் வர்ணித்தது இறும்பூது அளிக்கும். இவ்விரண்டையுஞ்சேர்த்து "அருகெலாஞ் செங்நெல் தெருவெலாந் தெங்குமாவும் பழம் விழும்" என்ற வாகீசர் வாக்கையும் "குலை வாழைத் தீங் கனியும் மாங்கனியும் தேன் பிலிற்றும்" என்ற சம்பந்தர் வாக்கையும் ஒப்பிட்டுப்பார்க்க.

இயற்கையாகவே ஒன்றுக்கொன்று விரோதப் பான்மை கொண்டு புயவலிமை அதிகமுள்ள சிங்கங்களும் யானைகளும் மலிந்து தங்களுக்குள் ஒரு பகையுமின்றி கூடி விளையாடித் திரிகின்ற திருமலை யென

"புயவலிமையால் நிறைந்த அரிகரிகளை மலிந்து
பொரு பகையிலா திணங்கி விளையாடி
புனிதவரை மேவுகின்ற திருமலை" யெனப்பாடியிருப்பது

ஓர் அழகு. மேகங்கள் அங்குமிங்குந் திரியாது நிற்க வானளாவி நிற்கும் மரங்கள் செறிந்த சோலைகள் தேன்மணம் பிலிற்றுந் திருமலை

கொண்டல்கள் துயில்கொள வெழுந்த வானுயர்
தண்டலை மருவிய வளங்கள் மேவிய
கொங்கவிர் திருமலையெனக் கூறுவது நயம்பொருந்தியது.

கொண்டல்கள் துயில்கொள வெனுங் கருத்து வியப்புடைத்து

தெள்ளிதாகிய நீரினிலே கயல்
துள்ளிதாமரை மீதினிலே துயில்
சில்லதாகிய வாளைகளை கமுகிடைமேவி
செல்விலேறிடு மீளுமவாறிடை
நெல்வினைல விழும் வார்பணை சூழ்
தெள்ளியோர் — எனவும்
தெங்கு கொங்கு மஞ்சளிஞ்சி பங்கயம் பிறங்கு சந்து
சிந்து புங்கு கந்திதங்கு — மதினூடே
மந்தி தொங்குகின்ற கொங்கை அம்பரம் புகுந்திலங்க
மஞ்சினஞ்சிறந் துறங்கி — விளையாட
வண்டினங் கனிந்தருந்துகின்ற பொங்கரங்கு மிங்கு
மண்டுகின்ற பண்பை என்னும் பாக்களின் அழகும்

இனிமையும் படித்துப் படித்து அனுபவிக்க நமக்கு ஓர் களிப்பு உண்டாகும்.

மஞ்சுலாவிட மாமயிலாண்டமை
வுண்டு நாடகமாடிட — பூங்குயில்
வண்டு கூவிடரீமென — வேய்ந்துளவளநாடா — என்று

படிக்க மயில் நங்கண் முன்னே ஆடுவதாகத் தோன்றுகிறது. குயில் கூவலும் வண்டின்ரீங் காரமுங்காதினில் விழுந்து ஓர்வித இன்பம் பயக்கின்றதல்லவா?

உவமானப் பொருள்களும் அப்படியே மகிழ்விக்கும். இஞ்சி தின்ற குரங்கு ஒரு நிலையின்றி அலைவது போலவும், இண்டுச்செடியில் அகப்பட்டவனை அது விடாதது போலவும் இருதலைக் கொள்ளி எறும்பு போல வென்று

இஞ்சி தினலான மந்தியென்ற விதமே யலைந்து
இண்டில் தலையே புகுந்த படியாக வெனக் கூறுவது

உலக அனுபவ முடையார் அநுபவிக்கவேண்டிய தொரு பொருளாகும். கடலில் இளஞ்சூரியன் போன்று விளங்கும் குமரனென வர்ணித்த நற்கீரரை யொப்ப நமது புலவரும் அவன் அழகை வியந்து

"குணா கடலிலே வுதித்த விரவியினையே நிகர்த்த
குகவுரிமையான சத்திவேலா"
"அந்தி வானிற மெனுமூனதழகினைக்
கண்டு நாணினரவி" யெனச் சித்தரிக்கின்றார்.

சில பாக்களில் எதிர்மறையணிகளைக் காணலாம். "கருத்த முகிலார் புகழ்ந்த சிவத்த மருகா" "பணியாரகத்திலுறையாத நித்த பணி வாரகத்தி லுறைவாழ்வே" கருத்த—சிவத்த, பணியார்—பணிவார். எதிர்மறைப்பொருள்கள். இடையர் குலத்தி லுதித்தவளென்றும் திருமால் தங்கை சிறுத்த இடையையுமுள்ள வளென்றும் இருபொருட்படும்படி உமையை "திந்தித்திடு மொழிச்சி—சிறுத்திடு மிடைச்சி" யென்பதை இலக்கியம் பயில் பவர்கள் மெச்சுவார்கள். இறைவன் மணமும் இனிமையும் குணங்களாக வுடையானென்றும் பொருள்பட

கருணை நிறைத்த செழும்பாகேயென
தருமை கவித்த பழந்தேனே
மாதவர் மனதுருசித்த கரும்பே என்றும். பொருளி லார்க்கு இவ்வுலகில்லை என்ற வள்ளுவர் வாக்குக்கியைய

உலகில் பொருளிலை யெனிலெ மதியுமிலை
யொருவழியில் மன நிறுவுமொருமை யிலை
உயர்வுபெரு குணமுமிலை சுகமுமிலை
.....................பெரியருறவுமிலை
பலகலையில் வலிமையிலை தருமமிலை யெனவுங் கூறி
ஆதலால் உனக்கும் எனக்கும் யாதொரு வழக்குமுறு வண்ணம் காத்தருள்வாயாக வென்று

வழக்கு வுனக்கு மெனக்குமு முமுன்பு அருட்பெய்
நலத்தை யளிக்கவிதேததி — வாத்தினடுத்த குகத்த
என்னும் பாக்களின் அருமை பொலிந்து விளங்குகின்றது. "நினைப்பவர் நினைப்பவு நினைப்பினில் நிலைத்தவ" வேறு நினைப் பற்று உன்னையே நினைக்கும் பண்பாளர் மனதில் நிலைபிரியாமல் நிற்கின்றவனேஎன்றது "பற்றுக பற்றற்றான் பற்றினை"

என்ற திருக்குறளை ஞாபக மூட்டுகிறது. மேலும் இதிலுள்ள மோனை நயம் சீரியது. பத்தியை விளக்குமிப்பாக்களில் சிற்சில இடங்களில் நகைச்சுவை யமைந்து ஒரு தனி அழகைத்தருகின் றது. தற்காலக் கல்விமுறையார் இதை மிகவும் விரும்புவார்கள்.

நேய வடையொடு பலகாரவகை மாபலவி
லானகனியொடு வெளிலார் கடலைசேரு மவல்
நேயவிடி மாவுருளை யாவுமொரு வாயிலிடு கணநாதன்
கோசை யிட்டவி புட்டொடு முப்பழ
மீதிலிச்சை வளர்த்தகரி'' யெனக் கணபதியையும்

"தயிர் வருபதமுண களவு செய்கருமுகில்
தருநிழ லுறையரி'' யெனத் திருமாலையும் எள்ளிப்

பாடியது நம்மையுஞ் சிரிப்பூட்டுகின்ற ஓர் நயமல்லவா?

குமரன் தலங்களிற் சிலவற்றை ஒரு அடியில் சந்தநயம் படத்தொகுத்திருப்பது இன்னுமோர் அழகு.

தளிர்குமர ஞானசெந்தில் பழனியொடு மேரிலஞ்சி
தணிகை வரைமேல் வளர்ந்த முருகோனே.

இங்ஙனமே

செண்பகா தேவிவாலை கண்கொளா நீலிகாளி
செங்கையாளானமாரி — மகமாயி
சிங்கமேலானநாரி கங்கைமாதாவராகி
செங்கணுளான காமி — வளிமாமி
.............................ரூபி யெனக்குமரன் தாயின்

பெயர்களை மலர் தொடுப்பதுபோல தொகுத்திருக்கின்றார்.

நமது புலவர் தமிழ்மொழியில் அளவிலா ஆர்வமுள்ளவரா தலின் அம்மொழியை அடைமொழியில்லாது குறிப்பதே இல்லை. "செழித்த முத்தமிழ்" "தித்தித்திடு தமிழ்" "உயர் தமிழ்" "வண்டமிழ்" "புனித தமிழ்" எனப்புகழ்வது இதற்குச் சான்றாகும்.

இந்நூலில் கந்தபுராணம் பெரியபுராணம் பாகவதம் இராமா யணம் மகாபாரதம் முதலிய பெருநூலிற் காணப்படுங் கதைகளை

அங்கங்கே இடத்திற்கேற்ப அமைத்துப் பாடியிருப்பதையுங் காணலாம். பலவகைச் சந்தமுடைய தென்பதைத் தனியே எடுத்துக் காட்டுதல் மிகையாகும் சந்தங்களை அடிகோலியாகக் கொண்ட பாக்களாகலான் படிப்பவர்கள் அவற்றை எளிதில் அறிந்து கொள்ளலாம். எனினும்

இந்தெனலான பாதியென்றுரை யாடநேர
இன்பமைவான தூயநுதல் நாரி—கொஞ்சியபால்

இன்பச்சுவை தங்கிய இத்தமிழும் நம்மிடங் கொஞ்சுகின்ற தல்லவா?

மங்கலம் பூத்த பொழிலிங்கிதம் பூத்தநகர்
வந்தனம் பூத்த தளியுடையோனே
வந்து வந்தேற்ற முயரன்பர் கொண்டாட்டமலி
மஞ்சிருந்தாட்டு பொழி லுடையோனே என்ற பாவின்

ஓசை நயம் இன்பம் பயப்பதுடன் கனிவும் நளினமும் மனதைக் கவர்கின்றதல்லவா?



# நூலாசிரியர் வரலாறு

நகரக்கிழாரென்னும் நகரம் சங்கரபாண்டியனாராகிய இந் நூலாசிரியர் தென்பாண்டி நாட்டில் சங்கரநயினார்கோயிற் பாங்கர் நகரம் என்னும் சிற்றூரிற் பிறந்தவர். இவர் முன்னோர் கள் செப்பறை முதலிய சிவஸ்தலங்களில் ஸ்தானிகர்களாகவும் பிற்காலத்தில் வடகரை கோட்டை முதலிய இடங்களில் அரசாண்டு வந்த குறுநில மன்னர்களுக்கு அமைச்சர்களாகவுந் தானைத்தலைவர்களாகவும் அமர்ந்து அரிய தொண்டுகள் ஆற்றி தம் மன்னர்களின் புகழையும் பெருக்கித் திகழ்ந்தவர்கள். இவர்களின் அருந்திறனும் புலமையும் சமயோசித புத்தியும் வியந்து இந்நாட்டு மக்கள் இன்றும் பேசி வருகின்றார்கள். பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திலுதித்த இவர்கள் இறைவழி பாட்டிலும் கவி இயற்றுவதிலும் மிக்கவர்களென்பது அவர்களிற் சிலர் செய்த நூல்களினாலும் அச்சுவாகனமேறாமல் இன்றும் உலாவும் சில பாக்களினாலுந் தெரியவரும்.

இவர்களிற்றலையாய் விளங்கியவர் பொன்னம்பலம் பிள்ளையென்னும் பெரியார். இவர் வடகரைத் தானாதிபதியாயிருந் ததும் கூர்த்தமதியிலும் வாக்கு வன்மையிலும் செய்யுளியற்று வதிலும் அரசியற்றிறனிலும் போர்க்கலையிலும் நிகரற்று விளங் கினரென்பதுஞ் சரித்திரவுண்மை. தமிழ்நாட்டில் இவரை அறியாதார் இல்லையெனவே கூறலாம். இவர் இராமநாதபுரம் அரசனிடஞ் சென்றிருந்த காலை அங்குள்ள அரண்மனைப் புலவர் களின் அழுக்காற்றால் இவரை அவமதிக்க அரசனிடந் தூண்ட அரசனும் அதற்கிசைந்து இவரை நோக்கி பத்துப்படிகளுள்ள நம்சிம்மாதனத்தின் ஒவ்வொருபடிக்கும் முறையே எண்பொருந்த வுவமையமைத்துப் பாடுதி. இன்றேல் நம்மிடமிருந்து உம்மூர் நோக்கித் திரும்பியேகுகவென்று கட்டளையிடவும் இப்புலவர் திலகரென்று

திருமால் பிறப்பது பத்து நவமணி இக் கெட்டுடன்
வருவாரியேழு நற்சாத்திரமாறு வுயர்கிருபைத்
தருவானதைந்து மறைநான்குதமிழ் மூன்று சாதி
யிரண்டு

சேதுபதி வார்த்தையொன்றே—எனப் பாடவும் குழுமி யிருந்தாரனைவருந் திடுக்கிட்டுப் பயந்து புலவரைப் போற்ற அரசன் தக்கமரியாதை வழங்கிப் பெருமை படுத்தினான். இன்னொரு சமயத்தில் புலவர்பாடி யதாவது

பொன்மலைக்குஞ் சேதுவுக்கும் புகழ்பெற்றே னெதிர்வந்து
பொருதார் தம்மை
வின்மலைக்கப் பொருது குறும்படக்கி யடங்காதபெரு
விஜயங் கொண்டேன்
தென்மலைக்குந் திருமலைக்கு மாஸ்தி கொடுத்தேன் கருணைச்
செவ்வே ளன்றிக்
கன்மலைக்கு மனத்தாரைக் கையெடுக்க விளியெனக்குத்
கடப் படாவே.

இச்செய்யுளாலும் புலவர் திறமை விளங்கும். இவர் திறமையை வியந்து கடிகைமுத்துப் புலவர்

....................பொய்யாத
கல்வி வளத்தை யெல்லாங் கைக்கொண்டு மாற்றரசர்
செல்வ வளத்தைத் திறைகொண்டோன் — என்று புகழ்ந்துள்ளார். வாசவனூரென்னும் வாதேவநல்லூர் ஸ்தலபுராண முதலிய பல நூல்களியற்றியிருக்கின்றார்.

இவர் பிற்காலத்தவர் வேறு சில சிற்றரசர்களிடம் முதன்மையாய் விளங்கி தாமிரசாசனமும் விருதுகளும் பரிசுகளும் பெற்றிருப்பது யாவருமறிவார்கள்.

இத்துணைப்புகழ் வாய்ந்த குலத்தில் இந்நூலாசிரியர் 1067-ம் ஆண்டிற்றோன்றினார். தன்னையீன்ற தாய் தந்தையருந் தானும் முன்னியற்றிய நற்றவப்பயனால் இவர் இளமை முதலே

குமரன் வழிபாட்டில் ஈடு பட்டு தமிழ் இலக்கிய இலக்கணங்களை முறையாய்ப் பயின்று தேர்ச்சியுற்று பதினாறுவது வயது முதல் யாவருளத்தையும் உருக்கும் இனிய செந்தமிழ்ப் பாக்கள் பாடத்தொடங்கினர்.

குமரனையே ஏற்புடைக் கடவுளாகவும் வழிபடு கடவுளாகவுங்கொண்ட இவருக்கு அவன் அருள் புரிந்ததை முதன்முதலியற்றிய வருகைப்பதிகத்தில்

"பாடுந்துறையும் பெரும்பொருளும் பகருந்திறமே தர வருக" என்றும் "கண்டாதரித்தும் அமுதூட்டிக் கரத்தைப் பிடித்துக் கரையேற்றுங் கண்ணே வருக" என்றுங் குறித்திருக்கின்றார்.

பாக்களின் இனிமையுங் கனிவும் கற்பாரது வுள்ளத்தையும் குமரன்பாற் பேரன்பிறைக் கட்டுந் தகைமையுடையன. பல பாக்கள் சந்தச் சொன்னயத்தால் மகிழ்விப்பன. இன்னும் பலபாக்கள் நிரோட்ட நீர்மையன. இவரைப்போல தமிழிலே அளவிறந்த நற்பாடல்களை விதம் விதமாய் இயற்றினர் தற்காலத்தில்வேறொருவரும் இல்லையென்றே கூறலாம். பாடல்களனைத்தும் குமரன் பண்பை விளக்குவனவாய் பல்வகைப்பட்டுப் பெருகி நிற்பன. பாக்களைப்படிக்குங்கால் இவரது தூயவொழுக்கமும் பொது நோக்கமும் பெருமை பெருமிதமின்மை யென்னுஞ் சால்புடைமையும் உள்ளவ ரென்பது நன்கு தெரியவரும்.

இவரியற்றிய கவி விள்ளும் பொருளும் பலிதமடையு மென்பது வாசுதேவநல்லூருக்கடுத்த துட்டகண்டாப்பேரிக் குளத்தில் தண்ணீரற்றுப் பயிர்களும் மக்களும் கால்நடைகளும் வாடிவருந்த சிலபெரியார் இப்புலவரிடம் முறையிட உடனே

எட்டிரண்டாயனு முதலாய் மேருதாறு யிலங்குகின்ற
பேரொளியா யெங்குமாகி
பட்டிரண்டார்த் திடுபரமாய்ப் பேரொலியாய்ப் பழம் பொரு
ளாய்ப் பொருண்மையமாய்ப் பரவி நின்று

கட்டாண்டா வகைபுரியுஞ் சிவஞானக் கரும்பெனவே
கருணையினைக் கலந்தூட்டுஞ்
தட்டாண்டாப் பேரிவளர் சுயவரதப் பெருக்கமுதந்
தளிர்த்தொழுகுஞ் சுவாமி கேண்மோ.

என்று பாடவும் உடனே மழைபொழிந்து குளங்கள் நிறைந்து செழிப்புற்றதாக இன்றும் வாகவதேவ நல்லூர் மக்கள் கூறு கின்றதாற் றெரிகின்றது.

பொதுவாகக் கவிசொல்வதிலுஞ் சிறப்பாகக் குமரன் புகழ் பாடுவதிலும் அருட்டிறனும் உயரிய பண்பும் உடையாரென்பதை யறிந்து இப்புலவருக்கு திருமலைக் குமரன் முன்னிலையில் இவ ரியற்றிய வருகைப்பதிகம் அரங்கேற்றுங்காலை "குமரன் புகழ் கவிக்கொண்டல்" என்னும் பெரும்பட்டம் அளிக்கப்பெற்றது.

கவி இயற்றுவது மன்றி இவருக்கு வைத்தியத் திறனும் உண்டு. இவருடைய முறை ஆயுர்வேத யூனானி சித்தர் முறை களுக்கெல்லாம் மேம்பட்டு குமரனையே குருவாகக் கொண்ட ஓர் தனி முறை. ஆங்கில வைத்தியர்களாற்கூடக் குணப்படாத அநேக பிணிகளை தன் முறையாற் குணப்படுத்தியிருப்பது இங்குள்ளவர்களின் அனுபவம். குமரனே தனக்கு வைத்திய குருவென்பதை இந்நூலில்

துசாரமென வோதிவொரு மகாரச சுனுதி சொன்ன
சுவாமி கிருபா நிதிபொன்—உடையோனே

எனவும்

சனகர் முதலனைவர்பணி தேவாதயாநிதியெ
னிதயமினிாறுமுகவ பாவாண ஞானமுத
தயில அவுடத முறைகள் தானுகவே அருள்செய்—
திடும்வேளே

எனவும் போற்றியிருக்கின்றார்

திருமலைக் குமரனுக்கு ஒவ்வொரு கிருத்திகை தினத்தி லும் மிகவுஞ் செவ்விதாக விழா நடாத்திவருவது இந்நாட்டி லுள்ள யாவருமறிவர். இதன் பயன் இறைவழிபாடு இன்ன

தென அறியா மக்களநேகர் குகவழிபாட்டிலீடுபடுகின்றனர். இக்காட்சியே இவருக்குப் பெருமகிழ்ச்சி. இவ்விதம் அறிவுச் செல்வம் அன்புச்செல்வம் அருட்செல்வம் நிரம்பிய இப்பெரியார் இன்னும் பெருநூல்களியற்றி தமிழுலகுக்குப் பெரு நன்மை செய்துதவும்படி நீண்ட ஆயுளுஞ் சிவஞானமும் எய்த குமரனை இறைஞ்சுவோமாக.

தென்காசி,
1116-ஞ கார்த்திகை 27௳
12—12—1940.

A. C. ஷண்முகநயினர்,
பி. ஏ., பி. எல்.,
அட்வொகேட்.





சிவக்கொழுந்து பிள்ளை (செப்பறைத் தேவஸ்தான ஸ்தானிகம்)
அகத்தீஸ்வரம் பிள்ளை (ஷை.)
சீவல பிள்ளை (ஷை.)
குமாரசாமி பிள்ளை
மாறியாடும் பெருமாள் பிள்ளை (கோட்டைத் தளபதி)
முத்துசாமி பிள்ளை
சீவல பிள்ளை
செண்பகராம பிள்ளை
பொன்னம்பலம் பிள்ளை (வடகரைத் தானுதிபதி)
செண்பகராம பிள்ளை
சங்கரலிங்கம் பிள்ளை (நமசிவாயம் பிள்ளைக்குச் சுவிகாரம்)
நமசிவாயம் பிள்ளை
சக்கரையப்ப பிள்ளை
திருமலை வேலுப் பிள்ளை
மாறியாடும் பெருமாள் பிள்ளை
சொக்கலிங்கம் பிள்ளை.
சுவிகாரபுத்திரன் சங்கரலிங்கம் பிள்ளை (வடகரைத்தானுதிபதி பொன்னம்பலம் பிள்ளையின் 2வது மகன்)
நமசிவாயம் பிள்ளை
சுப்பிரமணிய பிள்ளை
பொன்னம்பலம் பிள்ளை
திருமூர்த்தியா பிள்ளை
சுப்பிரமணிய பிள்ளை
சங்கரபாண்டியன் பிள்ளை
நமசிவாயம் பிள்ளை
மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை
கதிரைவேற் பிள்ளை (கதிரேசன் பிரஸ்)
பொன்னம்பலம் பிள்ளை
புதுக்காவிலிங்கம் பிள்ளை
சங்கரபாண்டியன் பிள்ளை (நூலாசிரியர்)
அழகிய கிருஷ்ண பிள்ளை என்ற முருகராஜ பிள்ளை

ஓம்



குகமயம்.

# திருமலைக்குமாரசுவாமி திருப்புகழ்

## அடிவார விநாயகர்

### காப்பு.

தனதன தனதன தந்தத் தானன
தனதன தனதன தந்தத் தானன
தனதன தனதன தந்தத் தானன தன தான

அருளொழுகிய விழிகொண்டெக் காலமு
மிளகிய மனமொடுவந்திப் போர்துயர்
அறவருள் புரிபரனென்றெப்போதினும் மறவாமல்

அழகியபதமலர் சிந்தித்தேவரு
மெனதிடர் பிணிபகை கண்டித்தேயினி
யருள்தகி தயைபுரி பண்பைச்சேவக முடையோனே

உருள்தன வலவையி லங்கற்பாகிய
ஒளிர்புய பிரணவ சந்தத்தாரணி
உகரகர் மருவிய பந்தத்தேவென வுலகோது

உலகுருளினு மிகு பண்டிப்போமு
தவல்பொரி வடைகளிகிண்டற் பாகினை
வுறுவிர கினிதமை பொங்கற்சாதமு திவையோடு

பருகியல் புளவகையின் பற்பாயச
முதிர்சுவை கெழுமிய கண்டைத்தூள்பணி
பயில்தினைபிடி நறையொன்றச் சேர்வையோ டவையார

பசுவிழுதினையுற வொன்றித்தேயதை
உருள்பல சதசத மன்றக்கூடிய
பருவரை யுணவினி வந்தப்பாகல முடையோனே

தெருள்தரு மிருகவுள் மிஞ்சப் பாய்கிற
மதநிதி யரியினமண்டிச் சேர்கிற
திருநட மிடுமுக தந்திப்பேர்பெறு மொருவாழ்வே.

செகதல மிலகவிளங்கத் தாயக
பொழினகர்குடகி னிலங்கித் தூய்தமை
திருமலையடிவரை யின்பொற்கோவிலில் பெருமானே

தனனு தன தானன தானன
தனனு தன தானன தானன
தனனு தன தானன தானன தன தான

2. கரிமாமுக னேயபராபர முதலே மறை தேடிய மாபத
கனகாகிரு பாகர பூரண கணநாதா
கதிரே நிறைவாகிய மாமகுடதி பா பவ வாதையிலா தொரு
கதியேதர நீதையையே செய வரவேணும்
நரி யாவையுமே பரியாகவு முனைநாள் புரிவோர் சிவனுர்சுத
நலமேவிய தூயவ தேவர்க ளகவாழ்வே
நரை நாரணர் சோதரி மாபரை சுதனே வுகராலய மேலையில்
நட நாயகமே யகராகிய வரதீபா
புரிபாவ விமோசனமேபுரி அருளே வுருவாகிய மாமத
புவியாதரவே யென லாகிய செக சோதி
பொலமே மணியே மதியே நிதிவரையே கடலே முனிமாதவர்
புலமே வுறை வாரண காரண மகதேவா
அரிமான் மரு காபுனி தாநிறை யெழின்மேவியவாசுக மேவிய
அரசே யெழின் மூடிகவாகன முடையோனே
அணியார் பொழிலூடமை வாகிய நகர்மேல் வயின் மேவிய மாமலை
அடிவாரவி நாயக மேலவர் பெருமானே

தந்த தன தானத் தனதன
தந்த தன தானத் தனதன
தந்த தன தானத் தனதன தன தான

3. கங்கை சிவ வாமத்திலகிய
மங்கை சிவகாமிக் கொருமூலே
கண்டு நிகர்வாய்மைக்குயர்முத லெனவோது
கந்துதறி தானத்தெழில்கரி
சந்தமுகமேவுற் பவபர
கண்டு பணிவோருக் கருள்தர வருவோனே

துங்க பாஞானத் துறைதொறு
மங்கல வுலாசத் திறைவுறை
சுந்தரவி னோதப் பிரணவ வடிவாகி

தொண்டரடி யாருக்கினியவை
தந்து தவியாளுத்தமருண
தும்பிமுகமே வுற்றிடு மொரு அசுரேசன்

பொங்குகிளை யோடற்றிட புழை
வந்து வளி வேகத்தற விடு
புங்கவத யாளத்திளகிய கணநாதா

பொங்கல் பணிகாரத் தொடுவடை
அன்பு நிறைவாகத்தினமுஞு
புங்க வகடோயற்புத முறு மொருதேவா

எங்கள் குகநாதற் கருள்முனை
முந்தை வினையே யற்றிடும் அருள்
இன்று தவுவாய் முக்கண வெழி லுடையோனே

இன்பரச மேவுற் பவ பொழில்
பண்டை குடமேவுற் றிடுமலை
யின்கணடி வாரக் கணபதி பெருமாளே.

## உச்சிவி நாயகர்.

தத்தத் தனதன
தத்தத் தனதன
தத்தத் தனதன தன தான

4 முக்கட் செறிபர வித்தைக் கொருமுதல்
முத்திக் கொருசிவ மெனவோதி

முற்பட் பொடுபணி வெற்குத் துணைசெய
முற்பற் பொடுததி வரவேணும்

இக்குக் கனியவல் அப்பத்தொடு வடை
இச்சைத் திருவமு திவையோடு

எட்கொட்டியவன முற்கொட்டிட கடை
யிற் கொட்டியவன முணுவோனே

கொக்கொக்கென நரை யிற்பட்டிடு பிழை
குற்றற்றிட மயல் அறவீழ

குப்பறப்பவ வினை யற்றற்கொருவழி
குட்டித்துதிபணு மடியார்கள்

ஒக்கக் கெழுமிய வுட்பற்றினர்பதம்
உற்றற்கருளிய வொருதேவா

ஒப்பற்றிடுமுதல் பட்டைத் திருமலை
உச்சிக்கணபதி பெருமாளே

தத்தன தனதன
தத்தன தனதன
தத்தன தனதன தன தான

சர்க்கரை யவல்பொரி மொக்கிய கரிமுக
தற்பர வருடா வரவேணும்

சதுவமுழுமுத லுக்கொரு விதசுத
சர்ச்சன ரகமுறை பெருவாழ்வே

இக்குவ லயாத வச்சுறு நடுநிலை
இற்றிடமுறிபட முனைநாளில்

இட்டவணுறுமா னுக்கிடர் தரவவ
னிற்புறு முனமிடு பலகாரம்

விக்கின மறவுணு முக்கண பிரணவ
வெற்பினை நிகரிய இபநாதா

வித்தக மருவிய அற்புத பரிமள
மிக்கவ நல முடையவணுகி

உக்கிர கரியசுர் சுற்றிய கிளையற
உட்டுளை கரவளி வழியாக

உய்த்தவர் குலமற நைத்தவ திருமலை
உச்சியில் கணபதி பெருமாளே

தந்தன தனத்த தான
தந்தன தனத்த தான
தந்தன தனத்த தான தன தான

6. அன்பணி பதத்தயாளசுந்தர மிருத்ததேவ
அங்கயல் கணிச்சிபால னெனவோது

அங்கரி முகத்ததூய மங்கல மிகுத்த நாத
அங்குச காத்தருனை வரதீபா
உன்பதம் நினைத்தநாயி னுங்கடை படைத்த யேழை
உய்ந்திட நினைப்பிலாத படியாக
ஒன்றிய மனத்தையோரில் யென்பவ விடத்தை யாவர்
உந்துவர் கடத்துளான பிணியானும்
என்புரு களித்த வாழ்வில் துன்படை மிடிக்குளாக
இஞ்சடை படைத்த தான முறையானும்
இண்டிடை புகுத்துவேதை தங்கிய கடப்புனேவ
தென்றது மெனத்தளாட விடலாமா
பொன்பர வணித்தவாழ்வை நம்பிய படிக்குளாவி
பொன்றிட விடுத்த னீதி யிலதாகும்
புந்தியினினைத்தி தோர்வை பண்பொழினகர்க்கு மேலை
பொன்கு வடிவுச்சி மேவு பெருமாளே.



ஓம்
குகமயம்.



# திருமலைக்குமாரசுவாமி
# திருப்புகழ்.

காப்பு

குழந்தை வேலன் குருபரன் மேற்கவிப்
பழங் கனிந்தெனப் பாசுரம் பாடவே
கிழங்குண் மாதவர் கேண்மை யரனருள்
பழங்கையேந்தும் பகவனைப் போற்றுவாம்.

நூல்.

தந்தந் தந்தன தானன தானன தன தான

1. அன்பின் பண்புடை யார்துதி மேவிய
துங்கந் தங்கிய வாகிரு பாகர
வைந்தம் பைந்தரு வாழ்வுடை யார்சுதை மணவாளா

அங்கண் செந்தினை காவலி லேகவ
ணுந்தும் பைங்கிளி யோடிட வேமொழி
யஞ்சுஞ் செஞ்சொலி னுள்குற மாதினை யணைவோனே

என்புங் கொன்றையோ டாறுமராவெழி
னந்துஞ் சங்குழை கூவிள மோடரு
ளிந்துஞ் சந்தத மேயணி மாபா னருள்பாலா

என்றென் றுந்துதி பேணடி யாரக
மொன்றென் றுங்குக னேகழ காசல
வின்றுன் செம்பத மேதொழ வாழ்வருள் புரிவாயே

சந்தங் கந்திக ளோரணி யாகிய
தெங்குங் கொங்கொடு மாவள மார்பொழில்
தங்கும் பண்ணையு ளார்மயில் வாகன முருகோனே

தண்டங் குஞ்சனை மேவிய மாமலை
யின்கண் பொங்கம தானமகாருக
சம்புங் கும்பிட வேமறை வோமுறை யருள்வோனே

பந்தஞ் செண்டிணை மாதன மாதர்க
ளின்பம் புங்கம தாமென வேமயல்
பந்தங் கொன்றினி தாகவ மேதர வருவாயே

பண்பின் கும்பம காமுனி மாதவ
ரின்சங் கந்திக மாரண மாரொளி
பம்புஞ் செந்திரு மாமலை மேவிய பெருமாளே.

தனத்த தன தானதன தனதான

2. இனித்த கனி யேமதுர முதித்த மலையேகருணை
யிறைக்கு முதல் வாமகிமை யுடையோனே
இசைத்த புக ழாரருண கிரிக்கருள் பரா குமர
வெனக் குரிமை யாகவளர் முருகோனே
பணிப் பகைவ னேநிகரும் அயிற் கரகு காகவுரி
பரைக்கு மூனை யேபழனி யுறைவாழ்வே
பழுத்ததமி ழாலினிய புகட்பனுவ லானுருகி
படிக்குமடி யாரிதய முறுநாதா
தனித்தசிவ மேபெருமை செனித்தபர மேமுனிவர்
தழைக்கவர மேவுதவும் எழில்வேளே
சகப்பிரம மேவரத நிதித்தரும மேமயிலில்
தளிக்குநல மேமலையி லுடையோனே
கனிக்குறமி ளுள்தழுவு வனக்குறவ னேயடிமை
கடைப்பிடியு ளேனருள்செய் திடவேணும்
கனிப்பொழிலி லேயெழிலி மிகப்பரவி யேமினிரு
கமத்திருவி லாசமலை பெருமாளே.

தான தன தன தனதான

2. பாதி மதி நதி சூடு மானருள்
பாலை யருளிய குகநாதா
பாப மெனை யணு காம லுனதிரு
பாத தரி சனை தருவாயே
சூதி னசுர் குல நாச முறவொரு
சோதி யயில்விடு மயில்வீரா

தூய தணிகை சுவாமி மலையொடு
தோகை வரை யினி — லுறைவோனே

நீதி பதி யென தாதி திரு மல
நீடு பழ னியி — னெழில்வேளே

நீப மலர் புனை நாத குரு பர
நேய முட னரு — டரவேணும்

சீத மலி பொழி லூரி னிடை யெழு
தேவ வுயரிய — சகநாதா

தீப மென வொளி வீசு மணி குவை
சேரு திரு மலை — பெருமாளே.

தனதன தனண தனதான

4. பகையற வொழிய நலமிகமலிய
பருமயிலிலக — வரவேணும்

பழகழுகசல மலசை மெய்பழனி
பல மலை யொளிரு — மெழில்வேளே

திகை மிளிர சூரர் பொடிபட நொடியில்
திடவயிலுருவு — மயில்வீரா

சிலதியர் குழுவி னிடையெழு குறவர்
சிறுமியை யணையு — மணிமார்பா

குகை முனிவரர்க டுதிபணு பொதிகை
குருமுனி மகிழ — வருள்வோனே

குணில்கொடு விளவை யெறிமுகில் மருக
குமர சிவகுரு — பரநாதா

நகைமணி யிழைக ளொளி விடு பொழிலி
னடு நகர் குடியி — லுடையோனே

நதி பணையருகு வளை மணி பலுகு
நளிர் திரு மலையில் — பெருமாளே.

தனதன தனன தனதான

5. மனமிடை துயர் களுற மொழி கொடியர்
மனையற மயிலில் — வரவேணும்

வயிரமெயசுர ரறவயிலுருவு
மகதிட முடைய — செகவீரா

அனநடை மொழிமி னிடைசிவவனிதை
யருளிய குமர பரநாதா
அனுதின முனது பதமலர் தொழுநின்
அருள்நிதி யுதவ வருவோனே
கனகனை யுகிரி னுயிர்பறி மறலி
கருமுகில் மருக கதிர்காமா
கனதன குறமி னுடையவ பழனி
கமல முகினிறையு மலைவாழ்வே
வன பொழிலிடையி லுள திரு நகரின்
மனமகிழ் குடையி லுடையோனே
வாசிவ மதலை வரை திருமலையில்
வளர்மணி குமர பெருமானே.

தத்த தன தன தனதான

6. தத்தை மொழிவளி நத்து குருபர
சத்தி யுமைதரு முருகோனே
தத்து மலையிடை யுற்றவளை மணி
தக்க ரவியென வொளிவீசி
பத்தி பலவள முற்ற பொழிலிடை
பட்சி னமை வுறு பொழிலூரா
பத்தி மலிவுறு முத்த ரிடமுள
பட்ச மொடு பதம் அருள்வாயே
மத்த மொடுமதி யக்க மணிபர
மத்த னருளிய குகவேளே
மச்ச னெழில்மரு கத்த வாதமெய்
மக்க ளக முறை குருநாதா
வித்தை பழகிய சித்தர் முனிவார்
மிக்க துதி பண வருவோனே
வெற்றி யயில்கர முற்ற வா நிதி
மெச்சு திருமலை பெருமானே.

தான தன தன தனதான

7. நீடு பகையற வாகை புரிபவ
ரேய மூட னருள் புரிவோனே

நீதி யதிபதி சேம வரநிதி
நீலி திரி புரை — தருபாலா
பாடு மடியவர் நாடு பொருளினை
பாவி லைமை வுற — வருள்வோனே
பாச வினைபிணி நாச முறவருள்
பாத மலர் தர — வரவேணும்
காடு சுடலையி லாடி வருமெம
காலர் குரு பர — குகநாதா
கான மயின்மிசை ஞான முறுமெழில்
காண மருவிய — முருகோனே
வேடு வரினக ரூடுவளரிய
வேலை நிகர் கணி — குறமாது
வீழ மருவிய நாத குருபர
மேவு திருமலை — பெருமாளே.

தான தன தன தன தான

8. நாக மொடுமிரு காதி பலவகை
நாச முறவரு — மெழில்வேளே
நாரி பயிரவி மாரி திரிபுரை
நாளு மகிழ்சுத — குருநாதா
மாக வனமுனி நாதர் மருவிய
மாலை குகை மலை — யுடையோனே
வாரி சுவறிட வேலை விடுபர
வாதி லமணற — வருவோனே
வேக மிகுமயி லாட வதனிடை
மேவி வருபர — முருகோனே
வேலை யிடைகுடி யாக மிகமலி
வேறு மசுரர்கள் — குலகாலா
தேக பலமொடு ஞானமிகவுறு
சேம பத மலர் — அருள்வாயே
சீபமொடுகரி நேய மொருதுறை
சேரு திருமலை — பெருமாளே.

தான தத்த தன தனதான

9 சேமமுற்ற கழு காசலக் கடவு
டேவ வெற்புறையு முருகோனே

தீய துட்ட சுர கால கெட்ட வர்க
ளறவெட்டி விடு மயில்வீரா

வாம முற்ற பரை யாமளத்தி தரு
மாதனத் தமுத முனாதா

வாரி வற்றவொரு வேலை விட்டரிய
மாதிரத்துவரு பெரியோனே

சாம மத்தியொரு தூது சொற்றி தரு
சாமி யெற்குரிமை தருவாயே

சாதகத்திலுனை யேது திக்குமன
தார்வ மிக்கமைய வருவோனே

காமனுக்கு முகில் மாமனுக்கு மரு
காமணக்கு மெழில் பொழிலூரா

காவிமிக்க சுனை மேவு பொற்பிலகு
காவனத்தி மகிழ் பெருமாளே.

தனத்த தன தன தனதான

10. நினைத்த வணமருள் கொடுக்கு மறுமுக
நிருத்தனருளிய குகபாலா

நிலைக்க வடியவ ரகத்தின் மருவிய
நிதிப்பொன் மலருத வியநாதா

அனைத்து நிறைபர வெனக்கு னருடரு
மகத்தினொடு தகி வரவேணும்

அரிக்கு மொருகரி முகிற்கு மயனர
னமர்க்கு முறுகிய வசுரேசர்

மனைத்த மரபொடு நொறுக்குகிற நுதி
வடித்த வயில்கர முகவீரா

வுகிர்த்த வடுவினை நிகர்த்த கணிவனி
மணத்த புயபிர பலதேவா

கனைத்த லெழுகன மணித்த பொழினகர்
கனக்க மிளிரிய செகநாதா
கரிப்பினணி தன கரிக்கு மூடையவ
கவிற்கொடிரு மலை பெருமாளே.

தனத்தனத் தனத்த தத்த தனதான

**11.** வயித்தியத் திரத்தின் மிக்க வுரித்தருட் குணத்த வெற்கவ்
வரத்தினைக் கொடுத்து நித்த மகிழ்வாயே
வனத்தின் முத்தமிட்செனித்த முனிக்கி னத்தினைப்புகட்டி
மனத்திடத் தழுத்தி வைத்த குருநாதா
மயிற்பரிப் புறத் தினைத்த பதத் தகத் திருப் பமைத்து
வணக்கரத் தெடுத்த சத்தி யுடையோனே
மகத்துவத் தவத்தர் முத்தர் துதித்திடப் புகட்பெருத்த
வரத்தினைப் படைத் தளிக்கு முருகோனே
வயிற்றினுக் குழை துழைத்து மவற்றினிற் கிளைத்தலுத்து
வழிப்படற் றவிர்த்து நித்த மலைவேளே
வனக்குயிற் சொலுக் குறத்தி தினைப்புனத்தடுக்க லுற்று
மணத்த வித்தகத்த வத்தி மணவாளா
அயிர்ப் பறத் துடைத்த பத்தி மிகுத்தவர்க் கிதக் தருத்தி
அருட்டனப் பெருக்கனைத்து மருள்வோனே
அனத்திரட் குளத்து முத்து மிகுத்திடச் செழித்ததட்ப
மணித் திருப்பதிக்கு வட்டில் பெருமாளே.

தனத்தனத் தனத்த தத்தத் தனதான

**12.** பிறப்பெடுத் தெடுத் தெடுத்துத்
தவித்தலுத் திளைத்த வெற்குப்
பெருக்கருட் பதத்தை எற்றைக் கருள்வாயோ
பிரட்டசுர்க் குலத்தை வெட்டித்
தகர்த்தயிற் காத்த பத்தர்ப்
பெருத்துனித் துயர்த்து லைத்துத் தருவோனே
குறத்தியைத் தினைப்பு னத்திற்
பருப்பதப் புயத் தழுத்தக்
கொமைத்தனத் தழுப்பு பற்றற் குரியோனே.

குவட்டினிற் படைத்த பொற்புச்
செனித்திடத் தளிக்குள் நிர்த்தக்
குகப்பரப் பிறக்கு சித்திக் குருநாதா

அறத்தினிற் செழித்த பட்புக்
குரித்திவர்ப் பொழிற்கு ணித்தத்
தகத்தவத் தினர்ப் பெருத்தற் புதநாடா

அரற்குரித் தெடுத் தெடுத்துப்
பொருட்டெளித் துரைத்து பற்றற்
கருட்டிறத் தினைக்கொ டுத்தற் புடையோனே

கறக்கினப் பசுப் புரத்தற்
குரித்திடைக் குடிக் ஞுற்றுக்
கடைப்பதத் தினைத்திருட்டிற் கொளுமாயன்

கனத்தெழிற் புயத்தி ருத்தத்
தகுத்திருத் திருத்தி யுற்றுக்
கனித்தமைத் திருக்கு வட்டிற் பெருமாளே

தன தன தனந்த தந்த தனதான

13. உலகிடை பிறந்திறந்து வுறுதுய ரடைந்தடைந்து
வுயரருள் விரிந்த வுந்த னடிபேணு

அருள்தன முயர்ந்த பெண்கள் படவர விடங்கொள் சிந்தை
புலைவிடை மனந் தளர்ந்த தகையாளன்

மலைமகளுகந்த மைந்த கலையிடை நிறைந்த வெந்தை
வரகுண செயந்தி தங்கு முருகோனே

மலையம திலங்க நின்ற முனியரு டலங்க வந்து
மகிழருள் புரிந்த பண்பை யுடையோனே

பலமறை முழங்கு கின்ற பொழிலெழில் தங்கு பண்பை
பழமலை யிடங்க ளெங்கு முறைவோனே

பரனடி வணங்க வன்று பிரணவ மொழிந்த துங்க
பதுமமலர் பைம்பொனன்பு தருவாயோ

சிலதியர் பணிந்து கொண்டு வருகிற வணங்கை யண்டர்
தெரிவுற மணந் தணைந்த மணிமார்பா

தெருளுறு மனந்தனுந்த விருடிக டவங்க டங்கு
திருமலை விளங்க நின்ற பெருமாளே

தான தனதன தன தான

**14.** தேவி பயிரவி வாகை புனைபரை
சீரி னருளிய குகநாதா

தேக பலமிக ஞான மிகமிக
தேறு பொருடர வருவாயே

காவி விரிசுனை பூவை யணிபவ
கான மயின்மிசை வருவோனே

காண வரிதரி தான தினையரு
கான வளிமரு வியவேளே

சீவி முடிகுழ லார்க டனமிசை
சேர யனமுற லழகாமா

சீசீ யெனவவை யாக மனமருள்
தேவ பழனியி லுறைவோனே

பாவி யசுர்பட வேவு மயில்கர
பால குருபர சிவநாதா

பாப மெனையணு காத வரமருள்
பால திருமலை பெருமாளே.

தந்தன தந்தன தன தான

**15.** கெஞ்சி யனந்தர மஞ்சலியும் பணு
கின்றதறிந்திலை யினிதான

கெங்கைப ரன்பரை மங்கைச வுந்தரி
கிண்டரி கொந்தழ கெழிலாயி

பஞ்சினை யுங்கன கிண்கிணி யுஞ்செறி
பங்கய மும்பணி பததேவி

பண்புகொ ளுங்குண சங்கர ரும்பணி
பண்கொ ளிரந்தர முருகோனே

கொஞ்சிவ ருங்கிளி யஞ்சுத லின்சொலி
கொங்கைய ரும்பிய குறமாதை

கொண்டும கிழ்ந்து அணைந்திட வன்றினை
குன்றிடை கண்டவ னுடனுட

நெஞ்சினு வந்தவ ளுஞ்சரி யுஞ்சொல
நின்றுமண ரந்தனை புயவேளே
நின்பர மென்தனை வந்துபு ரந்துக
னிந்தருள் பண்பையில் பெருமாளே

தான தத்த தன தான தத்ததன தனதான

16 பாலினிக்கு மது தேவ புத்த முது
சீனிகொட்டியுற சேரவைத்து மதை
பாகமைத்த பத தூநலத்தின் மொழி சிவகாமி
பாலவெற்கரிய ஞானவிற்பனமெ
யோகமுத்தி தரு சீல உத்தமர்கள்
பாகமுற்ற பொரு ளாதரத் துரிமை தருவோனே
காலினுக்கு மொரு காலினுக்கு மறை
யோதுவித்தரவி பானிறத்த மதி
காணவக்க மொடு தீயையுற்ற சிவ பாலனார்
காதலுற்ற சுத சேமமுற்ற குக
வீரவெற்றியணி வாரணத்து வச
காமனுக்கு மெழி லான சட்டமுக குருநாதா
மாலினுக்கு மரு காவனிச்ச மல
வேடினுக்கு மெலிதாய மைத்த பத
மாவளிக்கு வன மேடை யுற்ற மண முருகோனே
வானவர்க்குநயர் காமனுக்கு மக
ளானவத்தி தனை மேவலுற்ற கர
மாக விப்புல மையாக நித்தமென அளமேவி
நாலிருக்கு முத லாகமத்து முறை
கூற பொற்புமிக பாகு முத்த மிழி
னுமுற்றகவி வாசுகத்தி றமை தருவாயே
நாதவெற்பினுறை போதசத்தி யுள
தீரசர்ச்சனர்கண் மேவு மிக்க திரு
நாகமத்தியுறை தேவநற்குமர பெருமாளே.

தந்த தனந்தன தன தான

17. அண்டர் பணிந்தெழு கின்ற புரந்தரன்
அன்பின் வணங்கிய முருகோனே

அம்பிகை சுந்தரி மங்கை சவுந்தரி
யந்தரி யின்சுத குமரேசா

கண்டினை யுங்குர லம்பர முஞ்செறி
கண் கவர் மஞ்சினை நிகராகி

கண்பொ ழிலுஞ் சரி யின்குழல் பண்பமை
கஞ்சிமி ழின்குமிண் முகையாகி

செண்டென பங்தென குங்கும சந்தன
திண்டென குண்டென வடிவாகி

தெங்கெழு பிஞ்சென வம்பணி யுந்தன
செங்கனி யின்புடை மயன்மீறி

கொண்டிடை சிந்தையை யுன்பத சிந்தனை
கொஞ்சிவரும்படி யருள்வாயே

கொண்ட றவழ்ந்தமை கின்றெழில் பண்பையில்
கும்பிட நன்கருள் பெருமாளே.

தனத்த தன தனத்த தன தனதான

18. குனுக்குடை மினுக்கு குழ னகைப்புவர வுரைக்குமொழி
குறிப்பமைய வுருட்டு விழி யெனலோடு

குணத்தி லெழு பெருத்தமதி நிகர்த்தமுக முரைக்கரிய
குழைத்த தநு நிகர்த்த புரு வமுமாகி

கினுப்பை யென கினுக்கு பத மொலிக்குமிழை கலிக்கவணி
கிழத்தியர்க டனப்புதையன் முகையாகி

கெடுக்குமய லுடுத்த குமிழ் கடைத்த சிமிழுருட் சிகெழு
கிடைத்த கரி மருப்பு நிக ரெழின்மாதர்

இலுக் கனுகி சொலுக்கிசைய தனத்தையுத வியத்தருண
மிசைத்தமளி யினிற் குலவ விடலாமா

இனித்த தமிழ் சுவைக்கமுத மளிக்குமறு முகக்கடவு
ளெனக்குன ருடரத்தருணம் வருவாயே

மனுக்கிசையு மனத்தசுரை வொழித்ததிட புயத்தயில
வளப்பமலி நகச்சிகர முடையோனே

வரத்திலமை திருக்குவடி னுயர்க்குடுமியினிற் குடிகொள்
மணிக்குமர துரைப்பெரிய பெருமாளே,

தனத்த தன தன தன தான

19. நிருத்த னருளறு முகத்த வெனதக
நினைத்த வணமருள் புரிவாயே

நிசிக்குமொரு கரு முகிற்கு மெழுபொழி
னிலைக்கு நிகர் குழல் குறமாதை

பருத்த வுரமிசை யழுந்த மருவிய
பழக்க மிகமலி எழிலீவேளே

பரைச்சி யரியமி னிடைச்சி மலைவளர்
பழிச்சி யெயினர்கள் குலமாது

கருத்த விழிமதி முகத்தி மிகமிக
கனித்த மொழிதரு சிவகாமி

கனத்த தனமிசை யுதிக்கு மமுதினை
கறக்க பருகிய குகநாதா

பெருத்த பொழில்வளை முடுத்த பணையிடை
பிளக்க வளைமணி வொளிவீசி

பிணைத்த பணைமணி கலித்த திருமலை
பெருக்க முயரிய பெருமாளே.

தத்தன தனத்தன தன தான

20. எத்தனை விதத்துனை நித்தநு நினைப்பதை
எட்டுணை யினிற் சிறி தறியாயோ

எத்திற விரக்கமு மூற்றிலை யெனிற்சிறி
தெற்கருள் சுரப்பது மெவாரும்

முத்தர்கள கத்தளி யிற்புகு மயிற்பர
முப்புர மெரித்தவ னருள்சேயே

முக்கனி யருட்பரை புத்திர குறத்தியை
முற்றினை வனத்தினி லணைவோனே

நத்திர மிகுத்துள சுப்பிர மணிக்குக
நச்சிய பொருட்பதம் அருள்வாயே

நற்குரு முனிக்குயர் ற்புதமளித்தவ
நற்பழ னியிற்குடி யுடையோனே

வித்தக வுனுத்தர்கள் பற்றினை யொழித்தவ
வெற்புறு தளிக்குயர் முருகோனே
மெச்சிய தமிட்கவி யிற்பிரி யமிக்குள
விற்றிரு மலைச்சிவ பெருமாளே.

தத்தனத் தனத்த தத்த தன தான

21. இப்பிறப் பெடுத்த பிறப்பு பொற்பதத் தினைத்துதித்த
வெற்கருட் கொடுத்து நித்த மருளாம
லெத்தினைப் புரத்த லுக்கு ணட்பிலைத் திருத்தி யுற்று
இக்கணத் தெனக்கு முத்தி தரவேணும்
செப்பினைக் கவிழ்த்தி வைத்த தொப்பமைத் தனத்திருட்ப
சிற்றிடைக் குறத்தி நத்து மணிமார்பா
சித்தியைக் கொடுத்து மற்பு தத்தினிற் கிளைத்த முத்த
சிற்சபைத் தனத்த னித்தன் அருள்பாலா
கப்பலிற் கடத்த லொப்ப நித்தியப் பதத்தி ருத்தி
கைப்பிறப் பறுத்தொழிக்கு முருகோனே
கப்பெனச் செழித்த கொப்பி லப்பு நற்ப லத்தை யுற்ற
கட்புடைத் தருக்கண் மிக்க பொழிலூரா
முப்படிக் கொருத்த நித்த வற்பினுக் கமைத்த சுத்த
முப்புரத் தெரித்த சத்தி தருசேயே
முத்தர்கட் கிணக்க முற்ற நற்றிருப் பொருப்பிலுற்ற
முத்தமிட் பெருக்க முற்ற பெருமாளே.

தனத்த தன தான தன தன தான

22. வருத்துதலி லாதபடி புரத்த லுன தேகடமை
மதித்துதவு வாய் கருணை குகநாதா
மறக்க முடியாத மிடி பொறுக்க முடியாதபடி
மயக்குதலி லேமனது வுழல்வேனோ
கருத்த முகில் மான்மருக சிவத்த சிவனார் மதலை
கனத்த தனமாது பரை சுதவேளே
கரிப்பினுள வேறலைவ கிரிச்சிகர மேவு பரா
கரிக்கு மணவாள சிவ முடையோனே

இருக்கு முதலான மறை பெருக்க முடனே பரவு
மெழிற் குமரனே பெருமை தருவோனே

எனக்குனுய ராதரவு தரத்த தியிதே யருள்செய்
இனித்த ரசமே மதுர முடையோனே

பெருத்த கிரியோட சுரை நொறுக்கு திறவேள் முருக
பிலைத்தரவு மேல் நடன மயில்வீரா

பிணைத்த மலர் மாலைபுனை திருக்குவ டுலாசபர
பெருக்க முயர் வானகுண பெருமானே

தான தனத்த தனந்த தனத்தன தன தான

23. மாத ரிடத்து மயங்கு மனத்தினை
வாதை படுத்த வரும்பு பவத்தினை
மாள வதைத்து வணங்கு நலத்தினை யருள்வாயே

மாய வரக்க ரறும்படி சத்தியை
யேவு கரத்த பரன்பரை சிற்சபை
வாச நிருத்த னிடஞ்செனி யற்புத முடையோனே

மாதர் பாப்பு குறிஞ்சி நிலத்திடை
காவல் செலுத்தி வரும்பரி பக்குவ
மான குறத்தி யணைந்த புயத்தெம தழகேசா

மாசை யறுத்த மகம்புரி யுத்தம
சீலர் மிகுத்த பொதும்ப ரிரக்கண
மானத முத்த ரினந்தனை யுற்றிடு தவநாடா

சாத னைபெற்ற நிறைந்தம னத்தொடு
பேதக மற்று சினம்பவ மற்றவர்
சார விருக்கு மிடம்பல பெற்றுயர் பொழிலூரா

சாறி னிடத்தி னமைந்த வருட்பதி
யாறு முகத்த செயந்திபு ரத்தவ
தான மதத்த னுறுந்துணை பொற்பழ னியினாதா

சீத முடித்த நினைந்தலை பொற்பொழி
லாடு வமைத்த விலஞ்சி நகர்க்குக
தேவ சிகிக்க னிவர்ந்த விலக்கண வடிவேலா

தீதை யகற்றி புரந்தா னுக்கருள்
நாடு கொடுத்த நிரந்தர பற்பல
சீல முயர்ந்த கனந்திரு வெற்புறை பெருமானே.

தனதன தனனு தன தான

24. மணமலர் மிசையே றியகுரு பரனே
வளிமரு வியபூ மணவாளா
மலைமகள் சுதவே ளறுமுக குமரா
வடிவயி லுடையோ யருளாளா
அனவர தமுமே துதிபணு மடியா
ரருணிதி வடிவே குருநாதா
அழகிய முருகா கருமுகில் மருகா
வரிசுதை மருவா ரணிமார்பா
தினகர ரொளிநேரிலகிய மகுடா
திபதிகல் லெழில்சே கரநாதா
திருபிர ணவமே பெருகிய வுரையே
சிவனுண மொழிவா யுடையோனே
கனமலி பொழிலே பலவயல் வளமே
கவினுறு நலமார் பொழிலூரா
கனிகைய ரெழுபே ருறைசுனை குடபால்
கரைதிரு மலைவாழ் பெருமாளே.

தந்தா தன தன தான

25. சந்தா சல வந்தே யளி
தந்தா தர வருள்வாயே
தண்டார் மதி கஞ்சே கர
சம்பே தரு முருகோனே
சிந்தா வசரன்றே வற
திண்கூ ரயில் விடுவோனே
செங்கோ கன கஞ்சூல் வளை
தெங்கார் வள முளநாடா
பைந்தார் புனை கின்றேயுயர்
பண்பா வல ரகமேவி
பந்தா மய லந்தே விழ
பண்பே ரறி வருள்வோனே

கந்தா குக மைந்தா புய
கங்கா சல முறைவாழ்வே
கண்பார் திரு குன்றா டுறை
கந்தா நல பெருமாளே.

தனதன தனதன தன தான

26. உடலல மினிதுற வருடரு தநியிது
வுமைதன வமு துணு முருகோனே
உனதடி யவரக முறைபவ வழகினி
லுயரிய மயின்மிசை வருவோனே
நடமிடு பரனரு ளியகுக குருபர
நளிர்பொழி லிடை மிளிர் பொழிலூரா
நலமமை கனியெழு வருமுறை குடகரை
நதிமல ரெழுசுனை யுடையோனே
கடகரி துணைதர வளிமருவிய புய
கதிரயி லுறைகர மயில்வீரா
கழைகமு கெனபணை யிலகெழில் வளைமணி
கரையிடை யிடையொளி மிகவீசி
திடமென பலவயி னிலவியன் வளமுள
செழிதொளி நிறைசெறி புனலுடா
தெரிசனை யுடனருள் புரிகுவை தயைதரு
திருமலை யிலகிய பெருமாளே.

தனத்தன தனத்தன தன தானு

27. அருட்கவி திருப்புக ழினைத்துதி மனத்தவ
ரகத்தருள் விளக்கிய குருநாதா
அயர்ப்பற நினைப்பவ ருளத்திடை யிருப்பவ
அயிற்கர மெடுத்திடு மயில்வீரா
பொருட்பட வகத்திய முனிக்கருள் படைத்தவ
புனற்கட லுடுத்திய புவிமீதே
பொருப்பிடை யெழிற்றளி யினிற்குடி யிருப்பவ
பொழிற்பணை மிகுத்தணை பொழிலூரா

தருப்பொலி வனத்திடை முனித்திரண் மகத்துவ
தவத்தின ரினுக்கருள் புரிவோனே
சகத்தினி லெனக்கருண் மனத்தொடு வணச்சிகி
தனிற்றெரி சனத்தினை யருள்வாயே
திருப்பரை மலைக்கொரு வரக்கனி தரத்தகு
திருத்தறு முகக்குக பரநாதா
சினத்தசுர் குழைத்தவ குகைப்பிள வெடுத்தவ
திருப்பதி மலைச்சிவ பெருமாளே.

தன தன தனன தன தான

28. மனமிடை துயர்கள் பொடிபட நொடியில்
மரகத மயிலில் வாவேணும்
வழி வழி யடிமை மரபெழு மடிமை
மதிபத மலர்கள் தருவாயே
கனமுகில் தவழு மலைபொழி லிலகு
கவினமை மலைசை யுடையோனே
கதிரயில் வலவ விடையவர் குமர
கனிவினொ டருமை தருவோனே
அனமலி பழன மணிபொழி னகர
வதி பதி பழனி யுறைவாழ்வே
அறுமுக முடைய குருபர வரத
வறுதின மனதி னிறைவோனே
தினகர னிகர வொளிவிடு வதன
சிவபர கரியி னினையோனே
திரமுனி வரர்க டிதிபண வருள்பெய்
திருமலை முருக பெருமாளே.

தனன தனத்த தனந்தாற தன தன தான

29. குமர கிரிக்க ணமர்ந்தே நாதர்கண்
மனது ருசித்த கரும்பே மா முனி
குருவ ருள்வித்தை பகர்ந்தோ னேமுகில் மருகோனே
குறவர் கனிக்கு விருந்தே தாபதர்
கொடிய பிணிக்கு மருந்தே மாமயில்
குலவு புறத்தி லிருந்தே யாரண முறைவோனே.

அமரர் பயத்தை யரிந்தோ னேயென
திதய நடுப்பணி ருந்தோனே வரு
ளனையை நிகர்த்த பெரும்பேறே சிவ முடையோனே

அகில மனைத்து நிறைந்தோ னேதிரு
வறுமு கமுற்று விரிந்தோ னேவுல
கருமை செனித்த செழுந்தே னேநிறை வருள்வோனே

சமர மிகுத்த பெருஞ் சூரேயற
அயிலை விடுத்த பெருந்தீரா திற
தகரி னிருத்த மிடுந்தே நாரதன் வரதீபா

தமிய னெனக்கு நலந்தா வேவென
மொழியு மொழிக்கு ளுயர்ந்தோனே வரு
சலன மனைத்து மழிந்தே வோடிட வருள்தாராய்

கமல முகைக்கு நிகர்ந்தே யாடவர்
மனதை வருத்த வளர்ந்தே மார்பிடை
கனக கடத்தை யிணைந்தோர் மாதன மதிமானார்

கவிய வணைத்த சுகந்தீ தாமென
மதியி னினைக்க வரஞ் சீர் பேரருள்
கருணை செழித்த கடம்பா மாமலை பெருமாளே.

தனத்தன தனத்தந் தன தான

30. பருப்பத கனிக்குந் திருப்புகழ் கொடுக்கும்
பரற்சுத வெனக்கன் பருள்வாயே

பகைத்த சூர்குடிக்கும் பெருத்தெழு வரைக்கும்
பருத்தயில் விடுக்குங் குகதீரா

தெருப்பல மிகுக்கும் பொழிற்செறி யிடத்தின்
றிருத்தன மளிக்கும் பொழிலூரா

திருத்தணி கையிற்றங் கியற்குக நிருத்தஞ்
செயுச்சிகி யிடத்தின் புறுவோனே

கருப்பென விரிக்குந் தொழிற்கரு முகிற்குங்
கருத்தவன் வணக்கஞ் செயுநாதா

கனத்தன கரிக்குங் குறக்கொடி யினுக்குங்
களிப்புற வணைக்கும் புயவேளே

தருப்புற மிருக்குங் கனிச்சுனை குடக்குந்
தளிர்த்தவி குணக்கின் பெரிதான

சகத்தெழி லிருக்குந் திருப்பொலி விளக்கந்
தருத்திரு வரைப்பொன் பெருமாளே

தன தன தந்தா தன தான

31. மணமிகு சந்தா சலமுறை கந்தா
வரநிதி யெந்தா யருள்பாலா
மயிலிலி லங்கா பரணம லிந்தோய்
வளியைய ணைந்தோர் மணிமார்பா
கணபதி பின்பே வருபவ பண்பார்
கமலைபு ரந்தோ யருள்பாலா
கணகண வென்றே முரசமு ழங்கார்
கடிநகர் கொண்டோர் பொழிலூரா
பணமலி கின்றோர் சொலவருடந்தோய்
பழமறை கண்டோய் அடியார்பால்
பவவினை யுண்டேல் பொடிபட வந்தே
பழனியி னின்றே னெனவோதும்
வணமலி தெங்கோ டுயர்சினை கொங்கே
வளரிய குன்றே பலசூழும்
வளநிறை குன்றூ திருமலை யெந்தாய்
வரமரு ளன்பார் பெருமாளே.

தனன தானன தந்தன தந்தன தன தான

32 அரிய மாதவ ரம்பர ரந்தணர்
மவுன யோக ரனந்தர மும்பணி
அகில நாதவி லஞ்சிவ ளர்ந்திடு முருகோனே
அளவி லாதவ ருந்தமி ழின்சுவை
பெருகு பாவணி கந்த நிரந்தர
மருள்செய் வாரிதி பண்பை யிலங்கிய குருநாதா
பெரிய மாமறை கண்டு பணிந்தெழ
வரிய தாகநிமிர்ந்த பரம்பொருள்
பிணிபி ணேடரு மந்தம ருந்தினி தருள்வாயே
பிருகு மாமுனி தண்ட னிடுஞ் சிவ
குமர தேவ சுகந்த பரன்பரை
பெருமை யூமனை யம்பிகை சுந்தரி யருள்பாலா

திரிதலா மசுரன் றற வென்றவ
பரவு மாழி மிரண்டு வறண்டற
திரிகை வேல்விடுகின்ற சுதந்தர முடையோனே

திறலினு ரமணந்தர மும்புக
கழுவி லேறிவி டும்படி யும்பணி
சிவம தாகிலை நின்று விளங்கருள் புரிவோனே

கரிய மாமுகி லந்தண னிந்திர
னுரிமையாகம கிழ்ந்துபு கழ்ந்தவ
ககன மேவிய குன்றுகள் தங்கிய குகவேளே

கமுகு மேல்வளர் தெங்கென வுஞ்செறி
பலுகு நாடு பொதும்ப ரிலங்கிய
கமலதேவி விளங்கருள் குன்றுறை பெருமாளே.

தனன தனந்த தன தன தான

33. குருவாக வந்தினிமை தரவே மருந்து புகல்
குமரா செயந்திகக ருறைவோனே

கொடிதான வன்பிணிக ளறவே மிகுந்த புகழ்
கொடுவே லணிந்த கர முடையோனே

மருவார்களின் றியுல கழகாக நின்றுலவ
வரவே புரிந்த ருமை யருள்வோனே

மகிபா குறிஞ்சி நில முதல்வா பெரும் பழனி
வரதா யிலஞ்சி வளர் குருநாதா

திருவே செறிந்த பொழிலுடையாய் விரிந்த பணை
திகழ்சூழ் பரங்கிரியி னெழில்வேளே

செயமே விளங்கு நவ நிதியே முருந்து நகை
தினைகா வலின் குறமி னிடமேவி

தருவாய் மிகுந்த சுக மெனலோடணைந்த குக
தருவே கனிந்த கனி மொழியாளா

சனகா தியந்தணர்கள் துதிமேவு கின்றதிரு
தளிர் நாக குன்றிலுறை பெருமாளே.

தனத்த தந்தன தனதன தனதன

34. மணத்த செங்கனி யொழுகிய மதுவென
வுரைத்த செஞ்சொல குருபர சிவகுக
வரத்தின் மிஞ்சிய முனிவார் துதிபுனு முருகோனே

வளர்க்கு மந்தணர் மகமிடை மறைமொழி
துவக்க வங்கெழ சரவண பவவென
மடுக்க வம்பர மயின்மிசை நடமிட வருவோனே

குணத்தி னின்றெழு கதிரவ னிகரென
விளக்கு கின்றதொ ரயில்கர முடையவ
குறத்தி யன்பினை மருவிய பரசிவ குருநாதா

குறிப்பி லுந்தனை மனநிடை கொளுபவர்
நலத்தின் மிஞ்சிய வருள்பெறு பவரென
குணத்த ரும்பிய வருமறை மொழியென வுலகோதும்

வணத்தி றந்தனை யெளியனெ னகமிசை
யிருத்தி வந்தனை புரிவதை யினிதுற
மனத்த றிந்தனை யருள்சிறி தருளிலை யினியேனும்

மதித்து நன்குய ரியபத மலரிணை
தரத்த குந்தநி யருள்புரி யிதுதகி
வனத்தி லன்பொடு வளைபக ரியசெய லெழிலாளா

பணத்தி லங்கிய வரவினை யணியென
வணித்த சங்கர னுடுபவை தருசுத
பகைத்தி டுங்கொடி யவரற வயிலுரு வியவீரா

பணிப்பெ ரும்பணை பொழில்புற மிலகிய
திருத்த குங்கிரி சிவகர மிசையொளி
பரப்பு கின்றழ கமைவுற மிளிரிய பெருமாளே.

தத்த தன தன தன தான

35\. பத்தி பணுமவர் சித்த மகிழுற
பட்ச மொடு பொரு ளருள்வோனே

பத்தி யெழினகை யத்தி குறமகள்
பக்கன் மருவிய குகநாதா

சித்தி பணுமறை முத்தர் முனிவரர்
சித்த மிசையுறை கிறதேவா

செப்பை நிகர்தன மிக்க மயன்விழி
சிக்கி வசமுற விடலாமா

துத்தி விரிபணி நத்து பவர்சுத
சுப்பி ரமணிய னெனவோதும்

சுத்த முடையவ வித்தை யருள்பவ
சுற்று மயின்மிசை வருவாயே

யெத்து மலைவயல் சுற்று பழனியி
லிக்கு கனிமது தருவோர்பால்

இட்ட முடையவ மிக்க பொழிலிடை
யிட்ட நகர்வல பெருமாளே.

தனத்த தனத்த தன தான

36. மனத்தி னினைத்த வணத்தி னருட்பெய்
வரத்தின் மிகுத்த பெரியோனே

வளப்ப முடுத்த பொழிற்கு ளவிழ்க்கு
மலர்க்க ணிறைக்கும் வயலூரா

வனத்தி குறத்தி தனத்தி னகத்தின்
வடுக்க ணிறைக்கு மெழில்வேளே

மலைச்சி கரத்தி லிருக்கு மயிற்கை
வயத்த தவத்த ரகவாழ்வே

இனத்திலெனக்கு நலத்தை யளித்து
மிதத்தி லிருத்தி யருள்வாயே

இரக்க முனக்கு லிருக்கி லெனக்கு
லிமைப்பி லருட்செய் திடவேணும்

தினத்த பொழிற்கு ளெழிற்கொ ணகர்க்குள்
சிறப்பி னிருக்கு முருகோனே

செழிப்பு படைத்த பெருக்க மிலக்கு
திருச்செய் குவட்டில் பெருமாளே.

தனதன தனத்தா தனதான

37. அடியவ ரிடத்தே பெருகருள் விரித்தே
யருமறை யுரைத்தே வருவோனே

அனுதின முனைச்சேர் புகழ்சொலு மினத்தோர்
அகமிட முரித்தா யுறைவோனே

படிமிசை யெனக்கி தாவிலை யெனத்தேர்
பதமல ருரித்தே டருள்வாயே

பவவினை யொழித்தோர் செயலிடை யுதித்தோய்
பழமலி பொழிற்கா வுடையோனே

கொடி யசுரினுக்கே நுதியயில் விடுத்தோய்
குருபர சிகிச்சேவக நாதா

குருமுனி வனுக்கோர் குருவென நிலைத்தோய்
குணரவி நிகர்த்தோ யெழிலாளா

கடிகறை மிடற்கோ னருளிய சுதற்கோர்
கவுரிய ரினத்தோய் கவுமாரா

கருமுகில் துயிற்கா நிறை திரு மலைப்பால்
கதிரயில் பிடித்தோர் பெருமாளே.

தனத்தன தனத்த தன தான

38. உடற் பிணி யொழித்து நலத்தினை யளித்து
உயர்ப்பத முரித்தொ டருள்வாயே

உவப் பெழ நிருத்த மிடுச்சிகி புறத்த
வுடுக்கண நிகர்த்த மருடேசா

கடற் கரை யிடத்தில் மலைக் குவ டிடத்தில்
கனத்தர சிருக்கு மெழில்வேளே

கனிப்பொழி லுடுத்த நகர்க்கிறை முனிக்கு
கருத்தினி துறைக்கு முருகோனே

அடற்றிற வரக்கர் படக்கரு வறுத்த
வயிற்கர மெடுத்த செகவீரா

அரற்கரு மறைக்கு வுரைப்பொருள் விரித்த
வருட்குரு கரிக்கு மிளையோனே

குடக்கடை ரவிக்கு வுறட்குக வெழிற்கொள்
குறக்கனி யினுக்கு மணவாளா

குளிர்ச்சுனை யலர்த்து மலர்த்தொடை தரித்த
குலத்திரு மலைக்குள் பெருமாளே.

தன தன தனத்த தன தான

39. இதுவரை துதித்து மிதுவரை பிடித்து
மினிதரு வுலகத்துத யருளாயல்

எளியனை வருத்து கிறபவ மிடக்தி
விருவென விருத்தி — விடலாமா

மதுவினை நிகர்க்கு மொழிதரு குகத்த
வரநிதி பதத்தை — யருள்வாயே

வரைவரை யினுக்கு நிகர்கர வளிக்கு
மணமலர் முடிக்கு — முருகோனே

பொதுவினி னிருத்த மிடுநட னலத்தர்
புகழ்சுத கரிக்கு — மிளையோனே

புதியவரி னுக்கு மருளறு முகத்த
புநிதவ மிகுத்த — பெரியோனே

சதுர் மறை முழக்க மலி பொழி னுடுத்த
தனி யெழில் படைத்த — பொழிலூரா

தவ முனி வரர்க்கு மகிழ் வர மளித்த
தளிர் திரு மலைக்குள் — பெருமானே.

தனந்த தன தன தன தான

40. வணங்கி வரு பவ ரிணங்கு பத மலர்
வணங்கு மனமுற — வருள்வாயே

வரம்பி லருணிறை பிறங்கு பயிரவி
மகஞ்செய் தவமிசை — வருவோனே

அணங்கு குறமினை மணந்த புய மயி
லமர்ந்த குக வடி — வுடையோனே

அலங்க லணி புக டுலங்கு கிற பர
வனந்த னருளிய — முருகோனே

பணங்கள் பெரிதென நிலங்கள் பெரிதென
பதங்க டுதிசெய் — மடியரை

பரம்பு கடுமொழி விளம்பு கொடியரை
பயங்கொ ளாகிடை — விடுவோனே

குணங்கொள் குருமுனி நலங்கள் பலபெற
குளிர்ந்த மொழிபுக — வியநாதா

குறிஞ்சி மருவிய மருங்கு திருமலை
குலஞ்செய் சினகர — பெருமானே.

தனந்த தன தன தன தான

41. குறும்பு பணுமவர் நொறுங்க வயில்விட
குறிஞ்சி நிலமிடை — வளர்வோனே
குணங்கொள் பயிரவி யலங்கல் புனைபரை
கொழுந்தண் மொழிபுகன் — மகமாயி
இறும்பு நிகர் குழல் சுரும்பு நிகர் விழி
யிறும்பு மிசை வள — சியதேவி
யிரங்க மடி யிடை பிறங்கு மறு முக
விரங்கி யரு டர — வரவேணும்
எறும்பி வர வளி தழும்பு பட புவி
யிணங்க மரு விய — குகநாதா
இலஞ்சி பழ முதிர் வளங் கொளியன் மலை
யிலங்கு பொழினக — ருடையோனே
தொறும்பர் கணமுட னிணங்கி யுன தரு
டுலங்கு புகழ் சொல — வருடாராய்
சுரந்து பொழி முகி னலங்கொள் சுனையுள
சுயம்பு திருமலை — பெருமாளே.

தன தனத்தன தன தான

42. புகழ் சொலிச் சொலி துதி பணிப் பணி
புக லெனப் புக — லறியாமல்
புதை படுப்பு தா் மலை யிடைக் குகை
புடை யிடைப் பொழி — வினிறோடு
தக வுறத் தளி யினி னடுப் பொது
தமிழ் கவிப் பொரு — ளிடமேவி
தமி யனுக்குயர் பொருளளித் திலை
சர ணளித் திலை — யினியேனும்
மக மகத்துவ மிகு குகச்சர
வண பவச்செய — குருநாதா
வர மொனக்கரு ணிதி கொடுத்தருண்
மல யனுக்குத — வியதேவா
திகழ் பொழிற்சினை யறித விற்பெரு
திறமை பற்றிய — வணின்மேவா

செறிவு பெற்றுயர் திருமலைத் தலை
சிணகரச் சிவ பெருமானே.

தனன தத்தன தனதான

43 பிணியொ ழித்திலை பகையொ ழித்திலை
பெலன ளித்திலை யிணியேனும்
பெருக ருட்பொரு ணலம ளித்தினி
பெருமை யற்பொடு வருவாயே
பணிய ணிச்சிவ பானு மைக்கொரு
பருகி திச்சுத னெனவோது
பனிப கைப்பொரு வியவ யிற்கர
பவள மெய்க்குரு பரநாதா
திணிம னச்சிலை யிலகு மற்புத
திரும லர்ப்பத முடையோனே
சிறிய னுக்கினி தருள்ப டைத்தவ
செழிவ ளத்துள பொழிலூரா
மணிவணச் சிகி யதனொழிற் புற
மவிரு சுப்பிர மணியாநீள்
வாத முத்தர்க டுதிதி ருப்பதி
மகிழ்பொ ருப்புயர் பெருமானே.

தானு தனு தனன தன தான

44. ஏதே னுமோர் சிறிது தாதா குகா கருணை
யேதேதெனு தவண மருள்வாயே
ஙீயா தலோ பியர்க ளோதா தபா வியர்க
ளீடே றவாழ் வுதரு முருகோனே
மாதே வரோ டுபரை நானு விநோத முகின்
மாதே சதா புகழு மொருதேவா
வாதே யிலாதவனை மேதா வொராதரவு
வாளா விரா தருமை தருவோனே
பூதே றலோ டுதிணை மாவே துழாவு முருள்
போதா தெனு செறிய வுனுவோனே

பூபா ர்மா வருள நாதா நிதா னியிதை
பூபா தனே பிரிய முடையோனே

சீதே விவாழ் கமல மேனு வுமீ னிறைகள்
சேர்பா கமார் கழனி பொழில்சூழும்

சீரா னதா னதிரு நாகா மயூ ரபர
தேவா மகா பெரிய பெருமாளே.

தன தன தான தன தன தான

45. பட முடி யாதது யரிடை யிடையே மருவு
பவ மற வேகிருபை தருவாயே

பர சிவ நாத னரு ளிய குக னே குமர
பர மத யா நிதிபொ னருளாளா

வட மிலை யாமமளி துகின் முகிலோன் மருக
வளிகொ ழுநா பழனி யுறைவாழ்வே

வகை வகையே கொடுமை புரி பவர்நா சமுற
மற மயிலேவு திட முடையோனே

கட நிக ராகி வரு தன கன கா பரண
கரி கண வா வெழில்செய் பொழிலூரா

கவுரிசு தா கழுகு மலைவளர் வேளடியர்
கன வினி லேயருளு முருகோனே

தட மலி சோலைமலை யில குமர காபுநித
சமய தயா பரமெ யுடையோனே

தவ முனி வோர்கள் செறி மக வள மேவு கிற
தனி திரு மா மலையில் பெருமாளே.

தத்த தனதன தனதான

46. வெற்றி பெறவரு ளுக்ர வயிரவ
வெற்பை வடகுண திசையாளா

மிக்க குழல்வள முற்ற கனிகைகள்
மெச்சு சுனை குட முடையோனே

பற்ற லர்கள் பணி கொற்றை பயிரவி
பச்சை நிறமினி ~ழில்காளி

பட் பி னமை தலை வுற்ற சின கர
பத்தி வட குட முடையோனே
உற்ற தளி நெடி திட்ட நிருதிபி
லுச்சி கணபதி யமைவாகி
உத்த மர்கள் பல பத்தி நிறை பவர்
வொப்பி லமரர்க ளுதிபேண
செற்றை வரு தரு வுற்ற பொழின்மலி
செச்சை திருமலை நடுவே நீள்
சித்தி தளியதில் பொற் பின் மயின் மிசை
செக்கர் நிறமிளிர் பெருமாளே.

தனத்தன தனத்தந் தனதான

47. பகைத்தெனை வருத்துஞ் சினத்தவர் மனத்திண்
பறச்செறி வறுத்திங் கருள்வாயே
பசித்தவர் களுக்குந் துதிப்பவர் களுக்கும்
பவப்பிணி விலக்குஞ் செகவீரா
குகைக்குவ டுடைத்துந் துடுக்கசுர் கெடுத்துங்
குமைத்தயில் பிடித்தம் புயகோமா
குறக்கனி யினுக்குங் கரிக்கொடி யினுக்குங்
குறிப்புரை செலுத்துங் கொழுநாநீள்
சிகைச் சடைபெருத்தஞ் சிவக்கடவுளுக் குந்
திருப்பிர ணவத்தின் பொருளீவோய்
திருக்கம ணனைத்தும் புகக்கழு விறுத்துந்
திறற் பெறு குணத்தின் புறுவோனே
தொகைப்பட மிகுக்குஞ் சகத்தினர் களுக்குஞ்
சுகத்தினை யளிக்கும் பெரியோனே
துடர்த் துனி யொழிக்கும் பதச்சர ணளிக்குஞ்
சுயத் திரு மலைப் பொன் பெருமாளே.

தான தன தன தான

48 யாது துணை யாது கெதி யாது பொரு ளறியாயா

யாவ ரருள் வாரி னிமை யானை மருவியமார்பா
சாது முனி வோர்க டுதி சாரு குருபாநாதா
தால மிளிர் நாக மிசை சார்புடையமயில்வீரா
சீதை பதி மான்ம ருக தீர குகவரதேவா
தேவ நல மேவ வொரு சீர்மை தரவருவாயே
மாது பரை யாளி தய மான சுதகுருதேவா
மாகு வளை யாரு திரு மாமலையில்பெருமாளே.

தனந் தனந் தனந்த தன தான

49. பிறந் திறந் தெழுந்து கடும் பவம் புரிந்து
பிறங் குபொன் பதங்கடுதியாமல்
பெருந் தனம் பரந்து வுயர்ந் திரண் டொருங்கு
பிணைந் திணைந் தமைந்தமடமாதர்
குறங் ககங் குவிந்து படம் பொதிந் திருந்து
குழைந் தகழ்ந் தரும்புமலர்மீது
குரங் கினந் தழும்பு படுந் திறம் புரிந்து
கொடுங் கரம் படிந்தகிளைமான
கறங் கினுந் துவண்டு தளர்ந் தெழுந்த ழிந்து
கனங் குறைந் தகன்றமயல்தீர
கவின் பிறங் குகின்ற செழும் பதம் புகழ்ந்து
கனம் பெறுங் குணங்களருள்வாயே
திறங் கொளுஞ் செறிந்து பலந் தருங் கவிழ்ந்து
திரும் பரும் பிரங்குபொழிலூரில்
சிறந் தருந் தவங்கள் புரிந் திடுங் கணங்க
டிகழ்ந் திலங் குபண்பைபெருமாளே.

தன தனன தான தன தன தான

50. விசார வலையான் மனது நிலாத வணமே மருக
விடாம லருளே புரியவருவாயே
விவாத வழி பேசுபவ ரகாத மன வா தொழிய
விடாகவலை யேயவர்களிடமேவி

பசாசு நிலையே யடைய தவாத வயி லேவுகிற
பராமு ருக னே குமர வாதீபா
பஞுக மணி நாதர் செவி விழாத பொரு ளே நிறைய
பராவு மா ஞர்மகிழ வருள்வோனே
தூசார மென வோதி வொரு மகாரச சுஞுதி சொன
சுவாமி கிருபா நிதிபொ னுடையோனே
சுமா துரிய மேவ ருமை சதா நிலைமை யாய மைய
சுகா னுபவ மே யருளு முருகோனே
திசா திசைக ளே பரவு குஞுதி பதியே பழனி
திவா கர விலாச மயி லுடையோனே
செயா ளிலகி யே வளரு புரா தனசி கா மலையில்
செயா திபெறு மான் மருக பெருமாளே.

தத்தன தனத்தன தன தான

**51.** உற்றவர் வெறுத்தனர் பற்றலர் பகைத்தனர்
உற்றவு னருட்பதம் அருள்வாயே
உத்தம மிகுத்துள பத்தர்க ளினத்திடை
உற்பவ குகப்பர சிவநாதா
நற்றவ முனிக்கரு ளற்புத மளித்தவ
நச்சிய குறக்கனி மணவாளா
நத்திணை மலர்ப்பத பற்றுடை யவர்க்கருள்
நற்பொரு ளுரித்துட னருள்வோனே
வெற்றிகொ ளயிற்கர முற்றவ பருப்பத
விற்றனி யிணிற்குடி கொளுநாதா
வித்தக வகத்திய னுக்கருள் விரித்தவ
வெற்பிணை நிகர்த்தெழு மதயானை
பிற்பறு மூகக்குக முத்தர்க டுதித்திடு
பெற்றிகொ ளெழிற்பொழில் வயலூரா
பெட்பலர் மலர்ச்சுனை வுற்றெழி றிருப்பதி
பெற்றுயர் நகத்துறை பெருமாளே.

தனன தன தன தன தான

**52.** முருக குருபர குமர வசிகர
முனிவர் துதிபணு மயில்வீரா

முதுமை பெறுமறை யவர்க ளிடமுறை
முதல்வ பழனியி லுறைவாழ்வே
தருவை நிகர்கர குறவர் குல கனி
தலைவ கரியணை மணவாளா
தனத விரிமலர் பிணையல் புனைபவ
சமய மிதுதகி யருள்வாயே
மருவு முயர்வினை தடவு தருநிரை
வளர்பு பலமலி பொழிலூரா
மகதி நிகரறு மொழிகொள் பயிரவி
வரத சுத குக குமாரா
பெருகு பணைவரை புளின மிடையிடை
பெரிய ரவியென வொளிவீசி
பிறழு பல குல மணிகள் குவைபுடை
பெருகு திருமலை பெருமாளே.

தன தன தன தன தன தான

53. அருடர விதுதகி புரிகுவை புரிகுவை
அணிமயி லிலகிய குருநாதா
அமுதுணு மிமையவர் துதிபணு பவர்துயர்
அறவொரு கணமிடை வருவோனே
பிருகொடு பலமுனி வரர்தொழு மறுமுக
பிரியமொ டெனதகம் வளர்வோனே
பெருகரு மறைபுகல் பிரணவ வுரைமொழி
பெறவர னிடமுரை புகல்வோனே
செருவசுர் குலமற வயில்விடு பிரபல
செறிபொழி னகருறை குகதேவா
தினவன மதிலமை குறமினை மருவிய
திடபுய குருபர சிவவேளே
மருவிய மலர்வரு சுனைகுட மெழுவர்கள்
வயிரவர் பயிரவி மதயானை
வனநட மிடுபர னிவவொடு கணமிக
மகிழுறு திருமலை பெருமாளே.

தனத் தனன தனதான

54. இடுக்க ணுற நலத்துரி மைம
பிசைத்த பொரு ளருளாமல்

இருப்ப தழ கிலைப் பெ ருமம
வெனக்கு னரு டாவேணும்

மடுக்க ணல முடித்த பணை
வளப்ப மிகு பொழிலூரா

வாத் தநும நதித் தலைவ
வனத் தி யணை மணிமார்பா

உடுக்க ணிக ரிழைக் கொள்பறை
உமைக் கருமை சுதவேளே

உனக் கடிமை யெனப் பெரிய
உருக்க மினிதுற வேணும்

துடுக்க சுரை யொழித்த பர
சுகச் சமய வரதீபா

தொனித்த திரு மலைக் குமர
துரைப் பெரிய பெருமானே.

தனத்தன தனத்தன தனதான

55. மகத்துய ரருத்தொழி பவக்கட லறப்புரி
வளப்பொ ருளளித்தருள் புரிவாயே

மகத்துவ மிகுத்துள புனிக்கண மொலித்திரு
மறைக்குல முழக்கமு மிகமேவி

வனத் தருகினிற் பலர் மரத்தடி யினிற் சிலர்
மகத்தழன் வளர்த்திடு பொழிலூரா

வனக்குற வருக்கெழில் சுதைக்கனி வளிக்கமை
வளைப் பகரிடச் செலு முருகோனே

சினத்தவ ரினத்தினை பொடிப்பட நொறுக்கிய
திறத்தயில் கரத்திடை யுடையோனே

சிரித்திழி வெனப்புகன் மடப்பயல்களைக் கழு
செறித்துடல் கிழித்திட விடுவோனே

தினத்தின முனைத்துதி புகட்சொலு பவர்க்கருள்
திருப்பரி னகத்துறை செகநாதா

சிவச்சுத கரிப்பிணை நலத்தவ ரகத் தெழு
திருப்பதி மலைத்தளி பெருமாளே

தத்தன தனத்தன தனதான

56. வித்தக னகத்திய னுத்தம னெனத்திரு
வித்தைக ளளித்தவ னெனவோதி
வெற்பிடை முனிக்கணம் மற்றுள தவத்தினர்
மெச்சிய துதிப்புகழ் பலபாடு
சததி கொ ளயிற்கர பத்தர்க ளகத்திடை
சர்ச்சன ரிடத்தினி லுறைவோனே
சக்கர முகிற்கொரு பத்தினி யினுக்கமை
சற்குண மிகுத்துள மருகோனே
எத்திற விரக்கமு முற்றிலை யருட்செறி
விற்பத முரித்துட னருள்வாயே
எக்கலை யிடத்தினு முற்றவ னெனப்புக
ழெற்பிளவறுத்தெழி னிறவேளே
மத்தமொ டிரைப்பணி வைத்தவ னளித்திடு
மக்களி லருட்குக னெனலான
மற்பொரு திரட்புய வற்புத பரச்சுடர்
வட்டிரு மலைப்பதி பெருமாளே.

தனத்தன தனத்த தனதான

57. பகைத்துனை வெறுத்த குணத்தினர் களுக்கு
பருத்தயில் விடுக்கு முருகோனே
பருப்பத குகைக்கு ளிருப்புள முனிக்கு
பருப்பொருள் விரித்த குருநாதா
தொகைக்கண மிகுத்த திரட்புய வரக்கர்
துமித்தற வயிற்கை யுடையோனே
சுகப்பரி மளத்தி கருப்பணி நிறத்தி
துயர்ப்பறி மறத்தி தருபாலா
நகைத் தெரிவளர்த்து புரத்தினை யழித்து
நலத்தினை யளித்த சிவநாதன்

நளிர்ச்சடை தரித்த புதுப்புன லொழுக்கி
நகத்தகல் பரப்பி வுலகார

திசைப்பல செழிக்க விடுத்தவர் தமக்கு
திருப்பிர ணவத்தி னுரைவோதி

திருத்திய வரத் த தருப் பொழிலு டுத்த
திருப்பதி மலைக்குள் பெருமாளே.

தனத்தன தனத்த தனதான

58. எனக்கருள் கொடுத்து மலர்ப்பத மளிக்கி
விசைப்புகண் மிகுக்கு முருகோனே

யெழிற்குக பணிக்கு வுடற் புணை வொழித்து
யிடர்க்கரு வறுத்த குகநாதா

கனற்கமு கெனச்செய் செனற் செறி புயர்த்த
கதிர்க்குலை குறைத்து சுமையாலே

களத்திடை பொருத்தி பகட்டடி துவைக்க
கனச்செனல் குவித்த வளநாடா

அனத்தட முடுத்த பொழிற்பல மிகுத்த
வணித்தெனை படைத்த பொழிலூரா

அகத்திடை மயக்க மறுத்தவர் களுக்கு
வருட் பொருள் கொடுக்கு மெழில்வேளே

சினத் தெழு மரக்கர் படக் கரு வறுத்து
திருத்தணி வரைக்கு ளுறைவோனே

செழித்தற னிறைத்த மலர்ச்சுனை படைத்த
திருப்பதி மலைக்குள் பெருமாளே.

தந்தன தனத்த தன தான

59. அண்டர்க ளகத்தி லுண்ட லெடுத்து
வங்கணி படைத்த வரிதேவி

அம்புய மலைக்கு மென்கர மழுத்தி
அம்பத மெடுக்கு மதுபோது

கொண்டலை நொறுக்கி வண்டினை மயக்கி
கொங்கவிர் குழற் றொ ளகமாதர்

குஞ்சியை மடித்து வன்புற மிழுத்து
கொண்டவ ரகத்தி விடமேவ

கண்டனை வெறுத்து தண்டித முறுத்த
கண்பனி யுகுத்த ததிலேலே

கண்டென மகிழ்ச்சி பொங்கவ ணெடுத்து
கந்தரு முகிற்கு மருகோனே

திண்டிற லரக்க ரன்றற வொழித்த
செங்கர வயிற்கை யுடையோனே

செம்பத மளித்து பண்புட னிரட்சி
செந்திரு மலைக்குள் பெருமாளே.

தனத்தத் தனத்தத் தனதான

60. சகத்திற் பிறத்தற் பெருத்துச் சலித்துச்
சகித்தற் கிளைத்துத் திடமாறி

தவித்துத் தவித்துச் சிறுத்துச் சிறுத்துச்
சளத்திற் கிடப்பட் டிடலாமா

சுகத்திற் பொருத்தற் புதத்திற் குளித்துச்
சுயத்திற் கலத்தற் கருள்வாயே

சுனைக்குட் படுத்தற் கரத்திற் பிடித்துத்
துறைக்குட் செறித்தக் குறமாதை

பகத்திற் பொருத்தற் கிணைக்கச் சிரித்துப்
பருத்தப் புயத்திற் புணர்வோனே

பரத்திற் கிளைத்துத் திடத்திற் பெருத்துப்
பரப்புச் செகத்திற் பெரிதான

குகத்திற் றரித்துப் பகத்தைக் கொளுத்திக்
கொடுத்துத் தவத்தற் கருள்வோனே

குணத்திற் றழைத்துச் செழிப்புத் திருப்பொற்
குவட்டிற் றளிக்குட் பெருமாளே.

---

60. பகம் — ஈச்சுரத்தன்மை.
பகம் — ஞானம்.
கொளுத்தல் — கலை கற்பித்தழுத்தல்.

தந்தனந் தானத் தான தனதான

61. வஞ்சகம் பேசிப் பேசி நெஞ்சகங் கோணிக்கோணி
வம்புறும் பாவத்தோர்க ளூறவாகா

வண்டிருந்தா டுற்றோதி மஞ்சிவர்ந் தோதிக் கேறு
மங்கையின் போகத்தாசை யறவேநீள்

செஞ்சரண் போதைத் தேட லென்றினுஞ் சேமத் தோடு
சிந்தையன் பாகப் பேணு மருடாராய்

செந்திலந் தோகைத் தேவ சந்தனம் பூசற்கான
சிந்துரம் பேணிப் பூணு மணிமார்பா

அஞ்சலஞ் சேவற் கூவ மஞ்சிருந்தாடிச் சேர
அம்பரம் போர்பெற்றாடு கொடியாளா

அந்தணன் றோற் கோதி விஞ்சையின் பாகக் கூறை
யங்கவன் காதிற் கோது முருகோனே

பஞ்சிணைந் தாரச் சேர்பு மென்சிலம் போதைப் பாத
பங்கயஞ் சேரற் கான வனமேவி

பைஞ்சுகம் போதற் கோதி யின் சுகங் கூடற் கான
பண்பையின் கோடிற் றேவ பெருமானே.

தனனத் தன தன தன தான

62. பிறவிப் பிணி யினி யொழியத் திருவருள்
பெருகப் புகழ் சொலு மருடாராய்

பிணை பற்பல தொடை புனை பொற்புய பர
பிணை பெற் றெழின்வளி மணவாளா

திறமுற் றசுரற வொரு பொற் பயில்விடு
திவுற் றணி புய மயில்வீரா

செயமுற் றெழு முனி மனமுற் பவ கலை
தெளிவுற் றிட மறை புகழ்வோனே

அறமிக் குடையவர் பெற பற்பல பொரு
ளணி பொற் குவையுத வியவேளே

அதிலெற் கொரு சிறி துதவிப் பத மலர்
அருளத் ததியீது வருவாயே

பறழுக் கமுதமு முதவக் கடமுறை
பலுகப் புரி பரை சுதநாதா
பறவைப் புற முறு முகிலிற் கொருமனை
படர் பொற் றிருமலை பெருமாளே.

தந்தன தான தான தன தான

63. துன்பலை வீச வீச வென்புட னேவ நோவ
தொன்பவ மேவ மேவ விடலாமா
சுந்தர மான தேவ கந்தர மேன் மயூர
தும்பிகை நாத வீர னிளையோனே
என்புல னோடல்லான வன்புறை ஞானயோக
வின் றினி தான சேவை தருவாயே
இந்திர னோடு பாரி தந்தில கானை மாதை
எண்டிசை வாழ மாலை புனைவோனே
புன்புல வாடை மேவு வன்புல நாச சூரை
பொன்றிட வேலையேவு முருகோனே
பொன் குவடேறி வாழு மென் பணி தேவ தேவ
புங்கவர் பால மாலின் மருகோனே
இன்பமெய் யோக நாத ரின்றவ மேவலோடு
மெண் பொழி லூரில்வாழு மெழில்வேளே
இம்பர் களாடல் பாடல் தங்கிய தேவ தான
இன்றிரு மாதி ருகை பெருமாளே.

தான தன தான தான தன தான

64. ஓலமென வோடி வோடி பாத மலர் நாடி நாடி
வோது தமிழ் பாடி பாடி உரையாடி
யோது மறை மீது லாசு பால குக னே விநோத
ஓமு ரைவிலாச நேச விசுவாச
காலனற வோடி வீழ காலுதை புராரி பால
கான குறமாது நேரு முருகோனே
காமன் மக ளான பூவை மாலை யிடு வேல் வலான
கா வெனவு மேவி யோத றியாயோ

யேலமலை வாசயோக மாதவர்க டேடுநாத
யீது மொரு வேதமோது முறையாமோ
யேவ ரறிவார் குமார சேவ கமயூர வீர
யேழை துய ரோடி மாய வதனோடு
சால வினை பாப மோட நீதி புரி வாய் குணாதி
சாமி வர தீப மான முருகோனே
சாது முனிவோர்க ளோடு யோகி களுமே பராவு
தான திரு நாக மேவு பெருமாளே.

தனத்தத் தான தன தான

**65.** பிறத்தற் பீழை தொடுத்தற் கேது
பெருக்கத் தேரு மயலான
பெணைப் பற்றோடு சுகித்தற் கான
பிறப்புப் போகு நெறிதாராய்
குறத்திக் காக வனத்திற் கேகி
குடித்தற் கான சுனைமீது
குமுக்கிற் பாய வழுக்கற் காக
குணத்திற் றீர மிகுமாது
புறத்திற் சேர பிடித்தப் போது
பொருத்தச் சேரு மணவாளா
பொருப்பிற் கேறி விருப்புற் றோரை
புரத்தற் கான மாயில்வீரா
அறத்துச் சாலை பெருக்கத் தோடு
வமைத்துப் பேணு வளநாடா
அருட்பெற் றோர்பு திருப்பொற் பாவை
யணிப்பொற் கோடில் பெருமாளே.

தனத்தன தனத்தந் தன தான

**66.** பகைத்தெனை வருத்துந் திறத்தின ரறத்திண்
பருப்பையுள் விடுக்குஞ் செகவீரா
பவத்தெழு பிறப்பின் கருக்குழி யொழித்தும்
பதத்தினி லிருத்துங் குகதேவா
திகைத்தனை யடுத்துஞ் சொலிச் சொலியலுத்துஞ்
திறப் பொருள் படைத்திங் கருளாமல்

செருக்கினர் சிரிக்கும் படிக்கெனை விடுக்கின்
செகத்தல மனைத்திங் குனையேசும்

தகைத் தயிலெடுக்குங் குகக் குரு பரக்கந்
தநற் சிகியிடத்தின் புறுவோனே

தருக்கிளர் பெடுக்கும் பொருப் பகவுடைக்குந்
தனித்திறன் மிகுக்கும் புயவேளே

குகைக்குரு முனிக்குஞ் சிவப்பர சிவற்குங்
குறிப்புள துரைக்குங் குருநாதா

கொமைத் தன வளிக்கன் பகத்திடை விளக்குங்
குலைத்திரு மலைப்பொன் பெருமாளே.

தனத்தன தனனு தன தானு

67. கருக்குழி புகுதா வரத்தினை யருள்வாய்
கனக்குக முருகா வடிவேலா

கரிக்கிளை யவனே திருப்புக முடையாய்
கனிக்கொடி வளிநா யகவேளே

இருக்கசுர் முதலா மெழுத்தினி லுயிரா
யிருப்பவ கழுகா சலவாழ்வே

இடைக்குடி யினிலே பதத்துணி மருகா
யெழிற்பரை சுதனே வயலூரா

மருக்கமழ் குழலா ரிடத்தமை மயலா
மயக்கினை யறவே யருடாராய்

வழிப்படு மடியா ரகத்திடை யுடையாய்
வளப்படு பொழிலூ ருடையானே

சுருக்கர விடையார் தரத்தகு முனையே
சுகித்தெழு மயில்வா கனதேவா

சுனைத்திரு மலரா லணிப்புய முடையாய்
சுயத்திரு மலைவாழ் பெருமாளே

தன தன தனத்த தன தான

68 திரு நில மளிக்கு மொருபெரு முகிற்கு
செயமரு கெழிற்கொன் குகநாதா ••



சிவபர னுமைக்கு மகனறு முகத்த
திகழிப முகற்கு மிளையோனே

மருவரை முனிக்கு மறையினி துரைத்து
மகிழ்குரு வெனக்கு னருடாராய்

மகபதி வளர்த்த வெழில்கரி மகட்கு
வரனென வுதித்த முருகோனே

விருதுகள் பெருத்த வசுர்குல மறுத்த
மிளிரயி லெடுத்த மயில்வீரா

வினைபவ மிருப்பி னதைகண மரைக்குள்
வெறுவளி படுத்தி விடவேணும்

மருமலர் விரித்து திருவற னிறைத்த
மதிசுனை குணத்தி லெழுகோவில்

மருவிய பெருக்க முடையவ திருப்பொன்
வனமலை படைத்த பெருமானே

தந்தா தன தனதான

69. கந்தா குக சந்தா சல
கண்பா ரென முருகோனே

கங்கா நதி யின்பேர் சுத
கண்டேர் மொழி வளிநாதா

செந்தாமரை யின்சே கர
சிந்தா பத முடையோனே

தெங்கேர் பொழி லின்கா வல
செம்பா துகை யருள்வாயே

சிந்தோ விடு செந்தூ ரிடை
திண்சே வக மயில்வீரா

சிங்கா தன துங்கா சிவ
செங்கே ணிற மணிமார்பா

வந்தே மதி தந்தே நல
மங்கா நிதி யருள்வாயே

வண்சேர் திரு பொன்சீர் மலை
மன்பே ரெழில் பெருமானே.

தனத்தன தனத்தா தன தான

70. சகத்துயிர்களுக் கே விருப்ப முதளிப் போய்
சலத்திடை யுதித் தோய் வளிநேயா
தவத்தின ரிடத் தே முனித் திரளகத் தே
தளிர்த்தெழு பரற்சே வகநாதா
மகத்தெரி வளர்த் தே புகைச் செறி வனத் தோய்
மதிப்புயர் மலைக் கோ டுடையானே
வரத்துயர் பொழிற்கா வளைத்துள நகர்ப்பால்
வனச்சிகி யிடத் தே வருவோனே
இகத்தினி லெனக்கோ ரருட் பொருளளித்தா
ளெழிற்குக கரிக்கோர் மணவாளா
இருக்கசுர் மறைக்கோர் பருப்பொருள் விரித்தோய்
இசைப்பொருள் கொடுத்தே யருள்வோனே.
நகப்பிள வெடுத்தோ யயிற்கர மணித்தோய்
நளிர்ப்பொழி னகர்க்கோ னெனலோடு
நலத்தறன் மிகுத்தோர் மலர்ச்சுனை யகத்தே
நகைத் திருமலைக் கோர் பெருமாளே

தனத்தன தனத்த தனதான

71. சினத்தெனை வருத்த நினைத்தவர் சிரத்தை
சிதைத்திட வயிற்கை யுடையோனே
திருக்கசுர் குலத்தை யறுத்தவ சுரர்க்கு
செருத்தணி தலத்தி லருள்வோனே
மனத்தினி னினைத்து வுருக்கமு மிகுத்து
வரப்புகழ் படிக்கு மடியேனை
மதித்திரு வகத்து ணினைத்தமு தருத்தி
மலர்ப்பத மளிக்க வருவாயே
தனத்தன தனத்த வெனத்தின நடித்த
தனிப்பொரு ளினுக்கு மகனேநீள்
தளிர்ப் பொழிலுடுத்த நகர்க்கிறை முனிக்கு
தனிப்பொருள் விரித்த குருநாதா

வனத்திடை வசித்த குறக்கொடி மணத்த
மணிப்புய கரிக்கு மிளையோனே

மலர்ச சுனைபடைத்த திருப்பதி மலைக்குள்
வளத்தர செழிற்கொள் பெருமானே.

தனத்தன தனத்த தனதான

72. மனத்திடை யுதித்த துயர்க்குல மறுத்து
மலர்ப்பத முரித்தோ டருள்வாயே

மலைக்குரு முனிக்கு மறைப்பொருள் விரித்து
வரத்தினை யளித்த முருகோனே

வனத்திடை யுதித்த முகிற்குழல் வளிக்கு
மலர்ப்புய மளிக்கு மெழின்வேளே

வனத்திடை யுதித்து தனத்திடை குடித்து
வரைக்கு வடகத்தில் வளர்வோனே

அனத்தட முடுத்த பணைச்செறி வடுக்க
லணிப்பொழில் படைத்த பொழிலூரா

அறத்தினை வளர்த்த சிவக்கொடி யினுக்கு
வருட்சுத வரிக்கு மருகோனே

சினத்தசு ரறுத்து சுரர்த்துனி தொலைத்த
திறத்தயில் பிடித்த செகவீரா

திரட்சமண் முறுக்கி கழுப்புக வமைத்த
திருப்பதி மலைக்குள் பெருமானே.

தனத்தன தனத்த தன தான

73. எடுத்தது முடிக்கும் வரத்தினை யளித்து
இசைப்பத முரித்தொ டருள்வாயே

இருக்கசுர் தயித்தி ரியத்தரு மறைக்கு
ளிருப்பவ பொருப்பி லுடையோனே

மடுத்தட முடுத்து பொழிற்புடை வடுத்து
வயற்றிரள் படைத்த பொழிலூரா

மகத்துவ மிகுத்த தவத்தர்க ளிடத்து
மலைக்குவி டிடத்தும் வளர்வோனே

உடுக்கண நிகர்த்த கடுக்கனை கனத்தி
துவப்புட னமைத்த பெரியோனே
உரிக்கல சகத்தி லிடப்படு பதத்தை
யுருட்டுணு முகிற்கு மருகோனே
எடுத்தக மகிழ்ச்சி கொளத்தகு மருட்கு
வெளிற்சுத கரிக்கு மிளையோனே
இளித்தமு தெடுத்து வெனக்கினி தருத்து
மெழிற்றிரு மலைக்குள் பெருமாளே.

தந்த தன தன தன தான

74. மங்கை யருள் பரை தந்த குருபர
வந்து விது தகி யருடாராய்
மந்தி புகலரி தென்ற பொழிற்றலை
மஞ்சு பரவிய பொழிலூரா
செங்கை யயிலணி யெந்தை சிவ சுத
செந்தில் வர குண குகதேவா
செம்பொ னதிவரு கின்ற மலைவளர்
சிந்தைநிறை குரு முனிராஜன்
பங்கி லருள்பர நங்கை குறமகள்
பங்கி லுடையவ னெனவோது
பண்பை யுடையவ துங்க மருவிய
பண்பை யிலகிய முருகோனே
கொங்கை யிருகுவ டென்று சொலுமொழி
கொண்ட வனிதைய குறவாமா
கொஞ்சு கிளிமொழி யஞ்சொன் மறைமொழி
கொண்ட திருமலை பெருமாளே.

தந்த தன தன தனதான

75. பந்த வினை யற வெந்தை யொருமொழி
பம்ப வருள் பெய வரவேணும்
பண்பை யிலகிய கந்த யிதுவரை
பண்பை யுதவிலை யினியேனும்

சந்த மருவிய செந்தி லுடையவ
தங்கு பழனியு முடையோனே
சம்பு குரு வென வொன்று மறை மொழி
தங்கு முரை சொலு முருகோனே
கந்த மகி லொடு கொங்கு புளி நவல்
கந்தி பல வில விளைவோடு
கண்டல் கமழ கமழ மண்டி சுர ருல
கண்டி வளரிய பொழிலூரா
விந்த வரையினை யுண்டு விட தரை
வெம்பு குருமுனி குருநாதா
விந்தை பயிரவி தங்கி யிலகருண்
மிஞ்சு திருமலை பெருமாளே.

தனத்தன தனத்தா தனதான

**76.** இடைக்கிடை வருத்தா தெனக்கருள் கொடுத்தே
யினிப்புர பொழிற்கா வுடையோனே
இசைக்குக மனத்தே யிரக்கமு மிகுத்தோ
யிளைத்துனை யடுத்தே னருடாராய்
கொடைக்கர வலத்தோய் மலர்ச்சர ணலத்தோய்
கொமைத்தன வளிக்கா மணவாளா
குறிச்சிக ளிடத்தே யிருப்பவர் குடிக்கோ
குலக்குல வரைக்கோ முடிமீது
புடைத்தவ நிழற்பா லமைத்ததை யெடுத்தே
புவித்துய ரறுத்தோ னெனவோது
புயப்பல மிகுத்தோய் கடற்றிற னெழித்தோய்
புகட்சிகி யிடத்தூர் முருகோனே
படைத்திர ளெடுத்தே சகச்செரு விழைத்தோர்
படக்குல மறுத்தோ ராயில்வீரா
பலத்திற னெடுத்தோர் பொழிற்புடை யுடுத்தே
பதித்திரு மலைக்கோர் பெருமாளே.

தந்த தன தன தன தான

77. துன்ப மற வுயர ன்பை யுதவிய
துங்க குரு பர முருகோனே
தொந்தி வயிறுள வெந்தை யிளையவ
தொந்த முடையவ னெனவேநீ
யின்ப மருவிய புங்க வரகுண
வென்றன் மரபின ருயர்வாக
வென்று திருவரு ளொன்ற வருளிய
வின்சொ லருணல மறவேனோ
பொன்பொ னுடையவ வம்பை பயிரவி
பொங்க முடையவ ளபிராமி
புந்தி மகிழுறு மைந்த சிவகுரு
பொங்க ரிலகிய பொழிலூரா
நன்புகரு முகில் தங்கி தெனைதலை
நந்த மழை பொழி வளநாடா
நங்கை யெழுவர்கள் தங்கு திருமலை
நம்ப னருளிய பெருமாளே.

தனதன தனதன தான தான

78. கெதியிலை யெனவுன தடிமலர் பரவுதல்
கிருபைசெ யறுமுக வறியாயோ
கெசமுக னுறுதுணை குருபர வரநிதி
கிளர்மதி யருள்பொருள் தருவாயே
மதிபணி சடை முடி சிவனரு ளியசுத
வரதமெ யுணர்வினை யருள்வோனே
மரகத பயிரவி கவுரித னமுதினை
வளமொடு பருகிய குகநாதா
நிதியொடு பலபொரு ளிலையெனி னுடலுயிர்
நிலவுத லறிதென வுலகோது
நிலைமையு மறிகுவை யநுபவ மறிகுவை
நிலையிலர் பலசொல விடலாமோ.

பதிதொறு மலைதொறு நதிதொறு மிடையிடை
பரவிய நிலைதொறு முடையோனே
பணை பொழின் மருவிய திருமலை மிசையொளி
பரவிய சின கர பெருமாளே.

தந்தா தன தந்தா தன தன தான

79. வண்டேட படு கொந்தார் குழன் மஞ்சே நிக ரஞ்சேல்விழி
வண்டே னெடு கண்டேமொழி யுடையோராய்
வண்கா திடை யின்பாலொளி நண்பாயமை யுந்தோடணி
மங்கா ரவி யின்கூறென வொளிவீசும்
பண்டேமயல் கொண்டேவய னுண்டேபணு குன்றாவிரு
பந்தா மென செண்டாமென மிகவாகி
பண்பாயமை யும்பூரண கும்பாவென வம்பாருரை
பம்பார்தன மங்கா மதி முகமானார்
பண்டேருரை கொண்டேவிட முண்டோரென திண்டாடிய
பண்போடிட வந்தேவருள் புரிவாயே
பம்பாரசு ரும்பூதர முந்தூளென விண்போய்பல
பங்காயற வன்றேவிய வயில்வீரா
அண்டாவவல் கொண்டோரறு மந்தாநதி சந்தார்பொழில்
அம்பார்பணை யுஞ்சூழ்வள முளநாடா
அன்பார்முனி யுந்தாபத ருந்தேவர்க ளுஞ்சேகர
மஞ்சேர்திரு குன்றேறிய பெருமாளே.

தன தன தந்தந் தானன தன தான

80. குருபர வந்திங் காதரி அருளில் விளங்கும் பார்பதி
குழலாசு கந்தம் பூசிய மதனோடு
குவளை கடம்பின் மாரணி யழகு விளங்கும் பேரணி
குலமருமந் தங்கா ரண முறைவோனே
மருவரை தங்கும் பேர்முனி கதிபெற நன்கன் றோதிய
மதிபதி சந்தஞ் சீரிசை தருவோயே
வளைகள்மு ழங்குஞ் சீரலை யதிபட ரன்குன் றாடுறை
வரதகு கன்றண் டார்பொழி லுடையோனே

தருபறை யன்பின் பேரமு துணவுயர் சம்பந் தாவல
தரணிவ ணங்குங் காரண வடிவேலா

சதுர் மறை கொஞ்சுஞ் சீரிய பிரபல மிஞ்சும் பூரண
தகரிலி லங்கும் பாவல முருகோனே

திருவுறை தெங்கங் காயினை மருவிய திங்கங் காகிய
செழிவள மெங்கும் பாவிய பொழிலூரா

செகு மகிழ்கின்றம் போருக மலரிலி ருந்தன் பாகிய
திருவதி கின்றம் பூதர பெருமாளே.

தன தன தந்தந் தந்தன தன தான

81. மதுர மயங்குஞ் செஞ்சொலி யருளி விலங்குஞ் சுந்தரி
மகரிம டங்குங் கண்படை யுடையாளாய்

மதிமரபின் கண் டுன்றுபு புகழ்செழி யன்றன் பண்புடை
மகளென வந்திங் கண்டர்க டுதிமேவ

சதுர் மறை கொஞ்சும் பொன்புரை முளரிநி றந்தங் கம்பதி
சரணி லகந்தந் தம்பிகை யருள்பாலா

தளிர்பொழி லெங்குந் தெங்குக ணிவள மிஞ்சும் பைந்தரு
தலைமுகி றங்குஞ் செந்திலை யுடையோனே

முதுமறை யின்கண் டங்கிய குமாரசு கந்தஞ் சந்தணி
முருகவி ளங்குஞ் செஞ்சர ணருள்வாயே

முரணசுர் குன்றங் கொன்றுய ருலகருடுங் கந் தந்தவ
முனிவரர் கெஞ்சுஞ் செம்பத முடையோனே

பதுமமி லங்குந் தண்பணை யதனிலு றங்குஞ் சங்குகள்
பருமணி சிந்துந் திண்கரை யிடமேவி

பலவள மெங்குந் தங்கிய பொழில்வள மிஞ்சும் பண்பொழில்
பதிவளர் குன்றந் தங்கிய பெருமாளே

தனன தானன தந்தன தந்தன தனதான

82. அருமை யாகிய சங்கரி யம்பிகை
குமரி யாமளை சண்டிகை யந்தரி
யகில நாயகி நங்கைபு ரந்தரி யருளாயி

அமுத மாருரு வெங்குநி றைந்துள
புனிதை நாரணி யங்கய லின்கணி
யழகு மாலரி தங்கைச வுந்தரி சிவகாமி

முருகு மாலைவ னைந்தக ருங்குழன்
வரத கோமதி யண்டர்தொ ழும்பரை
முடிவி லாதநி ரந்தரி தந்தருண் முருகோனே

மழைக டோறுநி றைந்துக னிந்துள
மொழுகு தேனின னைந்தும ணந்தர
முனிவ ரோடு வதிந்தப ரன்கிரி யுடையோனே

பெருகு மாநில மெங்குநி றைந்துள
சரத நாதசி வன்றரு சுந்தர
பிருகி ஞேடெழி லம்பர முந்தொழு மருள்வேளோ

பிரிவி லாநிதி மங்கைப ணிந்தெழு
குமர நாயக விந்திர னின்சுதை
பிணையல் சூடவி ரிந்தத டம்புய முடையோனே

சருகி ஞேடுகி ழங்குக ளுங்கனி
யுணுமெய் மாதவ வந்தணர் சிந்தையை
தளியெ னுவமை கந்தந லந்தர வருவாயே

சமண ராமதி யந்தக ரங்கமை
கழுவி லேறிட வென்றவ பண்பொழில்
தழுவு மாமலை தங்கிவி ளங்கிய பெருமானே.

தனன தன தான தன்ன தன தான

83. கொடிய பிணி வாயி லென்னை மருவு வண மாக மன்னு
குறைத விர்தி யானை முன்ன முடையோனே

குரவு மலர் மாலை தன்னை யணிகு றவர் மாதை யுன்னி
கொடுவ தர்க டோறு நண்ணி யணைவோனே

கடிய ரவை வாயி னுண்ணி படிகி டென லாக பின்னு
ககன மயின் மீது துன்ன வருவோனே

கமக மென லாக நன்ன ரினிய மலர் சூடு சென்னி
கவின்ம குட சோதி மின்ன னுடையோனே

மடிய சுரை சூரை பண்ணு வடிவ யில வீர பண்ணை
மகனு ரிமை யானை கண்ணி லெழுசேயே

மாக தசொ ரூபி பெண்ணி லரிய பரை யாதி தன்னை
மருவ வக லாத வண்ண முறுதேவி
மடியி லெழு பாலை யுண்ணு மதிம துர வாய கன்ன
மதமு டைய யானை பின்ன ரிளையோனே
மகதி தரு தூய பண்ணை நிகரு மொழி யேழு கன்னி
வளரு மலை மீது மன்னர் பெருமாளே.

தந்த தன தான தன தன தான

84\. தொந்த ரவி லாத படி வந்த ருளுவாய் குமர
துங்க வரதீப நல முடையோனே
சுந்தர மயூர மலை சந்த மலை நாத மலை
தும்பி மலை யாவுமுள மலைநாதா
அந்தர முனோர்க ளிறை வந்தடி பராவு முத
லம்பிகை சுதா வடிய ரகவாழ்வே
அஞ்சு முக மோடுபரை யொன்று முக மே மருவ
வஞ்ச லெனவே மிளிரு மயில்வீரா
மந்திர மகா மறைக ளும்புகழு மோன நிலை
வந்தசிவ ஞான முத கனியாகி
வஞ்சக மிலாத வர்க ளெஞ்சுதய மே யருளு
வந்தினி மையா யுதவு முருகோனே
சந்தத மு மேவுனது பொன் சரணலாம லொரு
தஞ்ச மிலை யேயிதனை யறியாயா
சம்பு மகனே யெனது துன்ப மறவே யருள்செய்
தங்கு திரு காவிமலை பெருமாளே.

தந்த தந்தா தனன தன தான

85\. கண்டு செங்தே னினிமை தங்கு கின்றே ரமுது
கந்த ரும்பா கினல மொழிமேவு
கங்கை கொண்டாடிவரு துங்க மைந்தா பழனி
கந்த புங்கா குமர வரதீபா
மண்டு செந்தா துதிர கொண்ட லங்கே குலவு
வண்டு வண்டே டுகரு பொழிலூரா
வந்து விண்டோ கருணை தங்க விங்கே புரிவை
மந்தி ரஞ்சேர் கழுகு மலைவாழ்வே.

செண்டு பங்தோ குமிழி லங்கு குன்றோ மருவு
செம்பி ரண்டோ மகுட — மெனலோடு

தெங்கு பிஞ்சோ திதலை யிங்கு மங்கே பரவு
செந்த னஞ்சேர் குறமின் — மணவாளா

அண்ட ரண்டா வசுர ரன்று குன்றோ டொழிய
வந்த ரங்காவல் புரி — முருகோனே

அம் பிறங்கா றினொளி பண்பு ரங்கா ததிரு
வன்பு கொண்டா டசல — பெருமாளே.

தனத்தன தனத்தத் தனத்தன தனத்தத் தன தான

86. பவத்தெழு துடக்கைப் பிறப்பினை யொழிக்கப்
புகட்படு பதத்திற் பொருத்தருள் விளக்கிப்
பசித்தழ லவித்துப் பொருட்செறி வரத்தைத் — தருவாயே

பரப்புல கிடத்திற் பெருத்துள கிரிக்கட்
படைத்துள தளிக்குட் டனித்தவ சுகத்தைப்
பதித்தவ முனிக்குப் பரத்தியல் பருத்தப் — பகர்வோனே

தவத்தினர் களுக்குத் தனத்தினை யளித்துத்
திடத்தையு மிகுத்தற் புதத்தையு மிசைத்துத்
தமிட்கவி படித்தற் கினத்தையு முரித்திற் — புகல்வோனே

தருச்செறி யிடத்தைப் படைத்தரி மகட்குப்
பெருத்துள தனத்திற் கழுத்திய வுரத்திற்
றளிர்த்தெழு வடத்திற் சரப்பளி வயத்திற் — புனைவோனே

சிவச்சுத கரிப்பிற் புதித்தவ மலைக்குட்
டிணைப்புன வனத்திற் சுனைக்குளி யிடத்திற்
செறிக்கிளி மழைப்பற் றியக்குற மகட்கற் — புடையோனே

செறுக்கசுர் குலத்தைப் பொடித்தற கொறுக்கிச்
செகத்தினை நலத்திற் பதித்தவ வகத்திற்
றிரிச்சமண் முறுக்கிக் கழுப்புக விழுத்திக் — கொடிதான

சவத்திரண் மதத்தைத் தொலைத்தவ வனத்திற்
கிளைத்தவ வரத்திற் பெருத்தவ ரகத்திற்
சனித்தவ வறத்திற் கிருப்பிட மெனப்பற் — றியவேளே

சதத்திதன் மைக்கட் டுளித்திர ளுகுக்கப்
பணைக்கவ ரிடத்திற் புதுப்புன லிடத்திற்
றரித்தமை வரிப்பத் திருத்தகு மலைக்குட் — பெருமாளே.

தன தன தான தான   தன தான

87. துயரிடை மூழ்கி மூழ்கி மனமெலி வாகி யாகி
சொலமுடி யாத வாதை   யடைவேனை

சுகவுரு வான பாத மலரிணை யாள லான
சுய நல மேவு நீதி   தருவாயே

வயலிடை வாளை பாளை படுபழ மோடி வீழ
வலமுற வாவியேறு   மெழிஞுடா

வரநிதி யே குபேர புரநிதி யே தயாள
மணநிதி யே குகாதி   பதியேநீள்

கயல்விழி மாது வேடர் மகள்மண வாள தூய
கனிமொழி தேவி காளி   மகமாயி

கமழ்குழ லாயிநீலி தமிழுபி மாணிகுவி
கனிமொழி ஹரிஞரி   யருள்பாலா

செயல்பல வானதேவர் மகமுனி யோகர்நீடு
தெளிமன தாளர் தேடு   முருகோனே

திருமலை மீதுலாவி வருகுரு நாத சேவை
தினமருள் போத மோது   பெருமானே.

தனதத் தனதன தனதன தந்தத்   தன தான

88 கடலைக் கடுவடு மிளிர் வன கெண்டைக்
கவனத் திலகிய வுழையிணை வண்டைக்
கவலைக் கிடமுற வொளிமணி தங்குக்   கணிஞர்பால்

கலவிக் கமைவுற வவரவர் பண்பிற்
கிசைபற் பலபொரு ளுரிமைக டந்தக்
கனமத் தியிலவர் மருவ மகிழ்ந்துற்   றிடலாமா

புடவிக் கலை ரவி நிகர விரிந்தப்
பணிகொத் தியமயி லுடையவ வண்டைப்
புகணாற் பதியுறை சரவண புங்கற்   புதவேளே

பொறுமைக் குருபர வரநிதி செந்திற்
பதிபற் றுடையவ முருகவி லஞ்சிப்
புநிதப் பதிவதி பரையரு ளொங்கைக்   கொருசேயே.

திடமுற் றவுணர்க ளுடறலை துண்டித்
துயிரற் றிடவயில் விடுபர சிந்தித்
திடுமற் புடையவ ருயரவிளங்கற் கருள்வோனே

திகணற் கவிதொடை புகல்பவ ரன்பிற்
பதிசற் குருமலர் மனமிசை தங்கிச்
செகமெச் சியபுகழ் சொலவருள் குன்றைக்
குடிவாழ்வே

படியிற் குணமொடு தெரிசனை தந்தெற்
கலகிற் கலையிய லருளிவி ளங்கப்
பகரத் திடமுற நலமுற வின்றைக் கருள்வாயே

பணிலத் தெழின்மணி யவிரிசை பண்பைப்
பதியிற் பலபவி சுடையவ துங்கப்
பருவத் தெழிலடை திருமலை கந்தப் பெருமானே.

தந்தந் தானன தானன தானன
தந்தந் தானன தானன தானன
தந்தந் தானன தானன தானன தன தான

89. கந்தந் தாவிய மாமலர் மேடையில்
வண்டங் காடிய தாகசு மாகறை
கம்பங் கோடியு மேபணி மீதமை வளாுடா

கஞ்சம் பூமல ராசனி மாகலை
தங்கும் பாரதி யாகிய பூரணி
கண்டன் பார்மொழி யால்வர மேதர வருள்வாயே

தந்தந் தானன தானன தானன
வென்றன் ருடிய நாயக னார்பணி
சங்கஞ் சூடுபு ராதன மேலவர் தருபாலா

தண்டுங் காமயி லேறிய மாவல
வென்றுன் பாலரு ளார்புக ழேசொல
சந்தஞ் சேர்புய னேதமி ழேதர வாவேணும்

சிந்தும் பாயொளி மேவிய வாயிழை
தங்கும் பூதர மேநிக ரீகிய
செம்பொன் சேகர மேதிரண் மாதன மிகமேலார்

செம்பஞ் சார்பத மாநடை யாலனை
மஞ்சுஞ் சாதக மாகியு மேநறு
திண்டண் டேன்மொழி வாய்மல ரேதரு மடமாதர்

அந்தங் காணவு மேமயன் மீறிய
தொந்தம் போகவு மேயரு ளேபுரி
யன்பின் பாவல ரோடுரை யாடிய வருளாளா

அஞ்சம் பார்மத னேரில னேரெழில்
கொஞ்சுங் காரண தேவவ ரோதய
வம்பைம் பூதர மாதிரு மாமலை பெருமாளே.

தந்த தனதன தந்த தனதன
தந்த தனதன தந்த தனதன
தந்த தனதன தந்த தனதன தன தான

**90.** மஞ்சு பொழிலற லஞ்சு குழலெழின்
வண்டு கடுவடு சிந்து மரை முகை
மங்க மிளிர்விழி கண்டு நிகர் மொழி யுடையோராய்

மண்டி யவி ருருள் குண்டு செறிமலர்
செண்டி னொடு கடைவுண்ட திணிசிமிண்
மைந்து மருவுகு ரும்பை வனமெழு குமிழாகி

மஞ்சு குடியுறு சந்த மருவிய
கொங்கை யிருபரி குன்றை நிகரென
வம்பு மருவிய துங்க வனநடை மடமாதர்

வஞ்ச மிகமலி செஞ்சொ லினையழ
தென்று மயலுறு பந்த வினையற
வந்து தெரிசனை தந்து பதமலர் தரவேணும்

கொஞ்சு கிளிமொழி பஞ்சி னிணையடி
கஞ்ச மலர்புரை வஞ்சி யிடைநிறை
கொங்கு பரிமள மிஞ்சு குலவளி மணவாளா

கொந்து திரணிரை சந்தி னிலவிய
கொம்பர் மிசைவொலி பொங்க வெழிலுயர்
கொண்டன் மருவுபொ தும்பர் மலியுள வளநாடா

அஞ்சு முகவர னும்பர் பொதிகையில்
கும்ப முனியொடு மன்பர் பரவிய
வம்பு பொலிமடு குண்டு தடமுள பொழிலூரா

அஞ்ச லெனமொழி தந்த குருபர
பண்மை யதிபதி யெங்க ளறுமுக
அங்கு வளைசுனை தங்கு திருமலை பெருமாளே.

---

90. மஞ்சு = அழகு.

தத்தத் தன தத்தத் தனதன
தத்தத் தன தத்தத் தனதன
தத்தத் தன தத்தத் தனதன தன தான

91. முக்கட் சிவ னுக்குப் பிரணவ
முற்றிற் றென வர்த்தத் துறையினை
முத்தொத் தினை யொப்பப் பொருள்சொலு முருகோனே

முத்திக் கொரு வித்துக் கனியவ
லப்பத் தொடு பிட்டுக் களிவடை
மொக்குக் கரி பிற்புற் றவவெழி லுடையோனே

மிக்கக் கொடு மைப்பற் றுடையவர்
கச்சுத் தன நச்சுக் கவிரினொடு
மிச்சக் கெவுர் வத்தைத் தழுவிய மடமாதர்

வெட்கத் திடை பட்டுப் பெருநர
கிற்புக்கி பிறப்புக் கடலினை
விட்டற் பொடு பொற்புப் பதமுற அருள்வோனே

சிக்கற் கடல் வற்றற் கினிதமை
வுற்றெற் கருள் சித்திக் கொருபர
சிட்டர்க் கினிதுற்றற் புதமுள பெரியோனே

தித்தித்தமி ழிற்புத் தமுதென
செப்பக் கவி யொப்பித் தயைபுரி
செப்புக் கடை யுட்கத் தனவளி மணவாளா

பக்கற் பணி லத்திற் கெழுமிய
முத்துக் கதி ரொத்துப் பலதிசை
பப்புப் பணை பத்திற் குலவிய வள நாடா

பத்திக் கருண் முத்துக் குருபர
வத்திக் கிறை சத்தித் திடகர
பட்புற் றமை பொற்புத் திருமலை பெருமாளே.

தத்த தந்த தன
தத்த தந்த தன
தத்த தந்த தன தன தான

92. அத்தி கொந்தழிய சத்தி யுந்துகர
வத்தி தந்த கரி மணவாளா

அப்பி லங்கவுரு முத்தி லஞ்சி நகர்
அத்த தெங்கு மலி வளநாடா

கத்து கின்ற கட லெத்து கின்ற திரை
கப்ப வின்ற துறை பலவாக

கக்கு கின்ற வொளி திக்கு லெங்கு முற
கத்து கின்ற வளை மிகவீசு

பத்தி தங்கு வள மிக்க சந்த வரை
பட்பு யர்ந்த சிவ குருநாதா

பத்த ரந்த ணர்கள் சித்த ரம்ப ரர்கள்
பக்கல் வந்து வகை யருள்வோனே

சித்தி தந்தெ னது கட்ட மின்றொ ழிய
செப்பு கின்ற பொரு டருவாயே

செட்டி கந்த குக முட்டை யென்று பெயர்
செப்பு பண்பை வரை பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தனதான

93. மனத்து யராறுத்தெழுபிறப்பினை யொழித்தருண்
வளத்தினை நலத்தினி லருள்வாயே

வனக்குற வருக்கணி மகட்கென வுதித்தவ
மயிற்பரி புறத்தெழு மயில்வீரா

கனத்தளி யருட்பதி யினிற்செறி தவத்தர்கள்
களிப்பொடு துதித்திடு முருகோனே

கவிற்கொளு தகர்ப்புற மிசைத்தம ளியிற்கெழு
கதிர்க்குக குகைப்பொதி மலைநாதா

அகைக்கண மடுக்களி லிலக்கண வமைப்புற
வறற்கய லகக்கமு கினின்மேவி

அரக்கமை நிறக்கனி யுதிர்த்தற வினிற்படு
மணிற்செல மயக்கிய பொழிலூடே

தினத்தின கரர்க்கதிர் புகப்புக மழுக்கிய
திறற்பொழி னகர்க்குக வரதீபா

திருப்பதி முழுகிற்கிணை தரத்தகு நகத்தலை
தெருட்சினகரத்துறை பெருமாளே.

தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந் தன தான

94. படைத்தனை வருக்கும் பதத்துணை வளித்தும்
பதத்திடை யிருத்துஞ் செயலாளா
பனிப்பகை ரவிக்கும் பெருத்தொளி பரப்பும்
பருத்தயி லெடுக்கும் புயவீரா
புடைப்புன லெடுக்குந் தடக்குள மிகுக்கும்
புறப்புற பணைத்தண் டலையூடே
பொருப்பென விளக்கந் தரப்பெறு மகத்தின்
புகைத்திர ள்புதிக்கும் பலபாலே
கடைக்கண மொலிக்கும் மணத்திசை நெருக்கங்
கலித்தெழு பெருக்கம் பெரிதாக
களித்தற னிழைக்கும் பதத்தினர் களுக்குங்
கவிப்பொருள் விரிக்கும் புலவோர்கள்
தொடைக்கவி படைக்கும் பொறுப்பினர்களுக்குந்
துனித்துய ரொழிக்கும் பொழிலூரா
சுகப்பத மளித்திங் கெனைப்புர தொனிக்குஞ்
சுயத்திரு மலைப்பொன் பெருமாளே.

தன தனன தான தன
தன தனன தான தன
தன தனன தான தன தன தான

95. எனதிதய மேகருணை பொழியுமுகி லேயடிய
ரிருநிதிய மேபழனி யுறைவோனே
இலகுவிழியே விழியி னொளியினொளியே யதனு
ளிறைகொண்மணியே மணியி னெழிலான
வனசபத னேமதனு முருகுமத னுவாத
மகிபகுமரா கழுகு மலைவாழ்வே
மகதிநிகரா மதுர மொழுகுகனி வாயமுத
மழையுநிகரா மொழிகொ ளபிராமி
கனதனம தேவுதவு கிருபையமு தேபருகு
கனிவுதர மேவுடைய பெரியோனே

கடககரனே வயிர வயிலுடையவா நடன
கனதிரும யூரமிசை வருவோனே

நினத முருகா குமர சரவணபவா குறவர்
சிறுமி கொழு நாகரியின் மணவாளா

செய குவலை யார் மருமபர குழக னேயருள்செய்
திரு மலைத யாள குண பெருமாளே

தனன தனன தனன
தனன தனன தனன
தனன தனன தனன தன தான

96. அமுத தருவே கருணை பொழியு மழையே பழகு
மழக குழகா கமுகு மலைவாழ்வே

அரு மறையுளே யுலவு புநித சிவமே மதுரை
யரையர் நிபுணகுற மின் மணவாளா

சமுக முதலே யகர வுகர வுருவே மகர
சரவ ணபவா குமர முருகோனே

சமய வரதா வடியர் பரவு பதமே முடியில்
தருக வருவோய் பழனி யுடையோனே

கமுகு தெனை மா பலவு பொதுளு வள நாடுடைய
கனக கதிர் காம வரை வளர்வோனே

கமழு மிதயா வரத பிரிய முடையா யெளியர்
கனவின் வருவோய் நடன சிகிநாதா

எமுனை யருகே வுடைய துவரை யுடையான் மருக
எமது துரையே யினிய வருடாராய்

இமய மலைமா தருளு மொரு முதல்வனே சுவண
மிலகு திருமா மலையுள் பெருமாளே

தனத்த தனன தனன
தனத்த தனன தனன
தனத்த தனன தனன தன தான

97. இரக்கமிலையா கருணை நிறைத்த பரனே குமர
வெனக்கு னருளே யுதவ வருவாயே

இனித்த மொழி மாதுகுற வருக்கு மகளான வளி
யிணைக்க வனமேவியவ னெனவோது

தரப்பெரிய வா வருணை கிரிக்கமுதமே முதல்வ
தனிப்புகழி ஞானமணி மணிமார்பா

சகத்தி னிடையே பிறவி யெடுத்த மரபோசதுர
சகத்திர மகா யுகம தெனநீளும்

வரத்தி னிடையே யெளிய னுதித்த ழிதலே வொழிய
மதித்துனது தாளிணையை யருளாயோ

மயில்ச் சரவணை பழனி வரைக்கு ளுயர் வோய்கழுகு
மலைக்கடவுளே முனிவ ருளமேவு

திரத்த முருகா வடிய ரிடத்தி னுறைவோ யருமை
செனித்த பரமே வரத முடையோனே

செழித்த பொழி லூடுறையு ணிறைத்த பொழி லூருடைய
திருத்தகு மகா மலையில் பெருமாளே.

தன தன தான தான
தன தன தான தான
தன தன தான தான தன தான

98. துயரிடை மூழ்க வோடி வருபவ மோடவோட
சுக நல மேவ மேவ வருடாராய்

சுருதிக ளனுவேத முறவறி யாத பாத
சுரர்மலி வான நாக முறுவாழ்வே

கயன்விழி மாதி னோடு பலவுரை யாடவோடி
கனிகுண மேவ நாடி விளையாடி

கனதன மார்பி னூடு தழுவிய யோகநாத
கரிகொழுநாமயூர முடையோனே

வயமக ளாயிதேவி பயிரவி நீலி காளி
மலைமக ளாயி நாரி மடிமீது

மதிரவி கோடி கோடி யிலகிய தானசோதி
மணிவரையே தயாள முளசேயே

செய்குக னேகுமார வாரிதி யாதி மூல
சிவசுத னேய மான முருகோனே

திகடிரு மாது லாவு வளமுயர் வான சோலை
திருமலை மீதிலேறு பெருமாளே.

தத்தன தனதன
தத்தன தனதன
தத்தன தனதன தனதான

99. புத்தக மருளிய வித்தக வதனுரை
புத்தமு தெனமொழி தரவேணும்

பொற்பமை குருபர வற்புத செகபர
பொற்பழ னியிலுறை வரதீபா

அத்தனொ டருள்பரை புத்திர குறமக
ளக்கயன் விழிவளி மணவாளா

அப்பனெ னுளமுறை சுப்பிர மணியநி
னற்புய ரருடர வரவேணும்

பத்தி செயடியவ ருக்கினி துதவவர்
பக்கலி லிலகிய குருநாதா

பற்பல தருநிரை யுற்பவ முயரிய
பட்பொழி லகருறை முருகோனே

சித்தர்க ளனுதின முற்றவர் துதிபணி
செப்பிய வணமருள் புரிவோனே

செற்றவழில கெழி லுற்றிடு திருமலை
செக்கரை நிகர்குக பெருமாளே.

தந்தா தன
தந்தா தன
தந்தா தன தன தான

100. கண்டே மொழி கொண்டோ ரெழில்
கண்டே மயன் மனமாழ்கி

கந்தா வென வந்தே வரை
கண்டே துதி புரியாமல்

திண் டாடிய நெஞ் சாளனை
திண்பூ விடை பலகாலும்

செஞ் சோறினை யுண்டே திரி
சிந்தா குல முடையேனை

கண்பா ரமு துண்பா யென
கண்டே யருள் முருகோனே

கங்கா நதி சங்கோ லிடு
கஞ்சேர் சடை முடியாளர்
கொண்டோர் சுத பண்டேய்மொழி
குன்றூர் வளி மணவாளா
கொங்கார் பொழின் மஞ்சார் திரு
குன்றே றிய பெருமாளே.

தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த தந்த தான

101. அஞ்ச ஞ்ச லென்றெழுந்து தொன்ப வங்க ளோந்துயர்ந்த
வன்புதந்தி தம்புரிந்து யெந்தநாளும்
அம்பி றங்கு கின்ற கங்கை தந்த மைந்த செந்தி றங்கி
யண்டர் வந்த னங்க டுன்று கந்தநாதா
மஞ்சிணங்கு கின்ற பொங்கர் தெங்கு கொங்கு சந்து கந்தி
மஞ்ச ளிஞ்சி யுஞ்செறிந்த பண்டைநாடா
மங்க லம்பொ ருந்து கின்ற பொன்ப யன்பி றங்கு வந்து
வஞ்ச ரஞ்ச மிஞ்சு மின்பு தந்திடாயோ
தஞ்ச மென்ற வுன்ப தங்க டந்து சிந்தை யுங்க சிந்து
சந்த தம்பு கழ்ந்த வன்பு நன்றிதாராய்
தண்டை யுஞ்சி லம்ப ணிந்து கொண்டு மன்றி னின்றி லங்கு
தண்க வின்ற தும்பு கின்ற குன்றமாது
கொஞ்சு மஞ்ச னஞ்செ றிந்த கண்க ளந்த னம்ப ரந்த
குன்றி ரண்டு கண்டு நைந்த சிந்தையாகி
கொண்டணைந்த கந்த கொண்டல் மண்டுபொங்க ருஞ்சிறந்து
குங்கு மஞ்செ றிந்த பண்டை தம்பிரானே.

தந்த தனனா தனன
தந்த தனனா தனன
தந்த தனனா தனன தன தான

102 அன்ப மறவே கிருபை யன்பு மிகவே யருள
சுந்த ரம பூரமிசை வருவாயே

துங்க நலமே கருணை பொங்கு கடலே குவளை
தொங்கு முரனே பழனி யுறுவாழ்வே

இன்ப முகிலே யெழிலி லங்கு பரமே குமர
வெந்தை சிவமே யிதய மலர்வாழ்வே

எங்கு ளரசே கவுரி கொஞ்சு மமுதே வுயரு
மிந்து கதிரே நயன முடையோனே

தென்ப வமிலா மலய கும்ப முனிதே ரவெழு
கொண்ட லெழிலே கமுகு மலைவாழ்வே

தொந்த மடியா ருடைய பந்த பவமோ டுபிணி
துண்டு படவே கிருபை புரிவோனே

என்பு பணி யோடுவனை கொன்றை பணி நாற தளி
யிந்து சடைநா தனரு ளியபாலா

எங்கு முடையாய் புவனை கங்கை சுதனே குவளை
யிஞ்சிவளர் மா மலையில் பெருமாளே.

தன தன தனன
தன தன தனன
தன தன தனன தன தான

103. பிணி யற வொழிய வுயர் நல முதவ
பிர பல முருக வரவேணும்

பெரு கிய கிருபை யில கிய வரத
பிழை யறு மடிய ருளமேவி

கணி பொரு ளருளு முமை தரு குமர
கதி ரயி லுருவி யசுரேசர்

கண முறை வரை யை பிழ வெழ வொழிய
கறுவு கொண் வயிர முடையோனே

மணி மதி தவழ வுயர் திரு வடிவ
மலைசையி லிலகு மெழில்வேளே

வரை யிடை குடிகொ ளியல்புள குறவர்
மகள்கரி மகட மணவாளா

பணி யுட றடவி நல மரு ளியவ
பர சுக சூரியி ளிளையோனே

பல வள மிகுதி பொதுளிய சுவர்ன
பதி திருமலையுள் பெருமாளே.

தன தன தனன
தன தன தனன
தன தன தனன தன தான

104. உதவிய சுவடி யிதுவென வுரையை
யுரிமையொ டருள வரவேணும்
உயர்கிரி யுதய பயிரவி புதல்வ
வொழு கொளி முகிலின் மருகோனே
நிதமுன தரிய பதமலர் பரவு
நினைவினை யருளு முருகோனே
நெடிய திவுலகி லுன தெழி லடிமை
நிலைபெற வுதவ லெதுநாளோ
சதமுன தரிய பதமல ரலது
தயைபுரி பவர்க ளெவராகும்
சகமிசை சனன மருவிய முறையில்
தமியனை விடுதன் முறையாமோ
மதமலை யுருவ கணபதி துணைவ
மகிழ்வளி கணவ னெனவோது
வாநிதி கழுகு மலைநிதி கமலை
மலைதலை யிலகு பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

105. இலக்கண விலக்கிய தமிட்கவி படைத்தவ
ரிடத்தினி லிருப்பவ னெனவோதும்
எழிற்குக நலப்பொரு ளுரித்துட னெனக்களி
யிசைத்தமி ழிலக்கண முறையோதி
சலத்திடை பதித்தெழு குணத்தினை யறுத்தொழி
சகத்தெழு பிறப்பினை யறவேநீள்

தலத்தெழில் பதத்திடை யிருப்புயர் வெனக்கருள்
தனக்கரி வனக்கிளி மணவாளா

நலத்துதி தினத்தின முரைப்பவ ரினுக்குயர்
நனிப்பொருள் படைத்தருள் புரிவோனே

நகத்துறை பரப்பொரு ளினுக்கெழி லருட்சுத
நதிப்பொழி னகர்க்கொரு பெருவாழ்வே

வலத்திட வரக்கரை யழித்தவ வயிற்கர
வரச்சிகி புறத்திடை யெழுசேயே

மலைக்குரு முனிக்குயர் வளித்தவ திருப்பொலி
வரைத்தளி யிருப்புள பெருமாளே.

தனன தனத்த
தனன தனத்த
தனன தனத்த தன தான

**106.** குருவா யுதித்த பெருவாழ்வு பெற்ற
குமராகரிக்கு மிளையோனே

குகனே குறத்தி மணவாள வெற்கு
குணமே கொடுத்த பெரியோனே

தருமா தவத்த ரிடமே கிளைத்த
தருவே வரைக்கு ளுயர்வோனே

சனகாதி யர்க்கு வுபதேசி கர்க்கு
தனவே முரைத்த பரநாதா

திருமா மறைக்கு ளுறைவோய் பழுத்த
சிவமே யெனக்கு னருட்டாராய்

செகமீ துயர்த்த மலைமா மகட்கு
சிறுவா முகிற்கு மருகோனே

மருவார் பொழிற்கு ணகரே யமைத்து
வளமே நிலைத்த பொழிலூரா

வசியார் சுனைத்த ணறலார்குடத்த
மலைமே லுதித்த பெருமாளே.

தன தன தனனு
தன தன தனனு
தன தன தனனு தன தான

107. வறுமையபி னலியா திதமுற வருவாய்
வளிமகிழ் கொழுநா மயில்வீரா

மக பதி மருகா குரு பர குமரா
வர குண முடையாய் வீடிவேலா

நறு மல ரணிவோ யெனதிட முடையோய்
நதி மதி சடையோ னருள்பாலா

நசி மசி யெனவே மறை சொலுபவர் பா
னல மருளிய வா குருநாதா

செறு விடை யசுரா தியர் பொடி படவே
தி கடிட முடையா யெழில் வேளே

செக தல மகி பா மலைமகள் மகனே
திருவுறை புயனே மணிமார்பா

அறுமுக வரதா பிணிமுக முடையா
யழ கெழி றிலகா திபநாதா

அணி சுனை திருமா மலைவளர் பரனே
யலகில் கலைதேர் பெருமாளே.

தனன தனதன
தனன தனதன
தனன தனதன தன தான

108. கொடியு பிணி யற வருக விதுததி
குமர குரு பர குகநாதா

குழக மதியணி பகவ னருள் சுத
குமரி பகவதி யருள்பாலா

நெடிய குவடிடை வளரு மறு முக
நினது தெரிசனை தருவாயே

நிலையி னுலகிடை வரத நெறி தரு
நிலமை புனையல நிலையேசீர்

பிடியி னெடுவளி மருவ மருவிய
பெருமை யிலகிய மணவாளா
பிணைய லணிவுர கடக கர மிசை
பெரிய நுதி யயி லுடையோனே
அடிய ரக மதி னடன மிடு மொரு
வழக மயின் மிசை வருவோனே
அணரி கொடி ருமலை சிகர சின கர
மதனின் மிளிறிய பெருமாளே

தந்தத் தானன
தந்தத் தானன
தந்தத் தானன தனதான

109 சந்தப் பா புனை கந்தப் பா வுமை
தந்தப் பா துதி புரியாமல்
தம்பித் தேவரு பந்தத் தேவினை
சங்கத் தே பயி லியல்பேறி
நொந்த பபா வென வந்துற் றே னினி
நுந்தைப் போலருள் புரிவாயே
நொண்டித் தாழையி லண்டிப் பூவிடை
நொண்டற் கால் குரு கினமேறி
சிந்தத் தாதவிர் கண்டற் போதென
சென்றப் பாலமை கிறசோலை
தெங்குக் கா யொடு கந்திக் காய் மிக
தென்றற் சேர் புள வளநாடா
தந்தத் தானன தந்தத் தாவென
சந்தத் தாடிய நடராஜர்
தந்தப் பே ரொளி பண்பைக் கோடுறை
தண் பொற்பூ சுனை பெருமாளே

தனதத் தனதன தனதன தந்தந்
தனதத் தனதன தனதன தந்தந்
தனதத் தனதன தனதன தந்தந் தனதானா

110. தருநற் சரவண பவகுக னென்றும்
பெருமைத் தமிழ்செறி யருவரை துன்றுந்
தவமிக் குளகுரு முனிவர னந்தம் பெறவோது

தருணத் திலகியன் மயிலினி லென்றுந்
திகழ்பொற் குவடிணை புயமிசை சந்தந்
தளிர்பொற் பணியணி குகபர வின்றிங் கருள்வாயே.

சகமுற் றலரொடு குவளை யனந்தஞ்
செறிநற் சுனை வனமிடை யருளன்புந்
தளி ருற்றடியவர் பழவினை துஞ்சும் படிமூழ்கி

தனி நற்சிவ குருபரமுத லென்றுங்
கனி வுற்றவரவர் தொழவரு டந்துஞ்
தழைவுற் றிடவவர் மனமிசை துன்றும் பெருவாழ்வே

பகுவித் திடுவடு வெனகணு மஞ்சும்
பனிதத் திலகுசை வலமென பம்பும்
பரறற் பொருவிய குழனிறை மிஞ்சும் புனன்மேயும்

பதுமத் தனநடை யெனபலர் கொஞ்சுங்
கிளியொத் தினமொழி பலவிழை தங்கும்
பருவத் தெழிலமை பிறர்மனை கொண்டங்
கணைவோர்கள்

தொகுசிற் றறிவினர் கசடர்கண் வஞ்சஞ்
செறிபுற் குணமுளர் புரணிக ளஞ்சுஞ்
சொலின்மிக் குடையவ ருரவற வென்றும் படிமீது

சுகமிக் குடையவ வுனதுதி தந்திங்
கருமைச் சுதனென வருளரு ளென்றுஞ்
சுவணக் கிரியென திருவரை தங்கும் பெருமாளே.

தத்தத் தனதன
தத்தத் தனதன
தத்தத் தனதன தனதானு

111. தத்தத் தமினென நிர்த்தப் பதமொடு
சத்தத் தொனியுட னுடனுடு

தத்வத் தனிமுதல் நெற்றிக் கணில்வரு
சத்திச் சரவண பவனேநீள்

கத்துக் களிறிட முற்றப் பகையைவெல்
கைச்சக் கரமுகில் மருகோனே

கக்குக் கபமொடு பைத்தத் திடைவரு
கக்குப் சடைமிக வெழிலாரு

110. பரறற் - பருவறல்.

முத்தைப் பகர்பவ னுக்குக் குருவென
முக்யத் தணிகையி லருள்வோனே
முத்தைப் பவளமொ டொத்துப் பிணியென
முற்றத் தெழிலுறு நகையாளா
தித்தித்திடு மமுத தத்திற் கிணைமொழி
செப்புக் குருபரை யருள்பாலா
திக்குச் செகமுமொ டொக்கப் புகழ்பெறு
செப்பத் திருமலை பெருமாளே.

தனத்தனன தனத்தனன
தனத்தனன தனத்தனன
தனத்தனன தனத்தனன தனதான

112. திகட்பவள நிறச்சடையி லளப்பரிய மதிப்பிறையை
சிறக்கவணி பரப்பிரம முதலாகி
திருக்குழவி யுடற்றசைகொ டமைத்தகறி யுணக்குழவி
திருப்பிவர வழைத்தருள்செய் சிவநாதன்
அகற்றுளப பிணைப்பிணையல் தினத்தணிசெய் தகக்கருணை
யரிக்கடவு ளெனப்புகலு மிபவேதை
யகற்றியருள் கொடுத்தமுகி லனத்தின்வரு சதுர்த்தவய
னகப்பிரிய மிகுத்தவெழின் முருகோனே
சகத்தின்மறை பதத்தவுன திடத்துரிமை பெறப்பணிசெய்
தமிக்குனது பதத்துரிமை தருவாயே
தனத்ததன தனத்ததன வெனப்புகல நடிக்குமயில்
தளிர்த்தபுற மிசைத்திலகு குகநாதா
செகத்தவுணர் திகைக்கவடி வெடுத்தயிலை விடுத்தவர்கள்
சிறுத்ததுக ளெனப் பொடிகள் பணும்வீரா
திரட்பணில முயிர்க்குவள முளப்பழன மிகுத்தபுடை
திருத்தகுபொன் மலைக்குள்வளர் பெருமாளே.

தந்தந் தனதன
தந்தந் தனதன
தந்தந் தனதன தன தான

113. கொஞ்சுங் கிளிமொழி மஞ்சின் கறிகுழல்
குஞ்சம் பணியணி சடைமீதே

கொங்குங் கமழ்புழு கங்கங் கமழ்தர
குன்றுங் கனகிரி தனமானார்

தஞ்சந் தயைபுரி வந்தின் பருவென
தங்கும் பணிசெயு மயலாமோ

சங்கங் கரைமிசை தங்கும் பெருவொலிங்
தண்டங் கியபணை மொழிஞூரா

கஞ்சம் பதமலர் நெஞ்சந் தடமிசை
கண்டின் புறவருள் புரிவாயே

கந்தன் சிவனருண் மைந்தன் பயிரவி
கண்டும் பொருவரு மொழியாயி

மஞ்சன் புனிதவர் கெஞ்சுஞ் சரவணம்
வந்தன் பொடுவளர் குருநாதா

மஞ்சந் தவழ்செறி சந்தம் பொதுளிய
வண்டண் டிருமலை பெருமாளே.

தன தன தனன
தன தன தனன
தன தன தனன தன தான

114. தவநெறி கெழுமி வருகிற முனிவர்
தமதக முடைய பெருவாழ்வே

தமிண் மொழிபனுகு பவரிட மிலகு
தருவென வருளு முருகோனே

அவமலியுலவு நலமிலி புலிய
வசடர்க ளுறவ திலையான

அருமையு முதவி பெருமையு முதவி
யனுதின முனது பதசேவை

நவநிதி பெருக ததியிது வருள
நளிர்மயிலிலக வரவேணும்

நதிமதியரவ மணிசடை யுடைய
நரை நரையிடப முடையோனே

சிவமிது வறிதி யெனமுது மறையை
செவியிடை சொலிய குருநாதா

திருவுறை புனித மருவிய சிகர
திருமலை வளரு பெருமாளே

தத்தத் தனதன தனதன
தத்தத் தனதன தனதன
தத்தத் தனதன தனதன தன தான

115. சத்திச் சரவணபவகுக நித்தப் பரிபுர பயிரவி
தத்தைக் கிளிமொழி பரைதரு முருகோனே

தத்தித் தவழிய வுளவற லெற்றிப் புடைபணை யிடைவரை
தத்திச் செனுநலமிலகிய வளநாடா

முத்திக் கொருமுத லுயரிய வித்தைக் குருபர வருணிதி
முக்கட் பரசிவ மருளிய வெழில்வேளே

முத்துத் திருநகை யுடையவ ளத்தித்தன மருவியபுய
மொக்குக் கனியவல் பொரிவடை கணநாதன்

பத்தித் துணைவல வடியவர் நத்தித் துதிபண வருபர
பச்சைக் கருமுகி லெனுமரி மருகோனே

பட்பற்றின மொழி வனிதைய ரற்பச் சுகநல மயலெழு
பட்பற் றிடததி மறைசொல வரவேணும்

திக்கித் திமிதிமி திமிதிமி திக்கித் திமிதிமி திமிதிமி
திக்கித் திமிதிமி திமியென வருதேவன்

சித்திக்கொரு குருபிரணவ பற்றுக்குடையவ பொழினகர்
சித்ரத்திருமலை சினகர பெருமாளே.

தன தன தனதன
தன தன தனதன
தன தன தனதன தன தான

116. சள சள வென மழை பொழுகிய வகமிடை
தமியனை யிடுவது மழகாமா

சதுர் மறை பரவிய வறுமுக குருபர
தயைதர விதுதகி மயிலேறி

பளபள பள வென வொளிவளர் தெரிசனை
பரவு மெனக மிசை தரவேணும்

பதி தொறு நிதி தொறு நதி தொறு நிறை பர
பரவிய சிவனருள் [illegible]ருகோனே

மள மள வென முது வழுதினை யருளிய
மகிழ்குண கருணைபொ ளுடையோனே

மதிநுத லழகெழு வளிமரு வியபுய
வரை தொறுமிலகிய குகநாதா

வள வள மிகு பொழி னகருள புர வல
மத கரி துணை பரை தவேளே

வயனிரை யொடு பொழின் மருவிய திருவளர்
மலைமிசை சரவண பெருமானே.

தந்த தனனு தனன
தந்த தனனு தனன
தந்த தனனு தனன தன தான

117. கந்த குகனே மயிலி லங்கு பரனே வரிய
கண்டு மொழி மாதுகுற மகளையா

கங்கை சுதனே குமர துங்க வரதா பழனி
கங்கை மலைமேலிலகு முருகோனே

சந்த மருமா வடியர் சொந்த முடையாயெனது
தம்ப முதலே கிருபை தரவேணும்

சம்பு மகனே கவுரி தந்த முனையே பொறுமை
தங்கு சிவமே யினிமை யுடையோனே

பந்த மயலா லுருகு கின்ற வெளியே னையிகழ்
பங்க பவமோடவருள் புரிவாயே

பங்கய பதா கமலை தங்கு பொழி லூரிலெழில்
பம்பிய சொரூபகுண முறுவாழ்வே

தொந்த முடையா ரடியர் நொந்த ழிவிலா தபடி
துங்க வரமே யுதவு மெழில்வேளே

தொன் பவ மிலார் பரவு பண்டை மலைமீதிலுயர்
சுந்தர மயூர குக பெருமானே.

தனன தன தன
தனன தன தன
தனன தன தன தன தான

118. இனிமை யுற வொரு வாத மருள் செய
வெழில் செய் மயின் மிசை வரவேணும்

எனது துயர்கெட பகைவர் பொடிபட
விசைகொளயிலுட னெழுசேயே
கனியி னினொடு பழனி மலை வளர்
கனக சர வண பவநாதா
கமழு களபமொ டணுகு புழு கொடு
கவின வணிகிற திருமார்பா
வனிதை குறவர்க டனது குடிசையில்
வளர வழுதுணு மொருமாது
மருவு பிர பல வெனது மனமிசை
மகிமை தரவுறு முருகோனே
புனித பகவதி குமரி பயிரவி
புவனை திரிபுரை யருள்பாலா
பொருவில் திருமலை பெருகு புகழொடு
பொறுமை மருவிய பெருமாளே.

தனத்த தனதன
தனத்த தனதன
தனத்த தனதன தன தான

119. நினைத்த வரமருள் கொடுக்க விதுதநி
நிருத்த னருளிய முருகோனே
நிறைத்த திரிபுர மெரித்த தொருபர
னினைத்த பிரணவ முறையோதி
கனைத்த பவவுரு வெடுத்த நிசிசரர்
கரிக்க வயில்விடு மொருவீரா
கருத்த முகினிற வொருத்த னெழின்மரு
கநத்தி வருமடி யவர்பேணும்
நனைத்த நறுமல ரெடுத்த புயகுக
நகைத்த குறவளி மணவாளா
நகத்தி லெழுபரை தனக்கு மொருமுளை
நலத்தி னெடுதயை தருவோனே
சுனைத்தண றலிடை யுதித்த மலரணி
சுகத்த பரிமள முளநாதா
தொடுத்த கவிமழை படைத்த புலவர்கள்
துதிக்கொ டிருமலை பெருமாளே.

குமுணா னெனகொடை யடியவ ரிடமுள
பகவ திடநிசி சரரற வரையற
கொழுவி நுதியயிலுருவிய புயபல செகவீரா

அமர ரொடுமுனி வரர்துதி பெருகிய
குரவ பரிமள குழக வெழில் வளியி
னரிய பதமலர் வருடிய பரசுக முறுவோனே

அலகில் பலகலை யெழுகதி ரெனவொளி
பெருகி வருபிர பலசிகி புறமிசை
யமரு மொருமுத விசைநல மருவிய வரதீபா

சமணர் மதமற நிலைகழு விடையிடை
கொளுவி யவரற சுருதிக டருமறை
தழைய வருணிலை நிறுவிய வரநிதி எனவோதும்

சமய குணநிதி யடியவர் கனவிடை
வளரு மனமொடு மவர்விழை வருளிய
சரத தமிழ்மொழி பிணையல ணிநிபுண பரநாதா

கமட வடிவொடு வொருதச படிவரி
மருக வுனையல திலைகெதி யறிகுவை
கனிவி னுடுமயின் மிசைதெரி சனையினை யருள்வாயே

கனக வடிவழகிய கரி மருவிய
கொழுந மறைமுடி யிலகிய சிவகுரு
கதிசெய் மதியுடு திரடவ ழுருமலை பெருமாளே.

தனன தான தத்தன
தனன தான தத்தன
தனன தான தத்தன தன தான

124. பிறவி சாக ரத்திலே முழுகுவேனை யித்தநீ
பெருமையா யெடுத்தினே கரைசேராய்

பிருகு மாமுனிக் கனு ளொளி கொடேக சத்தியே
பிரிவி னோடை வைத்ததோ ரெழின்மாது

மறவி லாச வுத்தமீ தருகு போர முத்தயா
வரத ஞான சுப்பயா குகதீபா

வளிம ளை நித்தியா விரதர் நேய நிர்க்குண
மகிப பூப திக்கெலா முறைவோனே

பறவை யாமி னத்திலே வுணவு தேர்வி தத்திலே
பகர வோடி யெய்த்துளே னினியேனும்

பரம யோக கர்த்தனே குமர ஞான நிர்த்தனே
பதும போத கத்தனே யருடாராய்

குறவர் கோவு மெச்சியே தருகு மாரி நத்தியே
குலவை யானை பக்கலே யுறமேவு

குதவு ணைய தற்பரா திருவு லாச வெற்பிலே
குடிகொள் வீர சத்திவேல் பெருமாளே.

தந்தனந் தாத்த தன
தந்தனந் தாத்த தன
தந்தனந் தாத்த தன தன தான

125. சங்கடம் போக்க பத பங்கயம் போற்ற வரு
டங்கிடும் பேற்றை யினி தருள்வாயே

சந்ததம் போற்றி ஒரு கும்ப னன் பேற்றபர
சங்கரன் றீர்த்தனுத வியபாலா

கொங் கவிர்ந் தேற்றமிகு செங்கடம் பார்த்த தொடை
குங்குமஞ் சேர்த்த வகி லிவைமேவ

கொண்டணிந் தூக்கமிகு செங்கரஞ் சேர்த்தவயில்
கொண்டருஞ் சீர்த்தி மயி லுடையோனே

மங்கலம் போர்த்த வளி தன் கடம் போர்த்த குக
வன்சுரம் போக்கி னிடை கவியாகி

வந்தவன் பார்த் தயர விந்தை கொண் டாட்டியவ
மஞ்சிவர்ந் தாட்டு பொழில் வயலூரா

தெங் கொடும் பூத்தகமு கெங்கினுங் கூட்ட மிக
திண்பலங் காய்த்து மிளிர் வளர்சோலை
செந்திலின் சேட்டமென தொண்டர் கொண்டாட்ட மலி
செம்பொலம் பூத்த மலை பெருமாளே.

தன தனு தனன
தன தனு தனன
தன தனு தனன தன தான

126. தமிழிலே யுனது பெருகுசீர் புகழை
தமியனு மினிலே யருள்வாயே

சாத மோருருவ விரத பூவதிப
தனத னே குமர வடிவேலா

அமிர்த மே புலவ ரிதய மே வரத
வறுமு கா கருணை யுடையோனே

அடிமை யானுனது தய விலா தயா
லழக தோ தரும துயையேநீள்

திமிலி சேரிடப முடைய பேர் மதலை
சிறியனே னெனது செயல் பாராய்

செனனமே பெரிய கடலதா மதனில்
திகழு மோர் துகழ தலைமீது

அமிழ்த லோ டெழுதல் நிலையி லாதசைதல்
அன தெனுர் நிலைமை யதுதீர

அருளுவாயுனது பதமதே முருக
வழகு வாழ் மலையுள் பெருமாளே.

தனன தனதன
தனன தனதன
தனன தனதன தன தான

127. முருக குருபர குமர சரவண
முதல்வ பதமல ரருள்வாயே

முனிவர் தொழவரு மமுத மனையவ
முதிய பழனியி லுறைவோனே

பெருகு புகண் மழை பொழிய வருளிய
பெரும தகர்மிசை வருவோனே

பிருகு முதல் பல முனிவர் துதிபணு
பெரிய முழுமுத லெனவோது

தருவி னிகர்கர வரத பரிமள
சமய மிதுதநி யியினிதாக

தனன தனவென நடன மிடுகிற
சரண புறமிசை வரவேணும்

அருணை கிரி புக டமுவு திற புய
வரிய பொழினக ருடையோனே

அடிமை யெனதிடர் பொடிய வுதவிய
வணிகொடிருமலை பெருமாளே.

தத்தா தனத்தா
தத்தா தனத்தா
தத்தா தனத்தா

128. சித்தாதி கட்கோர் வித்தா யுதித்தோய்
செப்பா தவர்க்கோ ரிடியேறு
செக்காடவுட்சே ரெட்பாடு பட்டே
சிற்றூழி கெட்டே பலநாளும்
எத்தாட லுற்றோர் புற்பா தகத்தோ
ரெய்ப்பூர வைத்தோ ரிடமேவி
யெற்கா தரத் தோய் நற்கா வெனச்சேர்
பித்தாதி விட்டே னினியேனும்
கத்தா வெனைக்கா பெற்றோரை மிக்கோய்
கற்றோரினத் தோ டுறைவோனே
கைப் போ ரகத்தே யெட்டாத முத்தே
கட்போ தலர்த்தா ரணிமார்பா
தத் தோட விட்டே பட் பார் பணைச் சூழ்
தட்கா வளத் தார் பொழிலூரா
தக்கோர் தவத் தோர் மிக்கோர் மிகச் சேர்
தட்பூத ரத் தோர் பெருமாளே.

தத்தன தன தன
தத்தன தன தன
தத்தன தன தன தன தான

129 கத்த வன ருளினை பெற்றவர் பெரியவர்
கற்றவ ரென நில வுலகோது
கட்படி மலர் தொடை பற்றிய வுர மொடு
கைத்திற வளரயி லுடையோனே
பத்தர் கடுதிபண நத்திய வண மருள்
பட்பொடு முதவிட வருவோனே
பற்றலர் பொடி பட வெற்றிய வயில் கர
பக்குவ முடையவ ரகவாழ்வே
நித்திய வரதமெய் பற்றுடை யவர் பணி
நிர்க்குண குருபர வரதீப

நிட்கள பரிமள சற்குண பதமலர்
நிட்சய மிதுதநி தரவேணும்

முத்தரு முனிவரு நத்திய வரகுக
முப்புர மெரியர னருள்பாலா

முட்புடை பலகனி கொட்டிய நறை மலி
முத்தொளிர் திருமலை பெருமாளே.

தத்தத் தனனா
தத்தத் தனனா
தத்தத் தனனா தன தான

130. நித்தித் தமுநே பொற் பிற் பெரியோர்
சித்தத் துறை வோய் தெளிவான

செக்கர்ப் பரமே பற்றற் குரியோய்
செப்பற் பதமே வுயர்வான

அத்தித் தலைவா பத்தர்க் கருள் வோய்
அப் பத்துடனே வடைதோசை

அற்பிற் படையார் பக்கத் திடரே
யப்பச் செயுமோர் கணநாதன்

நத்துத் துணைவா முட்டைப் பெயர்மே
னட்புக் குடையா யெழிஞதா

நச்சைத் திரளா யிச்சித் துணுவோர்
நத்துச் சுதனே வயலூரா

வித்தைத் திருவே மெய்த்தற் பரமே
மெச்சுப் புகழ்சே கரமார்பா

மிக்குப் பணை சூழ் பொற்புப் பொழிலூர்
வெற்பிற் குடிசேர் பெருமாளே.

தந்தா தனந்தா
தந்தா தனந்தா
தந்தா தனந்தா தன தான

131. பந்தோடு செண்டோ சிந்தாத நொந்கோ
பம்பாத தெங்கி ரிளநீரோ

பண் டோது குன்றோ வென்றோத நின்றே
பஞ்சாடை யின்சே கரமாகி

நந்தார் தனஞ்சேர் பண்பேசு பெண்பா
லைந்தூர் யந்தோ தடுமாறு

நஞ் சூடு நின்றே னஞ் சாதி யென்றே
நன்கா தரந்தா முருகோனே

செந்தூ ரிடஞ்சேர் துங்காதி புங்கா
தெங்கா ரிடஞ்சேர் பொழிலூரா

திண்பாதி யம்பா ளின் சார்பு விண்டே
தென்பாதி கொண்டா னதினாலே

அந்தாதி சென்றே நின்றோத நின்றோ
னந்தாதி தந்தோ னெனவோதும்

அன்பான கந்தா பொன்சேரு குன்றோர்
அஞ்சேர நின்றோர் பெருமாளே.

தனத் தத்த தத்தா
தனத் தத்த தத்தா
தனத் தத்த தத்தா தன் தான

132. வணக்கத்தி னிற்போர் பழக்கத் திடத்தே
வசித்தற் குரித் தோ டுறைவோனே

மனப் பத்தி விட்டோர் குலத்தைத் தகர்த் தோய்
வரத்தைக் கெடுப்போ யடியார்பால்

பணத்தைக் கொடுப்போன் குணத்தைக் கொடுப்போன்
பதத்தைக் கொடுப்போ னெனவோது

பதத்தைக் குறித்தே நினைத்துத் துதித்தே
படித்தற் புதத்தூ றருடாராய்

இணக்கத்திரப் போர் களுக்குத்தனத் தோ
டிருத்தற்குரித் தோ டருள்வோனே

எழிற் பற்றுடைத்தாய் பணைத்தத் தனத்தோ
ரிடத்திற் படத்தா லுழலாமல்

கணத்துத்தி யத்தோ டுனைச் சொற்றருட்கூர்
கனித்தற் புதித்தோ ரிடமேவி

கலத்தற் கருட்டா பொழிற் சுற்றணித்தா
கனப்பொற்குவட்டேர் பெருமாளே.

தனன தந்த தத்தான
தனன தந்த தத்தான
தனன தந்த தத்தான தன தான

133. மதமிகுந்து வப்பான சுரர்களஞ்சு தற்கான
வவுணர் துஞ்சுதற் கான வடிவேலா

வளைசு மந்து வற்கான வளிமணந்து வற்பூறு
வரத மிஞ்சு தற்கான ஜெயதீரா

வதன மிந்து வொப்பான வழகி குஞ்ச ரக்கோதை
மகிழ வந்த நற்கோல முறுவாழ்வே

வளமை தங்கி யற்றுன மிலகி லஞ்சி சித்தாகி
வளர்செய்துங்க வித்தான மயில்வீரா

சுதக தண்டமிட் கான வகல கும்பனுக் கான
சரத நம்பினார்க் கோகை யருள்வோனே

சகநிறைந்த சித்தேயெ னகநிறைந்த முத்தாகி
தளிரு பங்கயப் பாதம் அருள்வாயே

உசிதமென்று கொக்கான தருவை வென்ற முக்கோண
வொளியி னின்ற வட்கான சுதவேளே

உறுதி கொண்டுனைப் பாட வருள் சுரந் தெனைக்காநல்
லுயர்செய் பண்பையிற் றேவ பெருமாளே

தன தாந்தன தானன தானன
தன தாந்தன தானன தானன
தன தாந்தன தானன தானன தன தானு

134. கடனேர்ந்திடு தானைக ளாமென
சுரரேங்கிடவே கனையா கிய
கரிவோங்கிடு மேனிற மாமென திபளாவர்

கனமோர்ந்திடு மா மணி தேசமை
கிரியாந்தலை யாயிர மேரு வ
கரமேந்திடு மாதிடமேவிய ஜெயசூரர்

திடமாய்ந்திட கூளிக ளையுண
வுடலாங்கிரி போரதுபெறவே விடு
திறமாங்குக வேல்வலனே சிவ முருகோனே

செய மாந்திரி யோ தனுறு தியர்
அறவாம் பரி சாரதி யாகிய
திற மோங்கிய மாதவனே வல செயலோடு

வடவாம் புரை போருரை ராவணன்
மகவாம் பலர்சேனை பல் கோடிகள்
மத மாங்கிரி யோடறவே புரி ரகுராமன்

வர மீம் பெறவே வரு மாமரு
மகனுங்குக வீர மகா திப
மகவான் றரு மோர் சுதை மாகரி மணவாளா

மடமாங் குயினேர் மொழி வேல்விழி
மாமாந் தளிரே னிற மேவுற
வளர் தேங்கிளர் ரெனவே திகடனமோடு

வள மோங்கிய கார் குழன் மாதர்கள்
மயல் போம் படி தாண் மலரே யருள்
மகமார்ந் திரு மாமலை மேவிய பெருமானே.

தந்தந் தந் தந்தன தானன
தந்தந் தந் தந்தன தானன
தந்தந் தந் தந்தன தானன தன தானு

135. கொங் கந்தண் செண்பகமே னிற
மின் துன்றுங் கொண்டலி னேர் குழல்
கொம்புஞ் சம்பந்தன வாரின துரவாகி

கொஞ்சுந்தண் கண்டிணையா மொழி
நஞ்சுங் கண் டிங்களி னேர்முக
குண்டுந் தண் டங் கமலா சனி நிகர்மாதர்

பந்தங் கொண் டன்புறவே வரு
சிந்தங் கொன் றின்பமை மாதவர்
பண்பைங்குன் றங்கிய மாமுனி மகயோகர்

பஞ்சம் பஞ் சம்பெறு வீடிடை
யைம் பங்கொன் றஞ்சறு நேர்பது
பண்பும் பொங் கும் பதினீரொடு பதினறீர்

தங்கந்தங் கங்கமை நாமுதல்
கொண்டும் பின் பைந்திடை மாறிய
தொந்தங் கண்டு டன் பதமே பணி நெறியினோர்

தொண்டுங் கண் டம் பதமே தரு
பண்புங் கொண் டன் புறை மாபர
துன்பங் கொன் றின் பருள்வாய் சிவ குருநாதா

தெங்குஞ் சந்தங் கமுகமா புனை
கொங்கும் புங்குங் கடிமா மகிழ்
சிந்துந் திண் டண்டரு மேவிய பொழிலூரா

சிந்துஞ் சங் கின்குர லோடெழு
கந்துஞ் சிந் துங்கரிபே ரொலி
திண் பொன்றங் குந்திரு மாமலை பெருமாளே.

தன தந்த தத்த தந்த
தன தந்த தத்த தந்த
தன தந்த தத்த தந்த தன தானா

**136.** தினமுந்த னைப் பணிந்து
வர நன்க விப் புகழ்ந்து
செயபுங்க வித்த மைந்த முருகோனே

தினமும்பெருக்க மைந்த
வராதுங்கமுற்ற கங்கை
செறியுந் தடத் தெழுந்த சுதவேளே

கனகன்றனை ப்பிளந்து
வுயிர்கொன் றறக்கடிந்த
கனசிங்கனுக் குகந்த மருகோனே

கரளந்தனைப் பொருந்து
திதிமைந்தரைப் பிளந்து
கதறும் படிக்கறைந்த ஜெயதீரா

அனமுஞ் செறித் தடங்கண்
மடுவிண் டொழுக்கு மின்ப
வமுதங்கலத்த கங்கை பொழிலூரா

அருளஞ் செழுத்தை முந்தை
பகருஞ் சுரர்க்குலங்கள்
அகிலந்தழைக்க வந்த குருநாதா

மனநன் றொழுறற் கிரங்கி
வருகுஞ் சரத்து வெந்தை
மகிழ்பின்புதித்த கந்த குகநாதா

வளமெந்தனுக் கிசைந்த
வருடந் தெனைப்புரந்து
வளருந் திருச்சிலம்பின் பெருமாளே.

தான தன தந்த தந்த
தான தன தந்த தந்த
தான தன தந்த தந்த தன தானு

137. பாலமுத முண்டு துஞ்சு
பூசலிடைவந்த செந்தி
பானுவொளி கண்டு கன்றி பகையாடி
பாறுவை கவர்ந்துவந்து
வாடியென முன்பமைந்த
பாரவலிகொண்டு யர்ந்த ரவிகோபன்
காலனென நின்றிலங்கு
மாயவுணர் துஞ்ச வன்று
காரவயில் கொண்டு வென்ற முருகோனே
காரணமுகுந்த மைந்த
வேளினினுயர்ந்த சந்த
கார்மயிலிலங்க நின்ற குருநாதா
சீலமுள நந்திமுந்தை
வாகு வலமுங்கொணர்ந்து
சேய பணியென்றுகொஞ்சு முகமாறும்
தேவனய னண்டர் தொண்டர்
யாவரும் வணங்கு கின்ற
சேவடி கவின் றதும்ப பணிமேவுங்
கோலமுட னின்றுவந்து
ணேயமிகு மன்பு கொண்டு
கூடருள்சு ரந்தனந்தம் அருள்வாயே
கோகனக மங்கை தங்கு
மாவளமி லங்கு பண்பைக்
கோடுலவு கின்றகந்த பெருமாளே.

தான தன தந்த
தான தன தந்த
தான தன தந்த தன தானு

138. சீத மலி தும்பை நீல மொடி லங்கு
தேனி மிரு கொன்றை யணிவோனே
சேயரன் வணங்கு கார ண மறிந்து
தேர் பொரு ளறிந்து புகல்வோனே
பாத மல ரன்றி வேறு கெதி யின்றி
பாடல் புரி கின்ற வெளியேனின்
பாதக மலங்க ளோடிட விளங்கு
பாத கமலங்கள் தருவாயே
தூத னென வன்று வோ ரிரவு சென்ற
தூய சிவனன் பி னுயர்தேவி
சோதி யென கொஞ்சு மாறுமுக பொங்கர்
சூழ் பழனி நின்ற பெருவாழ்வே
கோத கனு கும்ப வாயினிலெ ழுந்த
கோமுனிவி ளங்க வருள்வோனே
கோகனக மிஞ்சு வாவி யுள பண்ணை
கோடுலவு கின்ற பெருமாளே.

தந்தனு தந்தனத்
தந்தனு தந்தனத்
தந்தனு தந்தனத் தன தானு

139. தண்டை சேர் கிண் கிணிக் கொன்று காறண்ட மிட்
டங்கு கால் கொண்டு வற் புதமேவு
தந்திமா பின் றுணைக் கந்தனே செந்திலிற்
றங்கி வாழ் கின்ற நற் குகவேளே
சண்டை போடு ந்திடத் திண்டரா கம் படத்
தண்டொடே துஞ்சிடப் பலகூறுய்ச்
சம்பவே சங்கரித் தண்டவா மங்கலச்
சங்கு லாவும் பணைப் பொழிலூரா
சண்டிகா வெண்டிகிட் கொங்கை சேருங் கரச்
சம்புவேள் கும்பிடத் தகும்வாழ்வே

தங்கு மேரின் புறத் தொன்றுமா மந்திரத்
தம்பதா பண்பினர்க் குறுதேவே

கண்டை நேருங் குறத் தங்கமா லிங்கனற்
கந்தனே வந்தெனக் கருள்வாயே

கண் புகாத் தெங் குயர்க் கொங்கு வீழும் பொழிற்
கங்க மார் பண்பொழிற் பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

140. நினைத்ததை முடித்து நலத்தினை யளித்து
நெறிப்படி பதத்தை யருள்வாயே

நினைப்பவ ருளத்தி லிருப்பவ சுகத்தி
னிலைத்தவ கரிக்கு மிளையோனே

அனைத்துல குயிர்க்கு மொளித்தவ பரைக்கு
மருட்சுத வரற்கு மொருபாலா

அனத்திர ளடைத்த பணைத்தட முடுத்த
வகிற்பொழி லுடுத்த பொழிலூரா.

கனைத்ததிர் பெடுத்து விருட்கடல் கவிழ்த்து
கனப்பெயன் மிகுத்த வளநாடா

கணத்தவர்களுக்கு வலப்படை கொடுத்து
கனத்தசுர் தொலைத்த செகவீரா

நனைத்திர ளலர்த்த வொழுக்கறல் பெருக்கி
நதித்திர ளெடுக்கு மலைவேளே

நவத்தவ மியற்று திருக்குடி படைத்த
நகத்திடை யுதித்த பெருமாளே.

தனத்தன தனன
தனத்தன தனன
தனத்தன தனன தன தான

141 பிடித்திடு பவமா சறுத்தவ வயில்வேல்
பிடித்தவ குமரா பொழிலூரா

பெருத்தவ கழுகா சலத்துறை முருகா
பெருக்கமு துதவு மொருதேவா

தடித்தசுர் கிளையோ டழித்திட மறவேல்
சணத்திடை விடுவோ னெனவோது

சகத்திடை யடியா ரிடத்தினி லுறைவோய்
தனித்தவ தகர்மேல் வருவோனே

துடித்திட வருமோர் விடத்திரடனையே
சுகிர்த்துணியரு ளருள்பாலா

துதித்திடு மலைமா முனிக்கின மறையே
சொலிப்பொருண் விரிவாய் புகல்வோனே

அடிக்கடி புகழான் முழக்கிய வடியே
னருட்பெற லெதுநா ளறியேனே

அனத்தொடு பொருடா பதத்துணை மலர்தா
அணித்திரு மலைவாழ் பெருமாளே.

தந்தா தனத்த தன
தந்தா தனத்த தன
தந்தா தனத்த தன தன தான

**142.** சிந்தா குலத்தினைய வந்தே யடர்த்துபிணி
செந்தூ ளெனப்பொடிகள் படவேணும்

திண்பா தகத்தசுரை நொந்தோட வைத்தசெய
செந்தூரிடத்துறையு முருகோனே

கந்தா பரைக்கினிய மைந்தா வெனக்கருள்செய்
கண்பா ருனக்கடிமை யினிதான

கண்டே நிகர்க்குமொழி மஞ்சே நிகர்த்த குழல்
கண்டார் மயக்குதன மடமாதர்

தந்தா வரத்துரிமை விண்டே னுனைப்பரவு
சம்பூரணத்தயவு தருவாயே

சங்கார கர்த்தனரு ளொந்தாயுனைப்பரவ
தந்தா வனத்தின்மிசை வருவோனே

செந்தா மரைக்கமலை தங்காசனப்பணைகள்
தெங்கார்நிவைப் பொழில்க ளிடமாக

செங்கார் மிகப்பரவு பொன்பூ தரத்திலகு
சிங்கார முற்றசிவ பெருமாளே.

தந்தா தனத்த தன
தந்தா தனத்த தன
தந்தா தனத்த தன தன தான

**143.** பந்தே நிகர்த்ததன மஞ்சே நிகர்த்தகுழல்
பண்பா னிகர்த்தமொழி யதனோடு
பம்பா னிகர்த்தகடு வம்பே நிகர்த்த விழி
பஞ்சே நிகர்த்த பத முடையோராய்
வந்தாடவர்க்கு மயல் தந்தே விதழ்த்துகிரு
வந்தே கொடுத்தணையு மடமாதர்
மண்டாசையிற் செயலி லந்தோவ டர்த்துமன
வண்டே யகற்ற வொரு நெறிதாராய்
கந்தா வுனக்கடிமை யிந்தா வெனக்கதியு
கந்தே கொடுக்கதி வரவேணும்
கண்டார் நகைக்கவிடி லெந்தா யுனக்கிழிவு
கண்பார் எனப்பரவி பலநாளும்
நொந்தே னெனக்குறுதி தந்தா தரிக்கவிலை
நுண்கூரருட் குமர வினியேனும்
நன்பா லெனக்கருள்செய் பண்பாசலப் பகவ
னொன்பார் குகத்தரும பெருமாளே.

தத்த தனத்த தனத்தன தத்தன
தத்த தனத்த தனத்தன தத்தன
தத்த தனத்த தனத்தன தத்தன தன தான

**144.** சித்த முதித்து விதித்த விதத்தினை
யொப்ப வருத்து பவத்தி லழுத்தினை
செப்ப மனத்தி னினைத்திலையெப்பொழு தருள்வாயோ
சித்தி விளக்க மிகுத்த பரப்பொரு
ளத்தி பினத்தி குறத்தி யினுக்கமை
சித்த தனத்தி னகத்தை யழுத்திய முருகோனே
பத்தி பனைப்பவ மற்றுவி டப்புகல்
கத்த வெனக்கு பவக்கட லற்றிட
பட்ச மிகுத்த பதத்தை யளிக்கவு னருடாராய்

பட்பகையுற்ற மொழிச்சொலியற்றிகள்
செப்பை நிகர்த்த தனத்திகள் பொற்பமை
பக்குவமுற்ற பரிக்குருவுற்றவர் இவையோடு

முத்தை நிகர்த்த நகைக்கருவிற் செறி
வுற்ற முகிற்கு நிகர்த்த குழற்பொதி
முற்ற வளைத்த விலுக்கிணை நற்புரு வமுமாகி

முக்க ணெழிற் சிவனுக் குணவற்கடு
கொக்கு கிளைக்கு ஞதித்த வடுப்பகிர்
மொட்டு விரிக்க வலர்த்து வரிச்சிறை யரியோடு

அத்தி மடுக்க மலத்தொடு விற்கயல்
சத்தி யெமக்கட வுட்புரையற் றெழில்
அப்ப விளக்க மிகுத்த கணுக்கடை மடமாரூர்

அற்ப சுகத்தி விளைத்தன ளித்துணை
நற்பத பத்தி கொடுத்து வினிப்புர
வத்த மலர்ச்சுனை பெற்றுயர் வெற்புறை பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

**145.** பொரு ளளி யென மனு வுரை யினை முறை முறை
புகல்வது மறி கிலை வலகோர்பால்

புகனுவ னெனி லவர் தருகுவ தியல் பிவை
புகலிலை யென மதி வழிகூடி

மரு ளொழு மனதுடை யவர்க ளு முதவுவர்
வலியவர் கொடியவ ரிவரோடே

மடையர்கள் படையர்கள் கடையர்களி லருவர்
மனதொரு பெருமலை யெனவேநீ

அருளிலை யிதுவரை யுடலுயிர் பிரிவுறு
மது ததி தரவுனு நினைவேயோ

அடியனை யிது ததி யுயிருண வருகுவை
யல தருள் புரிகுவை யெனையேனும்

மருவிய வுனதக மெதுவெது வதுவது
வணமருள் புரிகுவை நாதா

வளமலி திருமலை முடி மிசையிலகிய
மரகத மயில் வளர் பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தனதான

**146.** இடீர்ப் பட லுனக்கிலை யெனக் கென விதித்தனை
யிசைப் பத மளித்திட வருவாயே

இடைக் கிடை வருத்திய துனிப்படு கடற் புடை
யிருக்கவு எழுத்திய தியல்பாமா

அடற்பெரு வயிற்கர தடப்புய கிரிக்குக
வளிக்குற வளிக்கொரு மணவாளா

அமைக்கிணை மணிப்புய மதிக்கிணை முகக்கரி
யணைத்திடு திடப்புய முடையோனே

மடக் கொடி யருட்பரை தனக்கமை வுறப் பெறு
வரச்சுத கரித் துணை யெனவோத

மதித்தவ ரகத்திடை யிருப்பவ னெனக்கருள்
மழைக்கரு முகிற் கொரு மருகோனே

படத்தலை யடிக் கொள மதித்தற வுறுத்திய
பணிச்சிகி புறத்திடை வருவோனே

பருப்பத மிருப்பவ திருப்பொலி நகத்திடை
பருப்புகழ் படைத்துறை பெருமாளே.

தனத்த தன
தனத்த தன
தனத்த தன தன தான

**147.** தளர்ச்சி யற பெருக்க முது
தனித்து தவ லெதுநாளோ

தளிர்ப் புகழ் செய் பவர்க் கருமை
தரப் பெரிய முருகோனே

வளர்சசி யமை முகிற் கருமை
வரப் புகழு மருகோனே

மலைக் குமரி யருட் புதல்வ
வளிக் குரிய மணவாளா

கிளர்ச்சி தரு மயில்க் குமர
கிருத்தி கைய ரிடமேவ

கிடைத்த மரை வனத்தினொடு
கிளைத்த சர வணநாதா

மிளிர்க் கழுகு மலைக்கு ளருண்
மிகுத்த குருபர தேவா

விதித்த மறை முழக்க திரு
விளக்கு மலை பெருமாளே.

தான தான தனத்தத் தன தன
தான தான தனத்தத் தன தன
தான தான தனத்தத் தன தன தன தான

148. மாத ராசை மயக்கத்திலே யமை
காதலோடு பிறத்தற் கிடா தருள்
வாலை தேவி தவச்சித்திலே வரு முருகோனே

வானு லாவு பொழிற் பட்டை யாதிப
தூயபூ ரணவித்தைப் பயோ தர
மாவி லாச குணத்திற்றயா நிதி எனவோது

தாத நீதி தழைத்த குஞ்சர
வேத மோதி விளக்கற் புதாருக
சாமி நாத வனத்திற்குளே வளி யிடமேவி

தார மாக வகித்தற்கு வாரண
மேவ சேர வணைத்தற்பு ளாயணி
சார்பு ளான சகத்திற் புராதன முடையோனே

வாத யோக வசத்திற் குளே டடு
நீது போக வெனக்குச் செய்வாய் தயை
வாத வேலை யிடத்திற் குளா முறை யருள்வாயே

மார னூற விழித்தற் சிவா னுதல்
தேருவீர நகத்திற் குளே வளர்
வாழ் வுளான சகத்திற் குளாதர முடையோனே

சீத மோது கடற் குட் புகாரவி
சோதி வீசு மயிற்க் கைக்குகா சுக
சேம மான யிடத்திற் குளே நிறை பயனேயா

தேவ தேவ வெனக் குச்சதா நல
மீய வேணு மெழிற் குக் குடா திப
சேய மாது பொருப்புக்குளே நிறை பெருமாளே.

தந்தந் தனதன
தந்தந் தனதன
தந்தந் தனதன தன தான

149. சந்தம் பொதுளிய பைந்தண் பொழிலிடை
தங்கும் பிரபல முடையோனே
தண்பைஞ் சுனைவளை மிஞ்சும் பணை மலி
சங்கம் பனு கிய வளநாடா
விந்தந் தடவிய கும்பன் றெளிவுற
விண்டங் கருண் மறை யருள்வோனே
வெம்புந் தழலிடை பம்புந் தரியினை
வெந்துஞ் சிதர் பட விடலேபோல்
நொந்துந் தழலிடை சிந்தஞ் சிதைவுற
நுண்பஞ் செனவிட லழகாமா
நுங்கின் சுவை மலி யந்தண் செறி மொழி
நுங்கண் புகலிய குறமாது
பந்தஞ் செறி மயல் கொண்டும் பரவிய
பண்பும் பெருகிய முருகோனே
பைந்தண் சுனைவளை மிஞ்சுந் திருமலை
பம்புங் குருபர பெருமாளே.

தனதன தனன
தனதன தனன
தனதன தனன தன தான

150. வழி வழி யடிமை யெனுமியல் பறிவை
வரகுண குமர செகநாதா
மனதிது வரையி விளகிலை கவுரி
மகனெனு முறைமை யிதுதானோ
பழி குல குறவர் மகளினை மருவு
பலனிது வெனவு முலகோர்கள்

பகருவ ரிகழ்வர் நகை பல புரிவர்
பரவிய புகழு மெழிதாமே

விழி வழி கருணை யொழுகிய வரத
மிகு குக கருணை தரவேணும்

விடமுணு பகவ னருளிய குமர
மிளிராயி லிலகு மயில்வீரா

கழி கழை கமுகு புளி மருதரசு
கனி பல வுதவு மெழிநாடா

கவி னெழு கமலை வளர் திரு மலையுள்
கவியடியவர்கள் பெருமாளே.

தனத்த தனன தனன
தனத்த தனன தனன
தனத்த தனன தனன தன தான

151. இரக்கமிலையா கிருபை நிறைத்தமுகிலே குமர
வெனக்கு நிலையேவுதவ லெதுநாளோ

எழிற்பகவனே கமுகு மலைக் குமரனே பழனி
யிருப்புசிதனே வரத முடையோனே

தரப் பெரியவா மதுர மிகுத்தரியவா வடியர்
தமக்குரியவா மலைசை யுறுவாழ்வே

சகத்தி னிறைவே யெனது மனத்தி னுறைவே கவுரி
தனத்தி னுறைவே பருகு முருகோனே

குரக்கி னினமாயுருவ முளைத்தநுமனே பரவு
குணத்தடிமை யாயுடைய ரகுராமர்

குறித்தரசு மேவு வழி விடுத்த மனதேவுடைய
குகத்தனிடமேவி யருண் மொழிவேளே

திரக்கவிலை யேயருளை மறக்க வறியே னெனது
திருக்கணமுதே சரத மிகுகோவே

தெளித்த மணிமேவு முனிவ ரகத்து ளணியேகமலை
சிறக்கு மலை மேவு நல பெருமாளே.

தனனு தனத்த தன
தனனு தனத்த தன
தனனு தனத்த தன தன தான

152. இடையூ ரியற்று நினை வுடையோர்க ளற்றழிய
வெறிகூ ரயிற்கை கொளு மறவீரா

இசைசேர ருட் குமர வரதா பரைக்குமுத
வினமா யுதித்த குக வரதீபா

அடையார்களைப் பொடிப ணரமே யெனப் புகல
வறவே யொழிக்க வரு முருகோனே

அரு ளாதரித்து யென துயிரா தரிக்க வருள்
அனமா தரித்த சுனை மலைநாடா

படைவீ ரருக் குரிய படையே கொடுத்துதவு
பரமே யெனக்குரிமை படையாயா

பதுமா சனத்திலுறை யயனே பெருத்த மறை
பதமே தெரித்த சிவ சுதநேயா

கடையே னெனக் குறுதி யெது நாள் கொடுக்கமதி
கழிவாய் விடுக்கிலது மழகாமா

கதிரேச முட்டையென வருமீச பொற்பு மிகு
கன மாதிருக் குமலை பெருமானே.

தனனு தனத்த
தனனு தனத்த
தனனு தனத்த தன தான

153. பதமே யளிக்க வருவா யெனக்கு
பதமே கொடுக்கு முருகோனே

பணியா ரகத்தி லுறையாத நித்த
பணிவோ ரகத்தி லுறைவாழ்வே

சிதமே மிகுத்த கொடியோர் புரத்தை
திகழ யெரிக்க விடுநாதா

சிறுவா கரிக்கு மினையோய் வளிக்கொ
டிறனே மலைக்கு ளுயர்வோனே

சதமே யெடுத்த மறை மீது நித்த
தலைமா வயற்கு மறையோர்மை

தனதா யமைத்த பொருளே விரித்த
தன காரணத்த முடையோனே

விதனுதி கட்ட மறவே வொழித்த
விகிதா பரைக்கு மொருசேயே

மிளிர்சோலை யுற்ற திருமேவு வெற் பின்
விளைவா யுதித்த பெருமாளே.

தன தனத்தத்
தன தனத்தத்
தன தனத்தத் தன தான

154. பதை பதைத்துத் துடி துடித்துப்
பரு வரற்குட் படவேநீள்

பட விதித்துக் குட முடைத்துப்
பணி பிறப்பிற் கிடமாகா

துதை யலர்த்துத் தொடை படைத்துச்
சுகமி ருப்பிற் குயர்வான

துதி மிகுத்துச் செயன் மிகுக்கிற்
றுய ரறுத்தற் கொருசேயே.

கதை பிடித்துக் கொலை குறித்துக்
கதி ரறுத்தற் கிணையாக

கண மடித்துப் பொடி படுத்துக்
களர் செற்ற கொருகாலா

சிதை மனத்தைத் திட மிருத்திச்
செய லளித்தெற் கருள்வோனே

திரு பொழிற்சுற் றிட மிகுத்துச்
செறி மலைக்குட் பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

155. படைத்தனை புவிக்குள் விடுத்தனை நலத்தை
படைத்திலை யெனக்கு மினியேனும்

படைப்புயிர் களுக்கு கொடுத்திடு நலத்தை
படைத்திட நினைத்து வருவாயே

சடைத்தலை யாற்கு மறைப் பொருண் விரித்த
தனிப்பொரு ளெனக்கு னருடாராய்

தவத்தினர் களுக்கு முழுப் பொருண் விளக்கி
தனிப்பத மளிக்கு முருகோனே

நடைப்பிண மினத்தி லெடுத் தெனை விதித்த
நயத்தினை யெவர்க்கு மொழிவேனுன்

நகைப்பவர் நகைக்க விகழ்ச்சி சொல்பவர்க்கு
நடுப்பிணை விதிக்கு முறையேயோ

கிடைத்திடு சடத்தை யழித்திட கணத்தில்
கிழித்திவ ணுழைப்பை யலமேதனீ

கிடைத் திவணலத்தை கொடுத்துனதருட் செய்
கிளர்த்திருமலைக்குள் பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

156. பவக்கட லினைப்பொடி நிறைத்தது திடர்ப்பட
பதத்துணை கொடுத்திட வரவேணும்

பணிக்குற மகட்கொரு மணப்புய கரிப்பெறு
பணிக்குவ டழுத்திடு மணிமார்பா

தவக்கட னிறைத் தெழு முகிற்குரு முனிக்கருள்
தனிப்பர வருட்சிசி யுடையோனே

தகர்ப்புற முதித்தவ பரைக்கொரு வரத்திடை
தனித்தவ முதற் சுத னெனவோதும்

அவற்பொரி பணிப்பல சமைத்தவை படைத்திட
வனத்தொடு முருட்டிய தொருவாயில்

அணைத்திடு பவர்க்கொரு துணைத்தக வுதித்தவ
வனத்திரண் மிகுத் தெழு வளநாடா

உவர்க்கட லினிற்கெழு கதிர்க்கட னிறைத்தெழி
லொருத்தனை நிகர்த்திடு மயில்வீரா

உயர்ச்சுனை மலர்த்தொடை படைத்தவ புயத்திடை
யொளிர்த்திரு மலைக் கொரு பெருமாளே.

தனன தந்தன
தனன தந்தன
தனன தந்தன தன தான

157. உடல் களைந்திட மன மூவந்தென
துயிர் களைந்திட நினைவேயோ
உறுதி தந்தரு ளென நிதஞ் சொல
வுயர்வு தந்திலை முருகோனே
கடல் வளைந்தெழு புவிய கந்தனில்
கருதுமுன் செய லதுகோண
கடைய னென் கெதி தவற நின்றன
கனக சுந்தர வெதிருல்கை
விடனி னைந்தனை பணிநி னைந்திலை
விதிநி னைந்தன னினியேனும்
மிளிரு மன்பொடு நினது பொன்பத
விரிக லந்தர வரவேணும்
அடல்களைந் தெழு மசுர ரின் றிர
ளவர்கள் குன்றற விடும் வேலா
அகில சுந்தரி குமர பண்பொழி
லரச குன்றுறை பெருமாளே.

தான தத்த தனன
தான தத்த தனன
தான தத்த தனன தன தான

158. கீர னுக்க ருளுமு தார நற்கு ருபர
கேடு நைத்திடவிடி லழகாமா
கேவ லத்து யூர்மிடி யோடு பற்றி யபிணி
கீரில் பற்பல வித் மிகலாகும்
மார னுக்கி ணையென வோது பொற்பு யர்பர
மாவ ளிக்க ழகிய மணவாளா
வாசவ ற்கொரு சுந்தை மேச முற்றிடு குக
மாத வற்க ருண்மழை பொழிவோனே

சீர முற்றுத தியில் யோக நித்தி ரைபுரி
தீர சற்கு ணவரி மருகோனே
தேவி பெற்ற ருளிய ஞான சுப்பிர மணி
தேவ பொற்ப தமல ரருள்வாயே
சார சற்ச மயம தாய் நிலைக் கருளிய
தான வுக்கிர குண முடையோனே
சாது சற்சனர் திரு வாழு வெற்பிடை குடி
சார்பு நித்திய குக பெருமானே.

தனத்தந் தானன தானன தானன
தனத்தந் தானன தானன தானன
தனத்தந் தானன தானன தானன தன தான

**159.** அருட்கொண் டாதர மானப ராபரை
சுதச்செந் தூருறை வேலவ னேகுக
வணிச்சிங் காதன மாமயி லேறிய முருகோனே
அவிழ்க்குந் தாமரை மாமலர் மீதணி
வொழுக்குந் தேனது மாவயன் மாவரை
யரிக்கும் பூவள மேவிய தாகிய பொழிலூரா
தெருட்கொண் டோருள மேனிறை பூரண
வெனக்கன் பாதர மானவ ரோதய
செழிக்கும் பூதர மேலரு ளாகர னெனவோது
திறக்கந் தாவளி நாயகி யார்தன
வுருட்கண் டேமயன் மீறிய தாயவள்
சிரிக்குஞ் சீர்மொழி யாமுறை கூறியு மதனோடு
மருட்கொண் டேகரி யேவர மாவளி
யணைக்கும் போதவ ளாகவு ளேமகிழ்
மதிக்கும் பேர்மண மேவுபு ராதன முடையோனே
மனத்தன் போடுணை யேதின மேபுகழ்
படிக்கும் பேதமை யாகிய வேழையை
வருத்துங் கோள்க ளுமே நலமேதா வருளாமல்
இருக்கின் பாரிடை யெகெதி வேறிலை
மறிக்கும் பாலத லாதிலை யாதலி
னிறக்கின் பாதக மேதரு நீதயை புரிவாயே

இருக்குஞ் சாமமு மாகிய மாமறை
துதிக்கும் பேரரு ளாளகு ணாநிதி
எழிற் பண் பாசல மேவிய மேலவர் பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

**160.** நம்பி னேனுனை யேகெதி வேறிலை
சம்பு மாமக னேகரு ணாகர
நந்தி யேவரு மேழைவி யாகுல மறியாயா
நஞ்சி னுனிறை வாகிய மாபவ
வம்பி லேவிழ வேவிடு வாயெனில்
நம்பி னோருயிர் கோறல் செய் பாவமு மூனைமேவும்
எம்பிரா னிதின் மேல்வரு பாதக
மொன்றி லோவது தீரு முபாயமு
மின்றி வாடுவை யாதவி னாலவ ணடையாது
இன்பமே பெரி தாகிய வாருதி
என்ப தான தயாள குணாகரன்
என்றுளோர் சொல மாபரனே பதம் அருள்வாயே
கம்ப மாமத யானைச கோதர
பம்பு சூலிக பாலிவ ரோதய
கந்தி சூணில மேவிய தாகிய பொழிலூரா
கந்தனே துரியோதன னாதியர்
மண்டு போரிடையே படைமேயவுதல்
கண்ட மாதவ னார்தின மேமகிழ் மருகோனே
செம்ப யோதர மேசெறி சோலைகள்
தங்கு மேரக மாமுத லாகிய
செந்தி லோடுறை காரண பூரண மயில்வீரா
செண்பகாடவி மாதுமை யாடரு
மைந்த சேவக வாதுமு கா குக
சிங்கமே திரு மாமலை மேலுறை பெருமாளே.

தனத்தனந் தனத்தன
தனத்தனந் தனத்தன
தனத்தனந் தனத்தன தன தான

161 சொலற் கரும் பவக்கட லிருத்தி யிங் கழுத்தினை
சுகப்ப தங் கொடுத்திலை யதனுலே

துடக்கறும் படிப்பவ பிறப்பதும் பொடிப்பட
தொலைத்திடும் படிக்குன தருடாராய்

வெலற்கருந் திரத்தசுர் களைக்கொளும் பலத்தயில்
மிளிர்த்திடுங் கரக்குக முருகோனே

விதிக்கிடுந் தலைப்புடை யரற்கிடும் பதப்பொருண்
விரித்திடும் பொருத்தமு முடையோனே

அலர்த்தடஞ் சுனைப்புடை விரித்தரும் பொதித்தொடை
யணித்திடும் புயத்தவ னெனவோது

அருட்கொழுந் தெனத்தின முதித்திடும் படித்தவர்
அகத்திடங் குடிக்கொளு மொருசேயே

நலத்தலம் பொழிற்புடை வளைத்திடும் பொழிற்பதி
நகர்க்கொளுந் தருட்பத மலைவாழ்வே

நவத்தவம் பெருத்தவர் களுக்கிடங் கொடுத்துறை
நகத்திருந் திருப்பதி பெருமாளே.

தனதன தான தான
தனதன தான தான
தனதன தான தான தன தான

162 துயரிடை மூழ்கி மூழ்கி வருதலை யோதி யோதி
சுகநல மீய பாத மலர்மீது

சொலுபுக ழடி கேடி வருமொழி பாடி யாடி
சொலுவகை நாடி டாம விதுகாறும்

தயவிலை யாகுமார கெதியிலை நாதநீதி
தருபவ ரேவர் பால தினியேனும்

தயைதரு வாய்சுகாதி பரமுருகேச சீதை
தழுவிய தீரராமர் மருகோனே

கயவர்கள் பாலின்மேவி படமுடியர்த தீமை
கடிகென வோது நாவ லவரேபோல்

கடையனுமான வேழை பொருளுடையோர்கள் சார்பு
கவிசொலி வாழுநாளை மருவாது

வயமலி வானதானை மனமலி வாகனேடி
வருகிற நாயை யாள வருவாயே

மழைமலி வானசோலை பொதுளிய தேவ நாடு
வரைவளர் நாக மேவு பெருமாளே.

தனத்தனந் தனத்தன
தனத்தனந் தனத்தன
தனத்தனந் தனத்தன தன தான

**163.** சுகப்பதங் கொடுத்திலை நலப்பதங் கொடுத்திலை
துயர்ப்பதங் கொடுத்தனை யிதுகாறும்

தொடுத்திடுங் கவித்தொடை படைத்திடும் படிக்கருள்
சுதத்தரங் கொடுத்தனை யினியேனும்

இகப்பரஞ் சுகத்திடை யிருத்திபின் பதத்துணை
யினிற்படிந் திடப்பதம் அருள்வாயே

இசைத்திடுங் கவிப்புல வருக்ககங்குடிக்கொள
விருப்பவன் றமிழ்ப்பர முருகோனே

சகத்திரந் தவத்தர்க ளுயத்தரங்கொடுத்தவ
தனிப்பரன் பரைப்பொரு ளெனவோது

தரத்தவன் பொருப்பிடை யிருப்பவன் குகைப்புடை
தவத்தரன் பகத்திடை யுறைவோனே

மகத்திறம் படைத்தவர் களுக்கரும் பதத்துணை
வசித்திடும் படிக்கருள் புரிவோனே

வரைக்குலங் களுக்கர செனக் கொளுந்திருப்பதி
வரைக் கொழுந் தெனப்புகல் பெருமாளே.

தனதன தான தான
தனதன தான தான
தனதன தான தான தன தான

**164.** குரு சனி ராகு கேது புகர் மதி யாதி யாக
குக னெனு நாம மான முருகோனே

குருமுனி தேர ஞான மறைமுறை யோதி யாதி
குருவென தேவ ரோது மெழிலாளா

சருகுக ளோடு மூல முணு முனி வோர்க டேரு
தனி முதலான வேத முறைவோனே

தமிய னொ நாடி நாடி மெலிவதி லான வேழை
தனை புரி கால மீது வினியேனும்

திரு வுரு டாத யாள குரு பர ஞான தீப
சிவ சுத வாலை தேவி யருள்பாலா

திகண் மயின் மீதி லேறி யில கிய சாமி நாத
செய மரி தேவி தேடு மருகோனே

தரு நிறை வான சோலை மருவிய தான வூரில்
தன தனை மான வாழ்வி னுயர்கோவே

தவ முனி வோர்க ளாதி பர வியல் பான சோதி
தளிர் திரு நாக மேவு பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

**165.** பசித்தழல் வருத்தி யிடர்ப்பட விதித்த
பதிப்பினை யொழிக்க வறியாயோ

பகைத்தவர் சிரிக்க விடுத்திடி னுனக்கு
பழிப்பிலை யெனச்சொல் பவராவர்

நசித் தெனை வருத்தி விடுக்கில துனக்கு
நகைப்பென மதிப்ப தெதிறலே

நகத்தளி யிடத்தி விருப்பதி னிமித்த
நகக்குண மிகுத்த ததனோடே

வசிச் சிறு விடைச்சி குறத்தியை மணத்த
மறக்குண மடுத்தன் முறையேயோ

வழக்கிலை விடுக்க நினைத்தறி வழக்கை
மதித்தறி வுனக்கு மகனாவேன்

நிசிக்குரு படைத்த வசுர்க்குல மழித்த
நிலைத்தயில் கரத்தி னுடையோனே

நிதித்திரள் கொடுத்து பதத்தினை கொடுக்க
நிலைத்திரு மலைக்குள் பெருமாளே.

தனத்தன தந்தன
தனத்தன தந்தன
தனத்தன தந்தன தன தான

166. சுகத்தி லிருந்தனை நகத்தி லுயர்ந்தனை
சுயத்தி லெழுந்தனை யதினாலே

சொலற் கரு டந்திலை வனக்கிளி கொஞ்சிய
துணைப்புய பங்கய பதநாதா

அகத்திடை யொன்றிய தாத்தவ னென்றினு
மடுத்தவ னென்றுன தருடாராய்

அகப் பொரு டந்தவ ரெனப்புகல் கின்றவ
ரளித்தவ ரென்றுனை புலகோது

குகப்பர பண்பொழி னகர்ப் பரவும் பொழில்
குடிக்கொள வந்துறை மயில்வீரா

குறித்துனை வந்தனை சொலிப் புகழ் கின்றவை
குறித்திலை யுன்றன தருளீதோ

மகத் தொழி லந்தணர் தமக்கரு ளுந்திற
வயத்தகர் தங்கிய முருகோனே

வளத் தெழி றண்டலை சதுர்ப்புடை தங்கிய
வரத்திரு குன்றுறை பெருமாளே.

தனன தனனத்
தனன தனனத்
தனன தனனத் தன தான

167. குருவே யருணற் குகனே யரனுக்
கொருசேய் மலைசைப் பதிவாழ்வே

குவடே பொருவத் தனமா வளிநற்
கொழுநா கரியிற் இளையோனே

திருமாமறை யிற் குருவே பழனித்
திருவே குமரப் பெருமானே

செய மாதவர்கட் கமுதே வரதச்
செறிமா தமிழுக் குடையோனே

உருகா தவர்கட் குதவா திருபைக்
குயர்சீர் சயிலத் துறுவாழ்வே
உடையாய் பொறிவுற் பலமா வரையிற்
குசிதா கருணைக் கொருதேவே
தருவார் ககனச் சுரர்வா ணகரிற்
றருமே வ குடிலைப் பொருளாளா
தயை யார் கமலப் பதமே யருள் பொற்
சயதா பெருமைப் பெருமாளே

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தனதான

168. மயின்மிசை யிலகிய சரவண பவகுக
வளர்தவ முடையவ ரகவாழ்வே
வளிதன திணைகன தனமதி னிறைபெறு
மயலுள சிவசுத னெனவோதும்
அயிலணி வொளிர்கர தபதர்க ளிடமில
கருடர வருகிற பரதேவா
அனமொடு குவளைக ளொளிர்வன சுனைவள
மணிதிரு மலைவள முளநாடா
குயின்மொழி மதுகனி யெனவுரை பரையுல
குலவிய வுயிரனை மகமாகி
குமுதமி னொளிவிதழ் பயிரவி பகவதி
குழலெழி லமைதரு வடிவேலா
தயிர்வரு பதமுண களவுசெய் கருமுகில்
தருநிழ லுறையரி மருகோனே
தமிழொடு பலவள முயர்வுறு திருமலை
தனில்வளர் குருபர பெருமாளே.

தான தனதன
தான தனதன
தான தனதன தன தான

169. சோதி யருள்பர கீதமிசை வரி
தூய நறவுணு மலர்சூடி

சூத மர வடு பாதி யெண மொழி
தோதி னூறு கணை யுடையாளாய்

பாதிமதி நதி வேரு மெழிலமை
பார பணி யணி சிவகாமி

பாலினொடு கறை சீனி விரவிய
பாகவமுதனு முருகோனே

சீத னரி மரு காபு னித குண
தேவ கரி வளி மணவாளா

சீரமுள வொளி ரார்பு குருபர
சேவன்மிளிர்கொடி யுடையோனே

கூறு மெமனனு காமலுன திரு
கோல தெரி சனை தருவாயே

கோடு முக முள நாலு கர வரை
கூடு திரு மலை பெருமாளே.

தன தத்தன தத்தன தத்தன
தன தத்தன தத்தன தத்தன
தன தத்தன தத்தன தத்தன தன தான

170. கருவுற்று நெறித்து வனத்துற
வற லொற்றுமை வெட்கமிடற்றிடை
கர ளத்தைய மைத்தொளி மிக்குள குழலோடுங்

கன கத்தினின் விற்பணி யிற்பெரு
தர ளத்தைப தித்தியலிற் பல
கதி ரொத்தொளி ருற்றெழு கொத்திழை யணிபூண

மருவிற் செறி கொத்தல ரிற்றொடை
மிக சுத்திய திற்பிர பைப்பணி
மனமொப்ப வணித்திக டத்தைசொன் மொழிநேரும்

வண மிக்குயர் வுற்று பெருக்கமை
தன மத்திம ருப்புறழ் பொற்புடை
மகி ழுற்றணி யுத்தம வற்புத வயன்மாதர்

பரு பற்றுடை நெற்குலை யிற்றிரள்
பசு மைச்சழை முத்தினை வெற்பென
பல பக்கமிகக் குவி பொற்புள வளநாடா

பார நித்திய நற்சுரு திப்பொரு
ளூர முற்றவ முத்தமிழ் வித்தக
பல பத்தர்து திக்கரு ளற்புத மிகமேவும்

திரு நற்பதி பொற்கம லத்தெழின்
வளூ ருத்தமி லக்குமி பொற்புறை
செயல் பெற்றுயர் பொற்ப திலுற்பவ தருமேலாய்

செக முச்சி கிழித் தெழி யப்புற
முளை பற்பதி கட்குல வுற்றெழில்
திகழுற் கதி யுற்பவ வெற்புறை பெருமாளே.

தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த தன தானா

171. கற்ப முற்று முற்ற கர்த்த னுக்கு வித்தை பற்ற வைத்த
கத்த சட்ட வக்க ரத்த னெனவோதும்

கட்டு விட்டு ணுக்கு பிற்பு தித்து சித்த ருக்கு வித்தை
கற்று விக்கு முத்தம த்தி புதல்வோனே

பொற்பு மிக்க வற்பு தத்த கற்ப வர்க்கு வுற்ப வித்த
புத்தி யர்த்த நிர்த்த முற்ற குருநாதா

புட்டி னுக்கு மைத்த வக்க னுக்கு நெற்றி யிற்கி ளைத்து
பொற்ப மைச்சி கிப்பு றத்தி லெழுசேயே

உற்ப வப்பொ ருட்டு சத்தை யெத்தி னத்து மிக்க ளிக்க
வுற்ற வத்த வெற்கு நித்த மனதோடே

ஒப்ப தற்ற வெற்ப னுக்கு வற்பு தத்தின் வித்தெ டுத்து
வொக்க சொற்ற பொற்பு வித்தை யருள்வாயே

மற்பு யத்த சுர்க்க ருக்கி கற்ப முற்று நற்பு ரத்த
மட்டி லற்ற கைத்தி ரத்த வடிவேலா

மற்கு றத்தி யிற்கு பர்த்த பொற்ப தத்தி ணைத்தருட்பெய்
வர்த்த கத்தி ருக்கு வட்டில் பெருமாளே.

தனதன தந்தந் தனத்த தானன
தனதன தந்தந் தனத்த தானன
தனதன தந்தந் தனத்த தானன தன தான.

172. மதிமுக மிஞ்சுற் பவித்த வாண்முக
மணிவளர் கஞ்சத் தலர்த்தபூ கர
மயல்செறி செம்பொற்ற டத்திலேயெழு . புதனோய்

வலிமை சொலும்பொற் கடத்தைநேர் தன
மதிலவிர் பைம்பொற் பதக்க மோடமை .
மரகத மின்புற்றிருக்கவே பல வெயின்மேவ

சதிர்துளி மஞ்சைத் துரத்துவார்குழல்
எழிலுள மங்கைச் சுகத்தையே யொழி
சதுர்மறை யின்சொற்ப தத்திலே நிறை குருநாதா

சரவண கங்கைத் தடத்து லாவிய
வறுமுக பண்பிற்பொறுத்த காவடி
தழைவுற சந்தக் குவட்டிலேறிய நெறியாளர்

திதிபெற பைம்பொற் கொடுத்த மாதவ
துதிசெயு மன்பர்க் குளத்திலானவ
செயவளி யின்பப்பெருக்கிலே வளர் முருகோனே.

தினதின மென்சொற் பனத்திலே வரு
முருகவி லஞ்சிப் பதிக்குளானவ
செயபத மன்புற் றெனக்கு நீதர வரவேணும்

கதிதரு கங்கைப் பொருப்பிலேயுயர்
மதிதய வெங்கட்க் கிணக்க மானவ
காளமை கொன்றைக் கணத்திலேயிடர் களைவோனே

கழுந்தர மண்டிச் செழித்த சோலையின்
வாழுமய ரண்டர்த் தொடுத்த போதமை
கனதிரு பண்பைக் கடுத்த மாமலை பெருமாளே.

தனத் தனந்தன தனதன தனதன
தனத் தனந்தன தனதன தனதன
தனத் தனந்தன தனதன தனதன தன தான

173. மணத்த செங்கனி மது வொழுகிய மொழி
திதித் திலங்கிய சரவண பவ மலி
வனப் பணிந்தவ தனைதரு குருபர முருகோனே

வலத்த னஞ்சுற விடுமுயிரினில் வரு
குலத்த பைந்தர ளமுமணி வடுவினை
வகிர்த்த கண்புரை மடவரன் மிடறுறு மணியோடு

கணக்க யங்களை வகிரரி காமுதிர்
தரத்தெழுந் தருமணி நவமணி யிசை
கதிர்க்க வைந்தொழின் முடிவுறு முடியணி யெழில்வேளே

கருத்த பைம்பொழி லிடைவளர் கிளியரு
ளுதித்த மந்திர மொழி சொலு மறைநெறி
கருத்து ணர்ந்தவ ரிசைதவ மிலகிய வளநாடா

தணத்த லின்றிய யெழுவகை யுயிரினு
ணிறைத் தடர்ந்திடு மெழில் சிவ குருமுளை
சகத்த ரம்பரர் பணிசெய வருளிய குருநாதா

தனத் தனந்தன தனதன தனவென
நடித்தசுந்தர மிலகிய பாதமெய்
தளிர்த்த சங்கரி யுமை பகவதி தரு புதல்வோனே

நிணத்தை யுண்டிட கனகன கனகனை
வகிர்த்த திண்கர கருமுகி லினைநிகர்
நிறத்தமர்ந் தொரு வடமிலை துயிலரி மருகோனே

நினைத்த வென்றனை யுனதருண் மகனென
களித்த செம்பத மலர்தருததி யருள்
நிலைத்த பொன்கிரி யெனதிருமலைவளர் பெருமாளே.

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத் தன தான

174. உனதிருக் கழலிணைச் சுமைகொளத் தினதினத்
துருகுமெய்த் தபதர்கட் குயர்நலக் கிருபையீட்
டுலவியற் பெருமவெற் குனதருட் கருணைநட் பருள்வாயே

உமைதனத் தொழுகுமுத் தமுதுணத் தனதிதட்
சுவைபெறப் பருகுநற் குருபரப் புகடவக்
குவடிவர்ப் பனிமொழிக் குகசெகப் பெறுமுதற் பெருவாழ்வே

கனகனைக் கொடுவிரற் கொடுவுயிர்க் கொலைகொள்மிக்
கழகனுக் குயர்சுதற் கமலனுக் கறிவுறக்
காமதிற் சிரமிசைப் புடைசெய்தப் பிரணவப் பொருள்கூறும்

கனவரைப் பெருமசற் குருபரப் பொருள்மிகுத்
தமரர்கட் கிடரறுத் தசுரரைக் கொலைபணிக்
கதிர்வலக் கிரியினைக் கரமெடுத் தெறியு மற் புதவேளே

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
திமிதிமித் திமிதிமித் திமிதிமித் திமிதிமித்
தடடடட் டடடடட் டடடடட் டடடடட் டடமோடெ

தளமிகக் கரையுடைக் கடலிடைப் படுமொலித்
திரளெனத் தொனிமிகத் திரிபுரத் தசுரரைச்
சயமுறப் புரிதநுக் குவடினைப் படவடித் திடும்வேலா

பனகனைக் கடைவிரற் கணியெனக் கொளுபரைச்
சிவனுருக் கொளுமியற் பகவநற் குணபரப்
பரமநித் தியகுகப் பெருமபொற் சரணசற் குருநாதா

பழமிகச் செறிபொழிற் சுகமறைப் பதமொழிப்
பகர்தரத் தகவுறைத் தவமுனிக் கணமலிப்
பதியிசைத் திருமலைச் சினகரத் தெழிலருட் பெருமாளே.

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தன தான

**175.** குமர குருபர சரவண பவகுக
முருக வறுமுக வெனபுக ழடியவர்
குலவ வருடர மயின்மிசை வருகிற குருநாதா

குருதி கடனிறை வெனவுல கியல்சொல
கரள வசுர்குல கணமற வயில்விட
குமிய மலையென திடரென வகிலமு மிகமேவ

அமர ரனைவரு மலர்மழை பெய்மகிழ்
புநித சுரரிறை தவமுடி வெனவளர்
அரிய சுதையினை மணமுறை தரவணை மணவாளா

அருள்செய் பரைதனு மொழுகமு தினைதின
மினிமை யுறபரு கியகுக வரநிதி
அணிபர சிவசுத கழுக சலமுறை முருகோனே

சமரின் மிகுவலி பெருகிய கனகனை
நொடியி லவனுடல் பிளவெழ வகிரிய
தருண கருமுகி லிணைநிகரரியருள் மருகோனே

சனக ரொடுபல முனிவரர் துதிபணி
யுருகி யவர்தொழு மனநிலை யுறுமுறை
சரிசெய் தவரவர் தெரிசனை பெறநலம் அருள்வோனே

தமய கணபதி நினதிரு கருணையொ
டருஞ்செய் மகனென யிவணியல் பொருளொடு
தருண மழை யெனகவி பொழி வரதமு மருள்வாயே

தருவி னிறையுள பொழில்பல நிரைநறை
பொழியு மொருபெரு மழையென வளமலி
தழையு மெழில்பொழி னகர் திருமலைவளர் பெருமாளே.

தந்தத் தன தன
தந்தத் தன தன
தந்தத் தன தன தன தான

176. சிங்கப் பறவொடு தந்திப் பறள்களி
சிந்தப் பகையிலி விளையாட

தென்றற் கமழுறு சந்தப் பொழில்வரை
செந்திப் பதிவளர் குருநாதா

சங்கக் குழையொடு மென்மைப் புனைகிற
சம்புக் கொருமறை யருள்வோனே

தங்கக் குவடினை செண்டைக் கொடுமுடி
தண்டித் தவனென மிகவோது

செங்கட் பணிதரு மஞ்சொற் புகண்மணி
சிந்தித் தணிசெயு முருகோனே

செம்பொற் கனதன மங்கைக் குறமக
டென்றத் தியமொழி யிபமாது

புங்குக் குடையவ சந்தச் சரவண
பம்பிக் கனமொழி யுடையோனே

பண்பிற் கொருமுதல் நம்பெற் கருள்புரி
பண்டைத் திருமலை பெருமாளே.

தந்த தன தந்த தந்த
தந்த தன தந்த தந்த
தந்த தன தந்த தந்த தன தான

177. தந்தை யென வந்திறைஞ்ச
மைந்தனென தன்புயர்ந்த
சந்ததி விளங்க பண்ப தருள்வாயே

தந்தி முகன் முன்பு சென்று
செங்கைகனிகொண்ட தென்று
சம்பிமுகம் வெம்பி வெம்பி மிகவாடி

வந்ததை யுணர்ந்த வம்பை
தன்கிரி யினின் றெழுந்து
மன்பழநி வந்து கொஞ்ச மகிழ்வோனே

வஞ்சரை வெகுண்டு கொன்று
புங்கவரை யஞ்சலென்று
வந்தருள் சுரந்த பண்பை யுடையோனே

சுந்தரமிகுந் திலங்கு
தண்பொழி லுயர்ந் தடர்ந்த
துங்கமலி கின்ற பண்பை மயில்வீரா

தொண்டர்கள் வணங்குகின்ற
கண்டு நிகரஞ் சொல்வஞ்சி
சுந்தரியி டந்தழைந்த முருகோனே

செந்தில் வளர் கின்ற கந்த
வென்கனவில் வந்திருந்து
செந்தமிழ் வழங்குகின்ற குருநாதா

செந்தன மிகுந்திலஞ்சி
கங்கைவரை யின்கணின்று
செந்திரு வளர்ந்த குன்றில் பெருமாளே.

தனன தாத் தத்த தந்த
தனன தாத் தத்த தந்த
தனன தாத் தத்த தந்த தன தான

178. மலர்கள் பூத்திட்டு கொண்டை
யழகு காய்த்திட்ட மங்கை
வளித னுட்டத் தடைந்த முருகோனே

வருண சேப்புற்ற நந்தி
பொரியி னூற்றிற் பிறந்து
மலைகொ ணூட்டிற் பிறங்கு மொருதேவா

கலக வேறூறிற் சிறந்த
வசுரருக்கத் தளங்கள்
களையவேற் றொட்டதுங்க திறவீரா

கருது பேற்றைக் கடந்த
வரத நீற்றைப் புணர்ந்து
களப மேற்றச் சுமந்த மணிமார்பா

சலன மோட்டற் கமைந்த
முனிவ ராக்கத் தவங்க
டளிர்க ளாக்கிக் கிளர்ந்த பொழில்சூழும்

தரும மாற்றச் செறிந்த
வுரிமை யேற்றுப் பொலிந்த
தணிகை கோட்டைத் தடிந்த வைபோல

பலரு மேற்றக் குவிந்த
நெலினை கூட்டிட்ட பண்டி
பலகை யேற்றிக் கொணர்ந்து பதிமேவும்

பரிய கோட்டைக் கிடங்கி
னிறைய வூட்டிச் சிறந்த
பவிசு வீற்றிட்ட பண்பை பெருமாளே.

தனன தானன தந்த தனந்தன
தனன தானன தந்த தனந்தன
தனன தானன தந்த தனந்தன தனி தான

179. அருண நேரொளி தங்க விலங்கிய
கிருபை மேக முழங்கி வழங் கெழி
லகில நாயக செந்தில் வளம் பதி வளர்நாதா

அடிய ரோடுறை கின்ற சுதந்திர
வுரைக ளாடிய கந்த விலஞ்சியுள்
அமரு சேவக சம்பு வணங்கிய குருநாதா

மருள்செய் வேசை மடந்தை யிடந்தனி
லுறுகுமாசை யொழிந்திட நின் பதம்
மருவு பூசனை வந்தனையும் பணும் அருடாராய்.

வளமை யேமலி பண்பை யிலங்கிய
குமர நாயக வெந்தை சவுந்தர
வரத மாதவ சுந்தரி யம்பிகை யருள்பாலா

கரிய மாமுகி லொன்று முகுந்தனை
யரியமா முவெனுஞ் சொன் வழங்கிய
கதிரை வேலவ குன்றுறை கின்றவ வெனவோது

கருணை வாருதி யெந்தை யனந்தர
முனது பாத நினைந்திவி வம்பிகள்
கயவர் பாதகர் அஞ்சு பயங்கர முறுவாழ்வே

திருவு வாழ் பழனங்கள் வனைந்தமை
திருவு மேவுல கெங்கு முயர்ந்தசை
செழுமை மேவி யிலங்கிய பண் புள பொழிலூடே

தினமு மாமறை யெங்கு முழங்குசொல்
கிளிக ளுதர்க ளஞ்செவி யுஞ்செலச்
செறியு மாமறை தங்கிய பண்பையிற் பெருமானே.

தனன தனத்தத் தனந் தனந்தன
தனன தனத்தத் தனந் தனந்தன
தனன தனத்தத் தனந்தனந்தன தன தான

180 அரவு நெளித்துத் திடங் குறைந்திட
கடலு மலைத்துச் சலம் புரண்டிட
வகில மிருட்டப் புகைந்து வம்பர மிகமேவ

அமரர் பயப்பட் டொதுங்க வெங்கினு
மரிய குவட்டுக் குலம் பெருங்கிரி
யரணி னிருப்புச் சிலம்பலம் பொடு திடமாறி

பரவி குதித்துப் பலங் குறைந்திட
வசுரர் நொறுக்குற் றொடுங்க செங்கதிர்
பரிய புருத்துப் பிளந்திடுந்திட வயில்வீரா

பவள விதழ்த்தித் தனந் தனந்தனை
மனதி னினைத்துக் கயங் கணின்விழ
பருவ குறத்தித் தனங்கரம்பெற மகிழ்வோனே

சிரசி னிரத்னக் குலஞ் சிறந்தெழு
மகுட புரத்தற் கமைந்த பண்பொடு
சிறிய னெனக்குப் பதந் தருந்தகி வரவேணும்

திவவு மரத்தற் கமைந்த சுந்தரி
யழகு தனத்திற் கறந்து தந்தருள்
திவிய முதத்தைச் சிறந்த ருந்திய முருகோனே

வரவு மிகுத் தற்புதஞ் சுதந்தர
வுரிமை யளித்துப் பவஞ் சிதைந்திடு
வாத முரித்திற் றிகழ்ந்திடும்படி யருள்வோனே

மகிமை கிளைத்துத் திரண்ட செம்பணை
மணிகள் கலித்துச் சிரம் பெறுங்கனல்
வயல்கள் வளைத்துச் செறிந்த பண்பொழில் பெருமாளே.

தனன தன தான தத்த
தனன தன தான தத்த
தனன தன தான தத்த தன தான

**181.** குமர சிவ ஞானசுப்ர மணிய னென நாமமுற்று
குரு வெனவு மாகி நித்தம் அருள்வோனே

குணக டலி லேவு தித்த யிரவி யிணை யே நிகர்த்த
குகவு ரிமை யான சத்தி வடிவேலா

சமர்கள் மலி சூரை வெட்டி பலியிடுத லாலவித்த
தலைவ கலையாக மத்தி னிறைவாழ்வே

சர மசர மேவு சுத்த னுறை கனக மேரு வெற்பை
தலை குனிய வே புடைத்த திடவீரா

அமரர் மிக வே துதிக்க துயர வரை யே விடுக்க
யருளு தவி யா தரித்த முருகோனே

அருணை கிரி மே லுதித்த யருணை கிரி நா தனுக்கு
வரிய புகழோத வைத்த குருநாதா

சுமதி யென லானபத்தி கிருபை தமி ழான வித்தை
சுருதி முறை யாகமத்தி னுரைதாராய்

சுமுக கிரு பாக ரத்த முருக சுக வாலை யுத்த
சுகிர்த திரு நாகமுற்ற பெருமாளே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

**182.** தனன தன தான தந்த வென நடன மேவு சந்த
சரவண பவா முகுந்தன் மருகோனே

தளிர் குமர ஞான செந்தில் பழனி யொடு மேரி லஞ்சி
தணிகை வரை மேல் வளர்ந்த முருகோனே

கனசி ரக பாலி தந்த கருணை வடி வே வமைந்த
கனிம துர மே விளங்கு மெழில்வேளே

கவிம ழைக ளே பொழிந்த வடியர் சுக மேவ வந்த
கவுரி யுமை பாலமைந்த குருநாதா

சனகர் முத லோர்க ளென்று மறைவி திக ளே தெரிந்து
தவவுரிமை யே ததும்ப அருள்பேணி

சருவ வுயி ராகி யெங்கு நிலையிலுள தீப துங்க
சதுர் மறை பராவு கின்ற குருநாதா

அனவரத மே மிகுந்த வுனது புகழ் பாடுகின்ற
அருண் மொழிகளே நிரம்ப அருள்வாயே

அணி வரத சோதி பண்பை யர சிலக வே யுயர்ந்த
யரிய திரு நாகமர்ந்த பெருமாளே.

தனத்தனந் தான தான
தனத்தனந் தான தான
தனத்தனந் தான தான தான தான

**183.** அருட்பெருஞ் சோதிநீதி யுதித்தெழுந் தேவ நாத
வனத்தடஞ் சூழமேவு பொழிலூரா

அணிக்கொழுந்தே தயாள மணக்கொழுந்தே தியாகி
யறக் கொழுந்தே வராகி யருள்பாலா

தெருட் கொழுந்தே குணாதி சயக்கொழுந்தே வணாதி
சிவக்கொழுந்தே தணாதி எனவோது

செகக்கொழுந்தே சிவானு பவக்கொழுந்தே வுலாச
சிகிக்கொளுந்தே வுதார குணசீலா

பொருட்கொழுந்தே மகானு பவக்கொழுந்தே பவானி
புகழ்க் கொழுந்தே செயாதி பதியேகீள்
பொழிற் கொழுந்தே விவேக மதிக்கொழுந்தே நியாய
பொதிக்கொழுந்தே புராண முறுவாழ்வே
உருட் கொளுந்தார்கண் மேவு புயத்தலங்கார லோல
வுவப்படங்காத சீல முடையோனே
உயத்தனந் தாருமேபர மலர்ப்பதந் தாமயூர
வுயர்ப்பொழின் கோடுலாவு பெருமாளே.

தனத்தந் தனதன
தனத்தந் தனதன
தனத்தந் தனதன தன தான

184 சுமக்கும் பரிமள கதப்பம் புனைதலை
சமக்குங் குழலியர் பலரோடு
தொடுக்குங் குணமற விடுக்குஞ் செயலருள்
துதிக்கும் பிரபல முடையோனே
நமற்கும் பிணிமிடி பகைக்குங் குறியென
நடுத்திண் டரியென விடலாமா
நடிக்குஞ் சிவபர முதற்குங் குருபர
நளிர்ப்பண்டரி மகிழ் மருகோனே
அமர்க்குஞ்சர மென நொறுக்குந் திறல்செறி
யசுர்த்திண் குலமற வருவோனே
அருட்குஞ் சரிதனை மணத்தம்புய குக
அளிக்கும் பெரு முத லெனவோது
உமக்கந் தமிழ் தொடை தொடுத்தம் புய பத
முதித்தன் பொடு தொழு மெளியேனை
உயர்த்துந் தனமளி பதப்பங் கயமளி
யொளிர்த்தண் டிருமலை பெருமாளே

தான தன தான தான
தான தன தான தான
தான தன தான தான தன தான

185. பாவ வினை யேழை யேனை நேடிவரு தோது ளாகி
பாவி படு பாடை நீபு மறியாமல்

பாறைமன தாகிலாவி போகவிடு வேனதாகில்
பாடையிடை மேவுபோழ்தி லறிவாயோ

நோவ விதியோ குமார சாமி தயை தாதயாள
நூறிலது வோது நீதி முறையாமா

நூலறிவு ளோர்களோது பாகமுத மேவிலாச
நூபுரவ ராகிதேவி யருள்பாலா

கேவலம தாகிலேனை யாவி விடு வேனுலாலே
கேள்சரத மாகுமீதை யறிவாயே

கேடொழிய வோதிநீதி சாரபத மீவையாதி
கீரனுயிர் மேவவோடி வருவோனே

நாவலவ ரோடுகூடி பீடுபுகழ் பாடியாடி
நாளுமறவாத சீர்மை தருவாயே

நாதர்கிரி வாழுமீச தேவ திருவாழ்வின்மேவு
நாகமலை மீதுலாவு பெருமானே.

தனதன தனன
தனதன தனன
தனதன தனன தன தான

186. இளகிலை மனது கருதிலை நினைவு
யிதுவொரு வரத முறையேயோ

எனதிடர் மிடியை பொடிபட வருள
விதுவொரு பெரிய செயலாமா

தளவெழி னகைகொள் வளிமரு வியவ
தனதனை நிகரு மொருசேயே

சரவண பவவு னருட்டரு ததியில்
தரவிலை யெனிலெ னிலையேது

இளமதி யரவ மொடு மலரரளி
யெழிலறு கணியு மொருநாதன்
இசைபுகழ் புகல வருகிற குமர
வெனதக முறையு முயர்வாழ்வே
அளகெழு துவச முடையவ பழனி
யறுமுக கழுகு மலைவாழ்வே
அடியன திடர்கள் பொடிபட வருள்செய்
அணி திருமலையுள் பெருமாளே.

தனத்த தன தான
தனத்த தன தான
தனத்த தன தான தன தான

**187.** நவக்கிரக மாக யிருக்கு மொருசோதி
நகத்திடையுலாவு முயர்வாழ்வே
நளிக்குறவர் மாது தனக்கு மணவாள
நதிச்சடையர் தேரு மொருபாலா
தவத்திலுயர் வான மிகுத்த முனிவோர்கள்
தமக்குரிமையான வரதீபா
தனக்கடவு ளாகி சிகிக் கடவுளாகி
தகர்க்கடவுளாகி வருவோனே
பவக் கடலுளாகி யிருக்கு மடியார்கள்
பகைப்பிணிக ளோட வருடாராய்
பசித்து வருவோர்க டமக்கமுத மீய
பருப்பொருள்களீய வரவேணும்
அவத்தி லெளியேனை விடுக்கி லதுபாவ
மடுத்து வருமேழை யறியாயா
அறக்கடவு ளான திருக்குவ டுலாசு
அணிக்கடவுளான பெருமாளே.

தனந்த தன தான
தனந்த தன தான
தனந்த தன தான தன தான

**188.** முகுந்தன் முத லான வரும் புகழு மீச
முழங்கு கடன் மேவு மலையாளும்

முதிர்ந்த கதி ரோடி யடங்கின தி னேர
முடங்கி விரிவான மதியாலும்
தகுந்த குயி லோசை சுகந் தருந லோசை
ததும்பு மலை காவி னியல்பாலும்
தனங் கன கமான விரண்டு குடமாகி
ததும்பு மயன் மீறு மடமானை
பகுந்த வணை மீது வனைந் திடுவை யாதி
பரன் சொருப மான வரதீபா
பரன் பரை புராரி பலம் பெரு பராரை
பணிந்துருண் மாரவ மலர்தீபா
வகுந்த தினை காவல் புரிந்த குற மாதை
மணந்த மணம் வீசு மணிமார்பா
வளம்பொ ழிலி னூடு விலங்கு நக ராதி
வயங்கு திரு நாக பெருமாளே.

தந்த தன தான தான
தந்த தன தான தான
தந்த தன தான தான தன தான

189 இந்தவுடல் போன போது வந்தருள்வையோ குமார
வெங்கள் மரபாளர் தேடு மொருசேயே
இஞ்சி தின லானதான மந்தி யென வோடியாடி
யெங்கு முறு நாயையாள்வ தெதுநாளோ
பந்த பவ பாச மோட வின்ப முறு பாத தூய
பங்கய மெனுளி லீய்வை யெனநாளும்
பம்பு மன தோடு நேடி வந்தனைசதா தியான
பண்புகழிலான பாட லினிதோடு
அந்த முற லாவு தோது கின்ற டிமை யான வேழை
யன்புடைய வா மகானுபவ வாழ்வே
அஞ்சரண மீதி லேறி வந்தரு ளுவாய் மகாதி
அன்ப ரகமீது லாவு முருகோனே
செந்தமிழ் விலாச ராஜ சுந்தர மயூர நாத
செந்தில் குடியாக வாழு முயர்கோவே

செண்பகவி தானமேவு பண்பை நக ராளுமீச
செங்கமல மாது நாக பெருமாளே.

தத்த தன தந்த
தத்த தன தந்த
தத்த தன தந்த தன தான

190. பற்றி வரு கின்ற முற்புரி பவங்கள்
பற்றற நொறுங்கு மருடாராய்
பட் பொழிலி லங்கு மற்புத மிகுந்த
பட்பகை சொலுஞ்சொ லபிராமி
நற்றவ மிகுந்த புத்திர நலஞ்செய்
நற்குண நிறைந்த முருகோனே
நற்றிரை வழங்க நத்தின முழங்கு
நற்றடம் விளைந்த வயலூரா
கற்றறிவி கந்த பற்றலர் புரங்கள்
கட்டொழு தழுங்க நகைவீரன்
கட்சுத முகுந்த னட்பமை வுகந்த
கந்து திரை செந்தி னகர்வாழ்வே
செற்றைவரு கின்ற துற்றெழி லிறும்பு
திக்குயர மந்தி யறியாமல்
திக்கிட வமைந்து பக்கலில் விளைந்த
சித்திரு நகங்கொள் பெருமாளே.

தய்ய தானன தானன தானன
தய்ய தானன தானன தானன
தய்ய தானன தானன தானன தன தான

191. வள்ளி நாயகி யார்தன மீதுகை
மெள்ள வேயிடு மோகவ ரோதய
வல்ல வாகிரு பாநிதி யேதயை யுடையோனே
வய்ய மீதினி லேவுனை யேயல
தில்லை யாதர மாதவி ஞலருண்
வள்ள லேயெனை வோதிப வேதனை புணராமல்

என்னை லாய்விடு லோவுனை யேசுவர்
அய்ய கோவென தாருயி ரானவ
இல்லை யாதயை யாதரி யாதரி எனநாளுந்

எய்ய மாபவ கூடிடை யேபடு
பய்ய லைழை யுஞு ரருளார்கடல்
இல்லை யேயெனி லேவுயி ரேவிடு மறிவாயே

சன்னை யாகிய தாகவு மேவரு
கொள்ளை நோய்களுமே யறவே யருள்
தல்வி சாமளை யாமளை யாடரு முருகோனே

தய்ய லார்சுக மேலமை வாகிய
மய்ய லோடிட வேசெய தாளல
தல்ல தேகெதி யாவினி தார்பதம் அருள்வாயே

தெள்ளிதாகிய நீரினிலேகயல்
துள்ளிதாமரை மீதினிலே துயில்
சில்ல தாகிய வாளைகளே கமு கிடைமேவி

செல்விலேறிடுமீளும வாறிடை
நெல்விலே விழும்வார்பணை சூழ்புன
தெள்ளியோர் மிகு மாதிரு மாமலை பெருமாளே.

தனன தான்ன தானன தானன
தனன தானன் தானன தானன
தனன தானன தானன தானன தன தான

192. உலகி லேபெரு வாதைபு ளேவளர்
சிறுவ னுமென தாருயிரானவ
உனைய லாதிலை யேகெதி நீதயை தரவேணும்

உயர்வி னுகிய தேவவ ரோதய
கிருபை நாயக மேதரு வேநிதி
உறுதி காரண மாமயி லேறிய முருகோனே

அலகி லாபுக ழாரண மாமுத
லென நிதானி வரோத யனேகுக
வமுத தூயச தாசிவ னாருள் பெரியோனே

அரிபி னேவரு மோர்பரை யாமளை
குமரி நீலிபு ராதனி சாமளை
அகில நாயகியாகிய கோமளை யருள்பாலா

பலக லாநிதியேயென வோதிய
தமிழி லேபெரு நாவலர் நாவுரை
பகர பூரண மாகிய தோரருள் புரிவோனே

பரம ஞானகு ஞ்சுர நாரணன்
மகிழு மாமரு காவளி காதல
பரவு மாதவர் நேயதயாபர னெனவோது

நிலவு பூரண மாமதி போன்முக
மிளிரு காளியி ளுலைய மேன்வட
நிலையி லேபெற மேல்திசை பூசனை யுடையோனே

நிலை கொண் மாதிரு மாதருண் மேவிய
புனித பூதர மேலெழி லோர்திக
ணிமிரு மாதளி மீதுறைகாவல பெருமாளே.

தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா தனத்தா தன தான

**193.** குகத் தே நினைத் தே
குறித்தே புகழ்பாடு

குணத் தோ னெனத்தேர்
குதித்தோ னருள்பாலா

அகத் தே யிருப்போ
யகற்று தெனையாள்வாய்

அரித் தே வருக் கோர்
அருட்சேர் மருகோனே

நகக்கா வலக் கோ
நலக்கா வினிதாக

நார்க் கோ சுரர்க் கோ
நளிர்க் கோ வெனவோது

செகத் தோர் தவத் தே
தினத் தோர் புடையோனே

திருப்பூ தரத் தே
செயத்தார் பெருமாளே.

தத்தன தன தன
தத்தன தன தன
தத்தன தன தன தன தான

194. அப்ப மோ டவல்பொரி பிட்டொடு வடை கனி
யத்தகி யமுதொடு பலவாக
அச்சமை விரகினி திற்சமை யமுதொடு
அற்பொடு படையடி யவர்பாலில்
தப்பற வருடரு முத்தம கணபதி
தற்றுணை யெனவரு முருகோனே
சக்கர கருமுகி விற்கொரு மருமக
தற்பர திரிபுரை யருள்பாலா
எப்பவு முனதடி பற்றிய வெனதக
மிப்படி மயலுற மிடிமீதி
விட்டிடி லெழியனு மெப்படியுய கெதி
யெட் படிவமு மிலை யருடாராய்
சுப்பிர மணிய வெ னுத்தம குண நிதி
சொற்றமி ழருளிய குருநாதா
சுற்றுடை பொதுளிய பட் பொழின் மருவிய
சொற்றிரு மலை வளர் பெருமானே.

தனத்தன தனத்தர்
தனத்தன தனத்தர்
தனத்தன தனத்தர் தன தான

195. துதிப்பன துதித்தும் படிப்பன படித்துஞ்
சுகிர்த்திலை யுனக்கன் பினியேனும்
துடர்ப் பவ மறுத்தும் பதத்துணை யளித்துஞ்
சுதற் றர மளிக்கும் படிவாராய்
பதித்தவர் மனத்தன் புதித் தருள் விளக்கும்
பதிப் பொருள் கொடுக்குங் குருநாதா
படைப்புயிர் களுக்குங் கொடுப்பன கொடுத்தும்
பகைப்பிணி யொதுக்கும் பெரியோனே

திதித் தவண் முகிற்கும் பொருட் சிவ பமைக்குஞ்
சிறப்பமை புகட்டந் தெழில்வீரா

திறத் தயில் பிடிக்குங் காத்தவ கரிப்புன்
சிரிப்புற வணைக்கும் புயவீரா

கொதித்தம ரெடுத்துந் தனத்தையு மொழிக்குங்
குலத்தையு முடிக்குங் கொடுசூரை

குடற் சிதை படுத்தும் பரப் பொருள் பொழிற் பண்
கொளுந் திருமலைப் பொன் பெருமாளே.

தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன தனதான

**196.** அந்தி வானிற மெனு முன தழ கினை
கண்டு நாணின ரவியெனி னறுமுக
வண்ட கோளகை யிடமதி லுனதிணை யெவராகும்

அந்த மேவிய பசியசை வலமென
வந்த மாதவ னழகிய மருமக
வம்பு யாபல தகர்மிசை யிலகிய ஜெயதீரா

தந்தி மாவரி யெறுமுறை வரை வளர்
துங்க வாதர வளிநினை வுள பர
சங்க கீரனி னுயிர் பெற வுதவிய வருளாளா

தந்தை நீயென வுனதிரு பதமலர்
நம்பினே னெழில் மருவிய பதமருள்
தந்தி மாமுக னிளையவ னெனவரு முருகோனே

முந்தை யோர்சிவ கவிபல விருதுகள்
கும்ப மாமுனி வரனய னிவர்துதி
முன்பி லேயருள் குருபர சரவண பவநாதா

முன்செய் மாதவ முளதிரு மகனென
சிந்தை யானினை யுயர்நல மருளுவை
முன்றி லேறலை வளைமணி பலுகிய வளமேவு

செந்திமா நகரிட மதி லிலகிய
கந்த னேபா தருநிகர் தரு கர
செம்பொன் மேருவை யுதமழி படவிடை யயில்வேளே.

செங்கண் மால்பணி யுடல் நெளிவுற நட
நின்ற மாமயின் மிசைவரு குருபர
தென்றல் மேவிய திருமலை தனிலுறை பெருமாளே.

தனந் தானன தானன
தனந் தானன தானன
தனந் தானன தானன தன தான

197. வணங்கோ டுறை நாயக மனம் பூரண மாதவ
மகிழ்ந்தே பணி மேலவ ரகமேவி

மணந்தே றெடு பாயச மிடும் பார்பதி கோமதி
மகம்பே றெனவே வரு முருகோனே

தினந் தானுனை யேதுதி புரிந் தாருள மீதொளி
சிறந் தேவரு சேவக குருநாதா

திடந் தேர்பொதி காசல மிடஞ் சேர்குரு மாமுனி
செயம் பூரணமே பெற வருள்வோனே

தனந் தானவ ராவண னுடன் கூடிய வீரர்கள்
தளங் கோடிக ளாமென வருசூருஞ்

சரங் கோடிக ளேவின ருடம் பாறிரு கூறுடை
தவந் தாவிய ராகவன் மருகோனே

கனங் கார்கரி யானன னுரந் தானற வேல்விடு
கணஞ் சேர்தகர் மீதிவர் செகவீரா

கனிந் தேபத மாமல ருகந் தேதர வேததி
கனஞ் சீர்திரு மாமலை பெருமாளே.

தந்தனந் தந்தனந்
தந்தனந் தந்தனந்
தந்தனந் தந்தனந் தன தான

198. சந்தனம் பொன்கமழ்ந் தொங்கலுந் தங்கிடுந்
தண்கவின் கொண்டிலங் கெழின்மார்பா

சந்ததஞ் சிந்தைகொண் டன்பர்தம் பங்கயந்
தங்கரண் டங்குமுண் டகபாதா

கந்தரந் தென்றலுந் தங்குமன் கொங்கொடுங்
கந்தியுங் குங்குமம் பலவோடு

கண்டலுஞ் சந்துயர்ந் தெங்கொடும் கொன்றையுங்
கண்டடம் பம்புறும் பொழிலூரா
செந்தனங் கண்டுவந் தின்பெழும் பண்புறுஞ்
செந்திலங் குன்றுறைந் தெழில்வீரா
திண்புறுங் கண்பொழின் கண்கனந் தங்கிடுந்
தென்றடந் தென்பரங் கிரிவாழ்வே
பந்துறுஞ் செந்தனங் கொங்குறுங் கொந்தளம்
பைம்பொனின் பொங்குமின் பழிமானார்
பங்கடைந் துன்பறும் பொன்பதந் தந்தருண்
பண்பையங் குன்றினின் பெருமாளே.

தந்தனந் தந்தன
தந்தனந் தந்தன
தந்தனந் தந்தன தன தான

**199.** அண்டருங் கண்டுனது செம்பதந் தண்டனிட
அஞ்சலென் றங்கருளு முருகோனே
அன்புறுங் கும்பமுனி கெஞ்சுறுஞ் செஞ்சொன்மறை
அன்றவண் டந்தசிவ குருநாதா
திண்கொளுஞ் சங்கவுணர் எங்கினுந் தங்கிபொரு
செங்களந் துஞ்சவயில் விடுவோனே
திங்களுங் கங்கையணி சங்கரன் றந்தசுத
செண்பகந் தங்குபொழில் வயலூரா
மண்டுறுங் குன்றுசிறை கண்டமுண் டங்குவிழ
வண்டிறங் கொண்டவரி மருகோனே
வண்டினங் கண்டுதொடர் கொண்டலங் கொந்தளக
மண்டலம் பம்பிவரு மடமானார்
பண்டரும் புன்சொன்மொழி துன்பமென் றங்கவர்கள்
பண்பறும் பொங்கமிகு முனிவோர்பால்
பண்பொடுந் தங்குக்குக செம்பதந் தந்தருள்செய்
பண்பையங் குன்றிலுறை பெருமாளே.

தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன தன தான

**200.** ஆசை வைத்தம னத்தைவ ளர்த்திகள்
கேடு கெட்டலை சித்தச மர்த்திகள்
ஆத ரத்தையொ டுக்கிய வுத்தம முடையோரால்

ஆர புட்பம ணித்திரள் பெற்றுயர்
தீர பொற்புய முக்கணி புத்திர
ஆலி லைத்துயி லுற்றவ னற்புத மருகோனே

தோகை யிட்டிலி புட்டொடு முப்பழ
மீதி லிச்சை வளர்த்த கரிக்கிளை
தூய வித்தக வத்திய ணைத்திடு மெழில்வேளே

தோட முற்றுவ ருத்துத லிற்றிட
பாபம றிட நற்கருணைக்குக
தூய பொற்பொரு ணற்பத மெற்கினி தருள்வாயே

பாச முத்தமிழ் மிக்குயர் வித்தக
வேடு வச்சிம ணத்தக னப்புய
பாத கத்துரு பெற்றக ணத்திர ளகமேசர்

பாள மெட்டென தொட்டயில் விட்டுடை
வீர வுக்கிர சத்திதி டப்படை
பாநு வொப்பென வைத்திடு கைத்தல முடையோனே

தேசையுற்றவ னக்கவ னத்திடை
சீய மத்திசி றுத்தையு ரப்புலி
தேவ நற்பசு வொக்கத டத்திடை யுறவாருஞ்

சேம முற்று வளப்பமி குத்ததில்
வானு தித்தென முத்தமு தித்தெழு
சீர்மை பெற்றுயர் நற்றிரு வெற்புறை பெருமாளே.

தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன தன தான

**201.** மனத்தினற் குக சரவண பவனென
வுனைத்து திப்பவர் பொருளுடை யவரெனின்
மதித்து மீற்புத மருள்செய கனவினில் வருவோனே

வணக்க மிக்கொடு வுருகுமெய் யவரிடை
பணத்த னப்பொரு ளுரிமைக ளிலையெனில்
மகத்து வத்தொடு தெரிசனை யுடனருள் புரியாதேன்

அனைத்து யிர்க்குயி ரெனநிறை யிறைவனு
மினைத்து ணைத்தென விலகினி லெவரிதை
அழித்து நற்புக ழுறநெறி யிதுவென முறையோதும்

அனந்த னிர்த்தன ளுடுகரு முகில்புகழ்
குணத்த ருட்டபரை யருளிய குருபர
அளிக்கி ருப்பிட மெனவடி யவருரை குருநாதா
தனத்த தத்தன தனதன தனதன
திமித்தி தித்திமி திமிதிமி திமிதிமி
தகுக்கு குக்குகு குகுகுகு குகுகுகு ததிதோதை

தனித்த னித்தனி னினினினி னினினினி
தடட்ட டட்டட டடடட டடடட
தரித்த ரித்தரி ரிரிரிரி ரிரிரிரி தமிர்தாளம்

சினத்த திர்த்திட வருமசுர் பலதிரள்
தொகக்கி ழித்தெழ விடுவயிற் றிடவலி
செனித்த கைத்திற நடமிடு மயின்மிசை வருவோனே

செழித்த முத்தமிழ் பொருள்சொலு வலிமைகள்
கொடுத்து நித்திய பதமருள் ததியிது
திருத்த லர்ச்சுனை மருவிய திருமலை பெருமாளே.

தன தனன தனதனன தன தான தத்த தன
தன தனன தனதனன தன தான தத்த தன
தன தனன தனதனன தன தான தத்த தன தன தான

202. அருகமத சமயமது வுயர்வாக மற்ற நெறி
யழியவென கொடுமை புரிபவரொ டெதிர்த்துபர
வரியவைகை நதியிலிடு மறையேகு டக்குசெல வதனூடே

அனல் தழைய நடுவிலிட ரவியேயொளிறத் தழையு
மருமை நிறை சிவசமய மதமே நிலைத்தவழி
அமணமத முளகுரவர் கழுவேறி டச்சபத வுரையாலே

குருவெனவு நிழலமர பணிமாற னுக்குரிய
சுரமகல நலமிலக வணிவோரு மிச்சமய
குலவழியி னிலவிவர வருமேனி றைத்தகுண மிகலாலே

குலவகில மகிமைபெறு புவிராசர் சொக்கர்சின
காசபரி முறையொழுக தவமீறு நற்செழியர்
குலமிலக வளருலக வறமேறி டக்கருணை புரிவோனே

கருமுகிலை யனையநிற முடையோ ராக்கர்வழி
வருமிரணி யனினகடு பலபோழ் வெனப்பட செய்
கதிர்கொளரி சுதபிரம முடிமே லடித்தருமை யருள்வோனே

கணபணிகள் கயகரிகள் திரிலோக கத்தரிவர்
உரமுடைய நடனமிடு மயில்வீர வுக்ரமிகு
காளநிக ரவுணர்களை யறவேயொழித்த திட செகவீரா

பருவமுகி லெனவுதவு கொடையாள ருக்கரிய
மனமுடைமை பொருளுடைமை யினிதே கொடுத்துவரு
பரசிவனி னுதலிலெழு பொறியே றெனப்புகலு முருகோனே

பழகடிமை யெனதிடரை பொடியாய் நொறுக்கி யுயர்
பதமலரை யருளுதவி யிதுவே யெனக்கருள் செய்
பவளவண மெனவொளிசெய் திருமா மலைக்குமர பெருமாளே

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

**203.** தணிகை மாமலை மேவிய சீரா
ளுரிமை மாதவ மேபுரி வேளையில்
தவமி தாமென ஒழுறை யார்பொரு ளருள்வோனே

தனிய ளாகிய மாதினை மாதினை
மருவ வார்வமு மேலெழ வேல்விழி
தலைவி யோடுரை யாடிட நாடிய முருகோனே

கணிமை போதினி லேயரு ளேதரு
மமரர் நாயக ஆதிவி நாயக
கவினி லேறிய மாமயின் மீதுறை செகநாதா

கனக மால்வரை யாமென வேபுய
முடைய மாதவ சேவகனே திரு
கழுகு மாமலை மேவுபு ராதன குகநாதா

குணிகொ ளுதநி சாசர் சேனையை
யரைவி ளுடியி லேயொழி மாவலி
குமர பூரண சாமிவி நோதமு முடையோனே.

குருவு மாகமுன் மேல்சன காதியர்
அறிய மாமறை யேசொலு மாபர
குவடு மீதுறை வேலவ வாறிரு புயவேளே

அணியு மாபர ணாதிக டேவர்க
டமது ஆறற வேயருளே தரு
மறிமு காகுக வேல்முரு காவருள் புரிவோனே

அடிமை யேழையு னாதர மேகெதி
பதமதா மலரே தரவே தகி
அருமைசேர் திரு மாமலை மேவிய பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

**204.** மனத்துயர் பறுத்து நிதித்திரள் கொடுத்து
மதிப்பத மளிப்ப தெதுநாளோ

வருத்திய வருத்த மிகப்பவ கடற்குள்
வழுக்கவு ளமைத்த வியல்பாமா

மனத்திடை யுதித்த புகழ்ச்சொல வுரைத்து
வரைத்தமிழ் கொடுக்கு மொருதேவா

வழக்கிடு மெனக்கு புகல்ச்சொல வுனக்கு
வழக்கிலை பதத்தை யருள்வாயே

கனப்பொருள் படைத்த வருக்கமு தருந்தி
கணத்திடை யவர்க்கு முயர்வான

கனிப்பத மிருத்தி தவத்தினர்களுக்கு
களிப்புற வருட்செய் திடுவோனே

எனக்கினி தளிக்க வுளத்திடை நினைக்கி
விருப்பனு னுளத்தி லிலையாகில்

இறப்பது திறத்தில் நினைத்துடல் விடுப்பல்
எழிற் றிருமலைக்குள் பெருமாளே.

தனத் தந்தன
தனத் தந்தன
தனத் தந்தன தன தான

205. நினைப்பின் படி பிறப்பன் பற
நிலைக்கும் பதம் அருள்வாயே
நிறைத்தின் பொடு துதித்தென் புகழ்
நெகிழ்க்கும்படி வருமேழை
தனைப்பண்புயர் துணைப்பொன்பத
தளிர்ப்பங்கய முடையோனே
சகத் தன்பர்கள் பவக்குண்டுடல்
சதைக்கும்படி விடலாமா
உனைத் தண்டமி ழினப்பன்மொழுடை
உரைத்தன்புசெ யடியேனை
உலைப்புன்பவ முடைத்தென்பினை
உதிர்க்குந்திற மதனோடு
எனைக்கொன்றுயிர் துடிப்பொன்றிடி
விகழ்ப்புன்சொலு மனுகாதோ
இதுக்கென்புகல் திருப்பண் பொழில்
எழிற்குன்றுறை பெருமாளே.

தனதன தனத்த
தனதன தனத்த
தனதன தனத்த தன தான

206. உயிரற வுருக்கி வருகிற பவத்தை
யொழியென வுரைத்து மிதுநாளும்
உயர்சுக மளிக்க மனமிது வரைக்கு
முருகிலை யுனக்கு மெதினாலோ
கயிரவ நிகர்த்த விதழ்வளி யணைத்த
கனபுய முகிற்கு மருகோனே
கதிரயில் பிடித்த குருபர வெனக்கு
கதிதரி விருப்ப மிலையோயோ

தயிருடை படைத்த தெனமன முடைத்த
தளிர்பவ கடற்கு ளறமுழ்கு

தமியனை யெடுத்து நிலைபெற நிறுத்து
ததியிது விடுக்கி லுயிர்போகும்

பயிலருணிலைத்த வளமுடையுடுத்த
பகவதி தவத்தி லெழுசேயே

பகைபிணி பவத்தை யொழிபதமுறச்செய்
பதி திருமலைக்குள் பெருமாளே.

தன தனத்தன
தன தனத்தன
தன தனத்தன தன தான

**207.** உயிர் குடித்திட வரு பவத்திடை
யுற வருத்திய எழில்வீரா

உனைய டுத்தவர் கவலை மைக்கட
லுற வமைத்திடல் முறையேயோ

பயிர் படைத்தவர் இடை யறுத்திலர்
படுகளைப் பறி பணுவார்போல்

பவமிடித் துயர் அறவொழித் தெழில்
பதமளித்தி டும் அருடாராய்

செயிரறுத்த வர் நல மனத்திடை
திகழு முக்கணி யருள்பாலா

செறி மிடிக்கொரு குறியெனப் புகல்
சிறுவ னெற்கினி தருள்வாயே

பயில் பதப் புக ழினை நினைத்தவர்
பவ மறுத்தவ ரெனவோது

பகவ வற்புத பொழி னகர்ப்பதி
பதியு முத்தம பெருமாளே.

தன தன தான தான
தன தன தான தான
தன தன தான தான தன தான

208. படுபவ வாரியூடு வலைபடு தூசிபோல
படமுடி யாதநோவை யுடையோனும்

பரவிய லோகமீதி லொருநரனுகு மேழை
பழகிய நாயை நேரு முடியேனும்

நடு நிலையான பாத மலரிணை நாளு நேடி
நயமுறு பாடலோது மருடாராய்

நவ நிதி யான தேவ குரு பர ஞான மூல
நதி மதி சூடி யாடு மொருநாதன்

வடுவறு சோதி வீசு மறு சுடர் மீதி லான
வரகுக வீர தீர முடையோனே

மக பதி பாரியோடு புரிதவ மான வானை
மருவிய கோல சீல னெனலோடு

நெடுவரை மீதுலாவு மொருமுத லானசோதி
நிதி பதி யாதியான முருகோனே

நிலை பொழி லூடுமேவு பொழினகரீசராஜ
நிமிர்திரு நாக மீதில் பெருமாளே.

தனன தந்த
தனன தந்த
தனன தந்த தன தான

209. மன மிரங்கி யருள் சுரந்து
மகிமை பொங்க வரவேணும்

வரத வுந்த னடிமை யெந்தன்
மனமறிந்த குருநாதா

கனமிரங்கு பொழிலடர்ந்த
கனி நிறைந்த பாழிலூரா

கதிரெழுந்த வயில் சிறந்த
கரமிலங்கு மொருவீரா

வனமிலங்கு சுனையிடங்கொள்
மலரணிந்த புயவேளே
மறை முடிந்த முடியிலங்கு
மகிப கந்த குகநாதா
தின முவந்து புனித மிஞ்சு
செயலமைந்த வொருதேவா
திருவளர்ந்து நல மிகுந்த
திரு நகங்கொள் பெருமாளே.

தனன தன தான தன
தனன தன தான தன
தனன தன தான தன தன தான

210 அருண கிரிநாதர் புகழ் அணிகுமரனே முருக
அறுமுக குகாவரத முடையோனே
அரிய மறையே பரவு சரத மயின் மீதுலவும்
அழக குழகா பழனி வுறைவோனே
தருண மிதுவே யருள்செய் விடில்கதியிலா தறிவை
சமய குரவா வடியர் பெருவாழ்வே
சருகு கனி மூலமிவை வுணவெனு வூண்முனிவர்
தனதகமுலாச குரு பரநாதா
அருண நிகரான வயில் பழகிநிமிரோர் புகர
யமுத வடிவே குமரி திரிசூலி
அருளொழிலி யானபரை புவனைகவு மாரிமகிழ்
அனவரதனே புனித முடையோனே
தெருணயம தானபெரி யவர்களிடமேவி வளர்
தெளிய பொருளே வுதவு முருகோனே
சிறுவ னுனதாளடிமை கிருபை தருவாய் தனத
திருமலை யுலாவி நிறை பெருமாளே

தான தன தான தான
தான தன தான தான
தான தன தான தான தன தான

211. பாவ விரு ளோட வோட ஞான வொளி வீச வீச
பாரபுக ழோடு கூடு மருள்பாட

பாதமலர் சேவை நாளு நாடுத லிலாத தாகி
பாவை யர்கள் போக மோக வலையூடே

தாவரமதாகி வோடி வீழுமுழு மூடமாடு
சாதனையிலாத ஞானி யதனோடு

தாபதர்க ளோடுகூடி தேடுதவமே செயாத
தாயகமிலாத பாவி யெனுமேழை

மாவலவனே தயாள சேவக மயூரநாத
வாச மலரான பாதம் அருள்வாயே

வானு லவியாடு சோலை மீதுமுகிலே பராவு
வார்பொழில்கள் சூழுமேவு வளநாடா

சேவல் கொடி யாடவாகை கூற கவிவாணர் பாடல்
சேர மயில் மீதுலாவு முருகோனே

தேவி திரு மாது வாழு நாக மலை மீதி லேறி
சீர்மை பெறு லோக நாத பெருமானே.

தத்தனத் தனத்த
தத்தனத் தனத்த
தத்தனத் தனத்த தன தான

212. எய்த்திளைத் தலுத்து பற் பலத்துணிக்குள்
இற்றிடப் படைத்தல் முறையேயோ

இப்படிக் கொறுத்த லெப்படிப் பொறுப்ப
விப்படித் துயர்க்குள் இடலாமா

மைத் தடக் கணிச்சி சிற்றிடைக் குறத்தி
வட்டு ருட்டனத்தின் அதிமோகா

மச்சி னத் தெடுத்த பச்சையிற் கொழுத்த
மச்சனுக் குரித்தின் மருகோனே

நைத்திகிச் சுவைத்த வெச்சில் கட் செவிக்கொள்
நச் சுறைக் கழுத்த னெனவோது

நற் பரற் பரைக்கு வற்புதப் பெருக்க
நற்சுதற் கரிக்கு மிளையோனே

கைத் தவற் கிடுக்க ணுற்றிடக் கெடுத்து
கற்கு வட்டுறைக்கு ஞயர்வோனே

கற்பகத் தருக்கண் மிக்குளப் பொழிற்குள்
கற்றிருக் குவட்டுள் பெருமானே.

தனதன தான தான
தனதன தான தான
தனதன தான தான தன தான

**213.** படமுடி யாத தான மிடி கடல் மூழ்கு வேனை
பலுகரு ளோடமேறி வரவேநீள்
பரிவுட ஞன தான பத மருள் யேழை யேழை
பகர் கதி லோக மீதி விலைநீகை
விடியுயிர் போகு மீது சரதம தாகு மானை
மெலி வதினுனை நீட விடுகேனுன்
மிகு பொருளாளர் நேடி யொரு கவி பாடிடாத
மிளிரடி யேனை யாள அறியாயேல்
கடமுடைவாக வேறு வகை புரிவே னலாது
கதி யிலை யேவர் பாலு முறையாடேன்
கனி புகழ் பாட லூடு சொலு மனு வோர் கிலாது
கழிவதி லாயிலேழை யெவர்பாலில்
அடமொழி கூறிவாழ வணுகில னீதியான
வரர்சுத யாவர்பாலு மணுகாது
அடையடி யேனைநீகை விடிலது பாவமாகும்
அருடிரு நாகமேவு பெருமாளே.

தனத் தன தான தான
தனத் தன தான தான
தனத் தன தான தான தன தான

**214.** வயிற்றிடை யூதுவாயு மிடிப்பகை சேரலாகி
வருத்திய நோவுதீர வரவேணும்
மதித்த றியாத மூட ரகத்த மையாத சோதி
வகுத்தனை லோக மீதில் நானுகை
வயித்திய னுக நானை கழித்திட லாட மீதின்
வரைத்தவை பேச நாவு மிகநாணும்
வரத்துடை யேனையாள வரத்தரு யே குமார
வரைக்குக நானை நீட விடுவாயேல்
நயித்தவ னுகி வீழ வுடைத்தவ னவை யாகம்
நசித்திடு மேழை பாவ முனைமேவும்

நயத்தடி யேனை காவல் கொளிற்றிரு மாது சேர்வள்
நலத்திடை யேழை யேனு முளனுவேன்

செயித்தவ னூழ லோகை யெனப்பெரி யோர்கள்பேசு
சிறப்பமை வாகி மேனு மினிதாவாய்

செழிப் பொழி லூடுலூரை யமைத்த தின் வாழுமீச
திருக்குவ டேறி மேவு பெருமாளே.

தந்த தத்தன தானன தானன
தந்த தத்தன தானன தானன
தந்த தத்தன தானன தானன தன தான

**215.** தொண்டை கட்டிய தாகிய தோர்பிணி
வந்து பற்றிய தாதலி னாலதை
துண்டு பட்டிட வேநல மேதர வரவேணும்

துங்க வற்புத தேவவ ரோதய
கந்த நிற்பத மேகெதி வேறிலை
தொண்டி யற்றிய தாகிய வேழையி னிடமாக

வண்டமிழ்ப் புகழே சொல வோர் மொழி
தந்த நித்திய நேயகு ணாநிதி
மைந்த னெற் கினிதாகிய பாதம தருள்வாயே

வண்டு சுற்றிய மாமலர் சூடிய
கொண்டை நற்குற மாதி தயாசன
மஞ்செனப் புகல் மாதவனு மருகன் மருகோனே

செண்டினைக் கொடு மாமக மேருவை
தண்டிதத் திறன்வீர திவாகர
செந்தி னற்பதியே ரக மேவிய வொருதேவா

செண்பகப் பொழிலூ டுறைகோ மளை
சுந்தரீ பரை கோமதி யாமளை
செங்கயற் கணி மாதுமை யாள்தரு முருகோனே

அண்டினர்க் கருளா தாரமே தரு
பண்பொழிற் பரமே சிவமே நிறை
அன்பினிற் கெழு தூயவ சேயவ னெனமேவாது

அம்பரர்க் கொரு சேவக னாகிய
பம்பசுர்க் குலகால மகா திட
அந் திருப்பதி மாமலை மேவிய பெருமாளே.

தன தன தனந்த
தன தன தனந்த
தன தன தனந்த தன தான

**216.** நடையினின் மெலிந்து பசியிணி யலைந்து
நலமது மொழிந்து வெகுநாளாய்

நனிபவ விடங்கொள் கடலிடை புகுந்து
நலிதலி லுடைந்த அடியேனை

கொடை மலி வெழுந்த மன மல ரிரங்கி
குண பத கலங்க விடைசேராய்

குண கட லெழுந்த ரவி யென விளங்கு
குரு பர சுகந்த மணிமார்பா

இடையிடை யெழுந்து வரு பிணி யொதுங்க
யெழிலருள் சுரந்த முருகோனே

இமையவர் வணங்கி வருகிற முகுந்தன்
இசை பெற வளர்ந்த மருகோனே

வடையவல் கனிந்த வெளிவிளை நிறைந்த
வணமுண நிமிர்ந்த கணநாதன்

மதிதுணை பொதும்பர் மருவிய வளங்கள்
வளர்திரு நகங்கொள் பெருமானே.

தனதன தனன
தனதன தனன
தனதன தனன தன தான

**217.** எதுவெது வரினுமுன திணைமலரை
யெழுமிமை யளவும் மறவாமல்

இலகிய வடிமை யருள்தனையபுரிதி
யெவரிட மறுகி யுறுவேனுன்

கதுமென விரைவி லொரு திருமயிலில்
கடல்கதிரெனவும் வரவேணும்

கனமுகின் மருக பருவதகுமரி
கனியென மொழிய வருசேயே

பொதுசபை நடன மிடுபவர் தமது
புகழ்பெறு புதல்வ னெனவோது

பொருவறு குமர குருபரவமர்ந்த
புனிதவ முடைய பெருவாழ்வே

ததியிது தவற விடில்கெதியிலது
தருமமொருருவ அருள்தாராய்

தமிழ் மழை பொழியு மடியவர் பெருகு
தனதிருமலையுள் பெருமாளே.

தன தன தான தான
தன தன தான தான
தன தன தான தான தன தான

**218.** புகழ்கவி பாடுமேழை மனநிலை யோர்கிலாத
புதியவனுகில் கால மினிதாமா

பொருமிடியோடு கூடி பிணிபகை சேரலான
புவிமிசை நோவினூடு விடலாமா

சக முறுவாழ்வு தீது வெனமுனி வோர்கள் பேசல்
சரதம தானவாய்மை யறிவேனே

தனபதி யேகுமார வருணிதியே குபேர
தளபதியே சிவானு பவநாதா

இகபர மேவலான பொருள்பத மீதயாள
விமையவ ராதி தேரு மொருபாலா

எனமொழி கூறிநாளு முனைமறவாத சேவை
யினை சிறிதேனுநீயும் அறியாமல்

நகமிசை வாழிமேலவர் இடமுரை யாடலாகும்
நலமனதோடு நீயும் அருளாயேல்

நளிருட நீததாகு மிதுமறை மீதுவாய்மை
நகைதிரு நாகமேவு பெருமாளே.

தன தன தனனு
தன தன தனனு
தன தன தனனு தன தான

**219.** உடனலமிலகா திதுவரை யெளியே
னுறுதுய ரிடையே தடுமாறி

உலைவதை யறியா வணமனமுறிலோ
வுடையவ ரெவரா மறியாயோ

கடமிடு பிணியா மடுபகை மிடியா
நலிபவ விடாரா மிவையாவும்

நசி மசி யெனவோ மொரு மொழி பகர்வே
நடு நிலை தவறு தவர்பாலில்

கடமுண வருமோர் பவபுலி யறவே
கதி ரயில் விடவே வரவேணும்

கனிகளை யு கிரால் பிள வெழுவு ணுமோர்
கனமுகி னிறமார் பெருவீரன்

தடமகிழ் மருகா குருபர வரதா
தனியயில் குமரா மயில்வீரா

தமிழ் மழை பொழிவோ ரகமிசை வளர் வோய்
தன திரு மலைவாழ் பெருமாளே.

தந்த தன்ன தானன
தந்த தன்ன தானன
தந்த தன்ன தானன தன தான

**220.** தொண்டை கம்ம லால்வரு கின்ற வின்ன லோடுறு
துன்ப மென்ன லாகிய பலநோவும்

தொண்டு பண்ணு வோரிடை வந்து மன்னிடா வென
துங்க மின்னு மாமறை களுமோத

அண்டி வுன்னை நாடொறு மொன்ற வுன்னியே தொழும்
அன்ப னென்ன வேயருள் புரியாமல்

அஞ்சு வன்ன மா மயில் கண்டு தன்ன தா மென
அன்பு துன்னவே வுரை பலகூறி

மண்டி யன்ன தே செய லென்று வுன்னை யோர்கிலை
மஞ்ச னென்ன தாகிய துயர்போக

வந்து நன்மை யேதர வின்று னுன்ன தா நலம்
மஞ்சி தென்னவே யருள் பொழிவாயே

விண்டு வென்னு மாலரி தங்கை யன்னை கோமதி
மிஞ்சு புன்னை யாவுடை தருபாலா

விண்டு தென்னை மாழிநலி கந்தி மன்னு மாதிரு
விண்டி றொன்மை யாய்வளர் பெருமாளே.

தனத்த தனனு தனன
தனத்த தனனு தனன
தனத்த தனனு தனன தன தான

**221.** சகிக்க முடியாத கப வவத்தை யினிலே மருவி
தவிக்க விடிலோ தரும முறையாமா
தனிக் குமரனே கிருபை நிறைத்த பரமே புனித
சகப் பிரமமே யடியர் பெருவாழ்வே
அகிக் குணவ தாகு மதி முடித்த சிவனுர் புதல்வ
அரிக்கு மருகா பழனி யுடையோனே
அடுக்கு மொழியா லுனது புகழ்க்கவிக ளால் பரவும்
அடிக்கு நினதா தரவு அருளாது
சுகிக்கு முறையே வுறையி லெவர்க் குரிய தாயதிது
சொலற் கரியதா விதுவு மறியாயா
தொலைக் கரும மா மனது மலைக்குவட தா குறவர்
சுதைக்குறவி னல் வளரு மனமேமேயோ
வகிக்கமுடி யாத மிடி பொறுக்கமுடி யாத பிணி
மறிக்க வருதே வெனதி னிடமாக
மதித்தருளு வாய் கிருபை கொடுக்க வருவாய் மயிலில்
வளர்த் திருவி லாசமலை பெருமானே.

தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த தன தான

**222.** பொறுக்க முடியாத பந்த பவக்கட லிலே விழுந்த
புலச்சிறிய னு யமைந்த எளியேனே
புரக்க வருவாய் மிகுந்த வருட் குமரனே நிறைந்த
புகழ்ப்பிர பலா முகுந்தன் மருகோனே
குறுக்கி யெனதூடு றைந்து நறுக்கு கிறதே பவங்கள்
குமைக்க வருதே பதுங்க வுறியேனே
குணக்கடல தாய் விளங்கு குகப் பிரமமே விளைந்து
கொளுத்து மணியே நிமிர்ந்த வரைவாழ்வே
மறுக்க வறியே னுயர்ந்த பெருக்க முடையாய் சிறந்த
வரச்சர வணு பிறங்கு முருகோனே

வனத்தி னிடையே வளர்ந்த குறத்தி தனையே யணைந்த
மகத்துவ தயாள கந்த குகநாதா

செறுக்கு மிகவே செறிந்த குலத்தசுரர் வேர்களைந்த
திறத்தயில் கரா செயந்தி நகராள்வோய்

திருக்க வரு பாவ பந்த வினைக் கொடுமையே யொதுங்க
திருத்தியருள் நாக பண்ணை பெருமாளே.

தனத்த தன தான தன
தனத்த தன தான தன
தனத்த தன தான தன தன தான

**223.** தொனிக் கருவி யூடுகப மிகுத்த வதனு லடிமை
துயர்க்குள் நலிவாகி தொனி மெலிவாகி

சுருக்கு பவமூடு படு பெருத்த நலிவாலெளிய
துறைக் குனுறை வேனை யுனதருளாலே

மனித்து கரை யேறிவிட வுருக்க முடனே கருணை
வகுத்துதவு வாய் பழனி யுறைவாழ்வே

வளத்த பொழிலூடு நகர் அமைத்த குமரா வரத
வளிக்கருமை யானகுண மணவாளா

இனித்த மொழியே யுதவு மலைக்குமரி தேவி பரை
யெழிற்சுத குகா கரியி னிளையோனே

எமக் குரியவா கனவி னிருத்த மிடுவோய் புகழை
யெழுத்து முறையே சொலவும் அருள்வோனே

கனித்த புகழ் பாடுபவ ரகத்துடைய வா மதுர
கவிக் குரிமை யாகவரு மொருதேவா

கனத்த முகிலே பரவ வெடுத்த பொழிலே யிலக
கதித்த திருமா மலையுள் பெருமாளே.

தன தன தனனு
தன தன தனனு
தன தன தனனு தன தான

**224.** நவமணி மகுடா திபகுக குமரா
நதிமதி யணிவோர் சுதநாதா

நலமன துடையா ரிடமுறை பவனே
நனிவர முடையாய் பெருவாழ்வே

தவமணி யனையா ரகமுறை தருவே
சரவண பவனே முருகோனே

சதுர் மறை முடிமே லிலகிய தருவே
தமிழ் மழை பொழிவோ ரிடமேவி

பவ வினை யறவே திருவருள் புரிவோய்
பதி நலமருள் வோய் வரதீபா

பரவிய குருமா முனிவரர் பெருமாள்
பலநிதி யருள்வோ னெனவோது

குவ டுறை குழகா தரிசனை தருவாய்
குற மகள் வளிசேர் மணவாளா

குலவிய பொழில் சூழ் திருமலை முடி மேல்
குடி கொளு மயில் வேல் பெருமாளே.

தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த தன தான

225. தரைக்கு ளொளிதா யெழுந்து பவத்தி லிடையே விழுந்து
தவிக்கு மடியே னையுந்தன் அருளாலே

தழைத்த கலமே லெழுந்து வரப்புரிகு வாயுவந்து
தனித்த பரமே முகுந்தன் மருகோனே

பரைக்கு மகனே விளைந்த தினைக்கு பரண் மேலிருந்து
பறக்கு மினமே யருந்த விடுகாத

பருத்த தனமோ டமைந்த வளிக்கு மணவாள கந்த
பகுத் தறிவுளோர்கள் சிந்தை யுறுவாழ்வே

மறைப்பத தயாள தொந்தி வயிற்று டைய ஞாதி பின்பு
வரத்துடை சுகாதி செந்தி லுடையோனே

மறைக்கு மனேற யாய் விளங்கு குகப்பிரம மே கனிந்து
வளர்க் கமுதமே சுகந்த மணிமார்பா

உரைக் குளமையா துயர்ந்த நிதித் தருமமே நலங்க
ளுதித்த சிவமே பிறங்கு மயில்வீரா

வொளிக்கு ளொளியாய்விரிந்து விளக்குமணியே விரும்பு
மூவப்பு மலிவான பண்பை பெருமாளே.

தந்தனந் தானத் தான
தந்தனந் தானத் தான
தந்தனந் தானத் தான தன தான

226. சந்ததம் பாவக் கூடு நொந்திடும் பேதைக் கான
சங்கடந் தீரச்சேவை தருவாயே

சந்திருஞ் சோலைக் கூடு வண்டிருந் தாடிப் பாடு
தண்டருந் தேறற் காடு பலவாறும்

வந்தகந் கூடிச் சேர்பு நன்செய்தன் கூறிற் பாய
வண்டருந் தோகைப் பூக விலையாக

வந்தடர்ந்தே நெற்காண விண்டொடுஞ் சீர்மைத்தாக
மஞ்சிருந் தாடற்கான பொழில்நாடா

செந்திலம் பூமிக்கான கந்தநின் பாதப் போதை
சிந்தை கொண்டாடித் தேடி வெகுநாளாய்

சென்றதுங்காணிற்றுகின் மன்ற வுன்பாலுற்றேனை
செம்பதஞ் சேரற் கான நிலையேதோ

பந்தனங் கோவிற் காக வந்தவுன் சீர் பொற்பாத
பங்கயம் பேணற் கான மனமூரா

பண் பவஞ் சேரற்கான வம்பருங் காணற் கான
பண்டையின் பாவிற்றேவ பெருமானே.

தான தந்தந் தந்தன
தான தந்தந் தந்தன
தான தந்தந் தந்தன தன தான

227. ஏழை யுன்றன் பங்கய போதை யென்றுஞ் சிந்தனை
யேயவின்பந் தந்திலை யினியேனும்

யேரிலங்கும் பொன் பத சேவை தந்தின் பந்தர
யீச வந்திங் கன்பருள் புரிவாயே

மாழை யொண்கண் டிண்டினை மாதுகொஞ் சுந்திண்புய
வானை தங்குந் தண்சுனை யுடையோனே

வாலை கொஞ்சுஞ் சங்கரி பால வென்றும் பண்புயர்
வாயணந்தந் தண்புகழ் சொலுவோர்பால்

பீழையந்தங் கொன்றுயர் வாழ்வனந்தந் தந்தவ
பீடனந்தந் தங்கிய பெருவாழ்வே

பேசருந் தண்செந் திலின் மேலிருந்தும்பண்பொழில்
பேரகந் தங்கும் பர வரதீபா

வாழையின் கண் பைஞ்சுக மீதிருந்துந் திண் கனி
வாயருந்துந் தண்டலை பலசூழும்

மாவு தெங்குங் குங்கும மோடு சம்புஞ்சந்தமை
மாவிளங்குங் குன்றுறை பெருமாளே.

தனந்த தான தன தன தன தன
தனந்த தான தன தன தன தன
தனந்த தான தன தன தன தன தனதான

228. சிவந்த பாத பரிபுர மிலகிய
திருந்து நீலி பயிரவி திரிபுரை
செயங்கொள் காளிமலை மகளிமையவர் தொழுதேவி

சிலம்பினூடு வளர்முனிவரர்துதி
மிகுந்த சூலி பொழினகரினிலருள்
சிறந்த வாமி நடமிடு பரையுமை யெமதாயி

தவஞ் செய்மாது வழகிய குழல்மொழி
சொலுந் தயாள குணநிதி குறமகள்
தனன்பு மாமி மகிட னதுயிர் கொளை கொளும்வீரி

தருந்தியாக முடையவள் முகிலரி
சுதங்கை நாரி பசியசைவலை மென
தருந்தவோதி மதிநுதலிலகருள் மகமாயி

கவந்த மாடு படைமிகவுடையவள்
சுகந்தபூவை யணிப வளரனோடு
கனிந்து பேசியுறைபவள் கலைநிதி யெனவோது

கறந்த பாலை நிகரெனு மொழியுள
வுயர்ந்த தூயமறை பரவிய வருள்
கமழ்ந்த வாலை யருளிய குருபர குகநாதா

பவந்தளாட வர் மிடி பகை பிணி
சினந்து வேதை தருவதை யிதுவரை
பகர்ந்த வேழை துயரற வொரு மொழி பகராது

பரந்த பார்வை யுறிலெனது பிராது
மிறந்த பாவ முனையணு கிடுமருள்
பழங்குலாவு திருமலை தனில் வளர் பெருமாளே.

தன தன தன தன
தன தன தன தன
தன தன தன தன தன தான

229. பத மருளென வுன திணை மலர் பரவிய
படி வுத விடவிலை இனியேனும்

பகரு மென் மனு முறை வண மருள் புரிகுவை
பழகிய வடியவ ரகவாழ்வே

சதவித மெழு மலர் மறைவள ரொருவனை
தக நிலை நிலை பெற வருள்வோனே

சரவண பவ வென வொரு மொழி பகர் பவர்
தனதக மருவிய வொருதேவா

மத கரி முக வசுர் கிளையொடு மடி தர
வளிவிடு புழைகர முடையோனின்

வர துணை யெனதிடர் பொடி பட விது ததி
மயில் மிசையினிதுற வரவேணும்

நித் முனி வார் துதி பெருகிய பொழில் புடை
நிறைபெறு பொழில்நக ருறைவாழ்வே

நிறை புகழ் சொலுமடி யவருறை கிறதிரு
நிலைமலை தனில் வளர் பெருமாளே.

தனத்த தந்தன தன தன
தனத்த தந்தன தன தன
தனத்த தந்தன தன தன தன தான

230. மருக் கமழ்ந்திட மருவிய பரிமள
மிகுத்த சந்தன புழுகிவை விரவலை
வழித்து தந்தன மிசை யணியசை மன மடமானர்

வழிக் கிணங்கிய வொருசிறியவ னெனை
யருட் கிணங்கிய புகழ்சொல வொருமொழி
வருத்து செந்தமி ழுதவிய குருபர வரதீபா

செருக் கமழ்ந்திடு பிணிமிடி பலபகை
வுருக்க நின்றன வெனதனை யென்தயை
செயத் தகுந் ததியுனை யல்திலைகெதி வுலகோர்கள்

சிரிக்க நிந்தனை சொலவிடி லதுவுன
தருட்கு நிந்தனையிது வொருமறை மொழி
செகத்தி லுந்தனதடியவர் துயருற விடலாமா.

திருக்கையுண் டவரென பல விடமுற
முடுக்கு கின்றது பவவினை யிடையிடை
கிடத்து கின்றது மலைவுற விதிவழி மதிசார

கெடுத்துநின்பத மலர்து திபணு மிடை
கலைத்து சிந்தனை பல்வழி தொறு முற
கிடைத்து நைந்தன னிதுவரை பவமொரு வடிவானேன்

உருக்க மிஞ்சிய மனமொரு நிலையுற
பிணித் தெழும்பவ வினைமிடி பிணியற
வுதித் தெழுந்தெழில் தரிசனை தருவது மெதுநாளோ

உயர்த்த தண்டலை மருவிய வதனிடை
யிருக்கு மந்திர மொழி முனிவர்குழு
வுடுத்த பைஞ்சுனை வளமுயர் திருமலை பெருமாளே.

தனந்த தான தன தன தன தன
தனந்த தான தன தன தன தன
தனந்த தான தன தன தன தன தன தான

231. மிடைந்த பாவ மொழுகிய படுகுளி
விழுந்த வேழை கரைவர வருளென
மிதந்த பார்வை யுறிவினி தருள்பவ ரெவராகும்

மிளிர்ந்த சேவல் கொடியுடையவ மயி
விலங்குபால குருபர வர நிதி
மிலைந்த மாலையயில் கர முடையவ னெனவோது

கடைந்தபோதி லெழுபத முணவரு
முகுந்தனுதி கணபதி பரை புகழ்
கனிந்த தேவ குவளைகள் மலர்சுனை யுடையோனே

கவிழ்ந்த மாவை யிருபிள வெழுவகிர்
விரைந்த வீர கவிமழை பொழிபவர்
கனங்கொள்பாவ மறவொரு நொடியிடை யருள்வோனே

உடைந்த வீர விசய னனுயர் பெற
செயஞ் செயசக்தி படைவிலை யருளின
வுயர்ந்த ஞான நிறை முனிவர் துதி யிடைமேவி

யுவந்த தான செயல் புரி பவ குக
தினந்த ளாட விடில்துணை யிலை யிலை
யுணர்ந்து நீதி தருகுவை யிலையெனின் மனமாற

அடைந்த வேழை படுதுனி யுனையுறு
மெனுஞ் சொன் வேதமுறையிது வறிகுவை
யடர்ந்த காடினிலை மாமென மரு வியகோவே

அமிழ்ந்தவேழை யுன திணை மலரடி
திருந்தி வாழ வொரு பிடி வுனை விடல்
அறங்கள் மேவு திருமலையினில்வளர் பெருமாளே.

தனத்தனத் தனத்த
தனத்தனத் தனத்த
தனத்தனத் தனத்த தன தான

**232.** பிறப்பிடைப் படுத்த துடர்ப்பவக் கடற்குள்
பிணித் தெனைக் குமைத்து மதனோடு

பிணிப் பகைக் கொழுத்த மிடிப் படர்த் துயர்க்குள்
பினப்படத் துவைக்க விடலாகா

இறப் பிறப் பெடுக்க விடுத் திடிற் பொறுக்க
விசைப் பவப் பயத்தி லுழல்வேனை

எழிற் பதத் திணைத்த கலத்தினிற் பொறுத்தி
யெனைத்திடப் படுத்த வருவாயே

மறக்குலக் குறத்தி புணத்தினைப் புரத்த
வளிக்கருட் படைத்த மணவாளா

மதித்தகத் தெடுத்த வருக்கெழிற் பதத்தை
வகுத்திடப் பெருக்க மருள்வோனே

திறத்தசுர்க் குலத்தை தகர்த்தெமப் புரத்தில்
செலச்சமர்த் தொலைத்த வொருவீரா

திருக்கறப் பொடித்து விளக்கருட் செழித்த
செயத்திருக் குவட்டில் பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

**233.** மிடிப்பகை யிடர்ச்செய் பவத்தினைக் கலக்க
மிகுப்பதை யொழித்து விடவேணும்

வெறுப்பவ ரிடத்தி லிருட்பகை யிறுத்த
விடுப்பவ குறத்தி மணவாளா

கடித்திரி புரத்தை நகைப்பினி லெரித்த
கடுப்பணிமிகக் கொ ளொருவீரன்

கணிற் பொரி பறக்க வெடுத்ததை வனத்துள்
கவிழ்த் திடவுருக்கொள் பவனாக

இடித்துரை முழக்கு மறைப் பொருள்தெரிக்கு
மெழிற்குக பரைக்கு மொருசேயே

எனக் கருணிலைக்க நலத்திணை யளிக்க
இசைத் தமிழ் கொடுக்க வருவாயே

துதிப்பவர் களுக்கு பதத்திணை கொடுத்து
சுரர்க் கருள் சுரக்கு முயர்நாதா

சுதப் பொழி னகர்க்குள் சுகத்தளி யமைத்து
சுயத் திருமலைக்குள் பெருமாளே.

தான தானன தானன தானன
தான தானன தானன தானன
தான தானன தானன தானன தன தான

**234.** பாவமே பெரிதாகிய தோர்வினை
சூழு தேயெனை யாவரி தோர் பவர்
பாரிலே வினை யேகதி யேறிலே முருகோனே

பால ஞான குகாநிதியே சுக
சோதியானவ னோதயனே திரு
பாதயாள சுகாதிப பாவல ரகவாழ்வே

நாவலா பரை யாமளை கோமளை
நீலி சாமளை மாகலை மா மகள்
நாரிகாளிபு ராதனி பூரணி மகமாயி

நாடிவாடவி டாதிரு பாநதி
தேடிவாழு மகாமுனி வோர் திரு
நாலுமாமறை யேயறி யாதவ ளெனவோது

காவல்நாயகியா கிய கோமதி
வாமி நாரிமனோகரி காரணி
காரணமாதுமை பார்பதியே தரு மொருசேயே

கான வேனம தாகிய வோர்முகில்
மாமனு மென வேபுக லாதர
காலகாலகபாலகை யார்நுத லெழுவீரா

சேவல் கூவிய மேனுயர் நால்கொடி
யாடமே ருகணு மெனவார் கடை
தீற மாமயிலாட மகா தகர் குதியாட

தேனுணு மலர் வாயிடை மாமது
சாலவீழ சதாசுனை நீரொடு
சேருமா திரு மாமலைமேல் வளர் பெருமாளே.

தாந்தந் தனதன
தாந்தந் தனதன
தாந்தந் தனதன தன தான

**235.** மீன் றங் கியல்சுனை யேந்துங் குவளையை
வேய்ந்தம் பரர்துதி பணுநாதா

வேம்பின் றொடையணி சாந்தந் தழுவிய
வேந்தன் குலமர புடையோனே

தேன்றங் கியன்மல ரோங்கும் பொழினகர்
சேர்ந்தந் தளிவளர் முருகோனே

சேம்புஞ் செறிகறி தூங்குங் குலையொடு
தேம்பும் பலவள முளநாடா

கான்றங் கிடு முயர் காந்தம் பரி வெளி
காந்துஞ் செயன் மலை வளர்வாழ்வே

கான் செண் பகமலர் தேன்றங்கிய சுனை
கான்றுங் கரை மிசை கனிமார்கள்

வான்றங் கியல் பென தாந்தங் கெழுவர்கள்
வாழ்ந்துஞ் செயமலி வுழுகாளி

வாய்ந்தங் கியல் பொடு வூன்றங் கிய தளி
வான்றண் டிருமலை பெருமாளே.

தான தந்தன தானதன தன
தான தந்தன தானதன தன
தான தந்தன தானதன தன தன தான

**236.** தேவி சுந்தரி பாலா குகா திரு
மூல மந்திர யோகா தயா நிதி
சேய குஞ்சரி மோகா குணாதிப னெனவேலோடு

சீரிணங்கிய கோளா கலா குற
மாதிணங்கிய பாகா வயோதிக
சேவலின் கொடி யாளா மகாமுனி வார்கூறு

நாவிலங்கிய வேலா மனோகர
பூவிலங்கிய தேனே மராமலர்
நாளிலங்கிய மார்பா குணாகர வாதீபா

நாரிலங்கிய பூவேய தே திகழ்
பூவிலங்கிய வாசா சரா சர
நாடிலங்கிய வீசா சதா தயை யுடையோனே

காவிலங்கிய காவே விழாமது
கூடிலங்கிய கூடே பராபரை
காலிலங்கிய காலே தராதல முறுவாழ்வே

கானிலங்கிய கானே மகாதிப
தானிலங்கிய தானே சதாமறை
காரிலங்கிய காரே பகா நிலை யெழிலாளா

ஆவிலங்கிய வாவே தவாநிலை
யாவிலங்கிய கோனே வெறுமறை
யாதிவந்தனை யோவா தினேதுதி பணுநாதா

ஆசிதந்தருள் தாதா வெறு வெனை
யாளவந் தருள்வாயே யிதே ததி
யாக பண்பையின் மேல்பா லுமேளார்மலை பெருமாளே.

தனன தந்தன தனன
தனன தந்தன தனன
தனன தந்தன தனன தன தான

237. உருகவந்திலை மனது பெருக வந்திலை துளிக
ளூலைய வந்தன விழிக ளுயர்வான
வுனது பொனபத மலரை பாவியுன் புகழ் புகல
வுணர்வு வந்திலை யிதுவு மெதிலோ
மிருக மென்பதை யுலகி லுருவ கிர்ந்தமை யெனவு
மினிரு கின்றது கொடிய துடர்பாலே
வெருவ வந்தன துயர்கள் பருக வந்தன பிணிகள்
மெலிய வந்தன மிடிக ளெனலோடு

தருக வந்தன பகைகள் சருவ வந்திடு மெமர்கள்
சரண பங்கய மலரை யருள்வாயே

சமய சஞ்சிவி யனைய குமர செந்திலை யுடைய
சரத சுந்தர வரத முகடயோனே

மரு கமழ்ந்திடு பொழிலு ணகர் வளர்ந்திடு மெழிலி
மருவ நின்றமையிலகு வளநாடா

மகிப வந்தரமுகடு கிழிய நின்றெழு திருவு
மகிழு கின்றருண் மலையுள் பெருமாளே.

தனத் தனத் தனத்தா
தனத் தனத் தனத்தா
தனத் தனத் தனத்தா தன தான

238. நினைத் துனைத் துதிப்போ ரகத் தருட் படைப்போன்
நிருத்த வுத்தமத் தோ னெனவோது

நிலத்திடைப் படைத்தா யுனைத்து திப்பதற்கோ
நிதிப்பொருட் கொடுத்தா யிலையேயான்

தினத் தினத் தனப்பால் களுக்குழைத்தலுத் தே
திகைப்புறப்பதைத் தே னிதுநாளும்

செழிப்புறத் தளிர்ததே வளர்த் தெழிற் பொழிற்சூழ்
தெளிப்பனைச் செனற்கா டுடையோனே

பனைப் புழைக் கரத்தோ னுடற் பிறப் புடைத்தோய்
பருக்கடப் பணித் தோய் முருகோனே

பருத்த முத்தகத்தார் அணித்தவுத்த மத்தோய்
பகைத்தவர்க் கெமத்தே மலைவீரா

சுனைத் தடத் தலர்த்தார் தடப்புயத்தணித் தோய்
துதிப்புகழ்க் கருட்பா றருவோனே

துடர்ப்பவத் தொகுப்பே யறுத்தருட் கொடுத்தாள்
சுகத்திருக்குவட் டேர் பெருமாளே.

தந்தா தன தன
தந்தா தன தன
தந்தா தன தன தன தான

239. வந்தா தரியென சிந்தா குலமொடு
வந்தே சரணடை யெளியேனை

மங்கா நிலைதர தங்கா ளினுததி
மஞ்சூ டுலவிய பொழிலூரா

கந்தா குருபர சந்தா சலமுயர்
கங்கா நதிதரு மொருபாலா

கண்பார் கெதியிலை யென்பா ரகமிசை
கண்போ லருள்செய வீருவோனே

பந் தா டிடு தன வண்டாடிடு குழல்
பண்பாடிடு மொழி மடமானார்

பண் பாடிட மெலி வுண்டேனிடை யொழி
பஞ்சாடிய பத சிவகாமி

இந்தா வழுதென வந்தே வுண வளர்
எந்தாயக மணி யெனலான

என்பே ரரசெனு மன்பே குணநிதி
இன்பார் திருமலை பெருமாளே.

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தன தான

**240.** உருக்க மிஞ்சிய மனதுடையவரிட
மிருக்க மந்திர மறைமொழி யருள்பர
யுவப்ப வம்பரர் பகையற வருளிய வொருதேவா

உதித்து தண்கடலிடை யெழுகதிரென
விளக்கு மன்சிகி புறமிசை வருபவ
வுயர்த்த செம்பொழின்மருவிய பணிவள முடையோனே

பெருக்க மிஞ்சிய கருணையொ ருருவென
வெடுத்த சம்ப்ரம வெரிவன நடுவரு
பிழைப் புணர்ந்திடு புலவனு நலமுற வருள்வோனே

பிலத்த ணைந்துறை கபிலரை வலியுற
புடைத்த ணைந்திடு சகரர்க ளுயிரற
பிரித் தருந்திடு மொழிசொல வவர்பழி வருவோனல்

திருத்த மிஞ்சிய தவமொரு நிலைபுரி
யிடத் தெழுந்தவ னெனவுரை பரையருள்
செனித்த கங்கையு மெரியிடை படுபவ ருயர்வாக

திருத்தி யும்பத முதவிய பயிரவி
திருக் குழந்தையு னிணைமல ரடிமனு
செபிக்கு மெந்தனை யினிதுற வருளுவ தெதுநாளோ

வருத்து கின்றன பவவினை மிடிபிணி
தகர்க்க நின்றன பலபகை யெமனிவர்
மடித்து சிந்தனை வருவன வெனிவிதை யெவர்பாலில்

வழுத்து கின்றது மினியுன தெழில்மன
துதித்து வுன்பதமுற நல்முதவி செய்
வளைத்த தண்டலை தழுவிய திருமலை பெருமாளே.

தந்தன தத்தன
தந்தன தத்தன
தந்தன தத்தன தன தான

241. பந்த பாசத்திலே சிந்தை நேசத்திலே
பம்பு மோசத்திலே விடலாமா

பண்பு சாரத்தனே யென்பு கூடிற்றினே
பஞ்சு போலுற்றதோ ரடிசேராய்

கந்தனே வித்தகா செந்திலூ ருற்றவா
கந்தயா ளத்தனே முருகோனே

கங்கை சேர் வெற்பிலே தங்கு போற்புதா
கந்தமூலத்தொடே சருகாதி

சொந்த மாகித் தினே தின்ற பேருக் குளே
துன்று மாறக்கரா வடிவேலா

துங்க தீபப் பரா சிந்தி யாருக்குளே
துன்பமே விப்பவா வரதீபா

சந்ததா நித்தனே தொந்தி யாகத் தனூர்
தம்பியே தற்பரா வெழில்வேளே

சந்து சூழ்வுற்ற தோர் பண்பை நாகத் திலே
தங்கு கோவிற் குளோர் பெருமாளே.

தந்தன தந்தன
தந்தன தந்தன
தந்தன தந்தன தன தான

242. எந்தநே ரத்திலு முந்தன மத்தினை
யின்றியோர் பத்தமு மறியேனே.

யென்பதே சத்தியம் மன்றுளார் புத்திர
வென்று நீ யற்புதம் அருள்வாயோ

பந்தபா சத்திடை மந்தியா கத்தவழ்
பண்புளே னுத்தமம் அறியேனே

பங்கமா கத்தரு துன்ப பாவத்தினை
பங்கமா கப்பண வருவாயே

சந்திரா தித்தரை கண்களா கப்படர்
சம்புவோ மிற்குரை தெளிவாக

தந்தவா முத்தமிழ் கும்ப னோதிப்பெற
சங்கமா கச்செயு மெழில்வேளே

விந்தையா கப்புரி கின்றமே மூற்பவ
மென்று ளோர் பக்கவி லுறைவோனே

விண்டுகூ ழத்திரு தங்குநா கத்தலை
வெண் பொரு யத்தளி பெருமாளே.

தந்தன தனத்த தான
தந்தன தனத்த தான
தந்தன தனத்த தான தன தான

**243.** புன்பவ வினைக்கு ளேழை நைந்திட விடுத்த நோவை
புந்தியி னினைக்க வோத முடியாதே

புன்சட மிளைத்த லாக மன்பிணி தொடுத்த தாகி
பொன்றிடு நிலைக்கு ளாகு மதுபோதி

லென் பிணி யொழித்து பூதி தந்தவ னுனக்கி யானு
மெண் புகழ் படைக்கும் ஞானம் அருள்வாயே

பின்படி யவர்க்கு மூல மந்திர மளித்த சோதி
யென்குரு சிவற்கு மோனமை யருள்வோனே

தன்பர வரக்க தான பொன்சடை யரற்குபால
சந்தன வரைக்குண் மேவு முருகோனே

சங்கரி வனத்து ளாயி பொங்கர வணித்த தேவி
தன்றிற மலித்த நீலி பரமாயி

மன்புதல் வருக்கு ளான நன்குக குறத்தி காண
வன்குற டழுத்த கான மிடையேகி

மங்கள முடித்த தேவ பண்பை யினுதித்த பால
வண்டிரு மலைக்குண் மேவு பெருமாளே.

தந்தனந் தனத்தன
தந்தனந் தனத்தன
தந்தனந் தனத்தன தன தான

244. அன்பெனுங் கொடிக் கொரு கொம்பெனும்பருப் பொரு
ளாம் பரந் துதித்திடு முருகோனே

அன்படைந் தவர்க்குயர் தம்பதங் கொடுத்தவ
வம்புயம் பணைத்தொடை யணிமார்பா

முன்பவந் துடைத்தெனை யின்பெனுந் தடத்திடை
மூங்கிடும் படிக்கருள் புரிவாயே

முண்டகந் தனிப்படர் கின்றபண் பணைப்புடை
முண்டிடுஞ் சினைக்கயல் வளநாடா

மன்றநின் றவர்க் கொரு மந்திரம் பதப் பொருள்
வந்துவந் தளித்தவ னெனவோது

மன்குணந் தளிர்த்தெழு கின்றபண் பொழிற்றனி
வந்தமைந் தருட்குக வரதீபா

துன்புவன் சினத்தொடு மண்டுவண் டிறத்தசுர்
துண்டிரண் டெனப்பட விடும்வேலோய்

தொன்பவஞ் சிதைத்தெழி றங்கிடும் படித்திரு
சுந்தரம் பொருப்புறை பெருமாளே.

தனத்தனந் தனத்த தான
தனத்தனந் தனத்த தான
தனத்தனந் தனத்த தான தன தான

245. அருட்பழம் பழுத்ததாகி யொழுக்கெழுந் துவட்டுதேனை
யணைக்கொளுந் தடத்திலாட வருள்வாயே

அனிச்சமென் பதத்திகாண குறத்தியின் றனத்தைநேடி
யகற்கரும் புனத்திலோடி விளையாடி

மருட்செயுந் தடத்துலாவி கவர்ப்பருந் தனைத்த தாகி
வழுக்கெனுஞ் சுனைக்குள்வீழு மதுபோதின்

வளிக்குளம் பதைக்க வேதன் விதித்திடும் பொருத்தமேவ
வளைக்கரம் பிடித்தளாடி வெளியேற

பொருப்பெனும் பெருத்த யானை வாப்பயம் பெருத்த தாகி
புணர்த்தடம் புயத்தை யாவி யணைகாலை
பொருத்தமென் றுளத்திருடி யணைத்துமன் பிசைத்துவாழு
பொருப்பகம் குடிக்கொடேவ முருகோனே
திருப்பெருந் துறைக்குளான நிருத்தனன் பகத்துளாயி
சிறப்பமைந் தெடுத்தசாமி யெனவோதி
தினத்தினம் படித்தபேர்க ளுவப்பனங் கொடுக்குநாத
திருத்தகுங் குவட்டிமேலுறு பெருமாளே.

தனன தன தான தத்த
தனன தன தான தத்த
தனன தன தான தத்த தன தான

**246.** அருள் வடிவ மாயு தித்த சரவணப வாபரைக்கு
அரியதவ மேகிரிக்கு வொருவீரா
அரிய மறை யாக மத்தி லுறைவ லவ னேகு றத்தி
யணையு மெவ ளு கரிக்கு மிளையோனே
குருமு னிவ ளூர்துதிக்க வருமமு தமேம பழுத்த
குணமதுர மே செழித்த பொழிலூரா
குருமுறை தியான பத்தி யறிவு நிறை யார்தவர்க்கு
குலவரு ளிடாத நித்த னெனவோது
உருவன் வடிவ மாயமைத்த மலர்பிணைய லே யணிந்த
வொளிகொண் முருகா வுருக்க முடையோனே
உலையு மன தேபடைத்த பவம தற வேயொழித்து
வுனது பதமே கொடுக்க வரவேணும்
சருவ வுயிரா யுயிர்க்கு ணிறையு மறிவாய் விழிக்கு
டுருகு மொளியாய் மிளிர்க்கு மொருதேவா
தனிமுதல்வ னே பொழிற்கு விலகமலனே தனித்த
சாத திருமா மலைக்குள் பெருமாளே.

தனத்த தந் தான தான
தனத்த தந் தான தான
தனத்த தந் தான தான தன தான

**247.** சொலற் கடங்காத தூய்மை யிடத்தலங் காரமோல
துதிக்கடங் காத சீல முடையோனே

தொடைக் கடங் காத மார்ப மறைக் கடங் காத பாத
தொகைக் கடங் காத தேவ ரகவாழ்வே

வெலற் கடங் காத வீர கரிக் கடங் காத காம
விலைக்கடங் காத ஞான முடையோனே

விதிக்கடங் காத வோமி னுரைக்கடங் காத சோதி
விரிக்கடங் காத வாய்மை நிறைவோனே

கொலற்கடங் காத தீர மிருத்தடங் காத சூரை
குறித்தடங் காத வேலை விடுவோனே

கொடுக்கலங் கார மான குணத்தலங் கார நாத
குளிர்க்கலங் கார மான பொழிலூரா

மலர்க்கலங் கார சோலை பொழிற்கலங் கார வாழை
வயற்கலங் கார வாளை வளமேவி

மதிக்கலங் கார மாதி னிருப்பலங் கார மான
மலைக்கலங் கார மேவு பெருமாளே.

தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன தன தான

**248.** மறைசொலு மின்பப் பதத்தி லேவுயர்
தமிழ்மொழி யின்சொற் றடத்திலேசுக
வரதமி குந்தற் புதத்திலே வரு மயில்மீதே

வனமிடை பொங்கர்க் குளத்திலேர் நதி
நகர்விழ வின்கட் டவத்திலேர் தலை
மருவு குறிஞ்சித் தலத்திலே நடு தறியூடே

பொறை மிளிரன்பர்க் ககத்திலேகலை
முடிவி லிலங்கிக் கடப்பிலே பொழில்
பொலியு மிலஞ்சித் தலத்திலே வளர் தகர்மீதே

புகழ்சபை மன்றத் தடத்திலே தனி
குருமுறை மந்த்ரப் பதத்திலே கவி
புகல்பவர் நெஞ்சத் திடத்தி லேபரை மடிமீதே

பிறை யவரங்கட் களிக்குளே நறை
தழுவிய துங்கப் பழத்துளே விதை
யிலகிய பொங்கப் பருப்புளே வளர் நடுவாகி

எழிலியை மிஞ்சக் குளிர்ச்சியே தரு
தரமமை யென்சொற் பதத்துளே யுய
ரிமையவர் கெஞ்சித் துதிக்குளே வளர் முருகோனே

கறைகெழு குன்றைத் துளைத்த வேலவ
வுனதரு ளன்பிற் குறித்துளோ னென
கரைபெற வந்திக் கணத்திலே யருள் புரிவாயே

கமழியல் சந்தப் பொழிற்செய் சூழ்புற
மருவிய பண்டைக் குவட்டி லேறிய
கனமணி யென்சொற் பனத்திலே வரு பெருமாளே.

தனனா தன தானன தான
தனனா தன தானன தான
தனனா தன தானன தான தன தான

**249.** அருளா தர மாகிய தேவ
வடியா ரிதயா சன மூல
வரசே வென தாவிபுமான முருகோனே

அடியே னுனையே துதிபேசி
வரு மேழையின் மேன்வரு பீழை
யறவோ டிட வேதுணை நீசெய் திடவேணும்

குருவா கிய மோனவு லாச
பரனே சுக வாருதி யான
குகனே வர தாமத மாகி லெளியேனுங்

குமைவா கவுளே கலி மேவி
வருமே யிதையா வரி தோர்வர்
குழகா வழகா கிய நாத விரைவாகி

தருவா யுருவா கியு தாகி
வருவா யருண்மா மறை யோது
சரதா விரதா மன தோடு வருவாயே

சனகா தியரோ டுமை யாடி
வருவோ யருணா சல மேவு
சரணா லயமே கதியாக வருவோர்கள்

உருவா மருளோ டுறை வாக
வருள்வோய் கனகா ரணதூய
வுயர்வா கியபூ ரண சோதி யுடையோனே

உருண் மாதுளை மாடலை வோடு
விரிவார் தெனைசோலை செய் சூழ
வுயர்மா திருமா மலை மேவு பெருமாளே.

தன தனத் தனத்த தான
தன தனத் தனத்த தான
தன தனத் தனத்த தான தன தான

**250.** பவ வினைப் பிறப்ப வான
வருபவக் கடற்கு ளாடி
பதை பதைத் திளைத்துளேனை யருளாலே
பருமரத் தடுத்து வோடி
விடுமணிற் பகைத்த வேடர்
பருவரற் கிளைப்ப ராவ ரெனவேலபோல்
கவ வுருப் படைத்த பாப
மற வதைக் குமைத்து தூய
கன மலர்ப் பதத்தில் வாழும் அருடாராய்
கவி னமைத் தெடுத்த பாத
நடன பொற் சபைக்கு ளாடி
கயல் விழிக் குவப்புலாவ வருமீசன்
தவ வுருத் தரித்து மோன
நிலை யுறத் திறத்தி னோடு
தழை மனத் தெழிற் கொளுத னிடமேகி
சதுர் மறைப் பொருப்பி னேறு
பிர ணவப் பதத்தை யோதி
தடை யறப் பதித்த தேவ னெனவோது
நவநிதிக் குணத்த தேவர்
தம திருக் கறுத்த வீர
நய மிகுத்த வர்க்குளான முருகோனே
நதி பணைப் பொழிற்கு ளூடு
நகர் வயிற் றளிக்குளாகி
நலதிருக் குவட்டின் மேவு பெருமாளே.

தந்தந் தனதன தந்தந் தனதன
தந்தந் தனதன தந்தந் தனதன
தந்தந் தனதன தந்தந் தனதன தன தான

**251.** என்றும் பணிபவரின்கண் கமலமி
லங்குஞ் சுனைபணை நந்துந் தருமணி
இஞ்சஞ் சரவண முந்துங் கியல்பமை பலகாடும்

இன்சண் பகமா முந்தண் டனிர்புள
சம்பும் பெருநதி சந்தும் பணிதலை
யெங்கும் பிணைமலர் குன்றும் புறமணை பலபாலுந்

துன்றும் குருபர வுந்தன் சரணிணை
தங்கும் புகழ்சொலி யென்றன் றுயர்சொலி
தொந்தம் பவவினை கொன்றுன் பதமரு ளெனமேலாடு

தொண்டும் பலபுரி யன்பும் பெருகிய
பைஞ்செந் தமிழில னந்தங் கவிசொலி
துங்கந் தருகதி வந்தின் பருளென மடியேனை

கன்றும் படிவிட லின்கண் சுகமிலை
வந்தான் றெரிசனை தந்திங் கழகிய
கண்டங் கியல்பரு ளென்றுந் துதிபணு மெளியேனை

கண்டுன் றிருமொழி யொன்றும் பகரிலை
யென்றன் கெதியுனை யன்றிங் கிலையிலை
கந்தம் பெருகள பந்தங் கியவுர முருகோனே

பொன்றங் கியசடை தங்கும் பிரபல
னுந்தண் டணிகையில் வந்தந் தவமுற
பொங்கும் பிரணவ மந்த்ரந் தருபொருள் புகல்வோனே

பொன்றங் கியகிளி கொஞ்சுங் குயின்மயில்
தங்கும் பொழினிரை மிஞ்சும் படிவளர்
பொன் றங்கிய திரு விண்டின் றளிவுறை பெருமானே.

தனதன தனன
தனதன தனன
தனதன தனன தன தான

252. நிறைகட லமுதே யெனதக முதலே
நிதிபதி யுடையாய் பொழிலூரா

நிசிசர ரறவே வுருவிய வயிலோய்
நிணைபவ ருளமீ துறைவோனே

கறைமிட றுடையோ னுதவிய மதலாய்
கணபதி துணைவா செகவீரா

கருணையோ ருருவே வடிவழ கியவா
கவிசொலு புலவோ ரகவாழ்வே

இறைவனே டெழின்மா பரைமரு வியவா
இசைகட மிடுமோர் சிகிநாதா

யெளியவர் மிடியா னலிபவ ரிடமே
யிருபொரு டருவோ னெனவோது

துறைபல மறைமா மொழியில கியவா
சுரர்பதி பரவா திபதீபா

சுகநலம் அருள்வாய் திருமலை முருகா
துதிசெயும் அடியார் பெருமாளே.

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன தன தான

253. ஆணவ மற்றமு ளித்திர ளுத்தமர்
பேணுமி லக்கண முக்கணி புத்திர
ஆலிலை யுற்றவ ணித்திரை பற்றிறை மருகோனே

ஆரண பொற்சிக ரத்துறை யற்புத
வீரவ ளத்தி குறத்தி மணத்தவ
ஆசை யொடுக்கி மலர்ப்பத மெற்கினி தருள்வாயே

மாணெழி லுத்தம மிக்குயர் சற்குரு
வான சுகப்பர முத்தமி ழுற்பவ
வாருதி யத்திமு கத்தவ னுக்கிளை யவனேநீள்

வானர மிக்குழு முட்கனி யிற்கெழு
மாசுளை யைக்கொளு மொக்கல ணித்திரண்
மாகறை தத்தும ணக்கனி கொக்குயர் சினைமேவி

காணல முற்றப லத்தைசு வைத்தெறி
சோலை படைத்த வளப்ப மிகுத்துள
காமலி வெற்பை யணிப்புடை சுற்றிய மலைநாடா

காமனின் மைத்துன சற்குண பொற்கிண
மேவிய முத்தென பற்களு மிக்கொளி
காணல முற்றெழில் பற்றிய சுப்பிர மணியோனே

சேணுல கத்திடை விக்கின வித்திசெய்
பாதக ரக்கர்கண் முற்றவொ ழித்தவ
தீவிர வத்திம ணப்ரிய முற்றிடு முருகோனே

சீருமைப் புகழொப்பவு ரைக்கவுன்
மாகரு ணைத்தயை யித்தகி யெற்கருள்
தேர்திரு நற்பதி வெற்பினி லற்புத பெருமாளே.

தந்த தானன
தந்த தானன
தந்த தானன தன தான

254. மஞ்சு நேருமு குந்த னாகிய
மங்கை மாதவன் மருகோனே
மங்க ளாகர புங்க மேவிய
மன்சொ லாதர வருள்வாயே
பஞ்ச பாணம னஞ்சு பேபொழில்
பம்பு பூரண முருகோனே
பங்கிலே வுட லம்பை மேவிய
பண்டயா பர னொருசேயே
கஞ்ச மேவய னஞ்ச வீறுசெய்
கங்கை மாமக னெனவோது
கந்த னேகுக செந்தி வாழ்பர
கண்டுநேர் மொழி யிபமாது
பஞ்ச மாகர தந்தியா லிணை
பண்புளாள் வளி மணவாளா
பந்தி சேர்தரு பொங்க ராலய
பண்பை மேவிய பெருமாளே.

தத்தன தனதன
தத்தன தனதன
தத்தன தனதன தன தான

255. முத்தர்கள் முனிவர்கள் பத்தி செய்திடுபர
முத்தை யனெனநித மிகவோது
முக்கணி பயிரவி யற்புத மிகுபரை
முப்புர மெரிசிவ சுதவேளே
பத்தர்க ளகமிசை யுற்றிடு மெழின்முகில்
பத்திர மிசைதுயில் மருகோனே
பற்றறு தபதர்கள் பொற்பக முறைபர
பட்பழ கியமொழி யிபமாது
கொத்தலர் குழல்செறி வுற்றமை குறமகள்
கொட்புற மருவிய மணவாளா

கொக்கறு குகவென வொட்டிய வொலிதரு
குக்குட மிளிரிய கொடியாளா

நித்தலு நறைமழை கொட்டிய வயல்வள
நெற்றர ளமுமிக முதிர்நாடா

நிட்டையொ டருள்புகழ் சொற்றுதி பணவருள்
நிர்க்குண திருமலை பெருமாளே.

தத்தத் தன தத்தத் தனதன
தத்தத் தன தத்தத் தனதன
தத்தத் தன தத்தத் தனதன தன தான

256. தத்தத் தன தத்தத் தனதன
தித்தித் திமி தித்தித்திமி யென
தத்தத் தன நிர்த்தத் தரசுத முருகோனே

தத்தைச்சுக மொப்பிக் கனமொழி
யத்தித்திறை முத்திக் கொருமுதல்
சத்திக்குக வித்தைக் கொருபர னெனவோதும்

சுற்றுப்புற வட்டத்திடை மணி
பற்றுக்கிரி டத்தைப் புனைபர
சுத்தப்பர மற்குக் குருவென வருவோனே

துட்டர்க்குண முற்றக் காளை
வெட்டிப்பலி யிட்டுச் சிகிமிசை
சுற்றுக்குக வெற்றிக் குவடுறை புகழ்வீரா

பத்தர்க்கண முத்தர்க் குழுமிவர்
சித்தத்துறை யத்திக் கிளையவ
பட்சத்துட னித்தத் தெரிசனை தருவாயே

பட்டப் பகலற்றப் பொழு தெண
திட்டத் தரு விட்டுக் கதிரொளி
பட்டுக் கெடவைத் தற்புதமுகில் மருகோனே

எத்தத்திற வர்க்கத் தலைவர்கள்
பற்றித்துதி யற்பிற் புகழ் சொலு
மெட்டுக்குண முக்கட் பரனருள் சுதவேளே

இக்குற்றறன் முற்றுப் பலநறை
தத்தித்திரள் மிக்கப் பெருநதி
எற்றுத்திரை சுற்றுத் திருமலை பெருமாளே.

தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந் தன தான

257. கறுப்பொன்றுங் கடத்தொன்றுந்
திறத்தண்டங் கரத்தென்றுங்
கனைத்தண்டங் களைக்கொன்றும் பலரூரர்

கறிக்கென்றங் குயிர்க்கொன்றுந்
தினத்தின்றும் பலப்பொங்கங்
கறித்துன்றும் படிக்குந்தன் கடமேற

பருக்குன்றிங் கெடுக்கின்றங்
கறிக்கின்றங் கொறிக்கின்றம்
பறித்தந்தம் பெயர்க்கின்றம் பிலமோடே

பணத்தந்தன் றலைக்கன்றும்
படிக்கொன்றும் புடைப்புண்டும்
பகுத்துந்துன் புறுத்துண்டிங் கெனவோதி

பொறிக் குந்திண் கரிக்கும் புண்
டகர்க் குங்கண் புடைக் கும்பண்
பொடிக் கங்கம் பொறிக் குந்திண் டிறல்சூரர்

புகட் குன்றிங் கிடிக் கின்றம்
பொடிக் கின்றந் தகர்க் கின்றம்
பொருக் கின்றங் கிழிக் கின்றிங் கெனவோதி

இருக் குங்குன் றுடைத்து ஞ்சங்
கரிக்கும் புன் றலைக் கங்கங்
கிளைக் கங்கங் கொடுக்கும் பொன் கிளர்வேலா

எழிற் கந்தன் குகச் சந்தன்
பதத் தின்பந் தரற் கின்றிங்
கிருக்கும் பொன் றிருக் குன்றின் பெருமாளே.

---

257. புன்றலை - புல்லியதலை. கங்கு - பருந்து.
அங்கு - அவ்விடத்தில் இளை - பிரதான காவல்.
கங்கம் - வரம்பாக கொடுக்கும் - கொடுக்கின்ற.
பொன்கிளர்வேலா - பொன்மயமான வேலாயுதத்தை [யுடையவனே.

தன தந் தனதத்
தன தந் தனதத்
தன தந் தனதத் தன தான

258. குயி லொன்று மொழிக் கவி ளொன்று முகக்
குண மொன்று மயற் குழலாரின்
குல பிஞ்சு ரவுக் கமையும் பொருளிற்
குடையுங் கயவற் குறவாமோ
அயில் செங் கரபொற் சயிலங் குடிபெற்
றருளுங் குமரக் குகநாதா
அமுதம் பெருகற் புதமிஞ் சடி யர்க்
கருடந் துறு பொற் புயர்வாழ்வே
கயிலைங் கிரியிற் குடிகொண் டரனுக்
கமையும் பெருமைச் சுதவேளே
கனிபொன் பதமெற்கருள் பண்பொழிலிற்
கதிர் கொண்ட யினற் காதேவா
துயிலங் கொழியக் கதிர்முன் குலவத்
தொடிலின் பிணிபற் றிடுசூரை
தொலையும் படிசெற் றருளுங் குமரச்
சுக பொன் குவடிற் பெருமாளே.

தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா தன தான

259. மனத்தா னினைத்தே னுனைத்தா னெனக்கே
மனப்பூ ரணத்தோ டருடாராய்
வனப்பே மிகுத்தோய் சுரர்க்கா தரத்தே
வனப்பா லெடுத்தே குறமாது
தினைத்தா னனைத்தே யிடித்தே வுதிர்த்தே
தினத்தா னளித்தாண் மணவாளா
சினத்தார் புரத்தோ டெரித்தே யழித்தோர்
சிவத்தேவ ருக்கோ ரபுதல்வோனே
அனத்தே வருக்கோ மறைச்சார் புரைத்தோ
யரற் கோர் குருத்தே வெனவோதும்

அரிக்கோ ருரித்தா முமைக்கோ ரெழிற்கால்
அருட் கா வனத்தோ னெனலான

தனத்தோ யுனைத்தா னினைத்தோர் தவத்தால்
தனித்தே யிருப்பார் பொழில்சூழும்

தலைத்தே திருத்தேர் மலைச்சா ரிரத்தே
தனிக்கோ விலுக்கோர் பெருமாளே.

தான தன தன
தான தன தன
தான தன தன தன தான

**260.** நாத வரதமெ யோக குருபர
நாடி யுனையறு வருமேகவி

நான மொடுகட மூய டிமைள
நான மொடுபணி பலபேணி

தோதி னவரவர் ஞான வழிதினை
தூய தெனவுண மடிமீது

சோதியருளொளி யான வறுமுக
சூலி பயிரவி மகனேயென்

றோதி யடியவ ரோடு பழகிய
வாறு முடியணி சிவநாதன்

ஆரு மறிவரி தான பிரணவ
மார வருளிய குருநாதா

நீதி பதியரு ளைய மிகுபதி
நேர்மை யதிபதி யெனவோதும்

நீல மயிலுள சாமி பதமருள்
நீடு திருமலை பெருமாளே.

தனன தனத்த
தனன தனத்த
தனன தனத்த தன தான

**261.** குணமே மிகுத்த மலைமா முனிக்கு
குருவா யுதித்த குகநேவேளே

குமரா பரைக்கு முளையே யவத்தி
குறமா தினுக்கு மணவாளா

பணமா யிரத்தோ டடமே யிருந்த
பருவா சுகிக்கு — வுடன்மேவி

பகையாய் வருத்து புரையே யொழித்த
பகவா கரிக்கு — மிளையோனே

வனமே நிறைத்த சிவனார் தனக்கு
மீனுமோ முரைத்த — குருநாதா

வடிவேல் பிடித்த செகநாதா சுப்ர
மணியா வெனக்கு — னருடாராய்

மணமா தரிக்க வடர்சோலை யுற்ற
வளநாடு வெற்பு — முடையோனே

மகிமா பொழிற்கு னைதரே வமைத்து
மகிழ்வாழ்வு பெற்ற — பெருமாளே.

தானன தாத்த தான
தானன தாத்த தான
தானன தாத்த தான — தன தான

262. வானவ ரேத்த நாளு மாமுனி போற்ற லோடு
மாதவ சேற்ற மேவு — மலைமீதே

வால் தினை காத்தபூவை காதலி னாழ்ந்து னேய
மாதினை வாழ்க்கை யான — மணவாளா

தானவ ருக்கமீறு மாவர வாக்கமாய
தாரயி லேற்றுநாத — செகவீரா

தாதவிழ் பூத்த மாலை தோளசைவேற்ற பூப
தாரணி காத்த வாதி — முருகோனே

மீனமை நோக்கி நீலி பார்வதி சூத்தி சூலி
மீபுகழா ச்சி காமி — மகமாயி

மேனுயர் வாக்கி காளி பேமொழில் காய்ந்த நாரி
வேய்வன மூர்த்தி மேவு — சிவகாமி

பானலை மெய்க்கு நீத வாசகி பூத்த தேவ
பாவல வேற்கு ஞான — மிகவேற

பாலமு தூட்டி யாள வாவிது வேற்ற வேளை
பார்திரு வாக்க நாத — பெருமாளே.

தான தன தந்தன
தான தன தந்தன
தான தன தந்தன தன தான

263. சீர்ருணை யம்பிகா பாலனென வந்தவா
சேவக புரந்தரா மயில்வீரா

தேர் கரி மணந்தவா வார் வளி யணைந்த வா
சேம நிதி தந்தவா வெழிலாளா

பாரருளி லங்குவேல் சேகர மணிந்தவா
பாவிசை மிகுந்த வா தமிழ்நாதா

பாசவினை பந்தமே யோடருள் புரிந்தினை
பாத மலர் தந்து நீ யருள்வாயே

பேரருமை தந்தவா மாதவ மலிந்தவா
பேசி மகிழ் கின்றவா செகதீரா

பேணுபணி கொண்டுமோ ரானி னிடை தங்கு வார்
பேசரிய மைந்தனே குகவேளே

காரண முகுந்தனோ டார்திருவ மைந்துமே
காணவரு கொண்டலே கதிர்காமா

கார் பொழி விலங்கியே வானி மிரு பண்மையே
காவல் புரிகின்ற தோர் பெருமாளே.

தந்த தனன
தந்த தனன
தந்த தனன தன தான

264. கந்த குமரா எந்தை சிவமே
கண்டு நிகரா மொழிமாது

கங்கை சுதனே தந்தி கொழுநா
கந்தி நிரைவார் பொழிலூரா

அந்த ரமுதே பைந்த ணரசே
அன்ப ரகமே லுறைவோனே

அம்பை தருமா னந்த முருகா
அன்பி னுருவே குகவேளே

முந்தை வருமோர் பந்த மறவே
முன்பு வருவாய் குருநாதா

மூன்றி றெறுமே சங்கு மிகவூர்
மொந்த னிரைமே வுறவூடே

சந்த முடனே தெங்கு மிகவே
தங்கி வருபூ வனசோலை

சங்க மில வார் பண்பை வரைமேல்
தங்கு மயில்வேல் பெருமாளே.

தனதன தந்த தந்த
தனதன தந்த தந்த
தனதன தந்த தந்த தன தான

**265.** மயிலினு கந்த கந்த வருள் பரை மைந்த தந்தி
வரநிதி பின்பு வந்த செகநாதா

மகிதல மெங்கு மென்று நிறைபவ சிந்து சந்த
மலைமிசை தங்கு மெந்தை முருகோனே

அயிலமை கின்ற செங்கை யுடையவ பண்பமைந்த
அறுமுக வன்பர்பங்கி னுறுவாழ்வே

அருடரு கொண்ட லென்ற குருபர முன்றுடர்ந்த
அழிபவ மின்றெறுதுங்க வருள்வாயே

கயிலையி லொன்று நந்தி தருமுனை யன்புயர்ந்த
கரிவளி பங்கமர்ந்த பெரியோனே

கனகனை யன்ற ரிந்த பிரபல மிஞ் சிவர்ந்த
கருமுகில் கொஞ்சு கின்ற மருகோனே

சயிலமி லங்கு துங்க வடிவமி குந்த மைந்து
தருணம றிந்து வந்து அருள்வோனே

தருவினி றைந்த பொங்கர் வயல்கள் செறிந் தடர்ந்து
சதுரமி லங்கு பண்பை பெருமாளே.

தந்த தன தன
தந்த தன தன
தந்த தன தன தன தான

**266.** அண்டர் பல பல தொண்டர் துதி செய
அண்டியவர் துய ரறவேவான்

அந்தி நிற மென வந்து மயில் மிசை
அந்த ணருள் புரி கிறநாதா

கண்டு நிகர் மொழி வண்டு நிறை முரல்
கந்த மிக மலி குழன்மாதர்

கண்டு மயலுறு கின்ற செயலற
கந்த விதுதநி வரவேணும்

பண்டு சிவ கவி கொண்ட வக மற
பண்பு பெற வருள் புரிவோனே

பந்த வினை கெட வெந்தை பதமருள்
பண்பை நகர் வளர் முருகோனே

முண்டு கர டசுர் குன்றி யழிதர
முந்த வயில் விடு திடவீரா

மொந்தை யொடு தவில் திந்தி திமி யென
வொன்று திருமலை பெருமாளே.

தந்தத் தனன தன
தந்தத் தனன தன
தந்தத் தனன தன தன தான

267 இந்தச் செனன மதில் வந்தெற் குறு துயர்கள்
இன்றைக் கொழிய வருள் புரிவாயே

இந்துச் சிறிய பிறை தந்திக் கரிய வுரி
என்புப் பணி பணில மிலைவருடா

அந்தற் புத முயர் செய் கங்கைப் பெருகுசடை
யன்பிற் பாவரனை அருளோடே

அண்டிப் பிரணவமெ யொன்றற் பத மருளு
மஞ்சொற் புலவனென வலமோது

செந்திற் குககுமர சந்தப் பொதியவரை
சென்றக் குடுமியுறை குருநாதா

சிந்தித் திடமனுவை யன்புற் றுடனருள
செம்பொற் றகரின்மிசை வருவோனே

கந்தக் கடவுளெனை வந்தித் திடுமடிமை
கஞ்சப் பதமலரை யருள்வாயே

கண்டிற் கிளருமொழி பண்பிற் குதவுபர
கந்தத் திருமலையுள் பெருமாளே.

தான தன தன
தான தன தன
தான தன தன தன தான

**268.** தேக பல மொடு யோக மிக வருள்
தீர வர குண குகநாதா
தேவ வுன தடி நாடு மடி யவர்
தேர வருண் மறை பொழிவோனே
பாக மிகு மது சீனி தினை யிடி
பாகு பத மொடு பலவாறே
பார வமுர்தம தாக கலவிய
பாலின் மொழிவளி தரவாறி
தாக மென வுணா நாக சுனை யிடை
தாவி நழுவவு ளழகான
தார மென வமை கால மென விதி
சார கர முற வெளியேறி
வேக முறு திட வானை யெதிர் வர
மேவு வளி யணை புயவீரா
வேத முனிவர்கள் யாக மிக மலி
வேலர் திரு மலை பெருமாளே.

தனத் தனத் தனத் தனத்
தனத் தனத் தனத் தனத்
தனத் தனத் தனத் தனத் தன தான

**269.** அருட் குணப் பரைச் சிறப்
பொலைப் புரைத் தனத் திணைத்
தருத் திடச் செழித் தெழுத் திடவீரா
அணிப் பதத் திணைத் துதிப்
பவர்க் குளக் கருத் தினுக்
கமைத் தவொப் பளித்தருட் டருவோனே
திருப் புகட் படிப் பவர்க்
குளக் களிப் புறப் பொருட்
செழிப் புறக் கொடுத் தருட் புரிவோனே
செபிக் கினப் பதத் திருக்
குரித் தமைப் பதத் திணைத்
திருத் தியுற் றிடத் தினித் தருள்வோனே

பொருத் தயிற் ருெடுத் தசுர்க்
கணத் தினைத் துடைத் தெமப்
புரத் தினிற் கனுப் புமற் — புயவேளே

புனத் திடைத் தினைப் புரக்
குறத் தியைத் திருத் தருட்
பொருத் தியக் கணத் தினிற் — கொளுநாதா

பெருத் தமுப் புரத் தினைப்
பொறித் தசுர்க் குழத் தினைப்
பிணைத் தெரிக் கொழுத் தரற் — கொருசேயே

பிணக் கறுத் தனைத் துதித்
திடப் பதத் தினைத் தருட்
பெருத் திருப் பொருப் புறைப் — பெருமாளே.

தனன தனத்த
தனன தனத்த
தனன தனத்த தன தான

270. அறமே மிகுத்த செயலா ரிடத்தி
லருளே கொடுக்க — வருவோனே

அனை யாதரித்து மடிமீ திருத்தி
அமுதே அருத்த — வளர்வோனே

மறவீ றெடுத்த வசுரா திசெற்று
வளமை கெடுத்த — வடிவேலா

வனையே நொடைத்து தவமா தர்கட்கு
மகிழ்வை செறித்த — புதல்வோனே

உறமே படைத்த வயிலை பிடித்த
உசிதா கரிக்கு — மிளையோனே

உனையே துதிக்க வினையாள் பதத்தி
லுறவே யருட்பெய் — திடவேணும்

திறஞான முற்ற மகமா தவத்தர்
சிவமே யணைத்து — முடையோனே

தெருளே யளித்த குகனே செழித்த
திருவாழ் பொருப்புள் — பெருமாளே.

தானத் தனதன தனதன தந்தந்
தானத் தனதன தனதன தந்தந்
தானத் தனதன தனதன தந்தந் தன தான

271. கூனற் றிரளுரு முதுகிடை யம்பும்
பாயப் பெருவலி மிகவுற நொந்துங்
கோபத் துடனர சொழிகுவை யென்றங் கவர்பாலாய்

கோளிற் றருமொழி சொல மனதந்தங்
கூடிப் பரதனை தனைமனை சென்றங்
கூறிச் சொலுமொழி வழியிலமைந்துஞ் சுதனுள

சேனைத் தளமுலகுரிமையை யென்றுங்
கானத்திடை முதன்முனை செலவென்றுஞ்
சீர்மைத் தசரதனிடை சொல வன்றங் கவன்மாழ்க

தீயிற் கடுவன மிசைசெல வங்கும்
பாவித் தசமுடி யசுரன னந்தஞ்
சோதிப் படிவரு மயனுழை வந்தங் கதனுலே

தேனைப் பழிமொழி மனதினிறைந்தங்
கானத் துழைதரு கௌவர சங்குஞ்
சேரப் புகுமள விவடனை கொண்டங் கவனேக

சீமைக் கொருமுத லிளவல டைந்துந்
தேரித் துணையொடு புணரியி றங்குந்
தீறக் காளர சுயிர்கொளை கொண்டம் புயராம

கோனிற் கொரு மருமகருக வென்றும்
பானைப் பெருவயி றுளகரியின்பின்
கூறிற் றெருள்குரு முனிவர னந்தம் பெறவோதும்

கோதிற் குலசர வணபவ வந்துன்
பாதத் திடையுற வருள்புரி கந்தங்
கூர்நற் பொழிலுள திருமலை தங்கும் பெருமாளே.

தனன தனன தன
தனன தனன தன
தனன தனன தன தன தான

272. வறுமை யொழியவுன தருமை மிகமலிய
வளமை நலமுதவி யருள்வாயே

வாத பரசமய கலக பிரியமுள
வடிவி னமைகுமா குருநாதா

மனுவி னிறையவுண ரவிய வயிலைவிடு
வலிமை மறவயிர — முடையோனே
மகிப வரிபு தல்வி கவன குறவர்மகள்
மகிழ தழுவகல — மணிமார்பா
அறுதி யுறுபகைவர் படைகள் பொடிகள்பட
அடிய ருளமலிய — மகிழ்வோனே
அறுவ ரமுதமொடு கவுரி பரைகுமரி
அருளு மமிர்து பரு — கியவேளே
எறுழி புலிக ரடி அரியி னுடுக ரிகள்
அரிக ளரிக ணனி — மிகவாழும்
இரவி செலவ ரிய ஒழுக லுளசு னைகள்
இலகு திருமலையில் — பெருமாளே.

தனனு தனதன தனதன தனதன
தனனு தனதன தனதன தனதன
தனனு தனதன தனதன தனதன — தன தான

**273.** முருகா வெனமொழி பவருள மிலகிய
குருவே அறுமுக சரவண பவகுக
முதல்வா ரணதுணை யெனதக மிலகிய — பரநாதா
மொழிவோ முறையுரை தெரிவுற வரனொரு
தணிகா சலமிசை தவமுற வருள்பவ
முதியோர் தவமுனி குருமுனி துதிபணு — மலைவாழ்வே
திருவே பதியென கொளுமரி முகினிற
முடனே வெருவித கட்டுடை யவரற
திறனேர் தநுவலவிசய னதிரதமு — னுளனுகி
செகமே யொருகண மிடையினி னறபொடி
யெனவே செயுமற விரணிய னுயிர்கிழி
திடமால் பரிமள முளவழ கியலரி — மருகோனே
மருவே செறிகுழ லறணிக ரெனவரி
யுறவே பசியசை வலமென வெழின்மிக
மணமார் நிரைநிரை வருவன வகிலொடு — நறுதாமம்
மணமே மாடணிபரை மலைமக ளுண்மையுல
கனையே சிவனிட முறைபவ ளுலகருள்
மகிடா சுரனற வுயிருணு பயிரவி — புதல்வோனே

தருவே பொதுளிய சினையொடு திகழுறு
மதியே செலவரி தெனவுயர் வினையுள
தவமேணர் ககனமொ டிகலுறு மிருவள மலைசூழ்வோய்

தவமே வொருவுரு வெனவளர் குருபர
பதமே தருதகிபிது வெனவருள்புரி
சனகாதி யர்பல பரவிய திருமலை பெருமாளே.

தனந்தானன தனந்தானன
தனந்தான்ன தனந்தான்ன
தனந்தான்ன தனந்தான்ன தன தான

274. அனந்தாவிய பெரும்பேரயன்
உணர்ந்தோமறி விதந்தேரில
தறிந்தே சிறையிடுஞ் சேவக செகசோதி

அகந்தாவிய வமண்பேயினை
கடிந்தேகழு புகுந்தேவுடல்
அருந்தேவிழ புரிந்தேவிய முருகோனே

மனம் பூரண நிறைந்தாரக
முறைந்தேவரு குணந்தூயவ
வனந்தாடினை புனங்காவலி னிடையேறி

வளர்ந்தேவளி யிடந்தேனிடி
கனிந்தேவுண மகிழ்ந்தாடிடு
மதம் பேர்பெறு வயஞ்சேர்சிவ குருநாதா

சினந் தேர்கரி யடர்ந்தேபரி
தொடர்ந்தான் படை மிகுங்கோடிகள்
செறிந்தேநிறை கனங்காசுரர் அறவேநீள்

திடஞ் சேரயில் குடைந்தாடிட
பெரும் பேருயிர் பறந்தோடிட
செயுந் தீரமதுறுங் காரண குகவேளே

தினம் பாவலர் பணிந்தேபுக
ழுகந்தேதுதி செயும்போதக
சிரஞ் சீர்பெற பதம்போதினை யருள்வாயே

செகம்பாதல முறுந்தூயவர்
கனிந்தே வழி படும்பூரண
சிறந்தே திருநகங் கோடுறை பெருமாளே.

தனன தன தனன தன தனன தன தனனதன
தனன தன தனன தன தனன தன தனனதன
தனன தன தனன தன தனன தன தனனதன தான

275\. உலகிலென தனைகருவி னிடைமருவி பருவமுற
ஒருசிறிய குழவிவயி றுழைவிலெழ வவளமுதை
யுதவியிரு கடைவழிய வுடல்பெருக விரவுதுயி லிலதாக

ஒருவருட மிவணியல வனமுதவி தசமொழிய
வுரியகலை சிலபயில வயதுபதி னெழுகழிய
வுனதகடு நிறையவுண தொழிலமைதி பெறுவையென
வனைகூற

நலதுணைவர் பலபுகலு கொடியமொழி யினினலிய
வறுமையொடு கவலைமிக மனதினிலை கலைதலுற
நளிர்கிளைஞ ருறவினர்கள் பொருள்பொனிலை யெனவிகழ
விளையாகி

நகரமொடு பலகுடிசை யுடையபல பலபதிக
ளஞ்ஞுகிசில கணிதமுறை பலபொழுது கழியகவி
நவிலசில பகல்கழிய தயிலவவு டதமுறையில் பலநாளாய்

நலவுரிமை யெனவொழுக வனைமடிய துணைவர்பகை
பொருள்கவர மனமெலிய வுடனலிய மனைவிவழி
நகையிலர்கள் அருமையிலர்சிறியசிறுவறிவினர்கள்
எனலாக

நரரிலெனை யொருவனென பழையபெரு பகையினரை
துணைவரென மனைவிவழி யுறவினர்க ளயலரென
நவநிதியில் வறியனென வுடனலிசெய் பிணியனென
விளையாவும்

குலமறைக டுதிபகவ குகவறிவை யுனதுபத
மெனதுவுயி ரெனவுருகு மியல்பறிவை யினிமைமிக
கொடியபங்க வறுமைபிணி யறவொழிய நலமிகை
வருடாராய்

குவடனைய புயவடிவ கருணையுரு வொளிர்செய்பர
வரதசர வணபவமெய் பரசமய குலகலக
குலவுமெழி லில்குதிரு மலையில்மிசை வளர்குமர
மெருமானே.

தனன தன தந்தனந் தந்தனந் தந்தனந்
தனன தன தந்தனந் தந்தனந் தந்தனந்
தனன தன தந்தனந் தந்தனந் தந்தனந் தன தான

**276** பவள வுடலந்தியுங் கொன்றையுந் தும்பையும்
பணகண புயங்கமுந் திங்களுங் கங்கையும்
பருவெழிலிலங்குசெங் குஞ்சியின் பந்தரும் படிபூணு

பயிரவியனந்தரந் தங்குமன் புந்தருஞ்
சிவபரனி ரந்தரங் கந்தருஞ் செஞ்சுதன்
பணிவிடைபு ரிந்தெழுந் தன்பகம் பொங்குநம் பரநாதா

தவவடிவி லங்குமன் கும்பனும் பண்பொடும்
பணிசெயம கிழ்ந்துயர்ந் தெந்திரந் தந்திரஞ்
சகலவித மந்திரங் கண்டவண் டந்திடுங் குகவேளே

சதுர்மறைபு கழ்ந்திடுங் கந்தநின் செம்பதங்
குறுகுமியல் பந்தியுஞ் சந்தியும் பிந்தியுந்
தனிநிலையி ருந்தகந் தங்கிடும் பண்பையின் றருள்வாயே

புவன வசலங்களுஞ் செந்திலுங் கொங்கவிழ்ந்
திலகலரி லஞ்சியும் பண்பையுங் கங்கையும்
புநித சிவ குன்றமுந் தங்கிடுந் தென்பரன் கிரிவாழ்வே

புதியபிர பந்தமுந் தண்கடம் பின்பெரும்
பிணையலொடு செண்பகஞ் சந்தனங் குங்குமம்
புகழ்குவளை தொங்கலுங் கந்தமும் பம்புறும் புயவேளே

திவவுகழை கந்தரந் தந்தியின் பங்கொளுங்
குமரகுரு சுந்தரங் கந்துருந் தந்தியின்
றிரள்வயிர மும்பெறுங் கொம்பெனுஞ் செந்தனங்
குறமாது

திளைவனம டைந்தவண் டங்கியும் பண்டரும்
பனிமொழியி ணங்கவுஞ் சந்ததம் புண்புறுந்
திருமலைவ ளர்ந்தெழுந் தொண்டர்தம் பங்குறும்
பெருமாளே.

தந்த தன தந்த தந்தந்
தந்த தன தந்த தந்தந்
தந்த தன தந்த தந்தந் தன தான

**277.** பஞ்சதரு தங்கு மிந்த்ரன்
றன்பமற வந்த மைந்தும்
பண்டசுரை துண்டி தந்சிந் தடல்வீரா

பண்பலை முழங்கு சந்தங்
குன்றிடை வதிந்து மெந்தன்
பங்கயமி ருந்து யர்ந்தன் பருள்வாயே

பஞ்சநிற கிஞ்சு கங்கண்
கந்தனென சிந்தை கொண்டெம்
பந்தமொழி யென்று கொஞ்சும் பல்பாலும்

பண்புமறை விண்ட ளந்தந்
தெண்டனி லுவந்து நின்றும்
பண்புரிய கொண்ட லஞ்சுங் கொடையாளா

தஞ்சமென வந்திறைஞ்சுஞ்
சங்கடமறிந் திருந்துஞ்
சந்தத நிறைந்த வன்பிங் கருளாதேன்

சங்கரி தனஞ் சுரந்தங்
கின்புற வழங்கனந்துங்
தண்யழகி நின்றிலங்கும் பெருவாழ்வே

கஞ்சமலரிஞ்சி யெங்குந்
தங்கிவளர் மஞ்சள் செம்பும்
கந்தமலி கின்ற கொங்கும் பசைசார்பும்

கன்றி னுடனின் றிணங்குங்
கொண்டலடைகின்ற தெங்குங்
கந்திநிரை பண்டை விண்டின் பெருமாளே.

தனத்த தன தானதன
தனத்த தன தானதன
தனத்த தன தானதன தன தான

278. பொறுக்க முடியாதபிணி வருத்து தலிலாதபடி
புகழ்க்கு மர னேகிருபை தருவாயே
புவிக்குளொளி யேர்மனித வகுப்பினிடையே நிறுவி
புரத்தனினை யாத யர லழகாமா
செறுக்கு மிகுசூரகடு வகிர்த்திடுவை வேலுடைய
திருக்குமர னேகளப மணிமார்பா
திருத்தணி கையோடுலக வரைக்குவடி லேயிலகு
திருப்ப ழநி மீதுலவு முருகோனே
கொறுக்கை வன மீதுதய குகப்பு நித தேவநினை
குறித்து கவி பாட்டுநி தருவோனே

குணக்க டவு ளேகருணை கொழித்த வமு தேயெனது
குறிப்பி தய மேசரத முடையோனே
மறுக்க மற வேனுனது கடைக்க ணரு ளேநிலவ
மலர்ப்பத மதே யருள வருவாயே
வரத்தி றமை யேயெழில்கொள் குறச்சி றுமி யார்கணவ
மகிழ்த்திருவி லாசமலை பெருமாளே.

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன தன தான

**279.** பலமுறை வுனதடி பரவிய வெனதிடர்
பகையற மிடியொடு பருவரல் பொடிபட
பகரரு முடல்பிணி துகள்பட வருளென மிதுநாளும்
பதமலர் தொழுதமு திதயமு னிடமுற
வொருவித வுதவியு மிதுவரை யருளிலை
பருவிர ணியனுயிரு னுமொரு கருமுகில் மருகோனே
நலமணி பணகண பணிமணி யரிமணி
குலமணி கரிமணி குலவிய வளைமணி
நவமணி பலபல கொழுவிய சரமணி நதிதேவி
நளிர்மதி சிறுபிறை யறுகொடு பணியணி
அழகிய சிவபர னருளிய குருபர
நகமலி தனிநடு வளர்பவ நடமயி லுடையோனே
சலதியை யொருகண மிடையற வயில்விடு
வலமுடை யவதிட வழகுடை யவகுக
தனகன மிகுவளி மருவிய புயபல முருகோனே
சதுர்மறை முழுவது மொருநினை வொடுபர
வியமுறை துருவிய பதமல ருடையவ
தலமிசை கெதியிலை யுனதரு ளலதிலை தயைகூர்வாய்
குலமிலை நலமிலை குணமிலை யருளிலை
கலையிலை வடிவிலை கனிவுள மொழியிலை
கொளகொள வெனசனி யிளகியவயதுள னெனவோதும்
குலவிய பலபொரு ளுளதெனி னவனிடை
குலமுள பெரியரு முறைமொழி பகருவர்
குணபர பொருளருள் பதிமருள் திருமலை பெருமாளே.

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தன தான

**280.** முருக சரவண பவகுக அறுமுக
குமர குருபர வருவரை யிலகிய
முனிவர் தொழுமறை யருளிய பரசிவ குருநாதா

முழுது முனதரு டுணையென பரவுமெய்
யடிமை யிடர்பகை பிணிமிடி யிவையற
முதிய மதியொடு கவிசொல வலிமையை யருள்வாயே

உரிய வுமைபக வதிபரை பயிரவி
கவுரி யரிபுற மிலகிய திரிபுரை
உதவ யிருகர மொடுவொரு வுருவமை முருகோனே

உலக மிசைநில வுயிர்தொறு நிறைபவ
தருவி னிழலம ரரிதரு சுதையினை
யொருமை மனமுற மருவிய பரிமள மணிமார்பா

வருமெய் யடியவ ருளமெனு தெளிவுறு
சுனையி னிடையெழு குவளையை யணிபுய
வரத திருமலை யுறைநக ருயர்பெற வளர்வோனே

மதியம் நிறைகலை யினைவகு திருநுத
லழகி குறமகள் தழுவிய குககரி
வதன முறுவசு ருயிருண வயில்விடு மயில்வீரா

கரிய முகினிற வணனய னிவர்புகழ்
சமய புவியென வொருகுகை பிளவெழ
கடிகை யினிறச சதமக ருயிர்பெற வருவோனே

கனக மொருபெரு வரையென நிலவிய
தருமை மகமலி முனிவர்கள் மகரிஷி
கதியை யுறவரு கெனவழை திருமலை பெருமாளே.

தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன தன தான

**281.** அறுவர் போரமு தினைதின மகிழ்வொடு
பருக வோர்வடி வழகிய நடைகொள
அரிய பூணணி கொளவொரு வீடிவழு மெனலாகி

அருளி னோடுமை மொழிசொல வொருவுரு
களப மோடணி திலதமு மிளிரிட
அரிய மாபரை மடிமிசை யொருவுரு வெனவேநீள்

மறுவு மோடின கனவயில் கரமுற
குழைக ளோடிட மரகத ரதவுருண்
மரபி லோடிட புரிவிழை வினில்வடி வழுமாக

வளமை யேயுற வருசர வணபவ
குமர நாயக தகர்புற மிசையெழில்
மருவ வேவரு குருபர பழனிமி லமர்வோனே

கறுவு மேலெழு மசுரர்கள் குலமற
அரைவி னுடிமி லயில்விடு கரமல
கனக மேருவு முடிசித றுறபுடை திடவீரா

கணப ணுடவி யுடனெறி படநிலை
தனக றாணிடை வொருபெரு வரியென
கனக வீரனி னுயிர்கொளை கொளுமுகில் மருகோனே

செறுவை மேவிய திரிபுர வவுணர்கள்
கருவி னோடர ணறவிர னொடியினில்
திறமை யாகிய சிறுநகை புரிசிவ பரநாதன்

தெளிவி னோமுறை தெளிவுற வருளிய
கிருபை யோர்வடி வெனவென திடமதில்
திகழு சீர்பொரு ளருள்குக திருமலை பெருமாளே.

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனனதன தனனதன தன தான

**282.** உனதரிய வடிமைமென யெனதுசிறு வயதுமுதல்
உசிதநல மருள்செமென வுனதுபத மலர்தொழுது
மொருகதியு மிதுவரையி லுதவவிலை யெனிலெனிலை
யெதுவாகும்

உயரியந னிலையுடைய கருணைவிழி யுடையபர
உலகிலுன தருளலது வெனதுநிலை யிலதறிவை
வொருமைபெறு மனமிளகி தருணமிது பதமருள
வருவாயே

மனதரிய விதுததியி னுதவிபுரி சிவகுமர
மவுனநிலை கொளுதலுழ கிலைதரும மனுமுறைமை
வளமைபெற வருள்புரிதி சுகமுறுவை புகழ்பெறுவை
முருகோனே

வளியைதினை வனமதனி லணுகியவள் மகிழவணை
வரதகுரு பரமுருக பரசமய குலகலக
மடமையறி விலிகசட ரிகழினுன தடிமையென
விழிவாமே

தனதவுன தருமைபணி வினிவிதய முருகுமன
தியல்பறிவை பகையறிவை குணமறிவை பிணியறிவை
தனமறிவை துணையறிவை மனைவிவழி யுறவறிவை
எனலாகும்

தாணிதனி னுனதுபத மலர்கடொழு மவர்களிடை
நலமெணுகி வளருமென வரியமறை புகலுமொழி
தனிலையமு மிலைகுமர வுனைவொழிய வழியுமிலை
தலைநாவாய்

கனநுனியி லொருசிறிய குருவியுற கலமகல
கடலினடு செலுமமய மதையகல பலதுயர்கள்
கடிதுசெய செலசெலபி னவணிலுறு மலதுகெதி
யிலைபோலும்

கருதுமென திடர் பிணிகள் வறுமையற வொழியபல
கலைபெருக நலமிலக வுனது தெரி சனையருள
கனகபத மலருதவ வருகதிரு மலையில்வளர் பெருமாளே.

தான தன தன தந்தனந்
தான தன தன தந்தனந்
தான தன தன தந்தனந் தன தான

283. சீத மலி மழை மஞ்சிவர்ந் தேற பொதுளிய கொங்கையுஞ்
சேர வொழுகிய பொங்கரும் பணை சூழும்

சேறினிடையிடை சங்கினந் தூயமணி பல கண்டிடுந்
தீபமென வொளி மிஞ்சிடும் புகழ்நாடா

தூதிநெரு பொழு தங்கனம் பாத மணனுற சென்றிடுஞ்
சோம னணி சிவ சுந்தரம் புதல்வோனே

தோடுமிரு குழை கொண்டிடுந் தேவி பயிரவி கங்கையுந்
தூயசுதனென கொஞ்சிடுங் குமரேசா

சூதமர மென நின்றிடும் பாவி யசுரனை கொன்றுடன்
சோரனை கிரியென நின்றிடுஞ் செகவீரா

சோக முதலுறு புங்கவன் றேவனைனநித மன்பிருந்
தூறும மணற வென்றிடுங் குகவேளே

சீத மழையரு ளிந்திரன் றேடு தவநல மங்கையின்
றேவு நனிதவ செந்திலம் பதிவாழ்வே

தீரமிகு குண கந்தநின் பாத தெரிசனை யென்றினுஞ்
சேம முடனருள் பண்மையின் பெருமாளே.

தனத்த தானன தானன தந்தன
தனத்த தானன தானன தந்தன
தனத்த தானன தானன தந்தன தன தான

284. கனத்த போருட லாமீறு கொண்டவி
னிறத்தி னாணி வானுடு துன்புற
கடுத்த வீறுடை மாகுரை வென்றெழின் முருகோனே

கணத்தி லேமயில் மீதேறி யந்தர
மனைத்து லாவிய மாதீர புங்கவ
கறுத்த மாமுகி னேராமு குந்தனின் மருகோனே

தினத்த னார்மதி வான்மீதி லங்கிய
வுடுக்க ளோடெழில் கோமேத கந்திகழ்
தெரித்த மாமணி மாமாலை யும்பணி மணிமார்பா

திருத்த மோடமை பானூறு கின்றசொ
லுரைத்த நாயகி கானூடி ருந்தவள்
தெளித்த மானினை தேனோட ருந்திய குகநாதா

தனத்த மாதனம் வாயூறல் கண்டென
அவிழ்த்த பேரெழி ருமேநி றைந்தென
கடுக்க ணாரியர் மேலாசை வந்திட விடலாமா

தனத்தி லேநினை வாரேனுமுந்தனை
பணத்தி னோடரு டாமேமி லங்கிட
கனித்த தாமரை பாதார விந்தமும் அருள்வோனே

மனத்தி லேயென தாதார மென்றுனை
அதித்து ளோனரு ணாதாக ரந்தருள்
வளத்தின் மேவிய தேனூறி லஞ்சியில் வளர்வோனே

மணத்த மாபொழி லூரூடு றைந்தவ
நலத்து லாவிய யோகாதி மந்திர
மனைத்து மானவ தேவாதி னந்திகழ் பெருமாளே.

தன தன தனன
தன தன தனன
தன தன தனன தன தான

285. அனுதின முனது பதமலர் தொழுது
மருள் சிறிதருமை யருளாதேன்

அறுமுக குமர சரவணமுருக
அருள்பரை குமரி அபிராமி

தனுநிகர் புருவ முடையவள் எழிலி
தனைபுரை குழலி சிவகாமி

சதுர்மறை பரவு முமையுல கரசி
தனி மயிலழகி மகமாயி

மனுமுத லுயிர்க ளொடறுமுள புனிதை
மதிநுதல் கவுரி யெமதாயி

வரைமுதலரிய பகவதி புதல்வ
மலைமிசை வளரு முருகோனே

பனுவலில் வலவ சிவகவி பகர
பருவன மிடையி லருள்வோனே

பதமல ரலது துணையிலையருள்செய்
பரவு திருமலை பெருமானே.

தன தன தந்தந்
தன தன தந்தந்
தன தன தந்தந் தன தான

286. பழனியி லன்புற் றுறைபவ செந்திற்
பதிவளர் புங்கப் பெருமானே

பருமதி யன்பர்க் குளமகிழ் பொங்கப்
பலனருள் கின்றற் புதவேளே

பழமலி பொங்கர்ப் பொழிலிடை பண்பிற்
பதிமதி தொண்டர்க் கணமோடே

பழகவு நின்பொற் பதமலர் தொங்கப்
படிவர வெந்தற் கருள்வாயே

கழனிபுறஞ் சுற்றிலகுமிலஞ்சிக்
கதிபகலிம்பற் றியவேலா

கமுகுநி றைந்தெப் புறமு மிலங்கக்
கருணையுமஞ்சட் செறிசோலை
கிழமை யொடிஞ்சிக் குலைமுதிர் தெங்குக்
கிளைகொள் கடம்புப் புனையோடே
கிளர்சினை சிந்திற் கருமழை கொண்டல்க்
கெழுமணி பண்பைப் பெருமாளே.

தனன தன தனன
தனன தன தனன
தனன தன தனன தன தான

287. பகைவ ரற வொழிய வவர்கள் குடர் கிழிய
பரிய நுதி யயிலை விடுவாயே
பழைய வசுரர் கிளை தவிடு பொடிகள்பட
பருதி நிற மிலக வருவோனே
தகையி லமணர்களை யொழிய கழுவில்புக
சமய குரவ னென வரும்வீரா
தரையில் வயிர மன முடைய குமர குரு
சரத மிளிரு மயி லுடையோனே
குகையி றசு சதகர் வுயிர்கள் பெற முனியை
குவடை யிரு பிளவு செயும்வேலா
குருதி நிற துவச மிலகி வரைகள் மிகு
குவடினிடை யொளிரு மெழில்வேளே
திகை கொள் பலபகுதி யுடைய பொழிலினிடை
திகழு மணி சிகர பொழிலூரா
திருவி ளெடு சரசு வதியு மிலகி வளர்
திருவினக முயர்செய் பெருமாளே.

தனன தன தனன தன
தனன தன தனன தன
தனன தன தனன தன தன தான

288. பகைமை யற வொழிய விது
தருண மருள் புரிய சிவ
பகவ சர வணமு ருக குமரேசா

பரமி பயி ரவிகு மரி
கிருபை நிறை கவுரி வுமை
பரவ டிய நிதயம் வளர் சிவகாமி

குகையி னிடை வளர் முனிகள்
பெருமை பெற வருள் புநிதை
குலவுபரி மளக ளப முளாதேவி

கொடுமை யினை யடியரிடை
புரிபவர்கள் குடர்கிழிய
குருதியுண வெழிலொளிசெய் திரிசூலி

தொகை படைக ளறுமகிட
னுயிர் பருகு வயிர மன
துடையபரை நக முதவ வருதேவி

சுதவரத முடையகுக
பசியமயின் மிசையிலகி
துரிதமுட னுலகுவலம் வருவோனே

திகை கொடிரி புரவசுரர்
படை யரணு மொழியவொரு
சிறியநகை யினில் பொடிசெய் செகநாதர்

சிறுமதலை யெனமருவு
மினியமுக முடையபர
திருமலையி லுலவருமை பெருமாளே.

தனன தானன தாத்த தனதன
தனன தானன தாத்த தனதன
தனன தானன தாத்த தனதன தன தான

289. கனக நாயக மூர்த்தி தராதல
முடைய பூரண மேத்து மகாமுனி
கவின மாமறை யூட்டிய வாகுக செகநாதா

கருணை யாகிய் வூற்றி னிலேவொரு
திவலை யாவது வேற்க ருள்வாயென
கருதி யேதுதி போற்று சதாவுளம் அறியாயா

தனத னேதயை யீத்த ருளேபுரி
யுனைய லாதிலை யேற்ப தெனவிடல்
தமிய னேயினை நோக்கி யீனுதா வருள்வாயே

சரத மாமறை யோதற்றி யவாசிவ
சமய மேநிலை நாட்டி யவாபர
சமய வாதிளை யோட்டி யவாகுரு பரநாதா

மனதி னோடுனை யேத்த வராசிவ
கவியை மாவன மேட்டி னிலேபய
மருவ வேபல வார்த்தை களாடியு மவரோடே

வருமை மீறிய போக்கு களேயற
கவிதன் மீதினி லேற்ற ருளேபுரி
வரத மாதவ கீர்த்தி குணாகர மயில்வீரா

பனக பூடண கூத்தி னடேசனை
தணிகை மேறவ மேத்தி டுவாயென
பரிய வோமுறை காட்டி யவாதக ருடையோனே

பழனி யேர்படை வீட்டி னிலேபொழில்
பழன மேவிய நாட்டி னிலேதிரு
பதியு மாறவ கோட்டினிலே வளர் பெருமாளே.

தனன தனத்த தனந் தானதன
தனன தனத்த தனந் தானதன
தனன தனத்த தனந் தானதன தன தான

**290.** கருணை நிறைத்த செழும்பாகேயென
தருமை கவித்த பழந்தேனே வளர்
கதிரை யொழித்த நிறம்போராகர முருகோனே

கவலை யகற்றி தனஞ்சேய் மாதவ
மிலக வளித்து பதந்தூய் தாமென
கவிகள் படைத்து தினந்தா னோதிட வருடாராய்

அருணகிரிக்கு மனம்போலே யரு
ளமுத மளித்த விதம்போலே யுன்
தடிமை யெனக்கு வரந்தா கோமள வடிவேலா

அருமை கிளைத்த சிலம்பே வாழ்பவ
குமர கரிக்கு விருந்தே காவன
வரிய குறத்தி மருந்தே மாதவன் மருகோனே

தரும முதித்த செழிம்பே மாதவர்
மனது ருசித்த கரும்பே வானவர்
தழைய முளைத்த பெரும்பே றேகுக வரதீபர்

சமய விளக்க மெனுந்தே வாமறை
பரவி யகித்த வயம்பே தாபதர்
தமத கழுற்ற சுரும்பே மாபரை யருள்பாலா

வருமை மிகுத்த பெருஞ்சூ ரேவிய
படையை யுடைத்து வகிர்ந்தே நூறிடு
வயிர மிழைத்த திறம்போ ரேறயி லுடையோனே

மருதம் வளைத்த பெருஞ்சா ரார்பிடை
பொழில்க ணிறைத்த வளஞ் சேரூர்புடை
மகிழ்வு தழைத்த கனஞ்சேர் மாமலை பெருமாளே.

தான தனத்த தனந் தானதன
தான தனத்த தனந் தானதன
தான தனத்த தனந் தானதன தன தான

291. ஆதியெனக்கு வரந்தா தேவென
வோதி யனுத்த விதந்தானே யல
தார்வ நிறைக்கு மனந்தானேயிலை யடியார்பால்

ஆசி யுரைத்து பெரும் பேறே பெற
வாழ்வை யமைத்து சொறிந்தே தேவமு
தார வருத்தி சுகந்தானே யுற வருள்வோனே

நீதி மிகுத்த வளஞ்சேர் தூயசு
வாமி மலைக்குளமர்ந்தே வாழ்பவ
நீவி தவத்திலுறுந்தே வாரண முருகோனே

நேயமனத்தி லுகந்தே யேழையை
கா பிணியற்றுதனஞ் சீரேர்வர
நேர்மை யளித்து பதந்தா மாமலை யுடையோனே

போதிபிடத்துறை தந்தா தேவர்கள்
போர்தீய ரற்றிட வந்தோனே பெரு
பூவுலகத்தை யளந்தோன்மாலரி மருகோனே

பூமியனைத்து நிறைந்தோனே யெழில்
காவன மத்தி யடைந்தோனே வளி
போக சுகத்திலுகந்தோனே மயி லுடையோனே

சோதி விழிக்கணமைந்தோனே நல
தாசரிடத்தில் வளர்ந்தோனே திரு
சோலைமலைக் குடைந்தோனே யரு ளுடையோனே

சூதமரத்தை வகிர்ந்தோனே ரண
சூரருரத்தை யரிந்தோனே திரு
சூழுமலைக்குணி மிர்ந்தோனே வல பெருமாளே.

தனன தன தனனதன தனனதன
தனன தன தனனதன தனனதன
தனன தன தனனதன தனனதன தன தான

**292.** உலகில் பொருளிலை யெனிலெ மதியு மிலை
யொரு வழியில் மனநிறுவு மொருமை யிலை
உயர்வு பெறு குணமு மிலை சுகமு மிலை எனவேகீள்

உறுதிபெறு தனதுமர பியல்புமிலை
மனைவழிசெய் சுகமுமிலை யுறவுமிலை
ஒருதரமு மிலைபெரிய ருறவுமிலை இவையோடோ

பலகலையில் வலிமையிலை தருமமிலை
பழகடிய ரிடமணுக வழியுமிலை
பகவதெரி சனைகள்பெற செலவுமிலை விருதாவாம்

பரமவுன தடிபரவு மிடைதுயர்கள்
பலபுரிய நிலைகுலைய பசியுமெழ
பதறியுட லநலிதலுற சிலரிகழ மனமாழ்க

நலமுமிலை யுடையுமிலை பெருமையிலை
நகருமிலை புலமுமிலை யவையினில்செல்
நயமுமிலை புகழுமிலை நகையுமிலை எனலாகா

நலமிடிகள் பொடிகள்பட வடியரிடை
பளபளென வொளிருருமை யுளபெரிய
நடனமயில் மிசையிலகி யருள்புரிய வருவாயே

இலகுமறை நிறைபகவ குகமுருக
வெனதிதய மிடைவளரு மறுமுகவ
இனியகவி மதுரமொழு கியபிணைய லணிவோனே

எழிலின் பொழிறலை தவழ மயில்கணட
மிடகிளிகள் மறைகள்சொல தவமுனிவர்
இமையவர்கள் துதிபெருகு திருமலையுள் பெருமாளே.

தனதன தனன
தனதன தனன
தனதன தனன தன தான

293. பகைபிணி மிடிகள் பொடிபட கொடியில்
பழகிய மயிலில் வருவாயே
பதமல ரலது கெதியில தறிவை
பயிரவி குமரி யருள்பாலா
குகைமுனி வரர்கள் துதிபணு மெமது
குருபர வரத குகநாதா
குணில்கொடு வெளில்செய் களியுகு மெழிலி
குணமலி யருமை மருகோனே
தகையயி லிலகு வயகர முடைய
சரவண பவமெ யுடையோனே
சதுர்மறை பரவு மெழிலறு முகவ
தகர்புற மொளிரு முருகோனே
நகைதரு பொதுளி வளர் பொழிலுடைய
நகரிடை பவனி வருவோனே
நதிமதி யறுகு மணிசிவ மதலை
நளிர்திரு மலையுள் பெருமானே.

தனனத் தானன தானன தானன
தனனத் தானன தானன தானன
தனனத் தானன தானன தானன தன தான

294. கருணைப் பேருரு வாகிய மாபர
அடிமைக் காதர வாகிய வாகுக
கனகப் பூரண கோமள யாமளை யருள்பாலா
கவினுக் கோர்நிலை யானவ னேயென
தருமைத் தாதையு மீனத யாபர
கதிரைப் போலொளி யாகிய வேலணி புயவேளே
கருமைக் காரவு ணுதிய ரேயற
நொடிகைப் போதினி லேபயி லேவிய
கடுமைத் தீவிர மேவிய மாவய முருகோனே

கபடுற் றோரறி யாதவ னேகுரு
முனிவர்க் கோதிய தூயவ வாறிரு
கரமுற் றேறிகழ் சாமியெ னுதர முடையோனே

தெருள்பெற் றாரிட மேவுறை சேவக
வுணைமிக் கோர்துணை யேயிலை மாதவ
திருபொற் பாதம லாதிலை யேகெதி யருடாராய்

திரிகைப் போல்மன மேசுழல் வாதைக
ளறவிப் போதரு ளேபுரி வாய்மிகு
செகமெய்ப் போதம காபல மேபெறு மயில்வீரா

தருவுற் றேர்பொழில் சூழிடை யேநதி
மருவிப் பாய்நில மீமிசை யேபணை
தழைவுற் றேவினை வாகிய மாவள முளநாடா

தருமற் கோரிளை யோனிடை சாரதி
உரிமைக் கானம காமரு காதிரு
தலைமைத் தானம தாகிய மாமலை பெருமாளே.

தன தனன தன தனன தானன தானதன
தன தனன தன தனன தானன தானதன
தன தனன தன தனன தானன தானதன தன தான

**295.** குமாரகுரு பரமுருக வானுடு தேவர்துனி
களைகளற வருபகவ நாதாம யூரவென
குறைகளரை நொடியதனி லேகோக வோடுமென
மறைகூறு

குணமிலகு தவநெறிய ராமுறு கோடிபலர்
பணியநித மருளுதவு தூயாவி ஞேதசிவ
குரவனென வுலகரிய நானுவி சேடமறை புகழ்வோனே

சமராசுர திறமலிசெய் வீரான சூதமற
வளரவுண குலமொழிய மார்பீரு கூறிதுடை
தளிரயில கடகமணி பாலாகு காகவுரி புதல்வோனே

தன தனன தனதனன தானன தானதன
தின தினன தினதின்ன தேனன தானவென
சதுர் பரத மிடுநடன கோலாக லாடமயி
லுடையோனே

தமதுமன முறவணைய கானூடு மாகுறமி
னணுகிவளை யிடுபருவ மேலான தாமமென
சரசரச மொழிகள்சொலி வாதாடி யார்வமுற
வணைமார்பா

சனகர்முத லனைவர்பணி தேவாத யாகிதியெ
னிதயமிசை ரதமுருகவ பாவாண ஞானமுத
தயிலைவடு டதமுறைக டாகுக வேயருள்செய்
திடும்வேளே

திமிதமொழி யெனபுகல்வ தேதேதெ ஞசாசு
வதியுமொரு வகமதனி லாராரு மேயறிய
செகவளமை மொழியிதெனு நாவாணியே மகிழு
மருளாவா

தினமுனது பதமலரி லேவாழ வேகிருபை
தருதருணம் அருள்புரிவை சீரான மாமயிலில்
திருநடன மிடுபுநித மேலான நாகமுறை பெருமாளே.

தனன தன தனன தன
தனன தன தனன தன
தனன தன தனன தன தன தான

296. அனவரத பரிமளநன் மிருகமத மணிமருமம்
அழகவிரு மயிலின்மிசை வருவோனே

அனுதினமு முனதுதுதி யலதெனது மனமெதிலு
மணுகுவது மிலையிதுவு மறியாயோ

உனதுமன மயமெனினுன் மகவுமெனை யுறுதியொடு
உளமகிழ வருளுவது மெவாகும்

உலகின்மிசை நடனமிடு பரசமய குலகலக
உமைபுதல்வ னெனவளரு முருகோனே

கனவயிர தாளவட மொடுநகைகள் வெயிலுமிழ
ககனமினை நிகரவரு மிடையாளை

கருதிதினை வனமதிடை குறுககுறம கண்மருவ
கனியுமொரு குமரகுரு பரநாதா

செனலின்மணி விளைவினொடு கனலின்மணி முறுகவிளை
செழிபழன வளமைமிகு பொழிலூரா

சிறுவனுன தடிமையென வருளுதவு ததியுமிது
திருமலையி லெனதருமை பெருமாளே.

தன தனன தத்த தந்தந்
தன தனன தத்த தந்தந்
தன தனன தத்த தந்தந் தன தான

**297.** குகபெருமை சத்தி தங்குங்
கரபொதிகை வெற்பி லங்குங்
குறுமுனிவ ருக்க னந்தம் புகல்வோனே

குணவுரிமை யிற் கிளர்ந்தம்
பதமலை ரளித்து மெந்தன்
குலதிலக பொற்பி லங்கும் பெருவாழ்வே

திகழமுது ருட்டி யுந்தன்
றலைமக னெனக் கனந்தந்
தினமுதவி யற்புதந்தந் திடுசீலா

சிவபரம னுக்குவந்தம்
பிரணவ முரைத்த கந்தன்
றிருமறை முழக்க மிஞ்சும் பொழிலூரா

ககனமலையை தொட்டசங்கஞ்
சகரர்வினை கட்டடங்கங்
கவிழுநதி யுச்சிதங்குஞ் செகநாதர்

கனல் விழியினிற் பிறந்தும்
பகைய சுரரைக்களைந்துங்
கமழுரு பினிற் பிறங்கும் பெரியோனே

செகமுய ரிரத்ன பண்டின்
குகபிள வெடுத்தனந்தந்
திரடபதருக்கனந்தந் தருவோனே

செறிகிளைக ளுற்ற சந்தம்
பொழினகரி னிற்சிறந்துந்
திருமலையினிற் பெருந்தண் பெருமானே.

தந்தத் தனதன
தந்தத் தனதன
தந்தத் தனதன தன தான

**298.** கஞ்சத் தசுரர்கள் துஞ்சற் கயில்விட
கண்டித் தவருயி ரறவீழ

கண்டக் களிசுர ரெண்டிக் கிலர்மழை
கங்குற் பகலற மிகவீசு

செஞ்சொற் புலவர்கள் பண்பிற் கவிசொலி
சிந்தைக் கொருமுத லெனவோதும்

செந்திற் சரவண தந்தைக் கொருகுரு
சிந்திற் றுயிலரி மருகோனே

தஞ்சத் துணைதின மன்பிற் துதிசெய
தம்பொற் பதமலர் தருவாயே

தந்திக்கிளையவ விந்தைக் குகபர
சங்கத் தமிழருள் முருகோனே

பஞ்சக் குருசுக மென்சொற் கருளென
பண்புற் றருள்பெற மிகவோதும்

பந்திக் குயில்கிளை தங்கிக் குலவிய
பண்மைக் குவடுறை பெருமாளே.

தன தனன தந்த தானு
தன தனன தந்த தானு
தன தனன தந்த தானு தன தான

299. சிவகுமர கந்தநாதா குறமினை மணந்த மார்பா
செகமுபார வந்த சேமா அருளாளா

சிறுவயதெழுந்த போதே உனைதொழுதிறைஞ்சு நாயே
செயல்பெற வழங்கிடாதே விடலாமா

பவமிடை துடர்ந்த போதே தளர்வது மறிந்திலாயோ
பழனியினிறைந்த தேவே குகவேளே

பயமகலவின்று நீயே அருமையொடெழுந்து வாவா
பணிவரை பயந்த பாவா யருள்பாலா

புவன மிசை வந்து வாணு டிசை தசமொழிந்த தேசீ
பொருளருள் சுரந்தி டாயா பெருவாழ்வே

புகல் சிறிது கண்டிலேனே மன மலரி ரங்கிடாதா
புகழ் வரை நிவந்த தோளே யுடையோனே

உவண மலை தங்கி வாழ்வோய் தருண மிது வந்து காகா
உலகுருவ மைந்த தீரா வரையாளா

உனது கதி யன்றி வேறே தினையி லொரு பங்கு காணே
னுறுதியருள் பண்ப நாகார் பெருமாளே.

தனன தனன தன தந்தந்
தனன தனன தன தந்தந்
தனன தனன தன தந்தந் தன தான

**300.** குருபொன மரபர னென்றுந்
தருவை நிகர் கைவர னென்றுங்
குயிலை நிகர் சொல்வளி கொஞ்சுங் குணதீரா

குலவு மரவு மகிழிந்தும்
பலுகு மிதழி சடை சிந்துங்
குழக னிறைவ னருடங்கும் புதல்வோனே

தருவி னிழலி னுறை யிந்த்ரன்
பணி கொள் பெருமதி னமுந்தன்
சரத வடிய ரிடை தங்கும் பெரியோனே

சமய வரத குக னென்றுஞ்
சனக ரிருடி மலர் தங்குஞ்
சரத குரவ தளிர் குன்றின் பெருவாழ்வே

பருவ முகில்க ணிற மஞ்சுங்
கரிய வவுண ரொடு குன்றும்
பரிய வயிலை வுரு வுந்திண் புயவீரா

பவள வருண சிவ வுந்தன்
றலைமை யருமை மக னென்றும்
பதும சரண மலர் தந்திங் கருள்வாயே

திருநெல் வயல்க டனி லென்றுங்
கனலை நிகர வளர் துங்கந்
திகழு மணிகள் மிக மிஞ்சும் படிமேவி

செறிதல் பொதுளி பொழி லெங்குஞ்
சொரியு மழைகள் முகி றங்குந்
திருவி னுய ருமலை தங்கும் பெருமாளே.

தத்தன தனந்தன
தத்தன தனந்தன
தத்தன தனந்தன தன தான

**301.** எத்தனை விதஞ்சதா பத்தி செய்துஞ்சுமா
யிப்படி யிருந் தவா றெதினாலோ

300. குழகன் - முருகன், சிவன்.

இச்செக மிலங்கவே அற்புத மிருந்தவா
எற்கரு டிலங்கவே வருவாயே

பத்தர்க டினந்தினே நத்திய பதங்களே
பட்பொடு தருந்தயா நிதிவாழ்வே

பட்டின புரந்தரா துட்டர்க டுரந்தரா
பர்ப்பத முறுங்குறு காதிபா

பத்திநிறை கந்திகு ழொப்பமலி தெங்கொடே
பற்பல பொதும்பரே புடைமேவும்

பப்பிய கடம்புகா ரப்பிய மரங்களே
பக்கலி னிமிர்ந்துமே பலமேறும்

அத்தகை யிடங்கணு முத்தர்கள் சிறந்துளே
அற்பொடு தவந்தயா வுடனேசெய்

அப்பெரிய பண்பையோர் பொற்குவ டுறைந்தவா
அத்தன ருள்கந்தவேள் பெருமாளே.

தந்த தன தந்தனந்
தந்த தன தந்தனந்
தந்த தன தந்தனந் தன தான

302. சிந்தனை செய ன்பர்தம்
பந்த வினை துன்பறுஞ்
செந்தியி லுறைந்திடும் பெருவாழ்வே

திங்க ளிரை கொன்றையுந்
துங்க மிகு கங்கையுஞ்
செஞ்சடை யிலங் கிடுஞ் சிவநாதர்

தந்த வரமைந் தவுன்
பங்கய மிறைஞ் சியுந்
தண் கவின் விளங்கவந் தருளாயோ

சந்தன கடம் பணிந்
தெந்தை குக வந்தனஞ்
சந்ததி தழைத் திடும் படிவாராய்

கந்தமலி கண்டலும்
பம்பி வரு குங்குமங்
கஞ்ச மொடு செண்பகம் பலவோடே

கந்தி நிறை தெங்கொடுங்
கொங் குரவு சிந்துவுங்
கன்றுடைய ரம்பையுஞ் சினைமேவி

பந்தரிடு நிம்பமும்
புங்குபுனை யுங்கெழும்
பண்பொழி லுயர்ந்தெழும் பொழிலூரா

பண்டமிரு மண்டர் நின்
செம்பதம் வணங்கவும்
பண்பை மலை தங்கிடும் பெருமாளே.

தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன தன தான

303. தினதின முன்றிரு செஞ்சர ணங்களி
னணியென செந்தமி ழின்பணி யும்புனை
செயவரு டந்தவ வெந்தை யனந்தர மகிழ்வாக

செயசெய மென்றெழு மங்கல முங்கெழு
மருண்மலி முன்றில செஞ்சடை நஞ்சணி
சிவசுத தொண்டுபு ரிந்திடு மன்பினை யருள்வாயே

மனமயல் கொண்டெழு பெண்கட னம்பிறர்
பொருளினி னைந்தல விந்திட வந்தருள்
மதிபெறு தண்டமிழ் செந்தில்வ ளம்பதி யுடையோனே

வளரறு மங்கையர் தங்கையி டந்தவழ்
குருபர சங்கரி கங்கைசு தந்தர
மனமகிழ் மஞ்சவ ரம்பில தின்பொரு டருவோனே

கனகனி யொன்றிதை தந்தரு ளென்றிட
வரனெடி யந்தர மண்டல மும்பில்
கனவரை சென்றுதி ரும்பிடி றந்திடு மெனவேகீள்

கனைகட லெண்டிசை யுஞ்செலு மிங்கித
வருணிதி யம்பர செந்திலு றைந்தவ
காளரை வென்றணி திண்டிற லம்புய முருகோனே

தனமணி செந்தமி ழென்றுமி குந்தெழு
வருவரை தங்கிய கும்பனி னம்பெற
சதுர்மறை யந்தம் விளங்கவு வந்துரை குகவேளே

தனதன தந்தன தந்தன தந்தன
வெனநட னஞ்செயு மஞ்சிகி யின்புற
தழைமிசை தங்கிய பண்டை யிலங்கிய பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

304. பொருளிலை யெனிலொரு சுகமிலை யருளென
புகலிலை யெனவுன தடிபேணி
புகழ்கவி யிடையிடை மருவிய மனுமுறை
புரிவது மறிகிலை இனியேனும்
இருள்படு கலிமிடி பொடிபட நொடியினி
லெழிலுடை மயின்மிசை வரவேணும்
இலதெனி லுனதிரு மலரிடை யெனதுயி
ரிசைபெற வருளுவ தியல்பாமே
கருகிய மனமுடை கொடியவர் பலசொல
கனவுடலிட முயி ருறலாமா
கனவினு நனவினு முனதருண் மலரிணை
கருதுமெ யுணர்வினை யறியாயோ
ஒருவரு மிலைதுணை யறிவது மெதுததி
யுயிர்தொறு முலவிய முருகோனே
உமைதரு குருபர தருணமி தருள்புரி
யுயரிய திருமலை பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

305. பெருகிய வுலகிடை சிலகொடி யவரினை
பிழைமொழி பலசொல விடலாமா
பிணையுன தடியல திலையென லறிகுவை
பிரணவ கரிமுக னிளையோனே
சுருதிகள் புகலிய குருபர வரகுக
சுகமுற வருடர வரவேணும்

சொருகிய குழலணி வளிதனை மருவிய
சுயவழ கறுமுக வடிவேலா
திருநட மிடுசபை யுடையவ னருளிய
சிவமய மொழுகிய குருநாதா
செயலுன தலதிலை யருள்புரி யருள்புரி
திகழ்மயின் மிசைவரு மெழில்வேளே
குருமுனி தமிழ்மொழி யழகிய பிணையலை
சுவடுர மிசையணி புயவீரா
குருவட வரையினை பொருவிய திருமலை
குடிகொள மகிழ்வுறு பெருமாளே

தந்ததன தனன தன
தந்ததன தனன தன
தந்ததன தனன தன தன தான

306. சந்ததமு முனதுபணி யன்றியிலை யெனலறிவை
சம்புகுருபர முருக குகநாதா
தந்திபிர ணவ வதன னன்புரிமை தருமிளைய
தம்பிசர வணமிலகு மெழில்வேளே
கந்தமொடு பலதளிர்கள் உண்டுவரு முனிரிஷிகள்
கஞ்சமலரடி பரவ வருவோனே
கண்டனைய மதுரமொழி வண்டுபடு கரியகுழல்
கந்தமலி களபமணி மடமானார்
பந்தமய லற வொழிய வந்தருமை தரு குமர
பண்பை நகரிசை பெருக வளர்வோனே
பண்டுகுரு முனிதமிழை யுண்டுகனி மதுர மென
பண்பொடமை பிணையலணி மணிமார்பா
செந்தில்வள ரறுமுகவ கங்கைவரை யுடையபர
சிந்தைகுடி கொளுமமுத கலைவாழ்வே
செங்குமுத மொடுகுவளை தங்கிவளர் திருமலையில்
செங்கையயி லிலகுகுக பெருமாளே.

தான தன தான தன
தான தன தான தன
தான தன தான தன தன தான

307. மோகமயன் மேவுமலை மோகுகடன் மாதர்மிசை
மூழ்கு நினைவே லொழியு நெறிதாராய்

மூதுலகு ளோர்கடுதி பேணுகுரு நாதகுக
மூரிதநு மேருவர னருள்பால

யேகமன தோடுனது தூயமல ரானசர
ணீயவரு வாய் குமர வபதீபா

யேழைபடு பாடதனை யோதியெவர் பாலணுக
யீதுதகி பாதமலர் தருவாயே

பாகமொடு பாடுமிசை ஞானமுறை கூறுவழி
பாபமணு காதநெறி யருள்வோனே

பாதிமதி நேருநுத லானகுற மாதுதவு
பாகுதினை மாவையுணு முருகோனே

மாகவிதை மாலைபுனை சாமிகுக வேன்முருக
மாவரத னேகிருபை யுடையோனே

வாரணவி ணாறியுயர் பாருதிரு வாழுமலை
மாமயிலி லேறிவரு பெருமாளே.

தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த தன தான

308. தஞ்சமென்ற வென்றன்முன்பு வஞ்சகஞ்ச லென்றுவந்து
சந்த தம்பு கழ்ந்த வன்பு தருவாயே

சம்பு தந்த கந்த செந்தி லின்க ணின்று யர்ந்தி லஞ்சி
தங்கி யன்பர் சிந்தை கொண்ட முருகோனே

மூஞ்சுதுஞ்சு கின்றபொங்கர் தெங்குகொங்கு குங்குமங்கள்
மண்டு கந்தி சந்த டர்ந்த வயலூரா

வந்தி தந்த பண்ட முண்ட நந்தி கொஞ்சு கின்ற மைந்த
வஞ்சர்நெஞ்ச மஞ்ச செஞ்சொல் நெறிதாராய்

கொஞ்சுசெஞ்ச தங்கையுண்ட செம்பதம்ப ணிந்தடைந்த
கும்ப னும்பர் நம்பு மன்பர் அடியார்கள்

கும்பல்கண்டி லங்குதொண்டி னண்பறிந்து நந்துகின்ற
கொண்ட லஞ்சு கின்ற பண்பி னருள்வோனே

வெஞ்சினங்க டங்குவண்டர் துண்டிரண்டு பங்கிரண்டு
விண்டி ரண்டு கண்டி ரண்டு பலவாராய்

வெம்ப வெம்ப தும்பு தும்பு கண்ட செங்கை கொண்டதுங்க
விண்டொ டார்ந்த பொங்கர் பண்ணை பெருமாளே.

தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த தன தான

**309.** சிந்தை நொந்த ழுந்துகின்ற பந்த பங்க மின்றொடுங்க
செந்தில் தங்குகின்ற கந்த வரவேணும்

திந்த திந்த தந்த தந்த வென்ற சந்த மொன்ற நொண்டி
சிந்து கின்ற நந்தி தந்த மயில்வீரா

வந்த னந்தினம் புரிந்து நொந்த கங்க ரைந்து நைந்து
வந்த பண்பு கண்டி ரங்கி யருளாமல்

வஞ்ச நெஞ்சமுண்ட தெங்கு கொஞ்ச செஞ்ச தங்கை துன்ற
வந்து மஞ்சனென் றுவந்து மகிழ்வாகி

செம்பதங்க டந்துயர்ந்த பண்பிலங்கி வொன்ற நின்று
செம்பதங்கடந்து சொந்த மருள்வாயே

தெங்குகொங்கு மஞ்ச ளிஞ்சி பங்கயம்பிறங்கு சந்து
சிந்து புங்கு கந்தி தங்கு மதினாடே

மந்தி தொங்குகின்ற கொங்கை அம்ப ரம்பு குந்திலங்க
மஞ்சி னஞ்சி றந்துறங்கி விளையாட

வண்டி னங்க ளிந்தருந்து கின்ற பொங்க ரங்கு மிங்கு
மண்டுகின்ற பண்ணைதங்கு பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

**310.** இடுக்கணை யொழித்து நலத்தினை யளித்து
எனக்கருள் சுரப்ப தெதுநாளோ

இலக்கண மிகுத்த துமிட்கவி படைக்க
வியற்பொருள் விரிக்க வருவாயோ

உடுக்கிணை யெனச்சொன் மலர்க்கொடி யிடைச்சி
உமைப்ப ரிமளத்தி சிவகாமி

உரித்துட னெடுத்து நகைத்தமு தருத்தி
யுவப்பொடு புரக்க வளர்வோனே

துடுக்கென விடிக்கும் மழைக்கரு முகிற்கு
சொலற்கிணை யரிக்கு மருகோனே

சுகப்பர கறைக்கொள் பணித்துணி துடைத்து
சுயச்சிகி யிடத்தி லுறைவோனே

கடுக்கொளு மிடற்ற னுதற்பொறி வரத்த
கனிக்குற வளிக்கு மணவாளா

கனிப்பொழி லுடுத்த திருப்பதி மலைக்குள்
கனத்தளி படைத்த பெருமாளே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

311. கருணையே நிறைவான தயாநிதி
பெருமை யாகிய ஞானபு ராதன
கனக நாயக நாதகு ணலய முருகோனே

கனிவிலேனுடனே யேது தியாதவர்
கொடிய பாதக ராமென மாமறை
கழறு மேயென வோதுவர் மாதவர் பலகாலும்

அருணை மேவிய வாகிரு பாகர
குழக பூரண மானவ ரோதய
அமுத சாகர மேயறி வாகிய வெளில்வேளே

அனகனே பரிபாலன னேதமி
ழறிவு ளோரக மீதுறை வோய்நிக
ரறையொணுதம யூரப ராவயி லுடையோனே

தருண மேயிது மாபதமேயருள்
குமர காரண நாரண னார்மிகிழ்
தளிரு மாமரு காகுக னேவர முடையோனே

தவமெய் தாபத ராலயமே சிவ
குரவ தீரவு தாரம னேகர
தரும பூபதி யானம னேலய வரதீபா

அருணா னேநிக ராகிய வேலவை
தகரி லேறிய வாபிணி மாமுக
வரச மாதவ சேவக மாவல னெனவோது

அமலை நாவல தாலத ராதல
பொழிலி லானம காநக ராசன
அழகு மேவிய மாதிரு மாமலை பெருமாளே.

தனத்தன தனனா
தனத்தன தனனா
தனத்தன தனனா தன தான

**312.** எடுத்ததை யினிதே முடித்திட வருவாய்
எழிற்குக குமரா வரதீபா

இசைக்கொரு முதலே தமிழ்ப்பிர பலனே
யெனக்கருண் மணியே பொழிலூரா

கடுக்கறை மிடறோன் நுதற்செறி யெரிநா
கணிற்கொரு புதல்வா முருகோனே

கணித்திடு மடியார் பவக்கட லறவே
கடத்திய பெரியோய் கதிர்காமா

துடித்திட வருமோர் பிணிக்குல மறவே
துலைத்தவ நெடியோன் மருகோனே

துதைத்தலர் தொடையேமுடித்தவ சிவனார்
சுயக்குரு பரனே எழில்வேளே

உடுக்கிணை யிடையார் கடுக்கிணை விழியார்
உறப்பெறு மயல்தீர் நெறிதாராய்

உமைக்கொரு முளையே கரிக்கொரு துணைவா
உயர்த்திரு மலைவாழ் பெருமாளே.

தானன தனத்தன
தானன தனத்தன
தானன தனத்தன தன தான

**313.** மாதர்கள் மயக்கமே தீதனை பிறப்பெனு
மாமறை யகத்திலே யுடையோராய்

மாதவ மியற்றினோர் பாதக மகற்றினோர்
மாகலை யிடத்துளோய் வயலூரா

சாதனை பயிர்ச்சியா யோகம தெடுத்துளோர்
சாரக முதித்துளோய் பொழிலூரா

சாலவு மிளைத்துளேன் பாதமு நினைத்துளேன்
சாகர குணத்தனே பெரியோனே

போதக மெனக்கு நீ தாரக மெனக்கு நீ
பூபதி யெனக்கு நீ விரிவான

பூரண மெனக்கு நீ காரண மெனக்கு நீ
பூபொரு ளெனக்கு நீ யறியாயா

மாதகர் புறத்திலே யாசன விருப்பிலே
மாவரை பொருப்பிலே வளர்வோனே

வாரண முகத்தனே தேடிய பினத்தனே
மாதிரு மலைக்குளோர் பெருமாளே.

தனன தனன
தனன தனன
தனன தனன தன தான

314. இசைசேர் குமர வரதா வருக
வெழிலே வருக வினிதாக

இமையோர் பரவு குமரா வருக
இறையே வருக வயல்சூழும்

திசையார் பழனி யதிபா வருக
செயமே வருக மனமேவு

தெருளே வருக அருளே வருக
சிவமே வருக செறிவான

அசைசேர் தமிழின் அரசே வருக
அமுதே வருக அரிதான

அழகார் மயிலில் இலகார் குழக
அணியே வருக மறைதேரு

திசையே வருக மயிலே யொழிய
தினமே வருக மகமாயி

சிறுவா வருக நலமே தருக
திருமா மலையில் பெருமாளே.

தனனா தனத்த
தனனா தனத்த
தனனா தனத்த தன தான

315 அருளா தரித்த குகனே யெனக்குன்
அருளே கொடுக்க வருவாயே
அணியே படைத்த வளிமா தினுக்கு
அதிபா வனத்தி லுறைவோனே
தெருளே வுதித்த மலைமா முனிக்கு
தெளிவே படைத்த குருநாதா
சிவமா றனக்கு மருகா பரைக்கு
சிறுவா கரிக்கு மிளையோனே
உருண் மாதனத்தி திருவாகுமத்தி
யுருகா வனத்தி மணவாளா
உனையே நினைத்த மனயோ கிகட்கு
வுரியோ யெனக்கு முரியோனே
செருவே கலித்த வசுரே சுரத்தை
சிலவா யுடைத்த வயில்வீரா
திருமா தினுக்கு நகரா யுதித்த
திருமா மலைக்குள் பெருமாளே.

தனனா தனத்த
தனனா தனத்த
தனனா தனத்த தன தான

316. கலியே கலித்த பவமே வொழிக்க
கருணா லயத்தி லுறைவோனே
கருதா தவர்கு இடியே றையொத்த
கதிரே சயிற்கை யுடையோனே
நலியா தவத்தி கொழுநா சுகத்தின்
நலமே குறத்தி மணவாளா
நளிரா கமத்தின் நிறைவே கொளுத்தி
நகமே லுதித்த பொழில்ரா

சலியா வணத்தி னிலையா ருளத்து
தரியாய் பரைச்சி தருபாலா

சனகாதியற்கு உபதேசிகற்கு
தனிரோ முரைத்த குருநாதா

திவியாதி தொட்ட கடலே குடித்த
திகழ் மாமுனிக்கு முனமேவி

செயலே படைத்த தவராச ரத்ன
திருமா மலைக்குள் பெருமாளே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

**317.** குமர பூரண ஞான தயாநிதி
வாத வீரவ ரோதயனே சிவ
குரவ வாரண மேபரவாலய முருகோனே

குழக மாமுனி நேயபுராதன
தரும காரண நாரணனார்மகிழ்
குணவி லாசவு லாசம னேலைய முடையோனே

அமரர்சேவக னேமயி லேறிய
சாத நாயக பாயச வாகன
அரியொ ணுமுத லாகிய வாதனை யருள்வாயே

அமுத சேகர மேதிரு வேதனி
ரகில கோடிகள் தாமெனவே நிறை
அகர மோடுக ராகிய மாமறை யெழிலாளா

தமரி னேடனை யாதர வாகிய
குமர வேலவ சேவக பாவல
சமய மேபொழி மாமழை மாமுகின் மருகோனே

சருவ பூடண நீடொளி தாரக
விதன னேடுற வாகிய மாதுணை
சகலநாயக லாநிதியேபர சுகவாழ்வே

சிமய மீதுல வாதவ னார்புரை
யயில சாமளை யாமளை யாள்முளை
திவவு மாமலை நேர்தன மாவினி மணவாளா

சிறுவனுமென தாருயி ரானவ
கமல நாயகியே யுறையாசன
திருவு மாமலை மேலுறை மேலவர் பெருமாளே.

தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன தன தான

318 திருத்த மாகிய ஞானவ ரோதய
பூதித்த மாதவ மேகரு ணாகர
செழித்த மாபொரு ளாதர வாகிய வருளாளா

திருக்கு டாடிய தாகிய நேரலர்
நொடிக்கு ளேயற வேல்விடு வோய்சிவ
செயத்த வீரம யூர பராபரை யருள்பாலா

இருக்கி னோடுயர் வாகிய நான்மறை
துதிக்கு மோனபு ராதன சீர்வளி
பிடித்த மாதினை மேன்மைய லேகொளு முருகோனே

எழிற்கு காவடி யாதரி யாசன
மிருப்பு ளோயெழின் மான்மரு காபர
மிசைத்த நீபம ராமர மாமல ரணிமார்பா

வருத்த மேநிறை யாழியி லேயுறை
தரத்தி லேயெனை யேவிடில் மாதல
மதிக்கு மோதகி யாதவி னலருள் தருவாயே

மனத்தி லேநினை யாதவர் பாவிக
ளிடத்தி லேயணு காதவ னேகரி
மணத்த சேவக பூவல மேவிய வொருதேவா

பருத்தி யேபடு பாடினி லேபட
விதித்த நோவினி லேபடு பேதமை
படைத்த நாயெனு மேழையை யாள்வது மெதுநாளோ

பதித்த மாமணி மாமகு டாதிப
வறத்தி னோருரு வாகிய வாதிரு
பருப்ப தாசன மேவிய சீர்நிறை பெருமாளே.

தனத்தன தனனு
தனத்தன தனனு
தனத்தன தனனு தன தான

**319.** மருக்கமழ் குழலார் இடத்தினின் மயலே
வளர்த்திடு நெறியே யறவேயுன்

மலர்ப்பத துணையே தரத்தகு ததியே
மதிப்பத மலர்நீ தரவேணும்

திருக்கிளர் கமலா சனத்துறை யயனுர்
செபிக்கிற மறையோ தியநாதா

திருத்தணி கமுகா சலத்துறை பவனே
தினைப்புன வளிமா தணைமார்பா

வெருக்கொளு மசுரா திபர்க்கொரு நமனே
மிகுத்திடு தவமே யுடையோனே

மிளிர்த்திர வயில்வேல் கரத்துடை யவனே
மினற்கிணை யிடையாள் அபிராமி

உருக்கிளர் சிவனே டுதித்தெழு பரமே
வுயிர்க்குய ராசே மயில்வீரா

வொளிக்குளு மொளியா யிருப்பவ திருமா
துறைக்குவ டளியார் பெருமாளே.

தனத்தன தனனு
தனத்தன தனனு
தனத்தன தனனு தன தான

**320.** கருக்குளி புகுதா வரத்தினை யருள்வாய்
கரிக்குற மகள்சேர் மணவாளா

கனக்கிரி முருகா பரற்குரு பரனே
கவிக்கெழி லரசே எனவோது

முருக்கவிழ் கமலா லயத்துறை யயனுர்
முடித்தலை புடைகா ரணநாதா

முதற்கொரு முதலே அருட்பொழி முகிலே
முறைச்சதுர் மறைமே லுறைவோனே

உருக்கிய மனநேதா டுனொத்து திபணுவோ
ருளத்திடை குடிவாழ் வுடையோனே

உமைக்கொரு சுதனே கமைப்பர வரதா
உயர்ப்பொழி னகரார் குகநாதா
திருக்கிய வரிகோ டுடைத்தக ருடையாய்
செருக்கசுர் கலகா மயில்வீரா
செழித்திடு வளமே மிகுத்திடு பொழில்சூழ்
திருப்பதி மலைசேர் பெருமாளே.

தனத்தன தனனா
தனத்தன தனனா
தனத்தன தனனா தன தான

321. புதைத்த பொனிதியே எடுத்தவர் கலமே
பொருத்திய சிவமே செகநாதா
புதுக்கதி ரவியே நிகர்த்திடு பெரியோய்
பொருப்பக முடையாய் முருகோனே
கதைக்கர முடனே பருப்பத மெனவே
கறுத்தசுர் முடிவே யுடையோனே
கனிப்பொழி லுடையாய் கலைப்பொரு ளுடையாய்
கனப்பொரு ளுடையாய் மணியேநீள்
புதைப்புகல் கலைமா கரத்தவர் புதல்வா
புணைப்பத மெழிலேர் புயர்தேவர்
புறப்பக டதிலே யெழுப்பெ மனறவே
பொரித்திடு மிணைதாள் தாவேனும்
சிதைத்திட வருசூர் குலத்தவ ரறவே
திறத்தயில் விடுவாய் மயில்வீரா
தினத்தவ வரியா சனத்தவ குமரா
திருப்பதிமலை வாழ் பெருமாளே.

தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா தன தான

322. மனத்தா னினைத்தோ ரிடத்தே யிருப்போய்
வரைக்கோ வரைக்கோ வுடையோனே

வளக்கா வளிக்கோ கரிக்கோ வரற்கோ
மயிற்கோ தகர்க்கோ எனவோது

கனக்கோ நினைத்தே னெனைக்கா வுரித்தே
கணக்கோ வணக்கோ வெனுநாதா

கதிர்க்கோ மளக்கோ வயிற்கோ வருட்கோ
கலைக்கோ நிலைக்கோ முருகோனே

மனக்கா வலிற்கோ சடக்கா வலிற்கோ
வளக்கா வலிற்கோ விதனோடு

மழைக்கோ விதைக்கோ முளைக்கோ விளைக்கோ
மதக்கோ வுயிர்க்கோ மதிமேவு

தினைக்கோ வனக்கோ புனக்கோ வயற்கோ
திகட்கோ புகட்கோ குககோவே

திகைத்தோர் செகக்கோ தவத்தோர் மிகச்சேர்
திருக்கோ மலைக்கோர் பெருமாளே.

தத்தத் தன தத்தத் தனதன
தத்தத் தன தத்தத் தனதன
தத்தத் தன தத்தத் தனதன தன தான

**323.** முக்கட் பரமற்குக் குருவென
பொற்புத் தணிகைக்குட் பிரணவ
முத்தைப்பொழி கெற்பக் கருமுகில் முருகோனே

முப்புக்குரு விற்குப்பலவழி
கற்கத்தகு மெற்குச் செயுமுறை
முற்றத்தர நற்பொற் சிகிமிசை வரவேணும்

கொக் கொக்கென கொக் கொக்குகவென
மிக்குக் கூர விற்குக்குடகொடி
கொற்றத்தினை சொற்றிச் செறிநல முடையோனே

குப்பற்கடல் வற்றப்பணு திட
துட்டர்க்குண முட்பட்ட சுரரை
குத்திக் குடர்முற்றுச் சிதறிடு மயில்வீரா

மிக்கக்கொடு மைப்பற்றுடையவ
ரொக்கக்கட மற்றுப் பிழைவழ
வெட்டிப்பலி யிட்டுப்பிலமுற வருவோனே

மெச்சிப்புகழ் பத்தர்க்கொரு முதல்
கச்சிப்புர முத்தர்க்குறுமுளை
விக்குக்கொரு முத்துத்திரனென — வுலகோது
திக்குத்திசை வட்டத்துடையவர்
பற்றித்தொழு முத்துக்குருபர
சித்திக்கொரு மிக்கற்புத முகின் — மருகோனே
செப்புத்தன வத்திக்கொருதுரை
கற்புச்செறி சத்திக்கருண்மணி
செற்றிக்குயர் பட்டைத் திருமலை — பெருமாளே.

தத்தன தானன
தத்தன தானன
தத்தன தானன — தன தான

324. பட்பகை தேவமு தத்தினை யேபுரை
பட்புள வாசக — மடமானர்
பக்கலி லேமய லப்பிய தாகிய
பக்குவ மேயறு — நெறிதாராய்
திட்பகை வேலவ மூத்தமி மூலய
சித்திகணாதிப — னிளையோனே
செக்கரி தாமென வொப்பிய மாசடை
செப்பமுளார் தரு — முருகோனே
நட்புயர் மாதவர் நித்தியமே துதி
நத்தியவா நிதி — தருவோனே
நற்பரை யாமளை உத்தமி கோமதி
நற்சுத கோமள — வடிவேலா
கட்புல மேவிய பெற்புறு மாமயில்
கட்புற வாசன — முடையோனே
கற்புர வாசனை பெற்றுள தோடியர்
கற்றிரு மாவரை — பெருமாளே.

தனன தனந்த தனந்தா தானன
தனன தனந்த தனந்தா தானன
தனன தனந்த தனந்தா தானன — தன தான

325. கருணை நிறைந்த செழுந்தே னெயதி
மதுர மிகுந்த பெரும்பாகெயருள்
கருத விளைந்தவகம்பே றேசுக — மிகுவாழ்வே

கதிரி லெழுந்த பெருஞ்சோதி மற
வயிர மிளிர்ந்த பெருந்தீரா பர
கனக மிகுந்த பெரும்பாதா நல முடையோனே

அருளி லெழுந்த குழம்பே மாமத
கரியி னெழுந்த கொழுந்தே தீயவ
ரறுக விரிந்த வரும்பே மாமுகின் மருகோனே

அதிர நடந்த பெருஞ்சூரே யற
வயிலை விடுங்கு ககந்தா தூயவ
ரகமு நிறைந்த செழிம்பே மாமயி லுறைவோனே

தருண மறிந்து புகுந்தே மாபவ
மொழிய வெழுந்து விரிந்தே மாபொருள்
சருவ முவந்து தருஞ்சேயே குண முறுவாழ்வே

தமிழிலிங்கு பெருங்கோவே மலை
சிகர மிலங்கு நலங்காவே மறை
தலையி லிலங்கிவுரங்கா வேல்கர முடையோனே

தெருளி லிலங்கு புலம்பேறே சிவ
சமய மிலங்க வரும்பேறே பரை
சிறுவ கனிந்த நறும்பேறே மதி யருள்பேறே

செருவை கடந்த திறம்பேறே வளி
மருவ வணைந்த புயம்பேறே திரு
திகழ நிமிர்ந்த பொலம்பூமா மலை பெருமானே.

தத்தத் தனதன
தத்தத் தனதன
தத்தத் தனதன தன தான

326. முக்கட் பரசிவ னுக்குக் குருவென
மூீறபுத் தணிகையி லருள்வோனே

முத்திக் கொருமுதல் அத்திக் கொருவிறை
மொக்குக் கனியவ லிவையோடு

பக்கற் பலகனி பிட்டுப் பெருவடை
பப்புப் பொரிவிள முதலாக

பட்சத் தொடுவுணு முக்கட் கணபதி
பட்புக் குளமகி ழிளையோனே

கொக்குப் பிளவெழ கற்றைக் கதிரயில்
குத்திப் புகவிடு மெழில்வீரா
குப்பற் கடலிடை யப்பிற் செறிநகர்
குக்கப் பொடிபணு முருகோனே
செக்கர்ச் செறிசடை யக்கர்க் கொருமுனை
சித்திச் சரவண பவநாதர்
தித்தித் திடுபுகழ் சொற்றத் திறமருள்
சித்தர்த் திருமலை பெருமாளே.

தனத்த தத்தன
தனத்த தத்தன
தனத்த தத்தன தன தான

327. பகைப்பு லத்தவர் களைச் செகுத்திடு
பருத்த யிற்கர முடையோனே
பருப்ப தத்தினை பொடித்த ழித்தவ
பரைச்சி நற்சுத முருகோனே
நகைப்ப வர்க்கிட மிருக்க வைத்தனை
நலத்தில் வைத்திலை எதனுமேலா
நதிச்ச டைப்பர மனுக்கு சற்குரு
நகத்த ளிக்குடி யுறுவாழ்வே
குகைக்குணி த்திய முறைக்க ணத்தவர்
குறிப்பு றத்தொழு மவர்பாலே
குறித்த நிட்சய முரைத்த தற்பர
குணப் பெருக்கட லெனவோது
திகைத்த வர்க்கருள் கொடுக்கு முத்தம
சிறக்கு நற்பதம் அருள்வாயே
தெளித்தி லக்கண புகட்டமிட் செறி
திருக்கு வட்டுறை பெருமாளே.

தனன தனன தனன
தனன தனன தனன
தனன தனன தனன தன தான

328. பரம கருணை நிதியே மதுர மிகுவா னமுதே
பரசு மிதயா லயமே பொழிலூரா

பகவ குமரா கழுகா சலமுடை யவா புனிதா
பரிதி யனையா யெனையாள் இறைதேவா

குரவ தருமா சனம பொழியு மழைமா முகிலே
குலவு மயிலே றியவா வரதீபா

குழக வினிதா மெழிலே பழனி மலைவாழ் பவனே
கொடிய பிணியோ டிடவே யுருடாராய்

சரத வடிவே தருவே வரத மயமே செயமே
சமய நலமே புலமே பலவான

சருவ வுயிரே கிருபா நிதிபகவனே யபரா
தருண மிதுவே யருள்வாய் முருகோனே

அரச வளிமா துடனே சரச மொழிபே சுபவா
அரிம ருகனே குகனே புயவீரா

அனவ ரதமே யடியார் பெருகு பொழிலூ ருடையாய்
அரிய திருமா மலைசேர் பெருமானே.

தந்தந் தந்தந் தந்தன தந்தன
தந்தந் தந்தந் தந்தன தந்தன
தந்தந் தந்தந் தந்தன தந்தன தன தான

329. சந்துஞ் சிந்துங் கந்திக டெங்கொடு
கொங்கும் புங்குங் குங்கும முந்திரு
தங்குஞ் சம்பும் பம்பிய தண்டலை வளமேவி

சங்குஞ் சிந்தும் பண்செறு வின்புடை
யங்குங் கொங்குங் கொஞ்சு மிறும்பிடை
தங்கும் புங்குஞ் செங்கனி யுஞ்செறி பொழிலூரா

பந்துஞ் செண்டுங் குன்றினை யுஞ்சிறி
தென்றுந் தண்டுஞ் சந்தன முங்கயல்
பண்புங் குன்றுந் தண்கம லஞ்சிதை கணிநேடு

பஞ்சுங் கொஞ்சுஞ் செம்பத மும்புடை
தஞ்சந் தஞ்சந் தங்குசி லம்பணி
பம்பும் பண்டங் குஞ்சொலி யின்பமை மடமாதர்

அந்தங் கண்டுஞ் சிந்தை மயங்கிய
துன்பங் கொன்றிங் கென்றுநி ரம்பிய
அன்புந் தந்துஞ் செம்பத பங்கய வருடாராய்

அங்கங் கொன்றுந் தங்குநி ரந்தர
மென்றுந் துன்றுஞ் சங்கர னுந்தரு
மந்தண் கந்தன் சுந்தர மும்பெறு முருகோனே

கந்துஞ் சந்தும் பைந்தரு வம்பல
மைஞ்சந் தொன்றும் பண்புக ழின்சபை
கூண்டங் கும்பண் புஞ்செறி யும்பல பலசார்பு

கஞ்சந் தஞ்சந் தண்சுனை யுங்கரை
தங்குஞ் சொந்தன் செங்கம லந்திரு
கந்தங் கும்பொன் குன்றி னுறைந்தருள் பெருமாளே.

தந்தன தந்தன
தந்தன தந்தன
தந்தன தந்தன தன தான

330. என்றினு முன்பத பங்கய வந்தனை
யின்புற வந்தரு டருவாயே

எந்தை பரம்பரை தந்தநி ரந்தர
வெந்த னகந்தனி லுறைவோனே

மன்றி னடம்புரி கின்றவ னும்பணி
மந்திர தந்திர குருநாதா

வம்பு செயும்பெரு வஞ்ச கரின்றிரள்
மண்டி யழிந்திட வயிலேவி

குன்றி லிருந்தருள் கின்றகு தந்தர
குஞ்சரி கொஞ்சிய மணவாளா

கொங்கு விரிந்தல ருந்தொடை மங்கள
குங்கும சந்தன மணிமார்பா

வென்றித ருங்குக பந்த மகன்றிட
விஞ்சை புகன்றிடு முருகோனே

விஞ்சை யரம்பரர் வந்து தொழுந்திரு
விண்டுறை கின்றதொர் பெருமாளே.

தந்த தானன
தந்த தானன
தந்த தானன தன தான

331. தந்தை தாயினு மன்புளோய் எழில்
தங்கு மாதவ முடையோனே

சந்த ஞுசல பைம்பொ ஞுலய
தம்பி ராளென வுலகோது

சுந்தரா தமி டந்தவா பணி
தொண்டர் கூடிய முருகோனே

தும்பி மாமுக வன்பி னேவரு
துங்க னேதனி மயில்வீரா

பந்தமே யற வென்றதோர் மொழி
பண்பி னோடருள் புரிவாயே

பண்பு ளோர்துதி கொண்டவா திரு
பண்ணை மேவிய குருநாதா

கந்தபூ பதி சந்தமார் புகழ்
கண்ட பாவல ரகவாழ்வே

கங்கைசேர் திரு பொங்கர்மா மலை
கந்த மாதன பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

332. பிணிமிடி பகையற வொழுகொளி மயில்மிசை
பெருகிய தெரிசனை தரவேணும்

பிறிதிலை கெதியென விதுவரை யறிகிலை
பிரியமொ டருளுவ தெவராகும்

மணிமுடி யரனுமை தழுவிய திருமுதல்
வரநிதி குணநிதி பதியான

மகபதி பதிநிதி தனபதி பதிநிதி
மருவிய பதிநிதி யிவையோடு

பணிபதி பதிநிதி நரபதி பதிநிதி
பரபதி நிதியென முருகோனே

பரவிய குருமுனி நிலையுற வருளிய
பகவவெ னகமதி லுறைவோனே

திணிமுடி கொழுமசுர் பொடிபட நொடியிடை
சிதைபட வுருவிய மயில்வீரா

தினமுனி வரர்துதி பனுகிய கணமிகு
　　திடமலை யிலகிய　　　　　　　　　பெருமாளே.

தந்த தானன
தந்த தானன
தந்த தானன　　தன தான

333. துன்ப சாகர வம்பி லேவிழு
　　தொந்த மேயற　　　　　　　　　வரவேணும்

துங்க மேவிய தங்க மேபணி
　　தொண்டு ளாரக　　　　　　　　　மூடையோனே

இன்ப வாரிதி யன்பி ஞோர்துதி
　　யெங்க ளுயக　　　　　　　　　முருகோனே

எங்கு மேனிறை கின்ற பூரண
　　வெந்தை யாகிய　　　　　　　　　வரதீபா

என்பு கோடியர் கங்கை கூவிள
　　மிந்து சூடிய　　　　　　　　　சிவநாத

னென்ற மேலவ னென்று மாதவ
　　னென்று வோமுறை　　　　　　　　　யருள்வோனே

கன்றை யோர்சிறு தண்டி தா மென
　　கண்டமா முகில்　　　　　　　　　மருகோனே

கஞ்ச மார்திரு தங்கு மாமலை
　　கந்த சேவக　　　　　　　　　பெருமாளே.

தந்த தனனு தனன
தந்த தனனு தனன
தந்த தனனு தனன　　தன தான

334. அன்பி னுருவே குமர சம்பு மகனே பழனி
　　யம்ப தியுளா யினிய　　　　　　　　　முருகோனே

அம்ப ரையுமா கவுரி யின்சுத கணுதிபதி
　　அம்புய பதா வரத　　　　　　　　　குகதீபா

பொன்பொ னணியே மனது வந்தவடிவே யுலகு
　　பொங்கு மழுதே புநித　　　　　　　　　முறுகோவே

புந்தி நிறைவே புகழ வந்த கனிவே குறவ
　　புங்கவர் குமாரி மரு　　　　　　　　　வியபூமா

நன்பரம னேபரவு தன்பரத யாளபதி
நம்பு மடியேனுடைய பெருவாழ்வே
நஞ்சு நிகரா மசுரை பஞ்சிலெரிபோ லவயில்
நன்குருவுவோயமரர் பணிதேவா
என்சொ லழகே மதுர மிஞ்சுபுகழே யணியு
மெங்கள் குருவே வுரிமை யுடையோனே
இன்பமலையே கமலை தங்கு மலைமேலிலகு
மெந்தை சிவமே தரும பெருமாளே.

தாந்த தத்தன
தாந்த தத்தன
தாந்த தத்தன தன தான

**335.** ஏந்து வப்பெழு சாந்த தற்பர
வீண்ட ருட்டர வருவாயே
யேந்து நற்புக ளோங்கு முக்கணி
யீன்ற வச்சிர வடிவேலா
தாந்தி மித்திமி தாந்தி மித்திமி
தாந்தி மித்திமி எனலோடு
தாந்த தித்திதி தாந்த தித்திதி
தாந்த தித்திதி தமிர்தாளம்
பாந்தள் பற்றிய காந்த ரற்றொடு
பாங்கு நிர்த்தன நடராஜ
பாண்டி யற்சுத நீண்டவற்கொரு
பாந்த வற்புத மருகோனே
வேந்த சுர்த்திர டய்ந்தழித்திடு
வீங்க யிற்கர முடையோனே
வேம்பு ருட்டொடை தாங்கு பொற்புய
மீன்றிருப்பதி பெருமாளே.

தாத்த தனதன
தாத்த தனதன
தாத்த தனதன தன தான

**336.** காக்கு மொருபெரு வாக்க முடையவ
காற்றை யுணுபணி சிவநாதன்

காத்தி லொருமறை சேர்த்த குருபர
காட்டின் வளிமரு வியமார்பா
வாக்கி லெழுபுக டீர்க்க முளதென
வாக்கி லருண்மழை பெயவேணும்
வார்த்தை பலபல கோத்த கவிமொழி
வாய்த்த பொருளிடை வளர்வோனே
தேக்கு மருண்மடை பூத்த கடலமு
தேற்கு முதவிட வருவாயே
சீர்த்தி தருதிரு வார்த்த பொழிலிடை
தீர்க்க மருவிய பொழிலூரா
கோக்கள் பலவள மாக்க மலிவுற
கோர்த்த பழனியி லுறைவோனே
கூட்ட முனிவர்க டேற்ற நிறைதிரு
கோட்டி னிலவிய பெருமாளே.

தனத்தனந் தந்தா
தனத்தனந் தந்தா
தனத்தனந் தந்தா தன தான

337. அருட்பெருங் குன்றே பொருட்டரும் பண்பே
அகத்தெழுந் தன்பாய் விளையாடும்
அனத்தயன் றிண்டா டிடக்கரைந் தந்தோ
வருட்செயுங் கந்தா வெனவோத
தெருட்டிறந் தங்கோர் மறைப்பதந் தந்தே
திகைப்பறுஞ் சிந்தா தரமீவோய்
செழித்தெழுங் கொண்டால் துதிக்கரும் பொந்தே
தினைப்புனஞ் சென்றே குறமாது
உருட்டனங் கண்டே மருட்குணங் கொண்டே
வுலைக்ககந் தந்தா வளமேவ
உரத்தணைந்தொன்றாய் கலக்கவண் சென்றோய்
உயர்த்திருஞ் செந்தா மறைமாது
திருப்பதங் கண்டே துதித்திடும் பண்பே
செளித்திடும் பண்டே முதலாக

செபித்திருந் திங்கே வசித்திருந் தன்பூர்
திருத்தகுங் குன்றார் பெருமாளே.

தன தன தனன
தன தன தனன
தன தன தனன தன தான

**338.** உடனல மிலக தனநல மிலகை
வுயர்தமி ழிலக புகழான

உனதிணை மலரை துதி மண மிலக
வொழு கொளி கருணை தரவேணும்

வடவரை நிகரு மொருதிரு பழனி
வரைவயி னுறையு முருகோனே

மகபதி யமரர் முனிவரர் குழுவு
மலிகழு கசல முறைவாழ்வே

இடமுட னடன மிடுசபை யுடைய
சிவமுனை கரியி னிளையோனே

திரிபுரை புவனை யமுதனு குமர
தினகர நிகரு மயில்வேளே

தடவரை யனைய தனமதர் விழிக
டனமெதன வுடைய மடமானார்

தனதியன் மயல்க ளறவருள் புரிதி
தளிர் திருமலையுள் பெருமாளே.

தத்த தனதன
தத்த தனதன
தத்த தனதன தன தான

**339.** பத்தி மனுபவர் சித்த மிசைவளர்
பட்ச முடையவ னெனவோது

பட்ட முடையவ கட்டமற வருள்
பட்பி னுதவிய முருகோனே

சத்தி யயில்கர முற்ற குருபர
சட்ட முகமுள வொருதேவா

தத்தை மொழிபக ரத்தி யொடுவளி
தத்த மருவிய மணவாளா

எத்தி விடமன முற்ற கரளரை
யெற்று புயவலி யுடையோனே

இச்சை யொடு முனை நச்சு மடியவ
ரிட்ட முடைய பொ னிதிவாழ்வே

தித்தி திதியெனு நிர்த்த னருளிய
சித்தி தருமொரு பெரியோனே

செப்பை நிகர் தன முற்ற பரை தரு
செக்கர் திருமலை பெருமாளே.

தனத்த தனதன
தனத்த தனதன
தனத்த தனதன தன தான

**340.** இகழ்ச்சி பணுபவர் வயிற்றில் மணுவிழ
வெரித்தவயில் விடு முருகோனே

இகத்தி லருளமு தருத்தி சுகநல
மிசைத்து பதமலர் தரவேணும்

புகழ்ச்சி சொலுபவர் அகத்தி லிமையெழு
புதைத்த நிதியென வருவோனே

பொலச்சி கரவரை அடிக்க கணமிடை
புடைத்த படையயி லுடையோனே

நகத்தி லுளகுகை யிடத்தில் முனிவரர்
நலதநி லுயர்மறை பலவோத

நயத்த மொழிசுக நினைத்து முறைவரு
நளிர்த்த ரகசிய மொழிகூற

குகத்தி லுளதவ கணத்த ரதிசய
குறிப்பு மிதுவென பலர்பேசு

குணத்த பொழில்வள முடுத்த திருமலை
குடிக்கொ ளிலகிய பெருமாளே.

தனத்தன தனன
தனத்தன தனன
தனத்தன தனன தன தான

**341.** பிறப்பெனு மலைமா பவக்கடலறவே
பெருக்கிய வருளே தரவேணும்

பிறர்க்கிடர் தருவோர் தமக்கிடர் தருவோய்
பிறைச்சடை யாரனோர் தருபாலா

குறக்கொடி வளிமா தணைத்திடு மருமா
குறிப்பறி பவனே பொழிலூரா

குறைக்கட லடுசூர் பொடித்திடு பரனே
குணக்கட லமுதே மயில்வீரா

புறப்ப கடதிலே புறப்படு மெமனே
பொடிப்பட வயிலே விடவேணும்

புரத்துறை கொடியோர் அறச்சிறு நகையால்
பொரித்தவர் சுதனே செகநாதா

அறத்துறை முனிவோர் மகத்துறை பலசார்
பகத்துறை மலிவார் பொழில்சூழும்

அருட்டுறை திருவார் பொருப்புறை வரதா
அனச்செறி சுனைசேர் பெருமாளே.

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன தன தான

**342.** அரிவை மாமயல் கொண்டு மயங்கிய
மொழிக ளாடவு வந்தவர் சிந்தையி
னளவு கூடிய வன்பற வின்றுன தருடாராய்

அகில நாயக கந்த பரன்பரை
யுதவு சேவக பண்பை வளம்பதி
யமுத மேலவ புங்கவ ரம்பர முறுவாழ்வே

நரியை யேபரி யென்றுகொ ணர்ந்தவர்
பரவு தூயவ குன்றுறை கின்றவ
நளின மேவுத டம்பர வும்பொழி லுடையோனே

நலவு தாரகு ணஞ்செறி கின்றவ
குமர பூரண வுன்றன தன்பினை
நலம தாகவு வந்துதி னந்தர வருவாயே

உரிமை யாதர மென்றுப தம்பணி
யடிய ரோடுறை கின்றசு தந்தர
முடைய தேவகி ரந்தர சுந்தர மயில்வீரா

உவமை யேயிலை யுன்பத வந்தனை
புரியவே தயை தந்தினி தன்பருள்
உலக காரண விண்டுவ ணங்கிய செகநாதா

சரியி தேயென வந்துந லந்தரு
கதியி தேவுல கெங்குநி றைந்துறை
தனாத ஞானவ ரம்பணி கின்றெழின் முருகோனே

சருவ பூடண முஞ்செறி பைம்பொனி
னுயரு பாதவ லங்கர்த சம்ப்ரம
தலைவ னேதிரு தங்கிய குன்றுறை பெருமாளே.

தனதத் தனதன தனதன தந்தத்
தனதத் தனதன தனதன தந்தத்
தனதத் தனதன தனதன தந்தத் தன தான

**343.** கடலைக் கடுவடு வுழைமுகை வண்டைச்
சிறிதிற் பொருவில வெனவரி வொன்றிக்
கனவிற் புடையுள வழகிய கெண்டைக் கணினார்கள்

கவினுக் குருகிய மயலற வுன்பொற்
கழலைத் துதிபண வருள்புரி பண்பைக்
கமலத் தடமலி பழனியி லஞ்சிப் பதிவாழ்வே

அடல்பெற் றிலகிய வடவரை செம்பொற்
சிகரத் தலைபுடை படைகர செந்திற்
கரசத் தனியயி லுடையவ குன்றிற் கொருசேயே

அடியர்க் கொருமுதல் மலைசையி லன்புற்
றுறைநற் குருபர வரநிதி பண்புக்
கதிபப் புகழ் மழை பொழிபவ ரன்பிற் கருள்வோனே

திடமுற் றவுணர்கள் படையிடை பஞ்சிற்
கொளுவுக் கனலென வயில்விட வஞ்சிச்
சிதைவுற் றவரற மயிலி லெழுந்தற் புதவேளே

சிவனுக் கொருசுத புகழ்புகல் தொண்டர்க்
குரிமைக் குயர்முதல் பயிரவி யின்பொற்
சிமையத் தமுதுணு கிறபா தந்திக் கிளையோனே

படியிற் குகதின தெரிசனை தந்தெற்
குறுதிப் பொருளினை யுதவிவி ளங்கப்
பகரத் திடனருள் புரிகுவை பண்பைக் குயர்தேவே

பதியிற் பலபலி சுடையவ துங்கப்
பொழிலிற் றளிர்மலி பழமிகு விண்டுப்
பாவுத் திருமலை யிலகிய கந்தப் பெருமாளே.

தனதன தனன
தனதன தனன
தனதன தனன தன தான

**344.** கனவினி லமுத முதவிய குமர
கனமிகு நனவில் வரவேணும்

கதிரயி லுடைய குருபர வரத
கமழுப ரிளமள முருகோனே

தினகர னிகரு மொருதனி வலவ
சிவமுளை வளிதன் மணவாளா

திருமறை முடியி னவிர்மதி கிரண
சிறுவனெனகம துறைவோனே

கனகன துயிரை பருகிய வயிர
கருமுகில் புகழு மருகோனே

கணபதி துணைவ பயிரவி புதல்வ
கமுகும லையுறை பெருவாழ்வே

மனதில னுதின முனது துதிபண
வரத மயின்மிசை வருவோனே

மவுன முனிவரர் பெருக தவமிக
வளரு திருமலை பெருமாளே.

தனத்த தனதன
தனத்த தனதன
தனத்த தனதன தன தான

**345.** நினைத்த படியருள் கொடுக்க விதுகதி
நிருத்தனருளிய குமரேசா

நிதிக்கு மொருநிதி பதிக்கு மொருபதி
நெடிற்கு மொருநெடி தெனவோது

அனைத்து முலகுள் வுயிர்க்கு ணிறைவுயி
ரறத்தி னொருவடி வுடையோனே

அனத்த னறிவுற வருத்த முதவிய
　　வருட்கொ ணிறைகட　　லமுதேசீர்
நனைத்த நறுமலர் அனைத்த பயிரவி
　　நலத்தி யுதவிய　　பெரியோனே
நனைக்கு ணனையென தினத்து மெழுபார
　　நகத்தி லிறைகுடி　　கொளுவாழ்வே
சுனைத்த ணறலிடை யுதித்த குவளைக
　　டொடுத்த பிணையலை　　யணிமார்பா
தொடுத்த பொழில்வள முடுத்த திருமலை
　　துலக்க வுயரிய　　பெருமாளே.

தத்த தனன தன தான தான தன
தத்த தனன தன தான தான தன
தத்த தனன தன தான தான தன　தன தான

346. முத்து நகையு மெழிலாரு மேக குழல்
பட்டி னவிரி னிடை சாத ரூப நிற
　முற்ற வுடல வயல் தார மான பெணை　யுறவாடும்
முட்டி யசடரொடு கோப மீறு வுரு
வுற்ற மடையர் களொடேனை பாதகர்கள்
　முத்தி யறியு முறை நேடிடாதவர்க　ளிவரோடு
சித்த கொடுமைபுரி வோர்கள் பாவவினை
பற்றி யொழுகுபவர் சோதி நாதவுனை
　செப்பி மனதினினை யாத மூடர்களி　னுறவாமோ
செப்பு மறையுனது தூயபாத மலர்
பெற்று பெருமையுற நேடியாடு பர
　செக்க ணசுரருயி ரோட வேலைவிடு　முருகோனே
அத்தி முகவனறு கூல மாகவா
நத்து குறவர்குல மாது தாரமென
　வப்ப சரச மொழி கூறி கூறியணை　எழில்வேளே
அத்தை கடலுமென வாழி யேழை வர
வைத்த பரமசிவ மேக வீறு புர
　மற்றை யெரியிலிடு தேவதே வனருள்　புதல்வோனே
மத்து வெனகிரி தூளாட நேரநிலை
யிட்ட குமர குருசாமி பாகமுத
　மச்ச னெழின் மருக வாறு மாமுகவ　வரகேரமா

மைக்க ணிலகுபரை தேவி வாலையுமை
மிக்க பிரியசுத லோக நாதகுக
வர்க்கை கமழுதிரு நாகமீது வளர் பெருமாளே.

தனத்த தனத்த
தனத்த தனத்த
தனத்த தனத்த தன தான

347. வருத்த மொழித்து நலத்தி னுதித்த
வளப்ப மளிப்ப தெதுநாளோ
வனத்தி குறத்தி தனத்தி லழுத்தி
மறுச்செய் நகத்தை யுடையோனே
பருத்தி படைத்த வினத்தி லெடுத்த
படைப்பை யழித்து விடவேணும்
படிக்கு ளெனக்கு வுரித்து மிகுத்து
பழுத்த வகத்து ளுறைவோனே
விருத்தி விருத்தி விருத்தி விருத்தி
விருத்தி கொடுக்க வருவாயே
மிகுத்த பொழிற்கு ளுதித்த நகர்க்குள்
விதித்த தளிக்குள் வளர்வோனே
திருத்த முடுத்த பணிக்கு ளலர்த்த
திருக்க மலத்தி லுறைதேவி
செருக்கி னிருக்கு மலைக்க ணுதித்த
சிறப்பு மிகுத்த பெருமாளே.

தனத்த தனத்த
தனத்த தனத்த
தனத்த தனத்த தன தான

348. பெருத்த வருத்த மிகுக்க வுதித்த
பிறப்பை யொழிப்ப தெதுநாளோ
பிணைத்த துயர்க்கு ளழுத்தி யழுத்தி
பிரித்து மழுத்தி விடலாமா
நிருத்த னுதற்க ணுதித்து சுகத்தி
னிலைத்த நகத்தி லுறைவோனே

நிமைக்கு ளளிக்க விருப்ப மிருக்கி
னிலத்து லகத்தி — லுளனுவேன்

திருத்தி யுறுத்தி விருத்தி கொளுத்தி
சிறக்க நலத்தை — யருள்வாயே

சினத்தி லெடுத்த பகைத்த புரத்தை
சிரிப்பி லழித்தொ — ருபதேசி

பருத்த கடப்ப மரத்தி லெடுத்த
பனித்த மலர்த்து — தொடையோனே

பரப்பு பொழிற்கு ணிமிர்த்த வரைக்குள்
பலத்த வயிற்கை — பெருமாளே.

தனத்த தனன
தனத்த தனன
தனத்த தனன — தன தான

**349.** பசிக்கு வமுது புசிக்க வினிது
படைக்க வருவ — தெதுநாளோ

படைத்த வுயிர்க டடிக்க விடுதல்
படைப்பு முறையி — னியல்பாமா

வசிக்கு முலகி லிருக்கு முயிர்கள்
வருத்த மரியு — மொருதேவா

மருக்க ளுலவு பொழிற் குளிலக
வகுத்த நகரு — ளுறைவோனே

நிசிக்கு நிகரு பகட்டி லலறி
நெருக்க வருமொ — ரிருள்காலன்

நிமைப்பி லழிய விழித்து வயிலை
நிருத்தி யுரம — தகழ்வாயே

விசித்த குவளை யணித்த குமர
மிகுத்த கழுகு — மலைவாழ்வே

மிளிர்த்த பொழில்க ளுடுத்த திருவை
விளக்கு மலையுள் — பெருமாளே.

தத்தத் தனதன தனதன தனதன
தத்தத் தனதன தனதன தனதன
தத்தத் தனதன தனதன தனதன தனதான

350. அத்திக் குரியவ குககுரு பரசிவ
முத்திக் கொருமுத லெனமுனி வர்தொழு
மத்தத் தினைவனவளி தழுவியபுய மணிமார்பா

அப்பத் தொடுவடை யவல்பொரி கடலையொ
டுற்றத் தனிவிர கொடுபல கனிகனல்
அற்பிற் கொடுபடை யடியவரி டமுறை கணநாதன்

பத்திப் பணமுடி யரவொடு மதிசடை
சுற்றுப் புலியதள் கரியுரி மிளிர்மதி
பக்கத் தெரிமழு மருவிய திடமுறு நடராஜன்

பட்டப் பகலொரு படைவிட விரவென
திட்டப் படிபுரி நிறைகருமுகில் குரு
பட்புற் றிடுமரி யிவர்புகழ் சொலவரு முருகோனே

சத்திக் குணபரை யருளிய விருமுலை
பத்தர்க் கருடர பிணிமுக மிசைவரு
சத்திச் சரவண பவவர நதியெனு மிலையோனே

தத்தித் தவழிய ளுளவசி வளமலி
வுற்றப் புதமுயர் பணைவளை வளபொழில்
சத்தித் தலைமருவியமு கிறலை யெயின் மலைநாடா

நித்தித் திடுதமி முடையவ குருமுனி
வர்க்குக் குலமறை யொடுபல சுருதிகள்
செப்பிப் பயனி லையயமற வருளிய குருநாதா

சித்தத் திடைதுதி பணுமல ரடிதர
பட்சத் துடனெழில் மயில்மிசை வருகுவை
சித்தர்க் ககமென குகைமலி திருமலை பெருமாளே.

தனன தனத்தத் தனத்த தத்தன
தனன தனத்தத் தனத்த தத்தன
தனன தனத்தத் தனத்த தத்தன தனதான

351. துயரை யறுத்துத் தொலைக்க நட்பொடு
கவலை நெருப்பைத் தணிக்க வற்புத
சுமுக நலத்தைக் கொடுக்க நித்திய மெழிலாக

சுருதி முழக்கித் தெளித்த முத்தமிழ்
புகழை முழக்கப் பொலப்ப தத்தமை
சுகிர்த மளிக்கச் சொலக்க வித்திற மருள்வாயே

கயவரு ரத்தைக் கிழித்து விற்பொரு
மசுரர்கு லத்தைத் தகர்த்து புற்புல
கபடக டத்தைப் பொரித்த தற்பர வயில்வீரா

கனதனு ரத்தைப் பிதிர்த்து மொக்கிய
வரியவரிக் குச்சுதர்க் கிணைச்சுத
கமல வனத்திற் கிளைத்த சுப்பிர மணியாநீள்

தயவு படைக்கத் தினத்து நத்திய
வடியார் களுக்குப் பிறப்பறுத் தருள்
தமைய மனத்தைத் திருத்தி யுத்தமம் அருள்வோனே

சமணர் மதத்தைத் தொலைத்து வப்பொழு
தவர்கள் கடத்தைக் கிழித்து நற்சிவ
சமயம் நிலைக்கத் திடப் படுத்திய முருகோனே

கயல்கள் குதித்துப் பணைத்த டத்திடை
பரியவ லைத்துக்கு லைத்திடக் கதிர்
கவிய விளைத்துக் குறைத்திடக் கள மிடையேற

கனக முதித்தற் கிணைத்த நெற்றிரள்
பலுகு வளத்துட் புறத்து சுற்றிய
ககன முயர்த்துத் திருக்கு வட்டுறை பெருமாளே.

தனத்தன தனத்த தான
தனத்தன தனத்த தான
தனத்தன தனத்த தான தன தான

352. மனத்துய ரொழித்து நீதி தரத்தி மிகுத்த வேளை
வழக்கிட மனுக்களோடு நடராஜன்

மலர்ப்பத மிடத்திலேகி சொலிற்றர வினக்குவோத
மதித்துட னளிப்பைநாத வெனநாளும்

கனப்புகழ் படித்து நாயெ னுனைத்தொழுவ தற்குநீதி
களிப்புடனளித்திடாது இதுகாறுங்

கழித்திடு விதத்தைமோரின் வினைப்பவ விடத்தையாவர்
கரைப்பவரருட்குளான முருகோனே

வனத்திடை கவிக்குபாலை வளத்தினை யெடுத்துவோத
மறைப்பொருண் விரித்த நாவி லுறையாடி
வரத்தமிழ் கவிக்குளான தரப்பொருள் பிழைத்ததாக
வனக்கவியெடுத்து வோதி யவன்மீது
மனத்திடை யுரித்தினோடு கவிக்கருள் கொடுத்தநாத
வனச்சர வணத்துளான வெழில்வேளே
வளர்ச்செழி புகுத்தசோலை பணைத்திரளடுக்கமாக
வளைத்திருமலைக்குண்மேவு பெருமாளே.

தந்த தானன தந்த தானன
தந்த தானன தந்த தானன
தந்த தானன தந்த தானன தன தான

353. மங்கைமார் குழன் கண்டுமே மயன்
வந்துதே விழி யம்பினுன் மட
மண்டுதே தன செண்டினுலினி தகமாழ்கா
வண்டுலாவிய கொண்டை பூடணை
முண்ட தோள்வளை கெண்டை காலணி
வன்பயோத ரமுங்கவாரொடு பலவாருய்
செங்கை கில்வளை தங்கவேவிர
லுண்டமோதிர மின்செய் மாமணி
தின்றவோர்நெளி யுண்டதாகிய விரலோடு
செந்துறு மலரென்ற தோதமை
கின்ற மேனியு மஞ்சள் வாசனை
செண்டி னேடமை வுண்டமாதர்க ளுறவாமா
பங்க மாகிய பந்த மேவிய
குண்டிலே விழுகின்ற வேழையை
பண்பொ டாதரி யென்றுகூறுத லறியாயா
பண்டிலே முருகென்று மாதிடை
வந்துபே சருடந்தவா மணி
பம்பு மூரிடை தங்குமாரண முருகோனே
செங்கை மேன்மழு கங்கை மாமதி
பொங்க மோடணி செஞ்ச டாடவி
சிங்க வாகனி பங்கி லேவுள வொருவீ்ன்

சிந்தை மேவிய கந்த நாதவு
னன்பிலே யெனை தங்கு மாறருள்
செங்கண் மாறிரு மங்கை மான்வரை பெருமாளே.

தந்த தானன தந்த தானன
தந்த தானன தந்த தானன
தந்த தானன தந்த தானன தன தான

**354.** என்புதோ றசை தங்கு மோருட
லென்ற கூடிடை வந்துளேவுயி
ரிஞ்சவே பவமிஞ்சவே வரு மெளியேனை

யென்று கூவுவையன்பி லாளுவை
பொங்கு பேர்விட மூண்டபேரென
வென்பு கூடுவை பங்கமாகின திதுகாறுந்

துன்ப வாரிதியின் கணேபடு
கின்றதாகிய புன்கணே சொல
துங்கவுவி னனந்தனே யெனி லுறைகூறுந்

தொண்டுளே னுனை யண்டினேன் வழி
கண்டிலேனென லென்ப தோருவை
துஞ்சவேவிடி லஞ்சிடாயென லெவர்பாலாம்

இன்பமே நிறைகின்ற பூரண
வுன்பதா மலரன்றி வேறிலை
யெங்கணுயக பண்பை யாதிப னெனவோத

லென்பதே தொழி லன்புளேநினை
யஞ்சலே யென வந்தினேயரு
ளென்ற தோர்மொழி கெஞ்சினேனியல் புடனேநீ

அன்பு மேவிய யிந்த வீணனை
கண்டுளேநகை கொண்ட வோர்மொழி
யஞ்சலே யென வஞ்சலே யென வருடாராய்

அந்த ராதல மெங்கு மாகிய
சுந்தரா பரை தந்த வேலவ
வந்தண் மாதிரு தங்கு மாமலை பெருமாளே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

355. மனதுனது மீதெழுந்து
வுருகுதவி லாதமைந்த
வலியவுட லேபவங்க ளொருவாகி

மருளுமெளி யேனுழுந்தன்
அரியபத சேவையின்கண்
மருவிபிற வாதவின்ப மடைவேனோ

கனகமயி லேறியன்று
பலவுலகெ லாமலைந்து
கணமமரையி லோடிவந்த வொருவீரா

கவுரிசிவ காமிகங்கை
குமரியபி ராமிகொங்கு
கமழுதிரி சூலியெங்கள் மகமாயி

வனமிடையு லாவுகின்ற
புனிதைதய வானிறைந்த
மகதிநிக ராதொழிந்த செயன்மேவு

மகிமைமொழி யாடவங்க
ளருள்வடிவ மாகிவந்து
மலைமுடியி லேயிலங்கு முருகோனே

தனதருமை யாலனந்த
முலகுயிர்க ளூடுறைந்து
சரமசரமாய் விளங்கி யுயர்வோனே

தருபொழிலு ளானபண்ணை
நகராதிபனே மகிழ்ந்து
தளிருதிரு நாகமைந்த பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

356. கந்த நாதகு காகிரு பாநிதி
வந்தனுதர மேமெகெதி வேறிலை
கந்த மாமலர் சூடிய மார்பக் முடையோனே

கண் கொளாநிலை யாயுயர் வாகிய
துங்கமே நிறை ஞான புராதன
கண்டு தேனமுதாமொழி மாவளி மணவாளா

சந்தனுசல னேகமு காசல
விந்தையாகிய தேவவ ரோதய
சம்புவோ முறையேபெற வேதுதி பணுநாதா

சம்பு மாமர மீதினிலே கனி
தின்று மூதுரை பாடிய மாதவள்
சம்பி நாணவுமே வுரையாடிய வொருதேவா

அந்தணமம காமுனி வோர்துதி
கொண்ட பாலகுணகர வாரண
வஞ்சு மாமுக மோடுமை யாள்முக மிவையாறும்

அந்தமாமுக மாறெனவே வுரை
கண்டமாமறை தேடுப ராபர
வஞ்சிடா தவ ரோடுறை பூரண மயில்வீரா

சொந்த மாமெனவே தொழுமேழை முன்
வந்தெ ணினி லேபத மீகுவை
சுந்த ராபிணி மாமுக மேறிய முருகோனே

துங்கமாதெனை மாபல வோடுயர்
சந்திரோடகி லாணிறை சூழ்பொழில்
துன்றுமா திரு மாமலை மேவிய பெருமாளே.

தத்தன தனனு
தத்தன தனனு
தத்தன தனனு தன தான

357\. பத்திசெய் தறியே னுத்தம மறியேன்
பக்குவ முடையா ருடையோனே

பற்பல பிணிவா யுற்றிடு மிடிவாய்ப்
பட்டுடை யெளியே னினிதான

நித்திய வரதா வற்புத குமரா
நிர்க்குண வடிவே குருநாதா

நிட்கள முடையாய் தற்பரை மகனே
நிட்டை கொளடியா ரகவாழ்வே

வித்தக குழகா முத்தமி ழழகா
மெச்சிய மொழிலு ருடையானே

வெற்பிரு பிளவா யெட்பிள வெனவே
வெட்டிய வலவா அயில்வீரா

நத்திய வடியே னற்பய னுறவே
நற்பொரு ளினிதா யருள்வாயே

நற்றிரு மலைமே லுற்றெழில் தளிசார்
நற்குக குமரா பெருமாளே.

தத்தன தனந்த தான
தத்தன தனந்த தான
தத்தன தனந்த தான தன தான

358. எற்கருள் சுரந்து ஞான வுற்பவ மிகுந்துலாவி
யித்ததி யிரங்கியாள வரவேணும்

இத்தரை படிந்துபாவ புற்கட லடைந்துளேனை
யெற்பிள வடைந்த சோதி யுடனேநீ

அற்புதம் நிறைந்த தான பொற்சிகி பிறங்க மேவி
யத்தருள் வழங்கவேணு மெனவோதும்

அற்பனை நினைந்திடாது நற்றவ மலிந்து ளோர்க
ளற்பிடை புகுந்து நீதி யருள்வோனே

நற்குக பழங் குலாவு பொற் பொழி லிலங்கு வேல
நத்திய வணஞ் செயாது விடலாமா

நச்சர வணிந்த நாத னுக்கருள் சுரந்த பால
நற்கன முகுந்த வீரன் மருகோனே

சற்குண மிகுந் தயாள தற்பர பொருந்து மோன
தத்துவ முணர்ந்த யோக ரகவாழ்வே

தத்தற னிறைந்து வீழ பொற்றிரு வளர்ந்து லாவு
தட்கு வடிலங்க மேவு பெருமாளே.

தனந்தன தனன
தனந்தன தனன
தனந்தன தனன தன தான

359. நெருங்கிய கருணை முவந்தருள் பொழிய
நிறைந் தெழில் மயிலில் வரவேணும்

நிதஞ்செறி வரத மிகுந்தவ குமர
நிமிர்ந்தயின் முருக னெனவோதுந்
தருங்கொடை வலவ பரம்பரை கவுரி
தனந்தர வுயரு மொருவாழ்வே
தனந்தன தனன தனந்தன தனன
தனந்தன தனன வெனவோதி
வருந்திரு நடன மிடுஞ்சிவ புதல்வ
மகிழ்ந்தரு ளுதவி அடியார்கள்
வளம்பெற புகழி னலம்பெற புனித
மனம்பெற வினிமை தருவோனே
கரும்பனை யுலகி னிடம்பெற வுதவி
கனம் பெறு கிழவி யுரையாட
கரும்பழ மணவி லெறிந்தரு ணளின
கனந் திருமலை யுள் பெருமாளே.

தனந்தன தனனா
தனந்தன தனனா
தனந்தன தனனா தன தான

360. சுதந்திர முடையாய் பதந்தொழு மடியார்
சுகம்பெறு முறுதி யருளாது
துடர்ந்திடு பவமே வளர்ந்திட விடிலோ
துணிந்தவு னடியா ரிடர்மூழ்கி
அதம்பெற வரிலோ பெரும்பவ முனையே
அடர்ந்திடு மெனவே மறையோதும்
அறஞ்செறி முதல்வா பெருந்தமி ழாசே
யனங்கனு நிகரா வெழிலாளா
நிதந்தர முடையார் புகழ்ந்திடு முருகா
நிரந்தர மயிலே றியவீரா
நிறைந்தெழு மசுரே வொழிந்திட வொருவேல்
நிமிர்ந்தெழ வுதையே வியதீரா
பதந்தர வருவாய் மறந்திடி லெளியேன்
பலம்பெற லரியா துழல்வேனே

பழம்பெரு முதலே யுளம்பதி புலவோய்
பரன்றிருமலை வாழ் பெருமாளே.

தனத்தன தான தான
தனத்தன தான தான
தனத்தன தான தான தன தான

361. மனத்திடை வாழு மீச வனைத்துயி ரான தேவ
வரக்கவி ராஜர் தேடு மொருவாழ்வே

மகத்துவ நாத தீப வறப்பொரு ளான சோதி
வரைத்தணி காசலாதி வயல்சூழும்

அணிப்பொழி லூரு ளோர்கள் தனத்தின ராக வாழ
வருட்பெயு மோன யோக வபதீபா

அருச்சுன ஞாதி யோர்க டமக்குற வாகிபோரி
லவர்க்கனு கூலமாயன் மருகோனே

தினத்தவ னேதயாள மிகுத்தவ னேகுமார
திடத்தவ னேவராகி யருள்பாலா

திருக்குடை யோர்கள் வீழ வதைத்த வனான வீர
திணைப்புன மாது தேடு முருகோனே

சனத்திர ளாதி சேரு தலத்திடை நேரி லாத
தரத்தவ னேவு லாச மயில்வீரா

சகப்பிர மாதி தேவர் துதிக்கமை வான தான
தனித்திரு நாக மேவு பெருமாளே.

தந்தன தான தான
தந்தன தான தான
தந்தன தான தான தன தான

362. செண்பகா தேவி வாலை கண்கொளா நீலி காளி
செங்கையா ளான மாரி மகமாயி

சிங்கமே லான நாரி கங்கைமா தாவ ராகி
செங்கணா ளான காமி வளிமாமி

யெண்புகா தான சேம மங்கைபா வாணி யாணி
யெங்களா தார மான சிவகாமி

யெம்பிரா னோடு மாடி வந்தவா கரிய வாணி
யென்ற வீராதி வீரி யெனலான

பண்புகா சார மான வின்சொலா ளாய் பவானி
பண்டுசேர்லோக மாது பரமாயி

பம்பு நால்வேதமோது கின்ற தாராள மான
பஞ்ச நேரான பாத வெமதாயி

நண்புகா ரானரூபி தந்தபா லாகுமார
நம்பினே னேழையேழை யருடாராய்

நந்துமீ ளுதிமேவு நன்செயா ருதிசூழ
நந்து மாமாது நாக பெருமாளே.

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன தனதான

363. ஆறுமுக மாறுமுக மாறுமுக மாறுமுக
மானசிவ ஞானகுகனே குமரனுதபர
வாறுமறி யாதமறை தேடிவரு தேவனென வுனையோதி

ஆதியெனை யாளவர வேதநிபி தேயெனவு
ளுதரவு தாமதமி லாமலருள் வாயெனவு
மார்வமன தோடுபணி யேழைபெற வாழ்வுதர
லெதுநாளோ

பேறுடையவா வடிமை யாளுடைய வாமுனிவ
ருடுடைய வாமயிலு மாடுடைய வாவரத
பீடுடைய வாசுமுக வாழ்வுடையா வாகருணை
யுடையோனே

பேசரிய வாகமபு ராதனம யூரகுக
நாதகிரு பாகரத யாளகுண சேமநிதி
பேணலரி லாவயிர சேவக மகாபுனித வாதீபா

நீறு நுதலார்பரவு பூரணவி லாசசெக
தீப பரை தேவியுமை நீலிகவு மாரியருள்
நேயமலை மாதுதிரி சூலிசிவ காமியருளியதேவா

நேயவடை யோடுபல காரவகை யாபலவி
லானகனி யோடுவெளி லார்கடலை சேருமவல்
நேயவிடி மாவுருளை யாவுமொரு வாயிவிடு கணநாதன்

வீறுடைய மாதுணைவ னேநிமல வேடர்குல
மாதணையு மார்ப பர மானவெழி லாளதுயர்
மீறிவரு தேயிதனை மாயவிடி லேயடிமை யுளனுவரிய

மேவவரு பாவவினை யோடியற வேவுறுதி
கூறுமொழி யேபகர மாமயிலி லேறிவர
வேதருண மேகைவிடல் மாதுதிரு நாகமுறை
பெருமாளே.

தானதன தானதான
தானதன தானதான
தானதன தானதான தன தான

364. சாதனையி லாத பேர்கள் கூறுவிவ கார மாக
தாமதம தாக வோர நிலையாகச்
சாரிலெளி யேனையாள லேவர்புற மாமி தோரில்
சாமிசெக நாத தேவ முருகோனே
பாதகம நீதி யூடு சேருகொடி யோர்கள் போல
பாவ வழியே புகாத பெரியோருன்
பாதமல ரேதியான மேவுமவ ரோடு லாவு
பாலசிறி யேனை யாள வருவாயே
வேத முதல்வா தயாள கோலமயி லாகு மார
வேலகுக னேநி யாய முடையோனே
மேதினிய ராவுகாளி கோவில் வட பாலதாக
மீறுகண நாதர் கோவில் கனியாக
மாதர்கனி மார்க ளேழு பேர்கள்வளர் தான மோடு
வாகுதிரி சூலி சோம னணிநாதன்
வாழுமன தோடுமாதி மூலமினிர் கோவின்மேவு
மானதிரு நாக மேவு பெருமாளே.

தனந்தனந் தனந்த
தனந்தனந் தனந்த
தனந்தனந் தனந்த தன தான

365. உடைந் துடைந் தெழுந்து பவம் படிந் தடங்கி
யுலைந் திடும் பதங்கொ ளடியேனும்
யுயர்ந் துயர்ந் தமைந்த கனந் திரண் டெழுந்த
வொளிர்ந்திடும் பதங்கள் பெறுவேனோ
கடைந்திடைந் துருண்ட தரந்தரும் பதங்கை
கரந்துணுங் குருந்தன் மருகோனே

கவின்றரும் பொருந்தி யிடம்பரந் தகன்ற
கடம்பலர்ந் தணைந்த மலர்மாலை

யிடைந்திடைந் துருண்ட புயஞ்செறிந் திலங்கி
யிசைந்திடுந் திறங்கொள் மயில்வீரா

இருந்திருந் தருந்து பவந்தரும் பயங்க
ளிறுந்திறம் புரிந்துன் அருளாலே

அயர்ந்தயர்ந் திடும்பை பொரிந்திடுங் கரிந்து
அறுந்திறம் பிறங்க வருள்வோனே

அறஞ்செறிந் துயர்ந்த நகந்தலந் திருந்த
வமைந்திடுங் குணங்கொள் பெருமாளே.

தந்ததன தான தான
தந்ததன தான தான
தந்ததன தான தான தன தான

366. பந்தமய லான பாவ மென்றபெரு வாரி யூடு
பம்பு துயர் மூழ்கு மேழை யுனைநாடி

பங்கய நிதான பாத வந்தனை சதா தியான
பண் புகழி லோதி யோதி யிதுகாறும்

வந்துனது பாத சேவை தந்தரு ளெனவு ளேடு
மண்டி நிதமே பராவு மெளியேனை

மஞ்சனெனு மார்வ மூற சுந்தரம யூர மீதி
வர்ந்தெழு முலாசமேவி வரவேணும்

கந்தகுக னேகு மார வெந்தைசிவ மே தயாள
கங்கை மணியே பவானி யருள்பாலா

கம்பமத யானை நேய தம்பிகுற மாது கேள்வ
கந்தபொழி லூரில் வாழு முருகோனே

செந்திநகர் மேவு மீச சந்தத தியாக தேவ
சிந்தைகுடி யான ஞான முடையோனே

செங்கமல மாதுதேவி தங்குமுயர் வானநாக
திண்சிகர சோதி வீசு பெருமாளே.

தனதான தாத்த
தனதான தாத்த
தனதான தாத்த தன தான

367\. உலவாத கோட்டை குறையாத பாட்டி
லுறைவாக வீட்டி னிடமேவும்
உணவான மாக்கி யடியார்கள் போற்றி
யுயர்வாகு நீட்சி யுடன்வாழ்வின்
பலவாதை யோட்ட மெனவோட வாட்டு
பதமேவி சீர்த்தி பெறவாழ்வாய்
பலதேவ ரேத்த முடிமேனி சாய்த்த
படியாக வாழ்க்கை யெனலாக
நலமான வாக்கி னுபதேச மூட்டி
நயமே வுமாட்சி யடியார்பால்
நளிரார்பு வார்த்தை பலபேசி னோர்க்கு
நவமான பேற்றை மகனேநீ
குலமானி னீத்தி னுறுமானை வேட்டு
கொலைமேவு காட்டி னிடையேகி
குணமாக வாட்சி கொளுநாத காக்கை
குகதேவ மூர்த்தி பெருமானே.

தத்தனத் தனத்த தான
தத்தனத் தனத்த தான
தத்தனத் தனத்த தான தன தான

368\. முற்பவக் கடற்குளான வற்பரைக் கணத்திலாள
முற்சிகிப் புறத்திலேறி வருவோனே
முத்தமிழ்த் தடத்துலாவு மற்புதப் பெருக்கமேவு
முத்தர்கட் குளத்திலாரு முருகோனே
பொற்பதத் துணைக்கொளுடி நத்தநற் பதத்தையீய
பொற்பமைத் தகார்க்கண்மேவி வருவோனே
புத்திநற் புகழ்க்குளான பத்திமுத் தமிழ்க்குளூடு
புக்கமைத் துதித்து நாளு மறவாது
எற்புரத் திடற்குநாடி நத்துதற் கிரக்கமோடு
வெற்கதீர்க் கடற்குளேழு முறைபோல

இற்றுடற் பவத்தளாட லுற்றவித்ததித் தயாள
மெற்கிசைப் பதத்தையீய வரவேணும்

தற்பரைச் சுதற்கணுதி யெத்திறத் தவர்க்குமேல
தட்பநற் பொழிற் குளான பொழிலூரா

சத்திரப் பெருக்கமாக நற்றிறத்தவத் தர்சூழ
தற்றிருப் படைத்த நாக பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

**369.** பவக் கடல் கடத்து மலர்ப்பத கலத்தை
பதித்தக மிருத்து நெறிதாராய்

பணிப்பகை முடித்த வருட்பெறு முதற்கு
பருப்பொருள் விரித்த குருநாதா

சவத்துடல் படைத்து வதற்கினி தருத்து
தனத்தினை யளித்த விலையாதல்

தலத்திடை பலர்க்கு மனப்படி நடக்க
தரப்பொருள் கொடுப்ப ரதிணலே

அவத்துடல் குடற்கு ளனத்தினை யடைக்க
வரைத்திட மறுத்து மதுவாக

அருத்தியு மருத்தி வரப்பெறு குடற்பை
யடக்கிய சடத்தி லுயிர்போக

நவப்பத கலத்தி லெடுத்தருள் படைத்து
நலத்தினை யளிக்க வருவாயே

நதித்திர ளுடுத்த பொழிற் பணையடுத்த
நளிர்த் திருமலைக்குள் பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

**370.** உடற்சுமை பொறுத்து தலத்திடை கழித்த
லுவப்பிலை யெனக்கு இனிதான

வுயர்ப்பத மளிக்க பிறப்பினை யொழிக்க
வொளிச்சிகி புறத்தில் வரவேணும்

அடற் சுமை பவத்தி லழுத்திய துரைக்க
வடுத்தவர் களுக்கு மிழிவாகும்

அதைச்சொல வெறுப்பு மிருத்திடு மனைத்து
மனைத்திடு துயர்க்கு ளுழல்வேனை

மிடற்றுணை கொடுத்து களிப்புற வெடுத்து
மிளிர்ப்பத மளித்தும் அருளாயேல்

விதித்தெனை வருத்து பவத்துய ரடுக்கும்
விலக்கினும் விலக்க முடியாதால்

படர்த்துய ருழப்பல் குகச்சர வணத்த
படைப்புயிர் களுக்கு அனையேபோல்

பழிப்பற நிலைத்த குணத்தவ வருட்பெய்
பணித்திரு மலைக்குள் பெருமாளே.

தன தந்த தான தன
தன தந்த தான தன
தன தந்த தான தன தன தான

371. உனையன்றி வேறு துணை யிலையென் பதே யறிவை
யுனை நம்பு மேழையிது வரைநாளும்

உலைவுண்டு பாவவினை யிடைமண்டு வேதையிடை
வுணர்வின்றி நாயெனவு மலையாதே

தினையென் பதாமளவு வருளின்பமே வருளில்
தினமிஞ்சவே யுலகி லுளனுவேன்

சிவகந்தனே குமர வரதுங்க னேயமரர்
சிறைவிண் டவாமுனிவ ரசுவாழ்வே

பனையென்ப தேவுலகில் வரமுந்தவே வுதவு
பணிபண்பு ளாள்கிழவி யவையோடு

பலசெஞ்சொ லாடியவ ணலிவண்டவே விகடு
பகர்சுந்த ராகமுரு மலைவாழ்வே

தனசெந்திலாய் பழனி மலைவந்தவா மலைசை
தனிநின்று ளோயடிய ருடையோனே

தளிர் தண்டலரதிபதி வுனையண்டினே னருள்செய்
ததிபண்பை நாகமலை பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

372. உடற்சிறை யிடத்திலே விடுத்தனை துனிக்குளே
வுடற்றிய விதத்திலே பலநாளும்
உணத்திடு பிணிக்குளே மடித்திடு மிடிக்குளே
வுளப்பல பகைக்குளே மெலிவேனை
தடப்பத கலத்திலே வுறத்தர மளித்தினே
தராத்ததி மகிழ்ச்சியோ டருள்வாயே
தனிச் சரவணக்குகா சிவச்சுடர் நடுக்கணே
தழைத்தவ வருட்பரா வரதீபா
மடக்கொடி வளிக்கனு டினைப்புன வனத்திலே
மனப்படி யவட்குளார் மணவாளா
மதிப்பவ ரகத்திலே யிருப்பவ மதித்திடா
மனத்தவர்களுக் கொரே மறவீரா
கடற்றிரை யினுக்குளே மரப் பெயரினத்தின்மா
கவிழ்த்தலை யுறத்தனே டுறுவீரா
கருத்தசுர் குலத்தொடே பொரித்த வதிடப்புயா
கனத் திருமலைக் குளார் பெருமாளே.

தந்த தான
தந்த தான
தந்த தான தன தான

373. கந்த நாத கந்த நாத
கந்த நாத னெனவோதி
கஞ்ச பாத வந்தனுதி
கண்டுபாடு மடியேனை
யெந்த நாளில் வந்து நீயு
மின்பமேவ வருள்வாயோ
யின்று நாளை யென்ப தான
தின்றேடோடு நெறிதாராய்
சொர்ந்தமான வெந்தையாதி
துங்கதீர வரதீபா

தொண்டு பேணுகின்ற பேர்கள்
தொந்தமான பெரியோனே
பந்த பாவ மென்பதோட
பண்பிலா வருவாயே
பண்டை மேவுகின்ற தேவர்
பங்கிலான பெருமாளே.

தனந்த தனந்த தன
தனந்த தனந்த தன
தனந்த தனந்த தன தன தான

374. கனிந்து கனிந்துருகி வருந்தி வருந்தி மெலி
கடங்க ளலிந்தமரா வதனோடு
கடிந்து கடிந்துபவ விடங்க ளடர்ந்துவர
கரைந்து கரைந்து துயரிடைமூழ்க
முனிந்து முனிந்து மிடி துடர்ந்து துடர்ந்து வர
முரிந்து முரிந்து மன மதுமாழ்க
முடிந்து முடிந்து வுயிர் கடந்து கடந்து விட
முயன்று முயன்றுவரு பிணியாக
பினின்று பினின்று வெம னடுங்க நடுங்கவுடல்
பிதுங்க பிதுங்கவரு தலைமேவி
பிறந்து பிறந்து வுழல் பவங்க ளறுந்துவிழ
பிறங்கு பிறங்கு பத மலர்தாராய்
மணிந்து வணிந்தசிவ சுயம்பு வணங்குகுக
வளர்ந்த நகங்கள்குடி யுடையோனே
வளங்கள் பொருந்து பொழி லிடங்கள் விளைந்து திரு
மகிழ்ந்த நகங்குலவு பெருமாளே.

தனந் தனன தான தான
தனந் தனன தான தான
தனந் தனன தான தான தன தான

375. துணிந்துனது பாத போதை
வணங்கிவரு மேழை யேழை
சுகங்கள்பெற பாத சேவை தருவாயே

துடர்ந்தபவ மோட வோட
தவங்கள் பெரிதாக மேவ
சுரந்தருள் தயாளநாத முருகோனே

பணிந்துவரு வோர்களோடு
கனிந்துரைக ளாடுதேவ
குருங்கபிலை வாழுமீச னருள்பாலா

பரம்பரைகௌ மாரி தேவி
தரும்புனித தீரயோக
பருந்து கொடியாடு மாயன் மருகோனே

அணிந்தசெக ஜோதிதீப
மிளிர்ந்தசிவ ஞானபோத
மமைந்தமுனி வோர்கள்தேடு மொருதேவா

அடர்ந்துவரு கானனீரி
னிறைந்து செறி வானகாடை
யடைந்துகவி ராஜர்தேடி யவர்பாலில்

திணிந்தசுர மேவுபாட
லுகந்துகரு நாமமோடு
திகழ்ந்துகவி பாடவோதி யதுநாடி

செறிந்தவரு ளோடுபாடல்
புகன்ற பரனே தியாகி
திருந்துதிரு நாகமேவு பெருமாளே.

தனந்த தன தானதந்த
தனந்த தன தானதந்த
தனந்த தன தானதந்த தன தான

376. வருந்துனிக ளானவிந்து வருந்துதலிலே மெலிந்து
வரும்பவ மதாவி டைந்து தடுமாறி

மயங்கிவருதே சுழன்று சுழன்றுவருதே கிரங்கி
வதங்குகிறதே கயங்கி நிலைமாறி

பருந்துநிக ராயலைந்து திருந்துதலிலா தமைந்து
பரம்புமிடி யாலுடைந்து சுழல்வேனை

பணிந்துனது பாதசெங்க மலம்பரவவே நிறைந்த
படதந்தமிழிலே சொலுஞ்சொல் நெறிதாராய்

அருந்தமிழிலே பிறங்கு பதங்கணிறைவே செறிந்து
வகன்றமுரு கேபுகன்ற வொருகீரன்
அடங்கு குகையே பிளந்து சதங்கொட சபோர் புரந்து
வகஞ்சமண ராதி துஞ்ச வருவோனே
முருந்துநகை யார் விரும்பு பழஞ்சிவனையே வளந்த
முகந்தனுசிறு லெறிந்த திடவீரன்
முனைந்திரத பாகர் தங்கை தருங்குமர சாமிபண்பை
முழங்குதிரு நாகமர்ந்த பெருமாளே.

தனந்த தனன தனன
தனந்த தனன தனன
தனந்த தனன தனன தன தான

377. கலங்குகிறதே மனது
முடங்குகிறதே வினைகொள்
கடம்பதறுதே துயரி னிடைமூழ்கி
கறந்த விஷமே பருகு
சடங்க ளெனவே வுடலை
கடிந்து விடலே யினிமை யெனலாக
இலங்கு கிறதே மனது
வழங்கு கிறதே பொறிகள்
இதன் படியதே சிதற விடுவாயோ
இரங்க விலையா வுனது
குழந்தை யலவா பகரு
மிடங்க ளறியே னெனது மறியாயோ
சலங்கொ ளசுராதியரை
வகிர்ந்த குணமோ வலது
தணிந்த குலமாது தரு செயலேயோ
தளிர்ந்தமலை மீதுகுடி
கொளுங் குணமதோ வலது
தனஞ்சுதர் பெருதவண வியல்பாலோ
குலங்குறி யிலாத தொரு
சிவன்கணி னிலாறு பொரி
குமைந்துருவதா யொளிரு மதனலோ

குணங்க ளறியே னடிமை
விடுந்தர மிலேனருள்செய்
குளிர்ந்த திரு நாகமுறை பெருமாளே.

தனன தந்தன
தனன தந்தன
தனன தந்தன தன தான

378. உயிர் பிரிந்திட வொரு மருந்தினை
யுதவ வந்தனை புரிவேனோ
உனை வணங்கிய வெனது ளன்பினை
யுணர்வை யென்பது வுலகோதும்
பயிலு பண்பினர் தூய ருழந்தவை
பகர வின்பம தருளாத
பதியி னின்றனை யெவர் புரந்திட
பகவ செந்திலை யுடையோனே
மயிலு கந்தனை பொரு ளுகந்தனை
மலையு கந்தனை யடியார்பால்
மதியு கந்திலை யருளு வந்திலை
வளமு வந்திலை யெதனாலோ
குயிலு வந்தமை பொழி லமைந்துள
குறவர் கொஞ்சிய வளநாடா
குலவு பண்பொழி லிலக வந்தருள்
குமர சுந்தர பெருமாளே.

தந்த தனந்தன
தந்த தனந்தன
தந்த தனந்தன தன தான

379. நம்பு மனந்தனை யென்று முவந்தனை
நன்றி புரிந்திலை பலநாளும்
நைந்து மனந்தர மென்பு குழைந்தற
நந்த வருந்துய ரறியாயோ
கும்ப னினம்பெறு மன்பு புரிந்தவ
கொங்கு கடம்பணி முருகோனே

கொண்டல் படிந்தெழு கின்றுத டம்பொழில்
கொண்ட வளங்கெழு பொழிலூரா

கம்ப மதந்தரு தந்தி பினன்புள
கந்த செயந்தியி லுறைவோனே

கஞ்சி புரந்தவர் தந்திட வந்தவ
கன்றில் விளங்கனி யெறிவோனின்

பம்பெழில் தங்கையின் மைந்த கனிந்தவர்
பண்பி லுறைந்திடு மெழிலாளா

பங்கய வந்தனை தந்தவ னன்பருள்
பண்பெழில் தங்கிய பெருமாளே.

தானதான தானதான தானதான தானன
தானதான தானதான தானதான தானன
தானதான தானதான தானதான தானன தன தான

380. ஈளை காசரோக மோடுவாத நோய்க ளாதியாய்
சேரு ரோகமூல தேவரூ டுலாவு கூடிலே
யேறி வாழலான நோவையாரி தோர்வர் நீயலா
லினியேனும்

ஏழை பாழில் வீழலான பாபரூப தேகமே
போக வேணுமான தானவேளை சேரதாளிலே
யீடிலாத தாகவாழவே மயூர மீதிலே வரவேணும்

கூழைநாக மேவுமேனி சோமநாத சேயனே
தீரவீர ஞானபோத சூரகால சேவலா
கோதிலாத வேதமோது சேமமாதி யானவா குணதீபா

கூறுசாம மோதியோதி காணொணாத காரணா
பாலசேவ காகுமார பூபநீதி யானவா
கோதிலாத மோனமான சாதனாதி யாருளே
வளர்வோனே

மாழைநேர தீனபார்வை யாயிகாளி சாமளா
தேவிவாலை காமிவாமி யானைமாமி மாகமா
மாது சாதுநீலி வீரிமாரி வாசகோதை யாள் மகமாயி

வாழுலோக மீதுளோர்கள் தேடிநாடு தாயனு
ளேழை யாளி கோமளாதி யானநீதி தூய்மையாள்
வாகுசீய மேலுலாவு சூலிபூரி யாமளா தருபாலா

தாழைமாப லாவிணோடு வாழைசேரு சோலைவாய்
தேருநாத ராதிவாழு சீர்மை சார்பி லானதாய்
தாது தேறன் வார்பிலாறு சேரகூடு நாடுளா
யெனவோது

சாமிநாத நாவலாள மாவிணேத காவலா
தாதயாள மாகதேவை நீயலாது சார்பிலா
தாசனேழை யானதோர்வை தார்பொன்மாது நாகமேர்
பெருமாளே.

தான தந் தான தான
தான தந் தான தான
தான தந் தான தான தன தான

381. பாழுடம் பான மூடை கேடடைந் தாடி யோடி
பாதகஞ் சூடி நாடி மனமாழ்கி
பார்தனம் பேதை மாதர் கூடிடும் போத மூழ்கி
பாசபந் தோடு லாவு மெளியேனும்
ஏழுறும் பேத சாதி யாயுறும் பாப ரூபம்
யீடறும் பாமல் பாதம் அடைவேனோ
ஏவர்தம் பாவி லோதி வீதொழிந் தேற லாகு
மீசவுன் பால நேக பெரியோர்கள்
கூழுறுஞ் சாடி யான தோலமைந் தானதேக
கூடுடைந் தாவி போகு மதுவேளை
கோலமஞ் சாடு தோகை மேலமர்ந் தூர்த லாகி
கோடுதண் டோடு கால ன்றவீழ
வீழுறும் பாதவீடு தாவெனுந் தேவைகூற
மேலலங் கார பாதம் அருள்வோனே
மேனுயர்ந் தாடு சோலை யீடமைந் தான வூரில்
வேலமைந் தான தேவர் பெருமாளே.

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன தன தான

382. குமர நாதப யங்கரி யம்பிகை
புவனை சூலினி சண்டிகை குண்டலி
குமரி பூரணி யந்தரி சுந்தரி யெமதாயி

குலவு நாரணி மந்திர தந்திர
பரமி காரணி செண்பக மூப்புனை
குழலி வாரணி சந்தன குங்கும மணிதேவி

அமர ராதியர் வந்தனை யுஞ்செய
வருள்செய் வாலை பரன்பரை சங்கரி
யகில மாது நிரந்தரி தந்தருண் முருகோனே

அமல நாயக வெங்கு நிரந்தர
மிலகு தேவர் புரந்த சுதந்திர
வழகு லாவி விளங்கிய சுந்தர முடையோனே

சிமய மாமலை தங்குக டம்பணி
புனித வீரபு யஞ்செறி கின்றவ
திதலை யூடுறை கின்றத னஞ்செறி குறமாது

திணையி லேகிளி வந்து விழுந்திடி
லெறி வோடிட தண்சொல் புகன்றவள்
சிறுமி யாமவ டன்கை படிந்திட மயன்மீறி

சமய மோயிது வென்று மணந்தவ
வடிய ரோடுறை கின்றவ வம்பர
சரத சேவக குன்றில மர்ந்துயர் முருகோனே

சருவ காரண வெந்தையு னன்பருள்
இதமி தேத்தி வந்தருள் வந்தருள்
தளிரு மாதிரு தங்கிய பண்பையுள் பெருமாளே.

தனத்தனத் தான தந்த
தனத்தனத் தான தந்த
தனத்தனத் தான தந்த தன தான

383. அடுக் கடுக் கான துன்ப மிகுத் திடத் தேழை நைந்து
வறப் படர்க் கூடு நொந்து தடுமாறி

அகத் தடத் தாடுழைந்து சிதைத் திடச் சேர்பவங்கள்
அறத் தெரிலைத் தாள வந்து னருளாலே

நடுக்குதற் கான பந்த தளைப் பிணைப் போடவென்று
நனைத் தலர்த் தார்கள் கொஞ்சு மடிதாராய்

நதிப் பெருக்கா னிறைந்து குளப் பெருக்கான் மலிந்த
நலப் பெருக்கான் மிகுந்த வளநாடா

உடுக் கடுக் கோடுமென்று சொலற் கிடைக் கேயமைந்து
வொளிக் கிருப்பா யதுங்க பணிபுணு

மூமைக் குரித்தா யெழுந்த வருட் சுதர்க்கோ சிறந்த
உயர்க் குவட்டே யிலங்கு மொருதேவா

எடுத் தெடுத் தோதியுந்த னருட் பெருக்கே புகழ்ந்த
வெனக் குரித்தாகி வந்த முருகோனே

இசைச் செயத்தோ டிலங்கு குணப் பொருப்பே பிறங்கு
மெழிற் றிருப்பூ தரங்கொள் பெருமாளே.

தந்தத் தானத் தனத்தத் தனத்தன
தந்தத் தானத் தனத்தத் தனத்தன
தந்தத் தானத் தனத்தத் தனத்தன தன தான

384. துன்பப் பாபப் பொருப்பைத் தகர்த்தவா
வின்பச் சேவைக் குணத்தைக் கொடுத்து நீள்
தொண்டிற் காகத் தொடுத்தற் புதத்தோடே புகழ்பாடு

தொந்தத்தே நற்பதத்திற் குரித்திளுர்
சந்தப் பாவிற் றுதிக்கத் தினத்தினே
துங்கத் தோகைப் புறத்திற் றிருத்தவே வருவோனே

அன்பிற் சேரத் தழைத்துத் தவத்தொடார்
பண்பிற் காகக் கொடுத்துப் புரப்பவா
அன்பிற் சோதிக் குளத்துட் டளிர்த்தவா வர்தீபா

அன் பற்றாரைக் கிழித்துக்க ழிப்பவா
புண்பட் டோர்கட் கனத்தைக் கொடுப்பவா
அண்டார்க் காகத் திடத்திற் பெருத்தவா மலைநாதா

உன்பற்றாகத் தொடுத்தற் கிணக்கமாய்
மண்பற்றாகித் தனத்தைக் கொடுப்பவா
வொண் சுற்றாரிற் குரித்திற் பெருத்தவா செகநாதா

உன் பொற்றாளைத் துதித்துத் தவித்துளேன்
என்புக் கூடற்றிடத்துப் புரப்பையோ
வொன்றித் தாவிக்கிடர்ப் பற்றுறுத்தவோ பலநாளும்

இன்பற்றடிச் சலித்துச் சலித்துளேன்
உன் பற்றாரைத் துடிக்கக் கெடுப்பையோ
வெங்குற் றோடப்பிழைப் பற்றுடைத்துளே
னெனுமேழை

பின் பற்பாவத் திடுக்கைத் தொலைத்தினுள்
உன் பொற் பாதத் திணைத்துத் திடத் தொடாள்
எண் பொற்றானக் குவட்டிற் சிறக்குமோர் பெருமாளே.

தனந்தன தனந்த
தனந்தன தனந்த
தனந்தன தனந்த தன தான

385. மனஞ்சட முலைந்து வருந்திய தறிந்து
மறந்தனை நலஞ்செய் தருள்வாயே

வளம்பல மிகுந்த கனம் பொழி விலங்கு
வரம் பனைம வுயர்ந்த பொழிலூரா

தனந்தணி வடைந்த விதந்தனி னுடைந்த
தரந்தனை யறிந்து னருளாலே

தலந்தன சுகங்க ளுயாந்திட வழங்கி
தவஞ் செறி வரங்கள் தருவோனே

தினந்தின முவந்து பதந்தொழ பவங்கள்
சிதைந்திட வெழுந்து அடியார்கள்

சிரந்தலை யிடம் பொனிகர்ந்திடு புதங்கள்
சிறந்தவை பிறங்க விடுவோனே

புனந்தினை புரந்த வளின்றனை மிகுந்து
புயம் பெறவணைந்த முருகோனே

பொருந்திய தவஞ்செய் அருந்தவர் மகிழ்ந்த
பொலன் றிருநகந்தொள் பெருமானே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

386. பவத்தினை யொழித்து நலத்தருள் புகட்டி
பதத்திணை கொடுப்ப தெதுநாளோ

பருப்பொருண் விளக்கி சிவற்கறிவு றுத்தி
பணிக்குவ டுடைத்த வொருவீரா

தவத்தினர் களுக்கு மனத்திடை யுதித்து
தளிர்த்தருள் படைக்கு முருகோனே

சதத்திதண் விரித்த மறைப்பதி யிடத்தில்
தனிப்பிர மனுக்கு மறைவான

நவப்பொருள் பிரித்து தலைப்புடை புடைத்து
நலத்தினை யளித்த பெரியோனே

நகப்புடை யனைத்து மிருப்பவ குளிர்க்கொள்
நகச்சுதை தனக்கு மொருசேயே

சவத்தினை யெடுத்து வுயிர்ப்புற வமைத்த
சடத்தினை நிகர்க்கு மெளியேனை

தனிச்சர ணிணைக்குள் பொருத்தி நலருட்செய்
தனத் திருமலைக்குள் பெருமாளே.

தனந் தனத் தனத்த
தனந் தனத் தனத்த
தனந் தனத் தனத்த தன தான

387. பெரும்பவக் கடற்குள் நெழிந்தலைத் துயர்க்குள்
பிறங்கமைப் பிணிக்கு ளுறவாட

பெரும் பிறப்பெடுக்கும் விதந்தனிற் படைத்த
பெறும் பிழைக் குரித்தி னெளியேனை

அரும்பதக் கலத்து ளிடங்கொடுத் திருத்தி
யனந்தரப் புரப்பி னருடாராய்

அனஞ்செறித் தடத்தில் படர்ந்திடப் படைத்துள்
அலர்ந்திடச் செழித்த மரைமீது

கருங்கயற் படுத்து ளுறங்குதற் குதித்த
கனந்திருத் தழைத்த வளநாடா

கவிழ்ந் தெழுப் பொழிற்கு ணிமிர்ந்தமைத் தளிர்க்குள்
கலந்த வற்புதத்தி னெழில்வேளே

அரும்பவிழ்க் கடப்ப மணிந்த மற்புயத்த
வறந்தளிர்க் குணத்த வரதீபா

அருந்தவர்க் குருக்க மிகுந்திருக் குவட்டி
லமைந்தெழிற் குடிக்கொள் பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

388. துதித்துனை நினைத்து மனத்திடைப் பதித்து
துணைக் கொளுபவற்கு ளுறைவோனே

துயர்க் கடவிடத்து எழுத்திய குறிப்பை
சொலப்பல விகழ்ச்சி வுலகோத
விதித்தனை பிணிக்குள் திணித்தனை மிடிக்குள்
விதித்தனை சடத்தி னெமனென
விடப்பவ மருத்தி வதைத்திட வமைத்த
விதத்தினை யெவர்க்கு மொழிவேனன்
மதித்தெனை நலத்தின் மலர்ப்பத மளிக்க
மணிச்சி கிபுறத்தி லுறமேவி
வரத்தெரிசனைக்குள் தழைத் தெழும் அருட்பெய்
வலைப்படு முயற்கு எகமாழ்கி
குதித்தக முடைத்த பலப் படைமுனைக்குள்
குடற்புக வமைத்த செயல்மானுங்
குகச் சரவணத்தி லுதித்தவ செழித்த
குகைத் திருமலைக்குள் பெருமாளே.

தான தான தான தானன
தான தான தான தானன
தான தான தான தானன தன தான

**389.** பாபரூப ரோக தேவரான்
மாய வாதை நோய்கள் மூழலால்
பாரிலேழை யான நேரிலா வெளியேனை
பாதமான நேய போதிலே
யாளவேணு மீதுகாலமே
பால சேவகா குமாரனே முருகோனே
காவலான சேவ லாளனே
ஞான் போத கோதிலாதவா
கால கால தேவர் பாலனே செகநாதா
கானமாது தேடு நேயமா
வேல் மயூர தீர ஞாபகா
காளி நீலி மாரி சாமளா பரைதேவி
ஆவலோடு தேடுமோர் சுதா
மாவலாள சேம பூரண
வாதி வேதமோது நீபமே பெரியோனே
ஆசிலாத தூயவானவா
பாவலான ரோது சோதியே
யாறு மாமுகாகு காவலா வெழில்வீரா

நாவலாள சோம சூரியா
நாரிமேவு நாதர்தேசிகா
நாகமீதுலாவு கோமளா மணிமார்பா

நாடிடாத சூரர் காலனே
ஞாலமாதி யோது பூரணா
நாதராதி தேரு மேலையோர் பெருமாளே.

தனத்தனத் தனத்த
தனத்தனத் தனத்த
தனத்தனத் தனத்த தன தான

**390.** இடித்திடித் தெடுத்து துவைத்தறப் பொடித்து
இடர்ப் படப்புடைத்த பலநோவை

எனக்கெனப் படைத்த விதத்தினைச் சொலற்கு
யிளைத்தகக் கலக்க மிகலாகும்

படிப் புடைப் பலர்க்கு நலத்தினைக் கொடுத்து
பதத்தினிற் பதிக்கு மொருதேவா

பவக் கடற்பு குந்தி மயக்கினிற் பணிக்க
பதித்தனைத் துயர்க்கு ளெவர்பாலில்

துடித்திடக் கெடுத்த பவப்பிணக் கறுத்து
சுகத்தினைக் கொடுக்க மனமாழ்கி

சொலிச் சொலித் துதிக்க வெனக் குனைத் தவிர்த்து
சுகிர்த்தமைப் பெருக்க மமைவோர்கள்

மிடிப் பகைப் படிக்கு ளிலைக் குகைத் தவத்தர்
விதிக் ககத் துறைக்குள் வளர்வோனே

மிகுத்தருட் கொடுத்து பதத்தினிற் புரப்பை
மிளிர்த் திருப்பொருப்பில் பெருமாளே.

தனத் தனத் தனத்த தான
தனத் தனத் தனத்த தான
தனத் தனத் தனத்த தான தனதான

**391.** தவத்தர்கட் கிணக்க மான
முருக் கவிழ்க் கடப்ப மாலை
தழைப்புறப் பொருத்த மேவ வருவோனே

சகத்தினிற் படைத்து தீய
பவத்தினிற் கிடத்தி மாய்கை
சடத்தினிற் பெருக்க மீறு மயன்முழ்கி

அவத்தினிற் கழிக்க நாளு
மிடப்படர்த் துயர்க்குளாக
வமைத்ததைச் சொலிக் கொளேழை புகழ்பாட

அகற்ற மிழ்ப் படித்து ளோர்கள்
இகழ்ச்சி சொற்பகைக்கு நாணி
யதைச் சொலிற் சுருக்கி யோது மெளியேனை

நளிர்த்தலர்ப் பதத்திலாள
நினைத் தெனைப் புரத்தலோடு
நவப் புகட் சொலற்குமாண வருடாராய்

நறைத்தலைச் சடைச்சி வாமி
குணத்தி நற்குறத்தி மாமி
நதித்தலைப் பரற்குளான மகமாயி

சிவப்பமைக் குரத்தி காளி
வலைச்சிபொற் குவட்டுளாயி
திசைப்பவர்க் குரித்துதார வெமதாயி

செயத் தவத்திடத்துளான
வனத்தடத் துதித்த தேவ
திருக்குவட் டளிக்குன் மேவு பெருமாளே.

தத்தத் தன தன
தத்தத் தன தன
தத்தத் தன தன தன தான

392. முட்டைப் பெயரென வைத்துக் கவிசொல
முற்பட் டருளிய முருகோனே
முக்கட் பகவதி சற்புத் திரவெழின்
முத்துச் சிவிகையி னிடமேவி
கெட்டைச் சமணர்கள் புக்கக் கழுவினி
னிற்கத் தனிசிவ மயமேவ
கெற்றித் தலமிசை பற்பத் தளநிலை
நிற்கப் புரிபா னெனவோது

பட்புற் றுதவிய நித்தற் புதகுக
பட்சத் துடனருள் புரிவாயே
பத்திக் கெளியவ சித்தர்க் குரியவ
பப்பறப்புத குக முருகோனே
புற்றிற் குடியகி சுற்றுச் சடைமுடி
பொற்பற் பானரு ளியவீரா
பொற்றத் தழகிய விற்றத் திருமலை
பொற்றைத் தளிவளர் பெருமாளே.

தத்தனத் தனத்த
தத்தனத் தனத்த
தத்தனத் தனத்த தன தானு

393. இப்பிறப் பறுத்து பொற்பதத் தினைத்து
வெற்கருட் புரப்ப தெதுநாளோ
இப்படிக் கொருத்த லெப்படிப் பொறுப்ப
விச்சகத் துயர்க்கு ளுழல்வேனை
தப்பறத் துடைத்து பொற்பருட் கொடுத்து
சத்திமுத் தமிழ்க்கு ளுயர்வாக
தத்துநற் புகழ்க்கு வித்தெனத் தழைக்க
தற்பரத் துதித்த முருகோனே
ஒப்புறப் புரப்பல் அற்புதக் குறத்தி
யுற்றிடத் தணைத்த மணிமார்பா
உற்றசிற் றிடைச்சி நற்றவப் பனைச்சி
உற்றவர்க் கிடத்தி லுறைதேவி
அப்பணிச் சடைச்சி செப்பினைத் தகர்த்த
அத்தனைத் தெழிற்சி சிவகாமி
அக்கயற் கணிச்சி புத்திரற் செழித்த
வத்திருக் குவட்டில் பெருமாளே.

தன தனத் தான தான
தன தனத் தான தான
தன தனத் தான தான தன தானு

394. அடியவர்க் காகநாளு மிடாறுத்தே தயாள
—ருள் படைத்தாளு நாத முருகோனே

அறுமுகத் தேவயோக சிவனரற் கோமையோதி
யறிவினுக் காதியான பெரியோனே

கடிவிடச் சார்புதேக மெனபடர்ப் பாவமோடு
கனபிணிக் கூடுலாவி யதனோடு

கலி கலிக் காளதாகி நலிவதற்கான வாதை
கழிவதற் கேதிலாத தெதனாலோ

இடிபிடித் தேழைமேனி னுயிர்பிடித் தோடமூவர்
இடிகுரற் போலுமேவி வருநேரம்

இமையவர்க்காக மேலை யசுர்படச் சூரவேலை
யெறி திறத்தார் வமான குணதீபா

தடியெடுத் தேமகால னுறுதினத் தேழை நாயை
தனதிணைப் பாதபோதினடி சேராய்

தளிர் பலத்தோடுகூடி மிளிர் பொழிற் சோலைசூழ
தனதிருக் கோடின்மேவு பெருமாளே.

தன தனத் தான தான
தன தனத் தான தான
தன தனத் தான தான தன தான

**395.** அதிதிகட்கா குமான பொருள்படைத் தாளுநீதி
யருணிணைப் பேயிலாத முறையேதோ

அருமறைக் காடுகூவி பரவுதற்கான சோதி
யணிநடத் தேவ நாத னருள்பாலா

பதிமலைக் காடுளோடி வளிதனைத் தேடி நாடி
பரவியற் பால்தான முருகோனே

பகவநிட் டானுபூதி பெறுவதற்கான நாதர்
பதியகச் சார்புளூறு மொருவாழ்வே

நிதிதரற் கானபால மதிதரற் கானதூய
நிலைதரற்கான சீல முடையோனே

நெறிதரற் காமுலாச பொறிநிறைத் தேர்பு மார்ப
நிலையயிற் கானதீர முடையோனே

துதிபுகழ்ப்பா விநோத ததியிதுப்பா தயாள
சுக மளித்தாள் மயூர செகநாதா

சுனையலர்த்தார் கண்மேவு மெழில் புயத்தாகுபேர
சுயதிருக் கோடுலாவு பெருமாளே.

தந்தன தனன
தந்தன தனன
தந்தன தனன தன தான

396. நம்பின வடிமை யென்பதை யுணர்வை
நன்றினி தருள லெதுநாளோ
நஞ்செனு முணவை யுண்டவர் புரைய
நைந்திட விடுத லழகாமா
அம்பிகை குமர சம்பருண் மதலை
யைங்கரர் துணைவ மணியேசீர்
அங்கரி கொழுந புன்குற வனிதை
யன்பொடு தழுவு மணிமார்பா
செம்பத கமல மந்திர முருக
சிந்துர திலத முடையோனே
செண்டயி லுடைய பைங்கர வரத
செம்பணை யிலகு பொழிலூரா
அம்பணி சுனைநி ரம்பிய குவளை
யம்புய மிளிரு முருகோனே
அந்திரு வளரு கின்றருண் மலையில்
அன்புயர் புனிதர் பெருமாளே.

தன தன தனந்த
தன தன தனந்த
தன தன தனந்த தன தான

397. நடையினின் மெலிந்து வெயிலினி லுலர்ந்து
நலிமிடி யடைந்து பலநாளும்
நமனென வருந்து பலபிணி சுமந்து
நலமற வருந்து மெளியேன்முன்
கொடைமிக மலிந்த பலபுகழ் விரிந்த
குணகட லிலங்கு முருகோனே

குலவரு டாங்க மதிறனம் வழங்க
　குமைபவ நொறுங்க　　　　நலமேவ

தடையற வுவந்து சிகிபுற மிருந்து
　தனிரருள் பிறங்க　　　　வரவேணும்

தனதனை நிகர்ந்த குருபர சிறந்த
　தணிகையி லுயர்ந்த　　　　பெரியோனே

வடைபல வுருண்டை தினமுணு மகிழ்ந்த
　மததுணை முகுந்தன்　　　　மருகோனே

வயல்பொழில் சிறந்த திருமலை வளர்ந்த
　வரநிதி சுகந்த　　　　பெருமாளே.

தந்தன தான தான
தந்தன தான தான
தந்தன தான தான　　தன தான

398. மங்கையர் மீதிலாசை தங்கிய போக மூழ்கி
　வந்திது காறு மேவி　　　　மயன்மூழ்கி

வஞ்சகரூப மாதர் தன்பத சேவைநாடி
　வங்கிறையான நாயை　　　　நிகராக

எங்கிலு மோடி யோடி பெண்களை நாடி நாடி
　யின்புற நேடி நேடி　　　　யுறவாடி

இஞ்சடை யாடியாடி நெஞ்சடை வானதோடு
　யின்புடை வானதாகி　　　　மெலிவேனை

துங்கம தான பாத பங்கய போதின்மேவி
　தொண்டுற வாழநேயம்　　　　அருள்வாயோ

சுந்தர மாமயூர வம்பரர் தேடுநாத
　சுந்தரி பாலஞான　　　　முருகோனே

செங்கய லூடுலாவு பங்கய மேவலான
　செம்பணை சூழுசோலை　　　　வளநாடா

செந்திருமாது தேவி தங்கிய நாகமீதில்
　செங்கதி ரோர்பு நேரு　　　　பெருமாளே.

399. மனத்தினை யுருக்கி பவத்திடை செலுத்தி
மறப்பகை விருத்தி யுறநாளும்

வருத்திய விதத்தை நினைப்பிடை நினைத்து
மயற்சியு ளமைத்த தெதினுலோ

வனத்திடை யுதித்து வனத்திடை யுதித்த
வணக்குற மகட்கு மணவாளா

மலைக்கொடி பரைச்சி மலைக்கொடி யிடைச்சி
மலைக்கிட மணைத்த வொருவீரன்

தனக்கறி வுறுத்தி மறைப்பத மளித்த
தனிப்பொருள் கரிக்கு மிளையோனே

தழைச்சிகி புறத்தி லொளிக்கதிர் நிகர்த்த
சகப்பர முகிற்கு மருகோனே

எனக்கென விதித்த பவக் கடலுடைத்து
னிணைப்பத மளிக்க வருவாயே

இசைப்பணை யுடுத்த பொழிற்றலை படைத்த
எழிற்றிரு மலைக்குள் பெருமாளே.

தனனா தனனா தன தான
தனனா தனனா தன தான
தனனா தனனா தன தான தன தான

400. முருகா முருகா வெனவோதி
வருவோ ரகமே லுறைவாகு
முதல்வா குமரா கதிர் காம முறுவாழ்வே

மொழிமா மறைமே னடமாடி
யடியா ரகமேல் விளையாடி
முகிலா டியல்சேர் பொழிலூடு வளர்தேவே

தருவே குருவே சிவநாதர்
தனயா வரதா மகமாயி
தவமே பரமே வயலூரில் வருவோனே

தனதா மகிபா மயிலேறி
வருவோய் கிருபா நிதிமேரு
சரணா லயமே துணையாகு மெனநாளும்

வருமே ழையைநீ யருள்சேரு
மனதா லெனையாள் செகநாத
  வரதா குணநா யகசேம    முடையோனே

வளமா ரருணா சலமீதி
லுறைசேர் கிரியார் புகழோத
  வருவோய் கனகா பரஞோதி    யணிவோனே

திருவே உருவே முழுஞான
வொளியே தணிகா சலமீதில்
  திகழ்வோ யிபமா முகநாத    னிளையோனே

செறிவா னவரா தியர்சூழ
முனிவோர் குழுமே மலிவான
  திருமா மலைமே லுயர்தேவ    பெருமாளே.

தன தானன தானன தானன
தன தானன தானன தானன
தன தானன தானன தானன    தன தான

401. செக காரண மானவ ரோதய
பர நாதம யூரகு ணாலய
  திகழ் மாமறை தேடிய பூரண    முருகோனே

தினை காவலி லேவுறை மாதினை
யுற மேவிய வானவ னேகுக
  தின தா தகர் வாகன மேலெழு    மெழில்வேளே

பகடேறிய தோமெம னேயற
விடாருட னேர்சிவ ஞர்சுத
  பணி மாமலை யாமிம யாசனி    மகமாயி

பணிகாரண மாமணி யாரணி
அடியா ரித யாசனி யாமளை
  பனி மாமதி சூடிடு வோருட    னுறவாடு

தரு தாயக நாயகி சாமளை
யருளா தர மானவள் தூயவள்
  தனதாகிய வோர்சுத னேதனை    தருவோனே

சரணா லயமே கெதிவேறிலை
யென வோதியதே யறிவாயிது
  தனையே மன மீதினிலே நினை    யெனவோத

சுகமேதர வோர்கிலை யேயெனில்
எனதாதர மானவ ரோயிலை
தூய ருடுறை வாகிய நாய்மிசை யருளாயேல்

துணைவேறிலை சாவிடையே விடல்
குகைமா பொதிகாசல னார்குரு
சுனைமேவிய மாமலை மேலுறை பெருமாளே.

தாந்த தத்த தானனா
தாந்த தத்த தானனா
தாந்த தத்த தானனா தன தான

402. வாந்தி பித்த வாதமே சார்ந்தழிக்க வேதுவாய்
வாய்ந்த தெற்குளே சதா விளையாடி

மாந்த மிக்க வாயுவோ நான் றுயர்க் குளாகவே
வாழ்ந்துடற்று தேயினைத் யெவர்பாலில்

போந்துரைக்க நாயகா சாந்தமிக்க நாதனே
பூங்கடப்ப மாலைசேர் மணிமார்பா

பூண்டவத்த ரோடுசேர் மாண்ட வற்புதாகுகா
பூஞ்சுரர்க் குளானவா முருகோனே

ஏந்தியிற்றை நாளிலே வான்றுணைக் குளாகியே
யீன்ற வட்குளானதோ ரருளோடு

யேன்று வக்க நாடியே சாய்ந்தரற்றல் போகவே
யீண்டருட் செய்தானுவா யெழில்வேளே

தாந்தி மித்த தானனா தாந்தி மித்த தானனா
தாந்தி மித்த தானனா வெனநாளும்

தான்குதித்து மாடியே வாழ்ந்தவர்க்கு மோர்சுதா
சார்ந்திருப் பொனுகைமேல் பெருமாளே.

தனத்த தனத்தன
தனத்த தனத்தன
தனத்த தனத்தன தன் தானா

403. மனக் கவலைத்துயர் பொடித்து பதத்திணை
வகுக்க புகழ்ச்சொலு மருடாராய்

வணக்க மிகுத்துனை நினைத்து எழுத்திய
வருக்கரு ணித்தியம் அருள்வேலனே

தனத்தின் மிகுத்தவர் களுக்கு வளைத்தரு
டழைக்க வளித்திடு முருகோனே
தழைத்த சிகிப்புற மிருக்கு முதற்குக
தனித்த கரிக்கொரு மணவாளா
புனத்தி னிடைத்தினை புரக்கும் வளிக்குயர்
பொருத்த மிகுத்துள கொழுநாகீள்
பொருப்பை யிடித்துடை யயிற்கை படைத்தவ
புனத்தி னிலைத்தொரு மரமாக
செனித்த தடப்புய பரைக்கு மருட்சுத
திருக்கு மரக்குக மயில்வீரா
திருத்த மலிப்பொழி லுடுத்த செழிப்பமை
திருக்குடி வெற்புறை பெருமாளே.

தனத்த தனதை
தனத்த தனதை
தனத்த தனதை தன தான

404. கலக்க மறவே வொழிக்க வருவாய்
கனத்த வயில்வே லுடையோனே
சுதிக்கு முதல்வா விதிக்கு முதல்வா
கரிக்கு முதல்வா வெனலோடு
நிலத்தின் முதல்வா மலைக்கு முதல்வா
நிதிக்கு முதல்வா குருநாதா
நிலைக்கு முதல்வா கலைக்கு முதல்வா
நினைக்கு முதல்வா முருகோனே
நலத்தின் முதல்வா பலத்தின் முதல்வா
நதிக்கு முதல்வா செகவேளே
நரர்க்கு முதல்வா சுரர்க்கு முதல்வா
நரைக்கு முதல்வா வரதீபா
சலத்தின் முதல்வா குலத்தின் முதல்வா
தரத்தின் முதல்வா வடிவேலா
தனத்தின் முதல்வா கனத்தின் முதல்வா
தளிர்ப்பொன் மலைமேல் பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

405. துயரிடை மூழ்கி நைந்து வருபவ மீதுழன்று
சுகமில தாகி யென்று மயர்வேனை

சுய்பத போதை யென்று தர நினைவாகு மெந்தை
துணை புனதா ளதன்றி யறியேனே

வயல்வள மேவு பண்ணை தனில்வளர் வான கந்த
வாநிதி யேழை யென்ப தறியாயா

மகபதி மாது கொஞ்சு சுதைகலி யாண மங்கை
மருவிய தேவ செந்தி லுடையோனே

தயவிது நாளுமின்றி மெலிவதை யோதுகின்ற
தகமையை யேவர் முன்பு உரையாட

தரணியி லேழை யென்ப தொருவடி வாயமைந்த
தரநிலை யாள னென்ப துலகோதும்

அயவெனை யாளவந்து நயநிலை யே ததும்ப
வருள்புரி யீதுகந்து அருளாயேல்

அழிவது வே சிறந்த முறைமையி லாகு மென்ப
தறி திருநா கமர்ந்த பெருமாளே.

தந்தன தான தந்த
தந்தன தான தந்த
தந்தன தான தந்த தன தான

406. மங்கையர் மார் பெழுந்து தெங்கென வேயமைந்த
வண்டன மீதி லன்பு மிகவாகி

வந்தவெ ளுவி மங்கு தொந்தர வாகி நின்ற
வஞ்சக மாத ரின்ப வுறவாடி

தங்கிய வேழை கந்த நின்பத போதை நம்பி
சந்தத மேவி யுந்த னடிபேணு

சந்ததி யூடெழுந்த வம்படி யேனை யின்று
தன்சிகி மீ தெழுந்து னருளாலே

பொங்கம தான பண்பு தங்குத லோடு வந்து
புன்பவ மோட வென்று னருடாராய்

புன்குற வேடர் தங்கள் மங்கையி னுசை மிஞ்சி
புன்றினை யூடு சென்று வுறவாடி

அங்கவ ளோடு பண்பு தங்கிய தான மென் சொல்
அன்புட னேதி செங்கை யுறமேவி

அம்புய மீதணைந்த சுந்தர மானதுங்க
அந்திரு மாது குன்றில் பெருமாளே.

தந்த தந்த தனதன
தந்த தந்த தனதன
தந்த தந்த தனதன தன தான

407. துன்ப மென்ற வலையிலே தங்கி நின்ற மயலிலே
துஞ்சு கின்ற மதியிலே பலநாளும்

தொண்டு கொண்ட தகமையே னென்று வந்து மலையிலே
துன்றுகந்த சரணிலே பணிவேனே

அன்பு தின்ற நெறியினே னென்பரிம் பருலகிலே
யஞ்ச நின்ற தவறிலே வெகுநாளாய்

அஞ்சு நஞ்சு விழியினர் மஞ்சு மஞ்சு குழலினர்
அஞ்சு மந்த வடிவின ரிவையோடு

பொன் பதுங்கு தன மினர் தென் பதுங்கு நுதலினர்
பொன் பதுங்கு மெழிலின ரிவரூடு

பொன்ற நின்ற செயலிலே யண்டி நின்ற மாயிலே
புந்தி தங்கி யதனிலே தடுமாறி

யென் பருந்து மயலிலே தங்கி நின்ற பிழையுளே
னென்ற துன்ப வயமுளே னெனுமேழை

இந்து சங்க மரிவிநோ டொன்ற ணிந்தசிவ சுதா
வெங்கள் பண்பை மலையுளோர் பெருமாளே.

தந்தன தன
தந்தன தன
தந்தன தன தன தான

408. சந்தன சல யெங்க ணயக
தம்பிரா னென வுலகோது

தண்டயா நிதி மங்க ளாகர
தம்பமே குரு பருதா

அங்கணு தர செந்தி லாதிப
அம்பு யாவென தகவாழ்வே
அம்பிகா பதி தந்த வானவ
அம்பிலே வரு மெழில்வேளே
பந்த மாகிய துன்பமே யெனை
பஞ்சிலே யெரி யெனலான
பண்பிலே வரு கின்ற தோருவை
பங்க மாகிய துயர்போக
வந்தினை யரு ளெந்தை பூரணி
மைந்தனே பொழில் வளநாடா
மஞ்சு லாவிய பண்பை மாமலை
வந்து லாவிய பெருமாளே.

தந்தனந் தான தான
தந்தனந் தான தான
தந்தனந் தான தான தன தான

409. கொண்டல் கண்டோ டவோட வண்டினம் பாடி யாட
கொங்கு செந்தேறல் பாய வதனோடு
குன்றி ருண்டான வோதி தங்கிடும் பார மோடு
குண்டகன் றூன தான மதிமீது
தண்பிளந் தான சோதி சந்திரன் சேர்த லோடு
தண்டெழுந் தாரு காவி முழுநீலம்
சங்கு தெங் காலு வாழை நண்டு வென் றூதியாக
தன் சுமந்தாடி மோக வலைவீசு
அண்டரும் பாவ மான சுந்தரம் பேதை மாதர்
அன் புறைந் தாடி நாளு மெலிவேனை
அம்புயம் பாத போதில் தங்கவுன் க்ஷேமமீவை
அம்பரங்காவன் மேவு வரதீபா
விண்டுனைந்தேனென் மீது நன்றி கொண்டே நிதானி
விண்படர்ந்தாடு சோலை பொழிலூரா
மின் செயும் பார வேலை தன் கரம் பூணு நாத
விண்டு தன்றூர் நாக பெருமாளே.

தந்தனந் தான தான
தந்தனந் தான தான
தந்தனந் தான தான    தன தான

410. அன்பர் தம் பாலிலான சுந்தரந் தேவ ஜோதி
அம்பரம் பூமி தாம    துடையோனே
அஞ்சனஞ் சேருலாச பெண்களின் போக மூழ்கி
யஞ்சி வர்ந்தான பாவ    நெறியூடு
மன் புரந் தாடி யாடி தங்கிநின் றேழையேனை
வந்து வந்தாளு நாளு    மூளதேயோ
மஞ் சிவர்ந் தோடி யாடி பைம் பொழின் சார் புலாவு
மண்டலஞ் சேம மேவு    பொழிலூரா
பொன் பதந்தேடி நாடு மன்பர்தம் பாத பூழி
புன் சிரஞ் சேர சேவை    யருள்வோனே
புந்தி நின் பால தாகி நின்றிரங் காத பாவி
பொன்றிடுங் காலை நாத    மயிலேறி
இன்ப மைந்தான பாத பங்கயஞ் சேர லோடு
விங்கிதஞ் சீர்மை மேவ    வருவாயே
என் பணிந்தாளு மீசர் மைந்த செந்தூரி னுத
எங்களன் பானதூய    பெருமாளே.

தனன தனந் தானதந்த
தனன தனந் தானதந்த
தனன தனந் தானதந்த    தன தான

411. அளவி லடங் காத வன்பு பெரு குமலங் கார துங்க
வறிவி லடங் காத கந்த    னெனவோதி
அனவரதந் தேடுகின்ற குமர வணங் காத வம்பர்
அறுக விளங்கே நிறைந்த    முருகோனே
களவு புரிந்தே பதங்கொ ளரிபி னெழுந்தே விளங்கு
கவுரி பரன்றேடு நங்கை    யெமதாயி
கருணை விரிந்தே மலிந்த குமரி பயங் காரி மங்கை
கனத னவண் டேது கொண்ட    குழல்தேவி

தளவ முருந் தான பந்தி நகை கொளலங் காரியம்பை
சமய மருந்தா யெழுந்த மகமாயி
தருவு மலர்ந் தேவிரிந்த மலரி லமைந் தேவு திர்ந்த
தருண நறுந்தே னெனுஞ்சொ லறமாது
இளவல் பரஞ்சோதி தந்த குருபர நன்ரு யிலங்கு
மெழிலி சுகஞ்சேர் புயர்ந்த வரதீபா
எனது பவந்தோட மென்ப தறுதி பெறும் பார்வை தந்து
வினித ருணந்தாரு பண்பை பெருமாளே.

தனன தன தானதத்த
தனன தன தானதத்த
தனன தன தானதத்த தன தான

**412.** பலவழியிலே புகுத்தி வருபவ மதாலிளைத்து
பதறுகிறதே வளத்தி னிறைவாகி
பகவ குமரா வயிற்கை சரவணபவா மலைக்குள்
பதியுமுருகா பொழிற்கு ணகர்வாழ்வே
சனை மிகுதே வொழிக்க மயிலில் வருவாய் நலத்த
தயவுபுரிவாய் கரிக்கு மிளையோனே
சருவ வுயிராய் நிலைத்த வொரு முதல்வனே பரைக்கு
தனைய னெனவே முளைத்த முருகோனே
கலைகமச ராதியர்க்கு நமனு மெனவே வுதித்த
கனவயிரமே குறத்தி மணவாளா
கவிபுகலு வோரிடத்தி லுறைய முதமே சிவற்கு
கனி லெழுமகா பொறிக்கு ளுருவேநீள்
வலைவதுய ரூடிழைத்த தரமதறிவான் மதித்து
மகிமை தருவாய் முகிற்கு மருகோனே
வரத கிருபா நதிக்கு ளிலகுபரனே யருட்செய்
மணிகொடிரு நாகமுற்ற பெருமாளே.

தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த தன தான

**413.** பவப்புணரி மீதெழுந்து வருத்து திரையாலுலைந்து
பழுத்த சடமாகி நொந்து விழுகாமுன்

பணிச் சரண மீதெழுந்து வரப்பெறுவனோ கனிந்து
பதத்திணைவனோ மயங்கி யுழல்வேனோ

தவத்தினிடமே யமைந்த பதப் பெரியரோடுறைந்து
தளிர்த்தருளிலே கலந்து வளர்வேனோ

சகச்சிறியராய் பவங்கள் தனக்குரிமை யோரிருண்ட
தரத்துடையரோ ரோடுதங்கி யயர்வேனோ

அவத்தினிடையே கழிந்த பகற்பொழுதினோ னுயர்ந்த
வறத்தினிடையே புகுந்து மறியாத

அகக்கொடியனே னிமிர்ந்த குணக்கொடியனேன் முதிர்ந்த
வமைக்கர மிஞோர்கடங்கள் வலைமீது

கவர்ச்சியுறவே மிளிர்ந்த திறத்தனெனவே வளர்ந்த
கருத்துடைய வேழையுந்த னருளாலே

கலக்க மறவே பிறங்க திருக்கருணையே வழங்கு
கதிர்த்த திருநாகமர்ந்த பெருமானே.

தனந்தன தனனா
தனந்தன தனனா
தனந்தன தனனா தன தான

**414.** பெருங்கட லமுதே தருஞ்சிவ குமரா
பிறங்கிய வயில்வே லுடையோனே

பிறந்தன னெளியே னலஞ்சிறி தறியேன்
பெரும்பிழை யுடையே னெனமேலோடு

முருந்துற முநகையார் இடங்களின் மிகவே
முயங்கிய தொழின்மீ துறவானேன்

முழங்கிடு மறைமேன் மிளிர்ந்தெழு மாசே
முகுந்தனின் மருகா பெரியோனே

அருந்தவ முனிவோர் தினம்பரவிய வா
வனந்தர மருள்சேர் பெருவாழ்வே
அனம்பர வெழில்சேர் தடஞ்சுனை மலரே
யணிந்திடு புயனே குகவேளே
தருங்கொடை வலவா பதந்தொழு மடியார்
தரம்பெற மனதோ டருள்வோனே
சரண்டொழு மடியேன் பதம்பெற அருள்வாய்
தனந் திருமலைவாழ் பெருமாளே.

தனந்தன தனந்த தான
தனந்தன தனந்த தான
தனந்தன தனந்த தான தன தான

415. சடந்திட மிகுந்த தாக
நலஞ்செறி தனங்கண் மேவ
தருந்ததி யிதென்றுபேண வருவோனே
சகந்தனி லெழுந்து மாயை
வசங்களி லுழன்ற பாவி
சடம்பிணி யருந்த நோவி னிடமாக
கடந்தன மிகுந்த நாள்க
ளிருந்தன ளொழிந்திடாது
கமழ்ந்தவை பொருந்த வோதி பலநாளும்
கனிந்துனை நினைந்து வாடி
மயங்கிய தரங்களோடு
கனந்தன மூலந்ததாக மிடிமேவ
விடந்தனை யருந்து வோர்கள்
அகந்துடி படைந்த போல
மெலிந்ததை யுணர்ந்து நீயு மருளாயேல்
வெறுஞ் சடமுலைந்து மாழ
விடந் தருமடைந்த வேழை
விரும்பிய நலஞ்செய் தாள வரவேணும்
படர்ந்தெழு மடர்ந்த சோலை
பலந்தர நலங்கொள் பூமி
பணிந்தமை பொருந்தமேவு வளநாடா

பதம்பெற வணங்குவோர்க
ளிடஞ் செறிவடைந்ததான
பரன்றிரு வணங்கு நாக பெருமாளே.

தந்த தான தந்த தான தந்த தான
தந்த தான தந்த தான தந்த தான
தந்த தான தந்த தான தந்த தான தன தான

416. பண்டைநாத பண்டைநாத பண்டைநாத
பண்டைநாத பண்டைநாத பண்டைநாத
பண்டைநாத பண்டைநாத பண்டைநாத னெனவோது

பண்புளோர்க ணெஞ்சினூ டுறைந்த தேவ
கந்தநாத வெந்தநாளில் வந்து வாள்வை
பந்தமீதினைந்த வேழையென்ப தோர்வை யெனநாளும்

நண்பினேதை வந்திலாய் நீயெந்தவேளை
யெந்தையாக வன்புமேவு மின்பமேறு
நன்றி சேரவந்து சேர்வையென்று நாடி மனமாழ்கி

நைந்து னேழையஞ்சலோதி வந்துபாத
கஞ்சமே வதந்தி வேளை பண்பினுள்வை
நங்கை தேவிமங்கை மாது நந்திநாத னிடமேவு

தண்கொளாயி கங்கைவாலை சந்தனுதி
தங்குமேனி கொண்டநாரி பண்டைவாலை
தண்டயாளி தந்தபால செந்தினுத முருகோனே

சம்புநேர முன்பினேமை விண்டஞான
பைம்பொன் மேருவன்பர் தீபமென்ற சோதி
தண்டபாணி கொண்டதீர மஞ்சுமாறன் மருகோனே

புண்டையாகவந்த தேகமென்று மாழு
மென்றுமாழு மென்பதான துன்புபோக
பொங்கமேவு மின்பமேற புங்கமாக வருள்வோனே

பொங்கரூடு தெங்கு வாழை கந்தி மாம
ரங்களோடு மஞ்சளார்பு யர்ந்த சோலை
பொன் பொருகமர்ந்த தூய கந்தநாத பெருமாளே.

தனதன தனத்த
தனதன தனத்த
தனதன தனத்த தன தான

417 மனமதை யுருக்கி திடமதை நொறுக்கி
வருவதை யெவர்க்கு மொழிவேனுன்

மடமயில் குறத்தி தழுவிய புயத்த
மகபதி தனக்கு மருகோனே

கனதன மிகுத்த வொருபவை வுமைக்கு
கனியென வுதித்த பெருவாழ்வே

கதிரயில் பிடித்த குக கணபதிக்கு
களிமகிழ் வளிக்கு மிளையோனே

தனமென வுயிர்க்கு வுயிரென வுரைப்பர்
தரணியிலுதித்த பெரியோர்கள்

தவமுனிவருக்கு மிலை யெனிலவத்தில்
தளருவர் மிடிக்கு ளுறுவேனே

இனமுள வரைக்கு மிளிர் பொருளளித்து
விறுதியிலெனக்கு னருளாகும்

இசை பதமளித்து கருணை யோடருட்செய்
எழில் திருமலைக்குள் பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

418. மனமுனை நினைவொடு துதிபணி வுருகில
மதர்விழி வனிதைய ரிடமேவி

வதிதரு செயலற வருணெறி யிதுவென
மயின்மிசை வருவது மெதுநாளோ

கனகுரு பரமணி முனிவர ரகமணி
களிவளி மகிழ்மணி யெனவோது

கதிமணி மதிமணி கலைமணி தலைமணி
கரிதழுவியமணி யடியார்கள்

தனமணி மனமணி சிவமணி பரைமணி
தவமணி நவமணி பலகாலும்

தளிர்மணி மிளிர்மணி வளர்மணி நளிர்மணி
தலைமணி நிலைமணி மணியான

வனமணி தினமணி குணமணி மணமணி
வணமணி மணியெனு முருகோனே

வளர்பொழில் மருவிய பணைவள மிகமலி
வர திருமலை மணி பெருமாளே.

தத்த தானன தான தானன
தத்த தானன தான தானன
தத்த தானன தான தானன தன தான

419. பத்தியே நிறைவான சாகர
முற்றிலேன் மடமாதர் பாலிடை
பற்றுளார் மனமூட மேவிய பலரோடு

பட்சமாக சதாதினே தின
முற்றபாதக ரூபவீணர்கள்
பக்கலே செலு மாய்கையாகிய பவமூடே

பற்றி னேனிது நாளிலேவுனை
யுற்று சேவையுணடு மேழையை
பட்பொடாதரி ஞானபூரண முருகோனே

பற்பலாகம மோடு மாமறை
நித்தமே துதிபேணு மாதவ
பட்டையாளி மகா புராதன முடையோனே

சித்த பூரணமான மாதவர்
அற்பிலே விலைவான தூய்மணி
செட்டிலே வுயர்வான தோர்குல முதலேனீள்

செப்புமோன விலாச காரண
வற்புதா சிறியோர்கள் பாலிடை
சித்திடா தவகோல மாமயி லுடையோனே

தித்திதா வெனவாடு நாடக
கர்த்தனர் தருமாறுமாமுக
செக்கரார் திருமேனி யாலமை வொருதேவா

சித்தர்கூடிய தானமேலவர்
நத்து தானமுமான மாதிரு
சித்திமேவிய நாகமீதுறை பெருமாளே.

தன தந்த தனதாந்
தன தந்த தனதாந்
தன தந்த தனதாந் தன தான

420. சுகமென்ப தறியேன் பவமென்ப தறிவேன்
துயரென்ப தறிவேன் றுடியான

துடிகொஞ்சு மிடைமேன்படு கொங்கை மடமான்
துணையஞ்சு விழியான் படுமாய்கை

தகநின்ற கொடியேன் பகநின்ற மிடியேன்
தழைகின்ற பிணியேன் சகவாழ்வே

தனதென்ற நிலையேன் படுதுன்ப வினையேன்
றளைபந்த முடையேன் பலநாளும்

குகவுந்தனடி சார்ந் திடவின்றி யெளியேன்
குழைகின்ற தரமார்ந் ததினாலே

குளிர்கின்ற மலராம் பதபங்கய மதாங்
குடிதங்கியினி வாழ்ந் திடுவேனோ

திகழ்கந்த மறையோம் பொருடந்து சிவனுஞ்
செயல் தங்கவருளாண் டவநாதா

செறிசந்த பொழிலார்ந் திருமங்கை வளர்வான்
றிணி குன்றிலுயர்வாம் பெருமாளே.

தனதன தனத்த தான
தனதன தனத்த தான
தனதன தனத்த தான தன தான

421. படிமிசை படைத்து மாதர் மயலிடை யிருத்தி நோவில்
பதியென வமைத்த தோரில் வெகுநாளும்

பலவழி புகுத்தி நாளு மிடர்செய வருத்துபாவ
பகையற நலத்தின்மேவு நெறிதாராய்

தடிமனது தித்தபாவி வெகுளியினிலைத்த கோபி
தமிழ்மொழி படித்திடாத முழுமூடர்

தகமை கைபிடித்த வாதி புறணிகளுரைத்த நோதி
சகநிலை படிப்பிலாத வெகுதோசி

மடிதனை யுடுத்தியோது முறைமையினிலைத்த நாவி
மதி மதியமைப்பிலாத முதுதேவி

மகபதி யினைத்து நோகுமென சடமுடைத்த தாக
மதிகுண மிலச் சனுதி யெனலோடு

மிடியிடி யிடித்துளாவி யுலையிடை சமைத்ததாக
மெலிவதினி மித்தமான வெளியேனை

மிளிர்சரண ளித்திநாளி லருடரு மனத்திருள்ளை
விரி திருமலைக்குண் மேவு பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

422. பந்தமாமயன் மீறிய கூடிடை
தங்கியே தசமாதமதாய் வளர்
பண்பிலே பலகோடி யுகாதிகள் பலகோடி

பங்கிலே பலவூர் வனபாய்வன
வம்பி லாவன மாமிரு காதிகள்
பண்டிலே பலதாகி பின் மானிட வடிவாகி

ஐந்தொ டாறென வேழென வேபதி
னைந்தொ டாறென வேமதர் மான்விழி
அஞ்சி லோதியர் மேன்மயன்மூழ்கிய முழுமூடன்

அஞ்சிடாத மகாபவு சாகர
முங்கி யாழ்பவன் மேலலை வீசிடை
யங்குடாடியதூ செனுமேழையை யெதுநாளில்

வந்து நீகைவி டாதருள் வாயென
நொந்து வாடிட, வோவிதி மாதவ
மண்டலாதிப தேவ வரோதய குருநாதா

மஞ்சு மானிற மேவிய தூயவர்
கொஞ்சுமா மருகாமுரு காகுக
வந்தி வேளையி லேபதமே தா வரவேணும்

சங்கது சல மேவிய வானவ
யெங்க ளையகமான புராதன
சம்புவோ முறைமையே பெறநாடிய வரதீபா

தண்டு தாமரை மேலுறை மாபொறி
தங்கி வானக தாரக மானவ
தம்பிரானென வோதிய மாதவர் பெருமாளே.

தந்த தான தந்த தான தந்த தான தந்த தான
தந்த தான தந்த தான தந்த தான தந்த தான
தந்த தான தந்த தான தந்த தான தந்த தான தன தான

**423.** என்று வீழு மென்று வீழு மைந்துபூத மொன்றுகூடி
தென்று கூறு கின்றமேவழை னைந்து வாதை பந்த மாயை
யின் கணுக மன்றலான துன்பவாழ்வு விண்டேற பேடு
நெறிதாராய்

இந்து நாகு கொன்றை வேணி யென்புமாலை தும்பையோடு
கங்கை நாரி தங்கு நாதர் தந்தபால கந்த நாத
சங்களாதி யன்புளாவு கின்றதான துங்கதேவ
முருகோனே

மன்றிலாடி வந்தமூலர் கொஞ்சுசோதி தண்டையாள
மென்றரூப துன்றுஞான குன்றமேனி தொண்டராதி
வந்துசேவை மன்றவாழு கின்றதீப சுந்தராதி
யெனவோது

மந்த்ரவேத மென்றுமோதி கண்டிட்டாத வந்தணாள
செந்திறுத பண்புளோர்கள் அன்பின்மேவு மின்பமான
மங்கை நீலி யம்பைகாளி சிங்கமேறுகின்ற தேவி
மகமாயி

வென்றிமாது குன்றமாது மன்றமாது நன்றிமாது
பந்தபாசகன்றமாது செங்கைமாது புங்கமாது
விந்தைமாது தந்தைமாது வந்தமாது சுந்தமாது
மெனவோடு

விஞ்சைமாது கஞ்சிமாது தஞ்சமாது பைஞ்சொன்மாது
மங்கைமாது கங்கைமாது பொங்கமாது கொங்குமாது
மின்செய்மாது நஞ்சுநாதர் கொஞ்சுமாது செங்கைமேவி
வளர்வோனே

அன்றிருமை மன்றிலாகி யன்றினீறவென்று வேலை
துன்றயேவு கின்றவீரனென்ற தீரமன்பொ ருளை
வஞ்சலோதி யஞ்சலோதி யஞ்சலோதி யஞ்சலோதி
வரவேணும்

அம்புயாதி மண்டுலாவு தண்டடாக முண்டசோலை
கொண்டல்சூடு பண்பதோடு வண்டறுத பம்பலாகி
யங்கண்மேவு பைம்பொருகை குன்றின்மேவு கந்தநாத
பெருமாளே.

தாந்த தன தான தந்த
தாந்த தன தான தந்த
தாந்த தன தான தந்த தன தான

424. தாங்க முடியாதெழுந்த தீங்கறிய வேகமூன்று
சாம்பு மெளி யேனையுந்த னருளாலே

சார்ந்த நலமேபுரிந்து யேந்துதலி லேபிறங்க
தாழ்ந்த நிலை போகயின்று னருடாராய்

தேங்கமழு சோலையண்ட ரோங்குலகி லூடுசென்று
சேண்டருவி னேடுடன்று பலவாறும்

சேர்ந்தகிளையோடுறழ்ந்து தாங்குதலிலே பொருந்தி
தேர்ந்த பலசாதியொன்றி னினமாக

ஆங்கரிய தாகிநின்று வோங்குபலமே பொலிந்து
வாண்டை முதிர் வானுதிர்ந்த பொழிருடா

ஆர்ந்தவபி ராமிகங்கை தாண்டவமுராரி தங்கை
ஆண்டகை புராரி பங்கி லுறைதேவி

வோங்கு மறையாகமங்கள் தேர்ந்த தலைமேனிமிர்ந்து
ஊர்ந்த சிவகாமி தந்த முருகோனே

ஊன்றவழுவேல் கரங்கொ ளான்ற குகனே யிலஞ்சி
வோங்கு திருநாகமர்ந்த பெருமாளே.

தத்தனத் தனத்த
தத்தனத் தனத்த
தத்தனத் தனத்த தன தான

**425.** இப்பிறப்பினுக்கு மொப்பி யிப்படிக்கு
மெப்படிப் புரக்க வருவாயோ
இக்கடத் தடைத்த புற்பவப் பிணிக்கு
ளிற்றிடப் படைத்த முருகோனே
அப்பிடைச் செனித்த முத்தருட் குணத்த
அக்குறக் கனிக்கு மணவாளா
அக்கயற் கணிச்சி செப்பிணைத் தகர்த்த
அற்புதத் தனத்தி சிவகாமி
ஒப்பனைப் பரைச்சி யப்பிணைச் சடைச்சி
யுற்ற சிற்றிடைச்சி யெமதாயி
உற்றவர்க்கருட் செய் பற்றினைப் படைத்த
உத்தமிக் குரித்தொ டெழுசேயே
முப்புடைக் கனிக்கு முப்பழக் கனிக்கு
முற்பமைத் தெடுக்கு மொருநாதன்
முற்றுணைப் படைத்த நற்குகப் பொறிக்கு
முக்கியப்பொருப்பில் பெருமானே.

தந்தன தாத்த
தந்தன தாத்த
தந்தன தாத்த தன தான

**426.** புன்புலா லாக்கை யென்பினு லாக்க
புன்கணுய் வாய்க்கு ளுழல்வேனை
பொன்றிடா தாக்க வென்றுதா னேற்று
புங்கமே யாக்க வருவாயோ
துன்புகா வீட்டி லன்புவாழ் வீந்து
தொந்தமாய் நாட்டி யருள்வோனே
தொண்டர் பானுட்டு கின்றபேர் நாட்ட
சுந்தரா தீர்த்த மதிசேயே

பொன் பொனே சேர்த்த புந்தியோ டார்த்த
புங்கமார் கோட்க ஒருவாளா
பொங்கமார் வாழ்க்கை தந்துகா வேற்கு
புந்திசேர் பேற்ற முடையோனே
அன்புசேர் பார்த்த கோண்டலே யார்க்கு
மந்தணு காக்கு முருகோனே
அம்பொனூர் கோட்டில் தங்கி வாழ் பேற்ற
அங்குகா சீர்த்தி பெருமானே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

427. துன்ப வாரிதி மேலலை மேலெனை
தங்கி வாடிட வேவிட வாவிதி
தொந்த மாகிய தாவிதை யாரிடை புகல்வேனுன்
சொந்த மாகிய தேவபு ராதன
யெங்க ளுகைய மேகிரு பாநிதி
தொண்டு ளாரக மேவிய ஞாபக முருகோனே
இன்ப சாகர மானவ ரோதய
செந்தி லாதிப மாகழு காசல
விந்து சூடிய பேரா ளூர்தரு பெருவாழ்வே
எண்டிசா முக னோடுமை யாடிய
வண்டர் சேவக தூயகு ணாநிதி
வின்று ளுதர மேதர வேமயின் மிசையேறி
அன்பி னோடமை வாகிய தேவமு
தென்ப தேதர வேவருவாய் குக
அம்பி காபரை நீலிகு ணாகரி சிவகாமி
அந்தணு ளிமகா கவு மாரியு
மென்ற காளியு மாதிரி சூலினி
யந்தி வானிற நீள்சடை யார்மகிழ் மணமாது
பொன்பொ னுமிம யாசல மாமகள்
தன்சுதா குறமாது மனோகர
பொங்க மேவிய மாமழை யாமுகின் மருகோனே

புங்க மாதவ மேசிகி வாகன
கந்த நாதத யாநிதி பூரண
பொன்செய் மாதிரு மாமலை மேவிய பெருமாளே.

தந்த தான தந்தன
தந்த தான தந்தன
தந்த தான தந்தன தன தான

428 மங்கை மாத ரின்பமோ துன்ப மான தென்றுமே
மன்ற வோது கின்றதே மறைநூல்கள்

மன்று ளாதி தந்தவா கந்த நாத சுந்தரா
மைந்த ரேறு துங்கமால் மருகோனே

செங்கை வேலெறிந்தனுள் குன்ற மீரு கின்றவா
சிந்து வூரி னின்றவா வமதீபா

தென்றலேறு பொங்கர் பான் மஞ்சுலாவு கின்ற தாய்
திண்பலாவு மஞ்சளோ டரிதான

கொங்கு நாவல் தெங்குமா கந்தி வாழை சிந்துமால்
கொங்கை மேவு கின்றவால் பலவாக

குங்கு மாதி சந்து சேர் தங்கி வாழு கின்றதாய்
கொங்கு சேரு கின்றதோர் வளநாடா

பங்கமாதர் தங்கண் மால் பொன்றியோட வுன்றன் மேல்
பண்பு சேர வந்தினே யருள்வாயே

பண்பை மேவு கின்றவா வன்புளோர் கடங்கமே
பண்பை நாக கந்தனே பெருமாளே.

தனத்த தனதான தந்த
தனத்த தனதான தந்த
தனதத தனதான தந்த தன தான

429. பவக்கடலிலே விழுந்து தவிக்குமெளி யேனையின்று
பதத்திணையிலே விளங்கும் அருடாராய்

பரப்பிரமமே கனிந்த தவப்புனிதமே நிறைந்து
பரப்பமுதமே யுணர்ந்த பெரியோர்கள்

உவக்குமுதலே விளைந்து பருக்குமணியே சிறந்து
உதித்தசிவமே யிலங்கு மயில்வீரா

உமைக்குமுதலா யெழுந்த சுதச்சரதமே வுயர்ந்த
வுருக்கமுடையாரகங்கொள் பயநாதா

அவத்திலிது நாளொழிந்த தெனக்குரிமையானகந்த
யருட்டயவினோ டிரங்கி யருளாமேல்

அனர்த்த மிகலாகி நொந்து கெடப்படுவினை முடிந்து
அதற்கு ளொழிலாருமுந்த னருடாராய்

குவட்டி னிடையேபிறங்கு குகைக்கு ளொளியாய் வளர்ந்த
குணத்துமுனிவோர் கடங்க ளகவாழ்வே

குகச்சரவண முகுந்த முகிற்கு மருகா விரும்பு
குடிக்கொ டிருநாகமர்ந்த பெருமாளே.

தனதன தன தானன தானன
தனதன தன தானன தானன
தனதன தன தானன தானன தன தான

430. கபாலமீதமை வாகிய வாதைகள்
அகால மாமென வோடிட வேயருள்
கணீர் கணீரென வோலிட மாபிணி முகமேறி

கலாபமே நிறைவாகிய மாசிகி
சலா சலா வெனவே நடமாடிட
கண கண வெனவே முழவாதிகள் பலமோசா

குபாலதா யகமேயென நாதர்கள்
சதா சதா மறையாகமமே துதி
குண குண வெனவார்புகழ் கூறியு மதனோடு

குமாரநாத மகாபரமே சிவ
தயாளகா ரணமேயபு ராதன
குகா குகா வென வேயடியார்சொலின் மலிவோடி

அபாரவீர் திகழ்பாகிய கோமள
சகார கார வணுபவினை யென
அகாருகா ரமுமாகிய வோமொடை யிறிமோடு

அதே மகாமனு வோதியுமேல் சுதி
யிலேசதா நிலையே பெறு வோரிடை
அகாத சேரிதிபகா கிருபாகர னெனலாகி

உபாசனு மறைமேய தருமேலவை
தனு தனு வெனவே நடமாடியு
முளேவுளே நகை மாதுமையேபெற மகிழ்வான
உலாசமா சரி னேய சுதாவளி
தனுல் தனுலிலை மார்ப சுகாதிப
ஒமோ மகா திருமேவிய மாமலை பெருமாளே.

தனதன தனன தானு
தனதன தனன தானு
தனதன தனன தானு தன தான

431. பகைபிணி மிடியினுலே யிதுவரை துயரினுலே
படுவதை கவியினுலே புகழ்பாடி
பரவிய வுரிமை யோடே சொலுமுறை யறிகிலாய் போல்
பதிகிற திறமையாலே யெளியேனும்
வகைவகை விபரமோடே படுதுயர் கடலுளானேன்
மணிகடை சிறிது பாரா வணமானுய்
மலருலை கிடையினுயே னினிதுனி கடலு ளாழேன்
வளர்கட முடைய நீயே யொருவேலால்
குகைபிள வுறுதல் போலே செயவிது தருண மாமே
குறியிது மதியினுலே இதுவேனும்
குணமொடு புரிவை நீயே வுலகிடை பெருக வாழ்வாய்
குருபர முருக நாதா பெரியோனே
திகைதொகை யறிகி லாதே வளர்பொழி னகரி னூடே
செறிதளி யிலகு தேவா மயில்வீரா
சிவசிவ குமர பாவால் புனேபவ ரிதய வாழ்வே
திருமலை யதனின் மேவு பெருமாளே.

தனன தன தான தான
தனன தன தான தான
தனன தன தான தான தன தான

432. கருணைபுரி யாத தாகி மவுனநிலை யாகியாகி
கருதுபெரி தானதான துயர்மூழ்கி

கழியு மெளியேனை யாள மனதுருகிடாது நோவு
கடினமிடி யாழியூடு விடலாமா

அருணயன மேவு நாத தருமவுருவே குமார
அழகுகுற மாது சேரு மணவாளா

அருணகிரி நாதர் பாடு புகழினிடையே யுலாவு
மறுமுக தயாளநீதி யுடையோனே

பெருமை யிது வாவுனை வியுலகில் பல வேசவேச
பிரியமில தான வாழ்வி னிடமாக

பெருபொருளிலாத தான கவலை யதனோடு பீடை
பெருகி வரலான தாகி நலிவேனை

திருநயன மான பார்வை புரிவதெது நாளி லாகும்
செககுமர தேவர் தேவ முருகோனே

சிகிபுறம தேறியோகை வலம்வருத லான நாத
திருமலை மகா தியாக பெருமாளே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

433. உருகிவுன தாணி னைந்து பெரு கவியிலே மிதந்து
உரிமை சிறிதேனு மின்றி யுழல்வேனை

உனதடிமை யாக வந்த பிறகு மியான் வருந்தி
யுழலுவதை யோதி யுந்த னெழிலான

பெருகு புகழ் கூறுகின்ற தொழிலமைதி யான சிந்தை
பிரியம் நிறைவாகி யென்று மறவாது

பிரசமலர் தூவியுந்த னடிமலரை யேநினைந்து
பிரதிதின மோதுமன்பி னெறிபேண

வருமடிமை யான யெந்தன் நிலைமையறி யாதுவுந்தன்
மனதுருகிடாத மைந்தன் முறையாமா

மனுநெறி யிதா சுரந்த அருட ருவரி யாரிரங்கி
வரமலி தயாள கந்த முருகோனே

தருமலி விலாச பண்பை குருபர் தியாக கங்கை
தனபதி சுதா நிறைந்த பெரியோனே

தருமதுரையே வழங்கு கிருபை முகிலே பிறங்கு
தவிர்திரு மகா நகங்கொள் பெருமாளே.

தந்தன தத்தன
தந்தன தத்தன
தந்தன தத்தன தன தான

**434.** பந்தபா சத்தினூ ணைந்து வாதிப்பதே
பண்ப தாகிச்சதா துயர்மூழ்க
பங்க பாவத்தினூ லென்பு கூடுற்றுளே
பம்பு மோகத்தினல் வருபீழை
எந்த காலத்திலோ எந்த நேரத்திலோ
எந்த தானத்திலோ அறவோடும்
எங்களாதிக் குகா மங்கை தேவிச்சுதா
இன்ப ஞானக்குணா வெனவோது
கந்தனே தற்பரா விந்தை யாதித்தனே
கஞ்ச பாதத்தனே முருகோனே
கங்குனே ருற்றுளோர் தங்கள் மார் பத்திலே
கண்டுவேல் விட்டவா மயில்வீரா
தொந்தியாகத் தொடே தந்தியானத் தொடே
துங்கவீரத் தொடார் கணநாதன்
தொந்தமாகப் பினே வந்தபோதத் தனே
துங்கமா வெற்பிலோர் பெருமாளே.

தனதன தான தான
தனதன தான தான
தனதன தான தான தன தான

**435.** பருவான் மீதிலேறி நவிவிடை மூழ்கிமூழ்கி
பழுவுடல் பாழதாகி யழிவேனை
பழுமறை யோதி யோதி முறை யிடலான சோதி
பரவிய யேழைமீது னருளாலே
குருமுறை யான தான மனுமுறை யோதியோதி
குலவரு ளூடுசேரு நெறிதாராய்

குருபர ஞான தேவ பரைசிவ காமி வாமி
குலவிய நீலிகாளி மகமாயி

முருகவி ஞாரி வாலை பயிரவி நீதி லாத
முழுமுத லாதி பாக முதுதேவி

முனைதிரி சூலிபாலி குமரிகௌ மாரி மாது
முகில்குழன் மாரிவீரி தருபாலா

திருவரு ளார் மயூர மிசைகதி ராழியாக
தினமெழ லான தீர முருகோனே

திகழ் பொழிலூடு ளான நகர்வல யேவு நாத
திருமலை வாழு மீச பெருமாளே.

தந்த தனந்த தனந்தாஞ தன
தந்த தனந்த தனந்தாஞ தன
தந்த தனந்த தனந்தாஞ தன தன தான

436. அன்பில் விளைந்த செழுந் தேனே யரு
ளின்பம் விளைந்த பெரும் பேறே வல
கந்தம் விரிந்த மணம்பூவே மலை வளர்வாழ்வே

அங்க ணிறைந்து வளர்ந்தோனே மயி
லின்க ணிறைந்து யெழுந்தேனே தனி
யம்பில் விளைந்த தவஞ் சேயே தக ருடையோனே

துன்ப மொழிந்த சுயம் பூவே வல
கெங்கு மிலங்கு நலங் கோவே துதி
தொண்டி வணங்கு குணஞ் சார்பேவெழி லருள்வேளே

துங்க மிலங்கு நலஞ்சாறே வளர்
கின்றயிடங்க ளுறைந்தோனே வுரு
தொந்தி மிகுந்தவ னின்றேளே குக வாதீபா

என்பு பிறங்க வனைந்தோனோர் சுத
சுந்தர கந்த பணிந்தோர்பா விடை
என்று மிலங்கிவருங் காரே பெரு முகின்மேரே

என்று நினைந்து கசிந்தே யேழையை
நன்கு புரந்து சுரந்தே யர்ளுவை
இன்கண் டைந்து மெலிந்தேனே யிதை யெவர்பாலில்

அன்பு புகன்று மடைந்தே வோதுவல்
என்பு கடங்களு டைந்தே யாவியை
அஞ்சு வனஞ்செய் விதந்தானே செய லழகாமா

சண்ட வருந்த யிருந்தேனு வினை
யின்று பிரிந்து விடும்பா டேயருள்
தொண்டர் கணங்கண் மிகுந்தே வாழ்மலை பெருமாளே.

தனந்தா தன தனனு
தனந்தா தன தனனு
தனந்தா தன தனனு தன தான

437. இரும்பாகிய மனதோ டரும்பாதக முடையே
னிடங்கெடு களிடையே பலநாளும்

யிருந்தே கயல்விழியார் தனஞ்சேர் குழன்மயலா
டெழுந்தே திரிவதனு விதுநாளும்

தருஞ்சேவக மதனு னலிந்தேனுனை மதியால்
தரும்பாவின முறையே புகலாது

தனம்பூமி கனைலமே பெரும்பேறெனு நினைவே
தழைந்தேறிய மனதோ டுழல்வேனும்

அரும்பாமலரணைமே லடைந்தே நலமுறவே
அவிர்ந்தாடிய மயில்மேல் வரவேணும்

அனஞ்சூடிய சடைமேன் வரும்பூவணி முருகா
அறைந்தே மறையறியா வொருதேவா

கரும்பாடி யரசமே அரும்போரிடை வலனே
கலங்காதுனை நிதமே பணிவோர்கள்

கடம்பேர் பெறுதளியா யிருந்தே நடமிடுவோய்
கனந்தேர் திருமலைமேல் பெருமாளே.

தந்தா தனந்த
தந்தா தனந்த
தந்தா தனந்த தன தான

138. அன்பா னிறைந்த செந்தூ ருறைந்த
அம்பூடெழுந்த முருகேசனே

அஞ்சாதெ யென்று வந்தேபுரந்து
அன்பூறுகின்ற நெறிதாராய்

என்போடு கங்கை மங்காத கொன்றை
இன்பாரு திங்க ளிதழோடு

எண்டோளிபங்கி லன்போடு கொண்ட
வெண் பேரிலங்கு மொருநாதன்

தன்பாலமைந்த சிங்காரமைந்த
தண்பூதரங்க ளுறைவோனே

சந்தாதி கொஞ்சு மஞ்சாடு கொங்கை
தண்சார்பிலங்கு வளநாடா

மன்பாத கங்க ளண்டாத பண்பை
வந்தாளு கின்ற பெரியோனே

வண்டாடு பொங்க ருஞ்சூழ்பமைந்த
வண்சீர் நகங்கொள் பெருமாளே.

தனந்தன தான தந்த
தனந்தன தான தந்த
தனந்தன தான தந்த தன தான

439. மனங்கனி வாகியுந்த னரும்பத நாடுமன்பர்
வளம்பெற வோதுமந்த்ர முருகோனே

வரஞ்சலியாது தொண்டர் பெறுந்திற மேவழங்கி
வருங்குக நாதகந்த மயில்வீரா

தினம்புகழ்பாடுகின்ற மனஞ்செறி வோடுயர்ந்த
திறம்பெறுவோர் கடங்க ளகவாழ்வே

திருந்தமிழாரமென்ப தருங்கலமாயணிந்து
செயந்தரு வீரபுங்க வடிவேலா

வனம்புனைமாது கொஞ்சு சுகம்பெறலான துங்க
மகிழ்ந்தெனை யாளவந்து பொருண்மேவு

வணம்புகழே புனைந்து சொலுந்திறமே புரிந்து
வரும்படியே யுவந்து னருடாராய்

தனந்தருவோய் சிறந்த மனந்தருவோய் பிறங்கு
தரந் தருவோய் முருகுந்தன் மருகோனே

தளிர்ந்தெழு சோலையண்ட ரிடஞ்செறி வோடுயர்ந்த
தனந்திருநாக பண்ணை பெருமாளே.

தனந்த தனன தனன
தனந்த தனன தனன
தனந்த தனன தனன தன தான

**440.** இரங்கவிலையாமனது கருங்கன் மலையாவலது
யிரும்புமலையாயிதனி லெதுவாகும்
எழுந்துமுழுனையே தொழுது வருந்தொழிலுளே ன்மனதி
விருங்கவலையே பெருகி யிதுநாளும்
தரங்கமலையாய் வருவ துறங்கவிலையே வினைகள்
தருந்துயரினன் மெலியு மெளியேனும்
தளர்ந்தழிய வோவிடுவை புரந்து நலமேபுரிய
தருந்ததியிதே யிதனி னருளாயேல்
உரம்புகுதவே வயிலை யலிந்து விடுவாயுனிடை
யுறைந்தவடியேனிதனை யுணர்வாயே
உயர்ந்த பெரியோர்கடுதி பணுங்குமரனே முனிவ
ருளங்குடியுளாய் வரத முருகோனே
வரங்களிலை யாமவுன தரங்களிதுவா வளியை
மணந்த குணமாமலையி லுயர்வாக
வளர்ந்த செயலாயிதனை சொலுந்தாமமேதயிலது
மகிழ்ந்த திருமாமலையுள் பெருமாளே

தத்தன தான தான
தத்தன தான தான
தத்தன தான தான தன தான

**441.** இத்தரை மீதி லேழை பத்தி செயாத பாவி
எத்தினி லோடி யாடி யிதுநாளும்
எட்பிள வேனுமாண நற்றவ மேனுனை
இக்கொடி யோனை யாள வருவாயே
பத்தர்கள் தேடு பாத வித்தக ஞான சோதி
பட்பொழி லானியான முருகோனே

பட்பகை யான வாய்மை யுற்றிடு மாதர் பாலில்
பற்றிய மோக மான மயலூடு

சித்தம தேகி நாளு முற்றமை நாச கால
சிற்றின மோடு கூடி யுழல்வேனை

தெற்கமை வானவாயி னிற்பவ னுன வேழு
சிற்றறி வோடு மேவி யெனதாவி

தத்தமை யாத சேவை யெற்கினி தாக யீவை
சற்குண சேம நாத மணியேநீள்

தத்துவ ஞான யோக முற்றிடு தான மான
சத்திரு நாக தேவர் பெருமாளே.

தனன தான
தனன தான
தனன தான தன தான

442. சுகானு போக முறுத பாவி
சுகானு பூதி பெறுவேனோ

சுமாதி யான மகாதி யோர்கள்
சொலாத மோன முறுவாழ்வே

குகாதி தேவ நராதி பால
குணாதி மூல மெனவோது

குபால சீல வலாரி சேம
குமாரி நாரி மகமாயி

அகாத வீரி வராகி மாரி
அனாதி காளி சிவகாமி

அகார மோடு உகார மேறு
அரூத வீரமி தருபாலா

சிகார தீப வகார மேவ
சியாக மோன சுளிமீது

தினேது வோர்கள் தனாதி யான
சிகார நாக பெருமாளே.

தனத்தனத் தனத்த
தனத்தனத் தனத்த
தனத்தனத் தனத்த தன தான

**443.** படப்படப் பெருத்த துனிக்கடற் புகுத்தி
பதைத்திடப் படைத்த முறையாதோ
பசித்தழற் கொழுத்த விடத்தினைக் குடித்த
பாற்கருட் கொடுத்த முருகோனே
இடர்ப்படர்க் கிணக்கி நலத்தினைக் கெடுத்த
விசைப்பினைச் சொலற்கு மிழிவாகும்
இசைக்கடத் தமைத்த வுயிர்ப்பினைக் குடித்து
யிறத்துதற் கமைத்த தெதுநாளோ
சுடர்சுடச் சமைத்த பவக்கடற் குளிக்குள்
துனிப்படற் கிரக்க மிலதாகி
சொலச்சொலச் செவிக்குள் புகுத்திலைப் படிக்குள்
துலைத்திடற் கெடுத்த முறையாகும்
தொடர்ப்படத் தினத்தை விடுத்திடற் பொறுக்க
தொகைச்சடப் பலத்தில் சிறிதானேன்
சுமைச்சடத் தழித்துன் மனப்படிக் கிருப்பை
சுகத்திருப் பொருப்புள் பெருமாளே.

தனா தனந்த
தனா தனந்த
தனா தனந்த தன தான

**444.** படிமீ தெழுந்த நலமே சிறந்த
பகவா முகுந்தன் மருகோனே
பரமே யிலஞ்சி யிடமே யிருந்து
படிகாவல் கொண்ட முருகோனே
அடியார் சிறந்து தினமே வளர்ந்து
அருளே நிறைந்த வளமேவு
அழகான பண்பை பொழிலூ ரமர்ந்த
அரசே வணங்கு மடியார்கள்
தடியாத பண்பு வுயர்வாக நின்று
தனமே விலங்க வருவோனே

சனகாதி கொஞ்சு துதிமேவு கின்ற
தரமேவு துங்க முடையோனே

இடிபோ லெழுந்து வருமா பவங்க
ளிறவோடி வந்து னருளாலே

இசையாதி தந்து யெனையாள்வை கந்த
எழில்மா நகங்கொள் பெருமாளே.

தன தான தனந்தன தந்தன
தன தான தனந்தன தந்தன
தன தான தனந்தன தந்தன தன தான

445. குகநாத பயங்கரியம்பிகை
சிவகாமி நிரந்தரி சுந்தரி
குணபாலி பரன்பரை சங்கரி கவுமாரி

குறமாது பணிந்தெழுகின்றருண்
மனமாமி சிறந்தவளம்பிகை
கொடையாளி வனம்புனை யங்கயல் கணின்மாது

மகமாயி சிதம்பரியந்தரி
தவயோக ரிடந்தனை கின்றவள்
மதிமாது சுதந்தரியன்பின ருளமேவு

மணியாய புரந்தரி பண்பமை
தவமாது நகந்தரு மன்சுதை
வலை வீசு குலந்தனினின்றவ ளெனவோது

செகநீலி மணம்புனையுங்குழ
லிணிதேடு மதந்திகிளின்பமை
திரிசூலி பதஞ்சலி வந்தனை பணுதேவி

திருநாரிக ரந்தவழ் கின்றவ
சுதஞான வனந்தரு செந்தினை
தெளிமாவு தினுங்குக மந்திர முருகோனே

அகமேவி வளர்ந்த தடம்புய
வளிதேடி மணந்து பிறங்கிய
வதியோக நிறைந்த வனந்தர முறவாழ்வே

அடியேனை மனந்திக ழன்பொடு
பரிபாலி சரண்பணி கின்றவன்
அழகான தனந்திரு குன்றுறை பெருமாளே.

தந்த தான தனா தன தந்தன
தந்த தான தனா தன தந்தன
தந்த தான தனா தன தந்தன தன தான

446. மந்த்ரவேத சிகாமணி யன்பர்க
டங்கணாயக மான நிரந்தர
மண்டலாதிப சோதி வணங்கிவர் முருகோனே

வண்டலோடு நவாடியு மங்கையர்
தங்கள்பாலிடையே மனமுஞ்செல
வந்துநேனிது நாள்வரையென்றன தருண்மேவு

சிந்தை சேருவனோ வலதிங்குள
பந்தமாய்கையிலே வருதுன்பிடை
சென்று மாய்குவனோ வென நெஞ்சிடை துயர்மூழ்கி

தின்பதாகிய நோதகவந்திவ
ணென்று பாதகரூப மலிந்தெழு
திண்கிராதகனாகிய வென்றனை யினியேனும்

உந்தனாலய மேவலம் வந்துனை
யெந்தநாளினுமே தொழு சிந்தனை
யொன்று கூடிடவே மணிமந்திரம் அருள்வாயே

உம்பரோடு மகாமுனி யந்தணர்
கங்கை சூடரனார் விதிபண்பமை
வுண்டநாரத ராதியரும்பணி வரதீபா

தந்தநாக மயூர பரம்பரை
தந்தபால தயாளமுறுங்கடல்
தண்குணாலய மாகி யெழுந்தவ னெனவோது

தம்பமே கிருபாநிதி தண்டலை
மஞ்சு சூடியதாகி வனைந்தெழில்
தங்குமா திருமாமலை வந்துறை பெருமாளே.

தந்த தன தான
தந்த தன தான
தந்த தன தான தன தான

447 பந்த வினைபோக வந்தருட யாள
பண்பமைவிலாச மூடையோனே

பண் பொழிலின் மேவு கின்ற குரு நாத
பைஞ் சரண மீதில் வருவோனே

சிந்து நகர் வாச வன்பினர் கணேச
சிந்தை தளியாக வளர்வோனே

தெங்கொடு பலாசு பைங்கமுகு மாவு
சிந்து மகிழார மிலவோடு

கந்தமலி வான குங்கும மராவு
கம்பொது ளன்மேவி வளர்சோலை

கஞ்சமலி வான செம்பணைக ளாதி
கம்பலைகண் மேவு வளநாடா

அந்தரி கௌமாரி சுந்தரி நியாக
அம்பிகை குமார முருகோனே

அந்தணர் களாதி தங்குதிரு நாக
மங்கண மைவான பெருமாளே.

தந்தா தனா தனன
தந்தா தனா தனன
தந்தா தனா தனன தன தான

448. கண்பாடிலா மலமை புண்பாடிலே யெளிமை
கம்பாவ மேவுவடி வினனுக

கண்டே சொலாக வளர் குன்றே பயோதர நல்
கண் பார்வையே குவளை யெனலாக

வண்டாடு காலளைய நுண்டாது லாவு குழல்
மன்றூடு மாதரின வயமாகி

வந்தேனி தேவரையி லுன்பாத மேபரவு
மன்சீர் மனோ நிலையம் அருள்வாயே

மண்பாடி னேடுவளர் பொன்பாடிமேலை நினைவு
வந்தாடுதே யிதனை யெவர்பாவில்

மன்றேறுத நாதவுனை கந்தா குகா குமர
மன்றாடு நாதர் சுத னெனவோதல்

கண்டேசுமா வுறைதல் நன்றோ யிதா முறைமை
கண்பார் தயாள பர முருகோனே

கன்றாத தேவர் தொழு குன்றாக நின்ற திரு
கண்டேறு நாக முறை பெருமாளே

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

**149.** என்று தானினி தாக வுதோதர
மொன்று மோவென வேதுயர் மூழ்கிய
வென்பினோ யினை நீகடையா விதை யருளாமே

எந்த வேளையிலோ நலமே பெற
வந்து பார்வையி னுலேனை மாசறு
மின்பமே பெற தாயக மாகிய நெறிபேணல்

கன்றி நாடொறு மேமிடி சேர்பிணி
யூன்று கோள்பகை நீணலி வாணிடி
கண்டதோ ரரவே யெனவே யெனை விடலாமே

கண்டபே ரெனை மாமிடி யோடுறை
கின்ற வாழ்வின னேழை யெனுசொல
கண்டவாசக மேபுகழ் பாவிடை பலநாளும்

மன்றவோத வெதாகினு மேபொரு
டந்திடா தவனு கினையாதலின்
மண்டு பேருல கோரிடை வாழுத விழிவாகும்

வந்து நீயெனை வேல்கொடு மார்பிடை
சென்று போய்புற மேவர வேபுரி
மன்குகா விதை யாகினுமே செய வருவாயே

குன்றுளானவ நாயக பூரண
மன்றுளாடுவ ரோதய னுர்குரு
கும்பமீதெழு மாமுனி வோரக முறுவாழ்வே

கொண்டல் சூடிய மாபொழி லூரிடை
சென்றுலாவிய வீரபு ராதன
கொங்குசேர் திருமா மலைமேவிய பெருமாளே.

தான தந்தன தானா தனா தன
தான தந்தன தானா தனா தன
தான தந்தன தானா தனா தன தன தான

450. பாலகந்த சுவாமீ நமோ நம
யோகமந்திர ரூபா நமோ நம
பாதபங்கய நாதா நமோ நம வெனவோது

பாரடங் கலுமானாய் நமோ நம
மாதுகுஞ்சரி மோகா நமோ நம
பார்வை யன்பர்கள் மேலோய் நமோ நம வெனலான

சீலமிஞ்சிய தேவா தயாபர
கோலமிஞ்ச நாகூலா குணாநிதி
சீர்மை தங்கிய வேலா குகாவளி மணவாளா

தீதிலந்தண ராதீ தினேதின
மோதுகின்ற நுணே யாபு ராதன
சேவலின் கொடியாளா மகாதக நுடையோனே

காலனன் றறகாலால் கவீரென
கீறுகின்றவர் தோராம னேமனு
காணவண் பொருடா தாவெனு வுரை பகர்வோனே

காமரின் குழலாயீ மனோன்மணி
நாரிசுந்தரி மாதா மனோகரி
காளியம்பிகை பாலா கலாநிதி முருகோனே

சாலசெந்தமி ழாலே சதாவுனை
பாடுகின்றவ ரோடே வுலாவிய
சாமிசந்தன நாகா சுகாதிப மயில்வீரா

தாமதஞ் செயலாகா திதேததி
சேவை தந்தருள் வாயே தயாநிப
தான பண்மொழின் வாசா சிகாமணி பெருமாளே.

தந்தன தனன
தந்தன தனன
தந்தன தனன தன தான

**451.** சந்தன சலமேல் வந்தவேல்முருகா
கம்பமே வடியா ரகவாழ்வே
சங்கரீ சுதனே எங்களா தரமே
தண்குண திபனே வாதீபா
மந்திரா சனமே னந்துபே ரரசே
வண்டயோ தரமே யெழிலான
மங்கைகா புனமே னின்றவா வவளே
மண்டவே யணைவோய் மணவாளா
சுந்தரா திபனே வன்பரா லயமே
துங்கமேச வகமே மயில்வீரா
தும்பிமா முகனார் தன்பினே வருவோய்
தொண்டர் நாயகமே முருகோனே
பந்திசேர் பொழிலூர் பண்பையா திபனே
பங்கயா சனனாய் வருவேளே
பண்புதா ததியே கந்தனே குமரா
பைம்பொனார் மலைமேல் பெருமாளே.

தான தனதன
தான தனதன
தான தனதன தன தான

**452.** தேக நலிவிடை வாழு பவமிடை
சீர்மை கெடநித முழல்வேனை
தீரமுட னருள் பாவி வரநிதி
தேவ பழனியி லுறைவோனே
சோக முறுபவர் தோவருள் பொழி
தூய பயிரவி யெமதாயி
சோதி நடமிடு நாதனிட மமர்
சூலி திரிபுரை தருபாலா

பாகுமொழிவளி மோகமுறவவள்
பாதமிசை துதி புரிவேளே

பால குருபர ஞான முழுமுதல்
பாடலிடை வளர் பெரியோனே

நாதமுற வுயர் வான பொழில்புடை
நாறு பணைவளமுடையோனே

நாலு மறைபுகழ் தேடு திருமலை
நாத வரகுண பெருமாளே.

தந்த தான தனந்தன தந்தன
தந்த தான தனந்தன தந்தன
தந்த தான தனந்தன தந்தன தன தான

**453.** கந்தநாத பரம்பரை யம்பிகை
தந்தபால சுதந்தர வன்பர்கள்
கண்டதேவ நிரந்தர செந்திலை யுடையோனே

கண்களார நிறைந்த பெரும் பொருள்
எங்களாதி சிறந்து விளங்கிய
கண்கொளாத நடம்புரி சங்கரர் தருசேயே

மந்தமாருத மும்பல சங்தொடு
கந்திநாகு கடம்பமை குங்குமம்
மஞ்சள் சேணையரம்பை யொடிஞ்சியு நிறைவாகி

வண்டுபாட மலர்ந்த நறுந்துளி
தங்கிவீழம விந்தயிடந் தொறும்
வம்புவீச வளர்ந்த தடம்பொழி லிவையோடு

கந்தநாறி வளந்தரு நந்தன
மன்செய் பூமிவளைந்த தலம்பல
கஞ்சமேவ வுயர்ந்த செழும்பணை யிவைமீது

கம்பலோடமை குங்கும சந்தன
கொங்கைமாதரி னஞ்செறி வுண்டவர்
கம்பொனுறை யிடுந்தர மெங்கினு மிகநாற

சொந்தமாக வனந்தர மும்பெறு
பொங்கர்சூழ பழம்பணை பண்பொழில்
துங்கமேவி வரும்பதி தங்கிய முருகோனே

துன்பமோட நலந்தர வந்தருள்
இன்பஞான புரந்தர சுந்தர
தொண்டர் மேவுதலந்திரு விண்டுறை பெருமாளே.

தந்தந்தானத் தனந்தன தானன
தந்தந்தானத் தனந்தன தானன
தந்தந்தானத் தனந்தன தானன தன தான

454. துன்பம் போகச் சுகந்தரு வாயென
என்றும்பாடித் துடர்ந்துன தாண்மலர்
துன்றுஞ் சேவைத் திறம்பெறு மேழையை யினியேனும்

தொண்டின் சார்பிற் கமைந்தவ போடெனை
யொன்றும் பாகத்தி னைந்து சதாவுனை
சொந்தம் பாவித் தனந்தர மேபுகழ் கவிபாடி

இன்பஞ் சேர்தற் கிணங்கு தயாளமு
மன்புந்தூயற் புதங்களும் வாய்மையு
மென்றுங் கூடிக்கலந் திடவேவுறு நெறிதாராய்

எங்குஞ் சோதித் தடங்கட லாகிய
சம்புந் தேடற் கிரங்கியு மோமுறை
யின்பண் போதித் தருங்குரு வாகிய முருகோனே

பொன்பந் தாகத் திரண்டப யோதர
மன்குன்றுகப் பொருந்திய நாளினில்
பொங்குங் கானப் புனந்தினை காவலி னிடையேகி

புங்கங் கானத் தருங்கனி யாகிய
தங்கஞ் கூடற் கிணங்கவு ளாசைமெய்
பொங்கம் பார்வைக் கிணங்கித ளுமகிழ் எழில்வேளே

என்றுஞ் சேமப் பெருங்கட லீகுவை
சந்தம் பூசித் தழைந்த தயாநிதி
என்பங் காகிப் புரந்து சதாதனம் அருள்வாயே

எங்குந்தேறற் பொழிந்து மகா பொழில்
தங்குந் தானத் திடம்பல வாறெனை
—ன்றுங் காணத் தகுந்திரு மாமலை பெருமாளே.

தனத்த தனதன
தனத்த தனதன
தனத்த தனதன தன தான

**455.** கலக்க மிடையிடை யுருக்க வருவன
கரிக்க வருவன விதனுலே
கடத்தி னரவென விழித்து நலிவதை
கடத்த வொருமுறை யறியாயா
இலக்க சவுமிய முரைத்த குருமுனி
யினுக்கு குருவென வருவோனே
எனக்கு தமிழியல் பருத்தி பொருளினி
திசைத்து வுரைசொலும் அருடாராய்
துலக்க மிகவுறு தனத்தை யிதுதநி
தொகுத்து வுதவிட வரவேணும்
தொடுத்த கடன்மடை விடுத்ததென புகழ்
சொலற்குண ருடையை தருவாயே
நலத்தி னினமிகு பொழிற்கு ளிசைபெறு
நகர்க்கு ளுயரிய முருகோனே
நளிர்த்த பணிவள முடுத்த திருவளர்
நகத்தினி லகிய பெருமாளே.

தந்த தனதன
தந்த தனதன
தந்த தனதன தன தான

**456.** இந்த விதமன மெங்கு பழகினை
யென்ப தறிகில னெழிலான
எங்கள் குருபர சந்த வரையுறை
யின்ப மருவிய முருகோனே
உந்த னிணைமலர் தஞ்ச மெனமன
மொன்றி வருகிற வெளியேனை
உந்து துயரிடை வந்த பிணியிடை
யொன்று மிடியிடை யுழல்வேனை

வந்து பவமற நந்து பிணியற
மங்கு மிடியற மயின்மீது

மஞ்சு நிகரவ மூங்கு மகிழ்வொடு
மண்டி யருள்செய வரவேணும்

கந்த வெனவுனை பண்பி னொடுபுகழ்
கண்டு துதிபண லறியாயா

கந்தி வளமலி சந்து பொதுளிய
கண்கொ டிருமலை பெருமாளே.

தனதன தானத் தான
தனதன தானத் தான
தனதன தானத் தான தன தான

457. கடமுடைவாகிப் போக வருபிணி சாதற்கான
கனமிடி பீழைக்காக வுழல்வேனும்

கழலிணை பாடிப்பாடி புகழ்பல கூறிக்கூறி
கழிகிற நாளைக்கூற பலநூறு

இடரிட ராகச்சேரு துயரிடை மூழ்கிக்கால
மிதுவரை நோதற்கான வெளியேனை

இனிதெழிலார் நற்பாத தெரிசனை சேவைக்கான
வினமருள் சேரப்பாவ மறவோட

திடமிகு தோகைச்சேவல் கொடியோடு மேவற்கான
சிகிமிசையே யிப்போது வரவேணும்

திணைபுன மேவிக்கோடு தனமென வோதற்கான
சிறுகுற மாதைச்சேரு முருகோனே

தடவரை மேரைச்சால சிறு உருளாகக் கோடி
தனிமிளிராடற்கான பெரியோனே

சனதனராதிச் சீர்மை பெறுகிற வாய்மைத்தான
தலதிருநாகத் தேறு பெருமாளே.

தந்த தான தனதன தானன
தந்த தான தனதன தானன
தந்த தான தனதன தானன தன தான

458. கந்தநாதகுகா கிருபாநிதி
செந்திவேல மயூரசிகாமணி
கஞ்சிவாழு மகாபரையாகிய சிவகாமி

கங்கைவாலை மனோன்மணியாமளை
பொங்குகாளியுமாவி மயாசனி
கண்கொளாது சதா நடமாடிய வொருதேவி

தந்தபால சகாரககாரம
தொன்றலோடுவ காரணகாரமெய்
தங்கிவாழு பகாரமதாகிய திவைசேர

தன்பினுக சகாரநகாரமெய்
முன்பிலோமை கடோசியிலே நம
தங்கமூலம தேகடைவாவிட வதனோடு

பந்தமான யகாரமகாமனு
எந்த வேளையுமேமன தோடுரை
பண்பையாள்பவ ரோடுரை யாடிய முருகோனே

பந்தமாய்கையினால் வருபீழைக
ளொன்று போகுமெனுவினிதே பணி
பண்புளே நிறைவாகிய யேழைமுன் வினையாகி

வந்த பாதகமாகிய பாழ்பவ
மஞ்சியோடபிதே ததியாலவை
மங்கிநீறியயோவென வோடிட வருடாராய்

மங்களாகரவா ரிதியாகிய
துங்கவீர தயாள வரோதய
மன்பொனூர் திருவாழ்வுயர் மாமலை பெருமாளே.

தந்த தான தன தன தன
தந்த தான தன தன தன
தந்த தான தன தன தன தன தான

459. கந்த நாத குகா நமோநம
எங்க ளையுகமே நமோ நம
கங்கை வாமிசுதா நமோ நம வெனலோடு

கண்டை நேரு சொலாய் நமோ நம
மந்த்ரவேத நலோய் நமோ நம
கஞ்சபாத வலோய் நமோ நம வெனநாளும்

சிந்தைமேவு பரா நமோ நம
துங்கவீர சுகா நமோ நம
செந்தி லாதிபனே நமோ நம பலகோடி

திண்டதாகை யுளாய் நமோ நம
யன்பர் சேவகனே நமோ நம
தெங்கு மாகமு கேசதா பெரு கியசோலை

நந்து நாடுடையாய் நமோ நம
மண்டுமா மலையாய் நமோ நம
நம்புதே வமுதே நமோ நம மலைவாழ்வே

நஞ்சுபான மதாய் முனே பரு
கஞ்சுமா முகனார் சதா துதி
நண்பு ளானவனே நமோ நம குருநாதா

வந்து பூரணமாய் மனோ நிலை
தந்து ஞான மௌனமி தேயென
மண்டி யோதியி தேயிதே யெனு மொழிதாராய்

மந்தி ராசனமே பகா நிலை
கொண்டவா சகமே மகாதிரு
மன்ற மாமலை மேலுலாவிய பெருமாளே.

தனந்தன தனன
தனந்தன தனன
தனந்தன தனன தன தான

460. இரங்கிலை மனது வழங்கிலை யருளை
யெனுந்திற மெவர்த னிட்டேயான்

இறைஞ்சியு மதனை யுணர்ந்திட புகலல்
இறந்திட வறினு முறையேயோ

தரங்கலை விரைவில் வருந்திர ளிடையில்
தயங்கிய துகளு மௌனலாகி

தளர்ந்திட வுழல மயங்கிட நவிய
சமைந்த மைஇறவை பலவாறுய்

வருந்திய துயர்களொழிந்திட வுனது
வரந்தர மகிழ்வ தெதுநாளோ
மறந்துகை விடுவ தறந்தரு முறையின்
வளங்குறை வடையு மறிவாயே
சிரந்தலை யுயர பதந்தரு பெருமை
சிறந்தவர் புகழு மயில்வீரா
தினஞ்சுனை மலர்க ளணிந்தருள் முருக
செழுந்திரு மலையுள் பெருமாளே.

தனதன தான தான
தனதன தான தான
தனதன தான தான தன தான

461. துயர்கட லாடி யாடி யலையிடை மூழ்கி மூழ்கி
சுக மெனலான சேம மறியாது
துதிபுக ழோடி தோதி வருகிற நாளை யோத
தொகைபல நூற தான திதுநாளும்
மயல்தர லான தான கயல்விழி மாதர் மோகம்
மடிமிடி யூடு வாழ்வு பெறலோடு
வதிபிணி சாட சாட கடமெலி வாகி நோவ
வருபவ மோட வோட மயில்மீது
தயவுற லான தான மனமலி வாக யேறி
தனமிகு சேம மீய வரவேணும்
தனதன தான தான வெனநட மாடு தேவர்
தரசுத ஞான மூல முருகோனே
செயமலி வான நாத குருபர வீர சோதி
தினதம காத யாள குருநாதா
திருமகிழ் வோடு நாளு மிகவளர் நாக மான
திருமலை வாழு மீச பெருமாளே.

தந்த தனதன
தந்த தனதன
தந்த தனதன தன தான

462. சந்தவரை வளர் கந்தகுரு பர
சம்புதொழு மரு ளுடையோனே
தந்திவுரு வமை சந்த கணபதி
தம்பியென வரு மிளையோனே
பந்தபவ மிடை தங்கி யிதுவரை
பம்புதுய ரிடை விளையாடி
பங்கமலி வுறு கின்றதிடை யிடை
பண்பு புகழிடை யிவையோதி
வந்தமனு வினி லொன்று மறிகிலை
வஞ்சவுரு வென வுலகோத
மன்ற வழகிலை யெந்தை யிதுதகி
வந்துனை ருடர வரவேணும்
கந்திமலி வொடு தெங்குமிகு பொழில்
கஞ்ச மருவிய பணைநாடா
கண்டு நிகர்மொழி வண்டு குழல்பொறி
கண்ட திருமலை பெருமாளே.

தந்ததன தான
தந்ததன தான
தந்ததன தான தன தான

463. தொந்தரவி னோடு வந்தபிணி யூடு
துஞ்சுமிடி யூடு விளையாடி
துண்டுபட லான சிந்தை நலிவாகி
துன்ப வுடலாக விடலாமா
வந்தவினை பாவ மொன்றுமிடி போக
வந்தருள் நிதான முடையோனே
மஞ்சுநிக ரான வண்டுகுழல் தேறல்
மன்சொலெனு லான குறமாது

வந்தணையு மார்ப சிந்துநகர் வாச
மங்கைசிவ காமி கவுமாரி

வண்டாள மாலை கொண்டதிரு நாரி
மங்கைகவுமாரி வரதேவி

தந்தகுக நாத சிந்து ரவிலாச
தண்பழனி வாச முடையோனே

சம்புதொழு மாதி பண்பைமலை மீது
தங்கிதமி ழோது பெருமாளே.

தந்த தன தான தான
தந்த தன தான தான
தந்த தன தான தான தன தான

464. மங்கள குணா தியான செந்தி னகர் வாழுமீச
மங்கைசிவ காமி பால னெனவோது

மண்டு கயிலாச நாதர் தொண்டு பணி வோமிலான
மன்பொரு ளுணர்வி லோது முருகோனே

சிங்கள வணுடி ளான பொங்கு கதிர் காம வேல
சிந்தை குடியாக வாழு மொருதேவா

சிந்துகண நாத தேவு பின்புதய மான சோதி
செங்கமல மாது மாறன் மருகோனே

எங்கள ருளான தீபம் வன்குற மினுளி னேயம்
இன்பம் விளைவான சேம மெனவோதும்

எண்குண மகா தயாள பண்தருகி யான போத
எங்குமிளிர் வான ஞான மயமாகி

தங்கிய மயூர தேவ செந்தமிழ கீத பாத
சந்தகவி பாட வாய்மை யருள்வாயே

தண்டலை யுளான வூரில் வந்து திரு சாறுலாவி
தங்குதிரு நாக மேவு பெருமாளே.

தனத்த தன தான தன
தனத்த தன தான தன
தனத்த தன தான தன தன தான

465. நவக்கிரக வாதை யிடை தவக்குறை வினை லடிமை
நடுக்க வரலான பிடி பிணியாலே

நகைக்கவுல கோர் களிடை எடுத்தகட மான திதை
நடத்தவறி யாத வண மிதுநாளும்

அவத்தி னிடையே மனதை புகுத்த கொடி தான பவம்
அழுத்த வருதே யிதனை யெவர்பாலில்

அடுத்து சரணு னமலர் துதித்து தமிழால் புகல
அதற்கு மனமே வவிலை யதனாலே

கவர்த்தலை யிலாத மன முடுத்த செயலா லுனது
கனிச்சரண பாத மலர் துணையாக

கடைப்பிடிய தான பிடி பிடித்து கனிவான தமிழ்
கனத்தபு கழா லுனது துதிபாடி

தவச் செயலிலே மனது பதித்த வெளியே னினிமை
தளிர்க்க தனமே தருவ தெதுநாளோ

தனத்தின்மிகு வோர்கள்குடி பெருத்தபொழி லூருடைய
தலத்தில் திருவாமு மலை பெருமாளே.

தந்த தன தான தானத் தான
தந்த தன தான தானத் தான
தந்த தன தான தானத் தான தன தான

466. சந்ததமிழ் மாலை பாடப்பாட
பந்தவினை யான தோடிப்போக
சந்தத மனோ தயாளத்தோடு மயில்மீது

தங்கியெழில் சேர ஞானத்தோடு
வந்துவினை யாடி யேழைக்கான
சந்ததன மேவ யீயிப்போது முருகோனே

சிந்துநகர் மேவு மேன்மைக்கார
குன்றினிடை யானு தானக்கார
செந்தமிழி லான பாடற்கார வயலூரா

தெங்குபொழி லூரி லுண்மைக்கார
கந்திநிறை வான சோலைக்கார
சிந்தைகுடி யான மானக்கார வரதீபா

அந்தணர்க ளோது வேதக்கார
இன்பமிக லான சேமக்கார
அம்பொ னரசான சீர்மைக்கார யெழில்வேளே

அன்புயர லான பான்மைக்கார
செங்கதிரை நேரு பார்வைக்கார
அந்த ணருளான வாய்மைக்கார னெனவோது

கந்தமலி வான சோலைக்கார
பொங்கு திரவீர வேலைக்கார
கம்ப நிகரான வீரக்கார செகநாதா

கண்ட குறமாது மோகக்கார
தந்தி யெழில்மாது பாகக்கார
கஞ்ச மகள்மேவு நாகக்கார பெருமாளே.

தனத்தனத் தனத்த தான
தனத்தனத் தனத்த தான
தனத்தனத் தனத்த தான தன தான

467. தொடுத்துனைத் துதித்து பாவ
விடத்தினைக் கெடுத்து யோக
சுகத்தினைக் கொடுக்க வோது தமிழ்பாட

சுதந்திரத் தனத்தை நீயும்
அளித்தெனைப் புரக்க நோவு
துடைத்திடப் படைத் திடாத முறையாதோ

அடுத்தவர்க் கிடுக்க ணூறி
வருத்துதற் கிணக்க மாகும்
அதைச்சொலச் சிரிக்கு லோக மிதைநீயே

அருட்டிறத் தெடுத்து நீதி
புரப்பவர்க் கெடுத்து வோதில்
அதற்குனக் கிணக்க மாக வுரையாடார்

கொடுத்துனைப் புகழ்ச்சி யோடு
பணித்தனப் பெருக்கு ளாரை
குறித்தகத் திருத்தி யாள்வை யெளியேனை

குமைத்தகட் டினுக்கு நாளு
நிறைத்திடற் கனத்தைத நாடி
குறுத்தொழிற் குழைக் கலான மிடியாளன்

எடுத்தெனைக் குணத்தி னோடு
நலத்தினிற் பதிக்க நீயும்
எழிற் புகழ்ப் பெருக்குளாவை முருகோனே

இசைப்பொழிற் பெருக்கு மேவு
நகர்க்குடக் குயர்த்த நாகம்
இசைக்குவட் டிருக்கு நாத பெருமாளே.

தந்த தனதன
தந்த தனதன
தந்த தனதன தன தான

468. தஞ்ச மெனவுனை நம்பு மடியவர்
தங்க ளகமுறை முருகோனே

சம்பு குருமுனி பண்பி னொடுதுதி
தங்கு குருபர வாதீபா

அஞ்ச லெனமொழி தந்து யிதுகதி
அன்பு நிறைவருள் தருவாயே

அந்த ணெழிலமை சந்த மருவிய
அந்த மமைபுய குருநாதா

செஞ்சொன் மொழிவளி வந்த ணையமகிழ்
சிந்தை பெருகிய மணவாளா

திண்டு முரடசு ரன்று பிளவெழ
சென்று புகவயில் விடுவோனே

கஞ்சி தவமணி தந்த குருபர
கம்ப னருளிய சுதநாதா

கண்டு நிகர்மொழி வுண்டு செறிகுழல்
கண்கொ டிருமலை பெருமாளே.

தந்த தன தான தான
தந்த தன தான தான
தந்த தன தான தான தன தான

**469.** எந்தவிதமாக வேனு நொந்து கவிபாடினாலும்
என்றுமுளா தானபாவ வலையூடே

இஞ்சிவிடலான நோவி னஞ்சுபட லானதாகி
இன்பமறியாத பாவி யெனவானேன்

பந்தவினையான மூடை வந்துதடுமாறிவீழ
பம்பிவருதேயிதோடு மனமாழ்கி

பஞ்சுபடலானதாகி நெஞ்சுளைவிலேவுளாகி
பங்கமுறுவாழ் வினாரு முழல்வேனை

கந்தவுயர்வான தேவ சுந்தரமயூரவீர
கங்கை தருபாலநேய முருகோனே

கண்டறியொ ணாதநாத விந்தைபிரகாச தீப
கண்டிகதிர் காமவாச முறுவாழ்வே

சிந்துநகர்வாழ்விவேக மண்டலதயாளசேம
சிந்தைமகிழ் வாகிவாழ வருடாராய்

தெங்குபல சோலைமேவு கின்றபொழிலூரில் வாழு
தென்புனித மானராஜ பெருமானே.

தான தன தான தான
தான தன தான் தான
தான தன தான தான தன தான

**470.** பூவவினையூடுளாகூ நோகுமிடி யாளனாகி
பாரபிணி தேகமூடு பலவாகி

பாதகம நீதியோடு கூடுதொழிலாளனாகி
பாவைமடமாதர் நேரு மயலாகி

காவல்புரியாத தான சாலதிமி லேறுமாகி
கானமுறு மானுமாகி பலநாளாய்

காணுமன மேகிலாது வோடிபல்வாறுளாகி
காலினிலையான தான செய்லோடே

சாவவிதி யோதயாள யாதனைபொ றுதவேழை
தாமத மிலாது சேவை தரவேணும்

தாரகமயூரவீர சேவக குமாரநாத
சானகி மணாளராமன் மருகோனே

பூவல மதானதாக யாவுநிறை வானதான
பூரணமகாதியாக முருகோனே

பூமலிய சோகுநாகு மாபலவு சூழுசோலை
போர்வை திருநாகமேவு பெருமாளே.

தந்தன தனான தான
தந்தன தனான தான
தந்தன தனான தான தன தான

471. பண்ணை நகாதிமூல மென்ற குருநாததேவ
பண்பமை மயூர மேறு முருகோனே

பண்டமிழ் விநோத சோம சுந்தர தியாக ராஜ
பம்பியபுராரி பால வரதீபா

திண்பமை விலாசசூரர் கண்டபடியாக மாள
சிந்து நகர்மீதுலாவு வடிவேலா

தென்புற மதானகால னன்றுவரு நாளிலேர்பு
சிந்தியவர் சோரவேலை விடுவாயே

எண்குண தயாளநீப மன்குக சுகாதி தீப
என்குரு வராகிதேவி மகமாயி

இந்திரை குமாரிவாலை சுந்தரி பவானிநாரி
இங்கிதகுணாலியான யெமதாயி

செண்பகவடாவிவாழு கின்றதிரி சூலிவாமி
சிங்கமிசை யேறுதேவி யருள்பாலா

தெங்கரசு மாபலாசு கொங்கவிர்ம ராவமேவு
செந்திரு விணை காத பெருமாளே.

தந்த தன தான தான
தந்த தன தான தான
தந்த தன தான தான தன தான

472. எந்தையிது நாளு மோதி யொன்று மறியாத பாவி
இம்பர் பல பேசலான முறையாக
இஞ்சு பிணியான கேடு வந்த மிடியால நேகம்
என்ற பெருவாதை யூடு தடுமாறி
தொந்த ரவினோடு கூடி வண்டு குழன் மாதரோடு
துன்று முறவாடி நாடி மயன்மூழ்கி
தொண்டு புரியாத தான மிண்ட ரொடுகூடி யாடி
துங்கமிலை தான நீதி யுழல்வேனை
கந்தவிது நாளி லேனும் வந்துனது பாத சேவை
கண்டுமயல் போக ஞானம் அருள்வாயே
கம்பரெழி லான நாதர் தந்த கிருபாத யாள
கந்தமலி வான வாகை யணிவோனே
தந்த தன தான தான வென்று நடமாடு பாத
சங்கரர் குமார பால முருகோனே
சம்புதெனை மாபலாசு பொங்கர் மலிவாக சூழு
தண்கொடிரு நாகமேவு பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

473. மிடியான விந்த லைந்து வரலா லெழுந்த சிந்தை
விதியோ யிதென்று நைந்து பலகாலும்
மெலிவாகி நின்றருந்து பவமூடை கொண்டுழன்று
விளையாடு பந்தமுண்ட முழுவீணன்
தடியாக வந்தமைந்து படியாத வஞ்சநெஞ்ச
தளர்வூடு நின்று நின்று தடுமாறி
சடமீது ருண்டி லங்கு மடமாத ரின்ப கொங்கை
தடமீ துறங்கு கின்ற நெறியேனீள்

472. 3 வது வரி இஞ்சு — எட்டி, பாஷாணம்.

முடிவே நலஞ் சிறந்த தெனவே பிறங்கு சிந்தை
முதலா யமைந்து நின்ற பிணிநாதர்
முடியா ரவந்த ணைந்த துயரு டிருந் திருந்து
முயல்வேனை யின்று வந்தன் மயில்மீது
நடி நாடகந் ததும்ப வரலோடு மஞ்ச லென்று
நலமே சொரிந்து பொங்கும் அருடாராய்
நவதானி யஞ் சிறந்த பொழிலூ ரிடஞ் சிறந்த
நளிர்மேவு கின்ற கந்த பெருமாளே.

தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த தன தான

**474.** நடைப் பரிகார மின்றி மயக்கிய ஞேவி விஞ்சி
நலத்தனமு ளோர் கடங்க ளிடமேவி
நவிற்ற யிலாதி கொண்டு வயித் தியஞு யமைந்து
நடைப் பிணியாக வந்த பலநோவின்
படைக் கலமா யெழுந்து குகப்பெய ரேபுனைந்து
படைத்திட லானவுந்தன் அருளாலே
பகர்த்த யிலாதி தந்து சுகத்தினையே பொருந்த
பதிற்ற ரலாக வந்த பொருளாலே
அடக்கிய யேழை யென்று குமைத்திட லான வுந்தி
அனத் தினையே யருந்தி யிதுநாளும்
அகற்றிய தோதை நெஞ்சில் நினைத் திடவே மயங்கும்
அகற்புணி லூசி குந்து முறையாகும்
படைப்பிடை யேழை யிந்த விதத் துணவே யருந்தி
பதத்துணை யேதுமின்றி யுழல்வேனே
பணைத்துணை யோடுயிர்ந்த சுகத்துணையே வழங்கு
பதித்திரு நாகமூர்ந்த பெருமாளே.

தான தன தன
தான தன தன
தான தன தன  தன தான

**475.** தேகமிடை வரு வாதை பலபல
  திறவொருமொழி  புகலாயா

தீதினிடைகுடி யாக கொளுமிடி
  தேவியெனதிட  மிடலான

பாகமெதுவென வோருமுணர்வில
  பாலனெனவெனை  யறியாயா

பாகினினிமொழி மாதுமயிமகள்
  பாரதன முறு  புயவேளே

காகமுறுகரி நாகமரிபுகர்
  கானரவிமதி  மகளோடு

காணுமெழில்குச ஞதியெனவுனை
  கானமறைதுதி  நிதமோதும்

நாகமுறைபவ சேமமுடைய
  நாதர் பரவிய  முருகோனே

நாளுமுனதரு ளேழை பெறவருள்
  நாகதிருமலை  பெருமாளே.

தனத்த தன தான தன
தனத்த தன தான தன
தனத்த தன தான தன  தன தான

**476.** பொறுக்கமுடியாதமிடி நெருக்குகிறதே யிதனை
  புவிக்குளுரை யாடவெகு  இழிவாகும்

புலத்திலெளியேனையொரு நடுத்தரமதானமா
  புதித்த நரிஞக விட  விதனோடு

குறுக்குழைவு தேகமெலி வுடுத்தபலவாதையிடை
  கொடுத்து மிடியானவியு  மெளியேனை

குணத்திலக நாதசிவ பரற்கு முதலானமறை
  குறித்த பொருளை புகலு  முருகோனே

சறுக்கு சமணதியரை புகுத்து கழுவுடமைய
சமைத்த செயவீர மொழி யுடையோனே

தனத்த தன தான வென நடித்த நடராஜர் சுத
தனிர்ச்சிகியி லேறிவரு மொருதேவா

முறுக்கு திறலீசை செறி கறுக்கொள சுராதியரை
முடுக்கியுயிர் போகவயில் விடுவோனே

மூதற்ற ஏமதான பொருள் அளித்து தவியேயுரிவை
மொழிக்கொள் திருமாமலையுள் பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

**477.** படைப்பிடை படைத்து யிடர்ப்பட விதித்த
படைப்பினை யெவர்க்கு மொழிவேனுன்

பதித்தனை மிடிக்கு ளுறுத்திய பிணிக்குள்
பகைத்திர வடுக்கு ளுழல்வேனே

கொடைச்செயல் டடுத்து விரித்துரை பதித்து
கொடிக்கடை விளக்கு மணிவாயில்

குகச்சர வணத்தி லுதித்தவ மறைக்குள்
குளித்தவ தமிழ்க்கு முதல்வோனே

மடைக்கடல் விடுத்த பெருக்கென வருட்பெய்
வரத்தினின் மிகுத்த முருகோனே

மகத்துவ தவத்தி லுதித்தவர் களுக்கு
மலர்ப்பத மளிக்க வருவோனே

அடைத்துனி யகற்றி தனத்தினை யளித்து
அருட்பத முரித்தொ டருள்வாயே

அணிப்பொழி லுடுத்த நகர்க்குட முதித்த
அலர்த்திரு மலைக்குள் பெருமாளே.

தனத்தனந் தான தான
தனத்தனந் தான தான
தனத்தனந் தான தான தன தான

**478.** சிவப்பரஞ் சோதி யாரின் நுதற்கணின் ருறதாகி
சிறப்பெழுந் தாடலான பொறியாகி

1 வது வரி சறக்கு — தவறு.

திகைக் கடங்காத தான வனச் சரஞ்சேர தேயு
திகைத்து கொண்டோடி சார விடலாலே

தவத்தடங் காத தூய்மை கடத்தலங் காரமாக
சனித் தெழுந்தாறு சேய்க ளெனலாக

தளிர்த்தவஞ் சேரு மாத ரெடுத்து வந்தாறு பேர்கள்
தனத்தெழும் பாலை நாளு முணவீய

சிவக் கொழுந்தாகி வாழ பரைப்பரன் றேடலாக
திருக்கறுந் தாறுபேரு முடனாகி

செறித்தடர்ந் தீய தேவி திருக்கரம் போதுளாக
திணிக்கடஞ் சேர வாறு முகமாகி

நவத்தலங் காரரூப முதித்திடுந் தானமாகி
நகைக்கொழுந் தாகமேவு முருகோனே

நலத்தமைந் தாதிதேவ கனத்தனம் பாதமீவை
நகைப்பொனின் தேவிநாக பெருமாளே.

தன தன தந்த தான
தன தன தந்த தான
தன தன தந்த தான தன தான

479. துணையுனையன்றி வேறு துணையிலை யென்பதான
துதிபுகழென்ற பாட விடையேயான்

சொலுவதிலின்று காறு மருளிலை யன்பர் ஞான
சுகநிதி யென்ற தேவ முருகோனே

கணைசெறி தெங்கு நாடு மடலவிழ் கந்தி நாடு
கனமழை மிஞ்சு நாடு பணை நாடு

கதிர் விளைகின்ற நாடு முனிவரர் தங்கு நாடு
கனிபொழில் கொண்ட நாடு வள நாடு

திணைமயல் கொண்ட நாடு மனமகிழ்கின்ற நாடு
திருமலிகின்ற நாடு செயநாடு

சிவபரனென்று நாடு அரிவளர்கின்ற நாடு
திரிபுரைதங்கு நாடு தவநாடு

பணைவளை கொண்ட நாடு நவமணி தந்த நாடு
பருவரல் கொன்ற நாடு பரநாடு

பழகிய தென்றலாடு கதிதருகின்ற நாடு
பதி திருகுன்றை நாடு பெருமாளே.

தந்தன தன தன
தந்தன தன தன
தந்தன தன தன தன தான

480. செண்பகமலி பொழில் தங்கிய வளநகர்
செந்திருவளர் நகர் கணநாதன்
சிந்தை யொடுறை நகர் மங்கள பயிரவி
சென்றமைகிற நகர் மணமேவு
பண்பமைகிற நகர் சுந்தர மிகுநகர்
பங்கயமலி நக ரெழிலான
பண்டமிழுறை நகர் கண்டவர் மகிழ்நகர்
பண்பொழி னகரென வுலகோது
நண்பமைகிற நகர் தங்கிய வாரிதி
நப்பிய குருபர முருகோனே
நன்கருள் புரியென தொண்டணி புகழ்சொலி
நந்தின னிதுவரை சிறிதேனும்
மண்டல மருளிலை பொன் பொருளருளிலை
மன்சுக மருளிலை இனியேனும்
வந்திவை யுதவிசெய் நன்புகழ் பாதமருள்
மன் திருமலைவளர் பெருமாளே.

தன தன தன தன
தன தன தன தன
தன தன தன தன தன தான

481. கயல்விழி வனிதைய ரிடமயல் கொளவரு
களிமன மொழிவது மெதுநாளோ
கருதிய வுனதிரு பதமல ரிணைதரு
கதிபெற வருவது மெதுநாளோ
செயமுறு குருபர சரவண பவனித
தெரிசனை தருவது மெதுநாளோ
தினகர னிகரென மயின்மிசை வருகிற
செயல்புகழ் புகழ்வது மெதுநாளோ

நயமுன தடியவர் சிறுகுறு பணிவிடை
நலமுற புரிவது மெதுநாளோ

நளிர்தமி ழியல்கலை மயலற வருண்மொழி
நவிலுயர்த கியது மெதுநாளோ

பயமுற வருமிடி பிணிபல பகையற
பலபவி சுதவுத லெதுநாளோ

பழமொடு பொதுளிய பொழில்வள மிகவுள
பதிதிரு மலைவளர் பெருமாளே.

தனந்த தனந்த தனந்த தனந்த
தனந்த தனந்த தனந்த தனந்த
தனந்த தனந்த தனந்த தனந்த தன தான

482. பிறந்து தவழ்ந்து குழைந்து எழுந்து
நிமிர்ந்து ததும்ப நடந்து குனிந்து
பிறங்கு குறங்கு நிமிர்ந்து குலுங்கு நடைகூடி

பிசைந்த சனங்க ளருந்தி வளர்ந்து
தசைந்து வனங்க ளிணங்க வுயர்ந்து
பிணைந்த தனங்க ளெருங்கி யுருண்ட வெழின்மாதர்

செறிந்த விடங்க ளலைந்து மருங்கு
பதிந்து புகழ்ந்து கனிந்து செழுஞ்சொல்
திரங்க ளறிந்து மணந்து கலந்து மவரோடு

சிதைந்த தினங்கள் உலைந்த கடங்கண்
மயங்க வயர்ந்து தெளிந்து நினைந்து
திரும்ப பிணங்கி யிணங்க வயங்கொள் மயலாலே

மறிந்து மறிந்து பிறந்து பிறந்து
உழன்று உழன்று இறந்து இறந்து
வணங்கு பதங்க ளறிந்து நலஞ்செய் வழிகூடல்

மறந்து மறந்து வினைந்து வினைந்து
அருந்து பவங்க் ளூடன்று துடர்ந்து
மறஞ்செய் வரம்பு ளடங்கு தரங்க மிடைமேவா

தறங்க ணிறைந்து செழுந்த ணலர்ந்து
வுயர்ந்த நறும்பொ னிறங்க ளணிந்து
அரும்பு னிதங்கள் வழங்கு பதங்க டருவாயே

அரும்பு பவங்க ளொதுங்கு தவஞ்செ
யிறும்பு பொதும்பர் வளைந்த நகங்கள்
அணைந்த ருள்பண்ணை வளர்ந்து சிறந்த பெருமாளே.

தனத்தன தனந்தந்
தனத்தன தனந்தந்
தனத்தன தனந்தந் தன தான

483. பகைத்தவ ரொடுங்கும் அயிற்கர விலங்கு
பருப்பத மெழுந்த முருகோனே
பசித்தவ ரருந்த வனத்தினை வழங்கு
பரைக்கினி தமைந்த சுதனேநீள்
குகைப்புற மொதுங்கு மகத்துவ மிகுந்த
குணத்தொடு தவஞ்செய் பவர்வாழும்
குறிப்பினை யுணர்ந்து புரப்பன புரந்து
குலக்கிளை பிறங்க வருவோனே
நகைத்தெனை வருந்த வுரைத்தவர் நொறுங்க
நசிக்கிய சிறந்த செகவீரா
நதித்துறை தடங்கள் நிறைத்தலை தாங்க
நளிர்த்தொனி வழங்கும் மலைநாடா
சிகைத்தலை கறங்க புடைத்தயன் வணங்க
திருத்தினி தறைந்த குருநாதா
திருப்பொழி விலங்கு நகர்ப்பதி புரந்து
திருக்குவ டுறைந்த பெருமாளே.

தனந்த தந்தன தனதன தனதன
தனந்த தந்தன தனதன தனதன
தனந்த தந்தன தனதன தனதன தன தான

484. பழங்கனிந் தொழுகிய நறவினை நிகர்
உளங்கனிந் தொழுகிய வடியவர் புரி
பலந்தரும் பொழினக ருறைகிற பர முருகோனே
பவந்தருந் தொழில்புரி கொடியவர் தரு
வனந்தரும் பவபிறவி யினுலைதர
பதந்தருந் திருவற முறைதழுவிய பெரியோராகி

வழங்கு செந்தமிழ் வடமொழி பலமொழி
முழங்குகின்ற துவதன் வண மினிதுற
வரம்பு கொண்டற நெறிமுறை யொழுகுறு மனமோடு

மகிழ்ந்த னந்தரு கிறகுண முடையவ
ரிடம்பு குந்தருள் பரசிவ குருபர
வளர்ந்த சந்தன மலை தழுவியதனி யுடையோனே

கிழங்கு ணுந்தவ முனிவர் பரவிய
முகுந்தனின் சுதனரு மறை முறையினை
கிளைந்து வன்றிற விலையென சிறைபட யிடுவோனே

கிளர்ந்த பொன்குவ டினைதடி கொடுமுடி
குலுங்கவன் புடைத ருதிற பிரபல
கிளம்புமுன்பவ மறமயின் மிசையெழு மொருவீரா

வழங்கு கொண்டலை நிகரியல் புள கொடை
பயின்ற செங்கர வுனதெழில் பதமலர்
வணங்குகின்ற வனெனவுன தருடர வரவேணும்

மலிந்திடும் பொழிலிடை பெருகிய நகர்
குடங்கணின் றிருமலை சினகர மதில்
வரந்தருங் குண மிலகிய வடியவர் பெருமாளே.

தனந்த தந்தன தனதன தனதன
தனந்த தந்தன தனதன தனதன
தனந்த தந்தன தனதன தனதன தன தான

485. விரிந்த பங்கய மலரென மெதுவுள
சதங்கை கொஞ்சிய பதமல ரிணையினை
மிளிர்ந்த சிந்தையி லுருகிய மனமொடு பலநாளும்

விளம்புசெந் தமிழினில் புகழ் பலசொலி
விணங்கு மன்பர்களு ளமிசை வதிபவ
விரும்பு மந்தணர் முனிவரர் பரவிய முருகோனே

திரிந்திடுங் கயனிகரிய கணுமற
லுறைந்திடுங் கனவன நடை பயிலிய
சிவந் திடும்பத குறமினை மருவிய மணவாளா

தினந்தினந் துதிபணு மெனதிடர் பகை
பொரிந் திடும்படி பணுமறு முககுக
சிறந்திடும் பொழினக ருறை குருபர சேகவீரா

வரிந்திடும் புழுவென பெருமுலையிடை
பிறந்திடும் படி யிதுவரை யடிமையை
மறிந்திடுங் கடலையென மருவிட விடலாமா

மணந்த சந்தன பரிமள புழுகொடு
கலந்த குங்கும நிறமுறு நறுவிரை
வரைந்த பைம்புய நிலவிய வடியவ ருடையோனே

புரிந்திடும் பணிவிடை யினிமையெ னியனை
வருந்தவுஞ் சுறவிழி மொழி பலவழி
பொருந்தவுஞ் சொலியி கழ்பவர் குலமற வருவோனே

புனைந்த பண்பொழி லெழினகர் குடவயி
னிலங்கு பங்கய மலருறை திருமகள்
பொருந்து குன்றுறை சரவண பவநல பெருமாளே.

தனதன தனந்தன
தனதன தனந்தன
தனதன தனந்தன தன தான

486. சிறியவரி கழ்ந்தெனை வசைமொழி புகன்றிடு
திடமற வயின்றிடு மயில்வீரா

தினமுனை வணங்கிய எனதக முணர்ந்தனை
சிவசுத முகுந்தனின் மருகோனே

அறிபவ ரறிந்துள மனதினை யறிந்தனை
அறநெறி பிறங்கிய பெரியோர்கள்

அமைவழி நடந்துன தெழில்மல ரிறைஞ்சிடும்
அடியனை சினந்துரை மொழியாலே

வறியவ னெனுந்தர முடையவ னெனுஞ்சொலை
மறமொடு மறைந்திடு கொடியோர்கள்

மரபற வெழுந்தயில் விடுபர சுதந்தர
மகதவ மிகுந்தவ ருடையோனே

கறிகொடி மிகுந்துள பலவிடை படர்ந்தெழு
கனபொழி லிலங்கிய வளநாடா

கலைமதி தவழுந் தெழில் இறைதிரு நகர்தனில்
கதிதர விளங்கிய பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

487. கதியேது மின்றி வுனைநாடி நின்ற
கடையேன் வருந்த விடலாமா
கருணா கரங்கள் தரநீ சுரந்து
கடைதேற மன்பு தருவாயே
மதியா தமைந்த சிறியோர் களஞ்ச
வரவேலை கொண்டு அவர்வாழ்வை
வரைபோல் பிளந்து விடவேணு மென்ற
வரமே வழங்க வரவேணும்
திதியே புரிந்த வொருமா லுகந்த
திருவேறு பண்பை நகர்வாழ்வே
செகபால கந்த குருநாத செந்தில்
தினமேவி நின்ற முருகோனே
பதிதோறும் நின்று விதியே புரந்த
பகவா குறிஞ்சி யுடையோனே
பழமாரு பொங்கர் திருமா நகம்கொள்
பலமேறு நின்ற பெருமாளே.

தந்தந்த தந்த
தந்தந்த தந்த
தந்தந்த தந்த தன தான

488. நஞ்சுண்ட கெண்டை யென்றென்ற நின்று
நைந்தின்ப மின்றி யுழல்வேனை
நம் பொன்று மன்பர் தம் பங்கி னின்று
நன் கென்ற வின்பம் அருள்வோனே
வெஞ் சொன்றி தின்று நன்றண்ட வின்றி
மிஞ்சண் டுவன்சொல் பலபேசி
மிண்டண்டு நின்ற வம்பென் றநுஞ்ச
மென்ற ண்டரன்னை யருள்வாயே

மஞ்சஞ்ச லென்று தஞ்சன் புதந்து
மன்றந்த ரங்க மறைகூற

வந்தென்று வன்சொ லுண்டுண் டிலங்க
மன்பங்க யங்க டருவாயோ

கஞ்சங்க டங்கு குண்டங்கள் கொண்ட
கண்டங்கி லஞ்சி வளநாடா

கந்தொன்று தெங்கு நின்றங்கு யர்ந்த
கம்பண்பை தங்கு பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

**489.** மருவார் களஞ்ச வஞ்ச வயிலேவு கின்ற செங்கை
மறவீர துங்க முண்ட முருகோனே

வரதாசி றந்த கந்த பரனே விளங்கு கின்ற
மணியே முகுந்து தங்கை மகமாயி

தருவாக நின்றிலங்கி யனமா தரங் கடந்து
சகமேழையும் புரந்த வொருதேவி

தனையாக வந்த செந்தின் முதல்வா குறிஞ்சி தங்கு
தலைவா வளஞ் சிறந்த வயலூரா

குருவாக வந்து வந்து உபதேச மந்திரங்கள்
குணமேவு கின்ற பண்பொ டருள்வாயே

குலகாலனைந் திடைந்து அறவேதை தந்த மைந்த
குமரா வறம் பிறங்கு செகவீரா

திருவேறி நின்ற பொங்க ரிடைமாத வந்ததும்பு
செயமா மகம் புரந்த பெரியோர்கள்

தினமேவு கின்ற பண்பை மலைமே லுயர்ந்துநின்ற
செகநாத னென்ற துங்க பெருமாளே.

தனதாத்த தந்த தந்த
தனதாத்த தந்த தந்த
தனதாத்த தந்த தந்த தன தான

490. எனைவாட்டுகின்ற பங்க பவ வாட்கை யஞ்ச வஞ்ச
இனிதேற்ற மிஞ்ச மிஞ்ச வருள்வாயே
எனைநேர்த்திகொண்டவன்பர் பிணிபோட்டமென்றெதுங்க
எழிலூட்டுகின்ற துங்க முடையோனே
பனைபோற்றுலங்கு செங்கை யினையேற்ற தந்திபின்னை
பனையேற்ற செங்கை மைந்த னெனவோது
பசியாற்றுகின்ற பண்பி னுனையேற்றுகின்ற வன்பர்
பதமேற்கு மன்பு தந்த செகநாதா
வினையேற்றமுஞ் செறிந்த பவமார்க்கமுந் ததும்பு
விலையேற்றமும் புரிந்த மடமானர்
விதியேற்ற முங்கடந்து அவர்மாட்ட டைந்தடைந்து
மிகையேற்க நின்றிணங்கு புவிமீதில்
உனைநாட்டுகின்ற சிந்தை நிலைநாட்டுகின்ற பண்பி
னுலைவாட்ட மின்றிலங்கும் அருடாராய்
உயர் வூட்டுகின்ற பண்பை நகர் மேற்கினின்ற குன்றில்
உக ரேற்றமுஞ்சிறந்த பெருமாளே.

தனதனத் தனந்த
தனதனத் தனந்த
தனதனத் தனந்த தன தான

491. முனதினிற் களங்க மிலையெனத் தெரிந்த
மகதவத் துறைந்த முருகோனே
மறை முடிக்கணிந்த பதசிவக் கொழுந்து
மருவகத் திலங்கு மொருதேவா
எனதிடர்க் கிரங்கி யொருமனத் தெழுந்து
யினிமையிற் பிறங்க வருவாயே
இமயவெற் புயர்ந்த மலைமகட் கிணங்க
இசை நடத்தமைந்த சிவநாதா

கனமதிற் சிறந்த பிரணவத் தடங்கு
கனபொருட் டரங்க மருள்வோனே

கடலுடைத் தெழுந்த படியெனப் பகர்ந்த
கவிவலர்க் கிரங்கி இனிதான

அனமருட் பொழிந்த பதமலர்ப் பணிந்து
அழகுறப் பொருந்தும் வணமாக

அருள்தழைத் துயர்ந்த திருமலைக்குகந்த
அறுமுகத் தெழுந்த பெருமாளே.

தனதனத் தனதன
தனதனத் தனதன
தனதனத் தனதன தன தான

**492.** உனதருட் பணிவிடை செயுமுறைக் கிடர்தர
வுறுநரைப் பருகிய செகவீரா

ஒருமனத் துடனினை யகமுறத் தழுவிய
வுரிமையுட் படுமடி யவர்நோவ

சினமுறப் படுமொழி பகர்தரத் துடையவர்
சிதைபடச் செயுமயி லுடையோனே

சிறுதரத் துடனெனை யவமதிப் பவருடல்
சிதலரித் திடவயில் விடவேணும்

கனகனைத் துகள்பட நுதியுகிற் கொடுகிழி
கருமுகிற் கிளையவ ளபிராமி

கடமிகுத் திடுமகி டனைவதைத் திடுபரை
கயிலையிற் குடிகொளு மறவீரி

வனசநற் பதியுறை கமலையற் பொடுதுதி
மதிடகுத் திடுநுத லெம்தாயி

வரசுதத் திருமலை தனியினிற் செயமுறும்
மயில்புறத் திலகிய பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

493. ஏனைச்சிறு தாத்த னெனச்சொலி பலத்த
இடர்த்தர நினைத்த கொடியோரை
இடித்தற நொறுக்கி குலத்தையு மழித்து
இடர்ப்பனை நிவர்த்தி பணவேணும்
கனைத்தசு ரூரத்தை யயிற்கொடு பகுத்து
களத்திடை விடுத்த செகவீரா
கமழ்ப்புய குறத்தி தினைப்புன வனத்தில்
கதிர்ப்பா ணிடத்தி லுறமேவி
மூனைப்புற மவட்கு வளைத்துடர் பருத்தி
முறைப்படி யிருத்தி யவளோடு
முடிப்பன முடித்து கரிப்பய முறுத்தி
முதற்கடி படைத்த மணவாளா
தினைத்துணை நலத்தை மறப்பவர் களுக்கு
திரித்தயில் விடுத்த பொழிலூரா
செழித்தெழு பொழிற்செய் வளைத்திரு நகத்தை
திருத்தனி யமைத்த பெருமாளே.

தான தன தன
தான தன தன
தான தன தன தன தான

494. நீகை விடி லெனையாவ ரருணல
நேய மருள் பவ ரினிதான
நீலி பயிரவி காளி பகவதி
நேமி யருளனை மகமாயி
வாகை தருசிவ காமி யுமையவள்
வாமி திரிபுரை யெமதாயி
வாலை யடியவர் பாலிலருள் மழை
மாரி பொழிகிற வொருதேவி

பாகை நிகர் மொழி யோகை யுடையவள்
பால குருபர செகநாதா

பால னுனதிரு பாத மலரிணை
பாடு மருடர வரவேணும்

மாய்கை பலபவ மோட பொழினகர்
வாழ்வு பெறவளர் முருகோனே

வாச மலர் செறிசோலை மருவிய
வாகு திருமலை பெருமாளே.

தனத்த தன தான
தனத்த தன தான
தனத்த தன தான தன தான

195. மனச் சலன மான வினைத் துயரினூடு
வருத்த வித மேதும் அறியேனை

வழக்கிடவு மோடு யெனக்குரிமை யாகு
மதித்தறி நிதான முடையோனே

தினச்சலன மேவி யிருக்கு மெளியேனை
செகத்தல விரோத முடையோர்கள்

சிரித்திழி வினோடு உரைத்த மொழிபேசு
திறத்தை யுளம் நாடி மனமாழ்கி

கனச்சலனமேவு கடத்தைவிடவேறு
கருத்து வருநோவி னுழல்வேனோ

கமழ்ப்புய வுதார குணத்துடைய தேவ
கரிக்கு மணவாள முருகோனே

அனத்தயனுலாச விதத்தவனையோதி
அருத்தமுறை கூறி அருளேற

அமைத்த குருநாத சுகத்த திருநாக
வருட்குமர ஞான பெருமாளே

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**496.** எனைநோவ வன்செ வினை யோதுகின்ற
எளிதான பந்த உலகூடே

இமையோர் களஞ்சு பவ வாழ்வு கொண்டு
இதுநாளுமின்ப மயமான

பொனை நேருகின்ற பதமே வணங்கு
புகழ் சாதனங்கள் அடையாமல்

புரிபாவ பந்த மயலூ டிடைந்து
புகல்கோப வஞ்ச மயமாகி

மனைமாடதென்ற படியாக வொன்றி
வழியேது மின்றி யழிவேனோ

மதிபாதி கொண்ட நுதல்மாது தந்து
மகதேவர் கொஞ்சு மொருவாழ்வே

எனையாள வந்து மனதூ டிருந்து
இசையால் நிறைந்த புகழ்பாடு

இயல்பே சுரந்து அருள்வாய் நலஞ்செய்
எழிலுக மர்ந்த பெருமாளே.

தன தான தான
தன தான தான
தன தயன தான தன தான

**497.** மத மான பேயி னிடமான கூடு
வருகாத லோடு விளையாடி

மருவார்க ளோவி னிடைமூழ்கி மூழ்கி
வருமேழை யாகி யிதுநாளும்

சதமான தூய குருநாத நேய
சரணை பாத மலர்தேடி

தனியே தியான முறையே யிலாத
தமியேனையாள லெதுநாளோ

பதமான தான அடியார்க டேடு
பரமே தயாள முடையோனே

பழமேவு சோலை யிடையே விசால
பணை சூழலான வயலூரா

சதமானவேடு உடைவாக வோடு
தனிதேறல்பாயு மலைநாடா

தளவீர சேம திருநாகமேவு
தலைவாகுமார பெருமாளே.

தனன தனதன தனன
தனன தனதன தனன
தனன தனதன தனன தன தான

498. கருவ மலிகிற பயல்கள் அடிய ருறவிலி மடையர்
கசடர முறையின்மர பறியாத

கடினகுண முறுபழியி னிடையொழுகி வருபதர்கள்
கவிஞரியல் பிணையிகழு மறிவீனர்

துருவழி யினிடை யறிவை யொழுக விடுகிற கயவர்
துணையிலவர்களை மனது துயர்மேவ

சுடுதி நிகருறு மொழிகள் பகரு கொடியவ ரெளியர்
துயரிலுற சிறையிலிடு மமிலாளர்

பெருவு லிகினிடை யடிய ரகநிலையினுணர் விலிகள்
பிழைபட கருகிற சிறிய ரிவரோடு

பிணையெ னயினிட ரில்விழு வகைகள் புரிகிற கொடியர்
பெருகு துயரினில் முழுக விடுவோனே

கருணை பெருகிய குமர வரத குருபர முருக
கனிக ணிறை பொழினகர முடையோனே

கடையனுன தடிமையருள் யினிமை வுயரிய கமலை
கருதவளர் திருமலையில் பெருமாளே.

தத்தத்த தந்த
தத்தத்த தந்த
தத்தத்த தந்த தன தான

**499.** முத்தொப்ப நின்ற பற்பெற்ற நங்கை
முத்தர்க்கு கந்த முருகோனே
முத்திக் குயர்ந்த பத்தர்க் கமைந்து
முற்சித்தி தந்த பெரியோனே
கத்துந் தரங்க உற்பத்தி செந்தில்
கத்தெற்கு வந்த னருளாலே
கட்டத் தடர்ந்த பொற்பற்றி நின்று
கட்டுக் கடன்கள் தவிர்வாயே
உத்தத்தி னுந்து தற்குற்ற செங்கை
உச்சத்தி லங்கு மயில்வீரா
உற்பத்தி தந்து பெற்பற்றி நின்ற
உட்பட்ட துன்ப வினைபோக
அத்தத்தை யின்று பெற்றுச் சிறந்த
அற்புப் பிறங்க அருள்வாயே
அத்திக் கடங்கள் மிக்குற்ற பண்பை
அத்தற் புயர்ந்த பெருமானே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

**500.** படிமீ தினைந்து னைந்த முழுமூட மண்டு வென்ற
பழியேனை யண்டு துன்ப மயலாலும்
பகையாக வந்து வந்து பிடரான புன் சொறந்து
பவமேறு கின்ற வஞ்ச குரையாலும்
முடியாத பந்த பங்க வுயிர் வாழவின் கணின்ற
முறையான் வருந்தருந்து செயலாலும்
முனமார் பிவந்த மைந்த கடமேவி ருந்து றிஞ்சி
முரிபாக வந்தருந்து பிணியாலும்

பிடிவாத மும் படர்ந்த சினவீர முஞ் செறிந்த
பிரபாக மும் பிறங்கு மடவாளும்

பெரியோர்க ளஞ்சு கின்ற விதியாக மங்கடந்து
பிழைசேர நின்ற சிந்தை உடைவாளும்

அடியேனி தந்தழும்பு மயமாகி நொந்தழிந்து
அழிவேனை யுந்தனன்பி னருளாலே

அடிமேவு கின்ற பண்பு தருவாய் கலஞ் சிறந்த
அணிசேரு கின்ற பண்பை பெருமாளே.

தந்த தனதன
தந்த தனதன
தந்த தனதன தன தான

501. அஞ்ச லெனவுயர் செஞ்சொன் மொழியினை
யன்பொ டருளுவ தெந்நாளோ

அந்தி பகலிர வொன்று மனமொடு
அன்பு கெழுமிய புகழ்பாடி

தஞ்ச மெனவுனை நெஞ்சி லுனிவரு
சங்க மருவிய பலரோடு

சந்த முறையினில் வந்த கவிசொலி
தங்கு வண்முனை முனைநாடும்

மஞ்ச னெனவருள் தங்க வுதவிசெய்
மங்கை பயிரவி சிவகாமி

வண்டு முரலுறு தொங்க லணிபவ
மஞ்சுத வழியல் திரிசூடம்

மிஞ்சு தளிவளர் கொஞ்சு குழலொலி
வென்ற குரல் மொழி யுமதாயி

விந்தை தருசுத கந்த திருமகள்
விண்டு மருவிய பெருமாளே.

தான தனதான தந்த
தான தனதான தந்த
தான தனதான தந்த தன தான

**502.** நீலமயி லேறி யன்று பூவுல கெலா மளந்த
நேயமுருகா வணங்கு மடியார்கள்

நேசவிசு வாச கந்த நாத குருவாகி வந்து
நீதி யருளாக மங்கள் பலவோடு

சாலதமிழா தரங்கள் ஓதி மறைமேலு யர்ந்து
சாருமனு வாதி மந்த்ர முறைகூறி

சாதனையிலே யிருந்து வாழு முறையே பிறங்கு
தாரக முனை நிறைந்த பொருள்கூறி

பால னெனவே நலஞ்செய் கால மெனுமோ சிறந்த
பாலகவு மாரி மங்கை மகமாயி

பார்வதி தயாள மென்ற ரூப மெனவே வளர்ந்து
பாருலகையே புரந்த வொருதேவி

காலனுணு காலனென்ற சீலவர னோடுறைந்த
காமிசிவ வாமிதந்த முருகோனே

காரண குகா வளர்ந்த சோலைவள மேவு பண்பை
காருலவு நாகமர்ந்த பெருமாளே.

தந்த தானன தந்தன தானன
தந்த தானன தந்தன தானன
தந்த தானன தந்தன தானன தன தான

**503.** வண்டு லாவிய கொண்டைய ரோடுற
வுண்டு பாதக மண்டிடு மாய்கையில்
வந்த பூவிடை தங்கி சதாமய விடைமூழ்கி

வந்த பேதமை கொண்டலை பேயனை
நொந்து ளேனவி வுண்டவி யாகுல
மண்டு நாயினை பண்டுவி ரோதியை யனேயோராய்

கண்டுளே நகை கொண்டிடு பேழையை
பொன்சதா நினை வொன்றிய காமியை
கன்று கோவியை மந்தமு மாகிய கொடியோனை

கந்த மூலம் அருந்திய மாதவர்
இன்ப மோன மிகழ்ந்தறி வாழியை
கஞ்ச மாமன வஞ்சக ரூபியை மடையேனை

பண்டிலே பவ மென்றவை பேணிய
சண்டி மாடினை சங்கை யுளாகிய
பங்க பாதக மண்டிய பாவியை இனிதான

பண்பிலே வுரை கின்றவ ராலிகழ்
பண்டு தீயனை நொந்தழி வீணனை
பஞ்ச பாதக வஞ்சனை யாழியை வுலகூடே

எண்டகா விதி கொண்டலை கூளியை
யஞ்சலோ தி யுவந்தினி தாளுந்த
லெந்தவேளை பதந்தரு வேளையு மெதுவாமோ

இந்து சூடிய சங்கரர் பாலக
பண்டை மேவியபி லங்கிய பூரண
எந்தை மாதிரு விண்டினி லேறிய பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

504. கலையாதி தந்த வொருதேவ கந்த
கதிர் காம நின்ற முருகோனே

கனசேவகஞ் செய் திடகூரை யன்று
கடம்பர தென்ற பிளவாக

இலைவே லெறிந்த பினமேர வணங்கி
எனையாள்வை என்ற படியாக

இணைசேரு கின்ற பதநூளி தங்கு
மிசைவாய் விழுந்து துதிபேணி

மலைபோ லெழுந்து வழிகே நிறைந்த
மயிலாகி நின்று வுயிர்வான

வயமேறு கின்ற கொடியாய் விளங்கி
வரமே வழங்கு முறையோடு

தலைவா விதஞ்செய் எனவோதி நின்ற
சணமே புரந்த தகையாளா
தமியே னிடைஞ்சல் அறவே நலஞ்செய்
தனநாக பண்பை பெருமாளே.

தான தந்த தான தந்த
தான தந்த தான தந்த
தான தந்த தான தந்த தன தான

**505.** நாளு மஞ்சியோல மென்ற நாத மொன்ற லானடங்க
நாயை யன்பு மேவ வந்து னருளாலே
நாடி யின்ப மோன மந்த்ரம் ஓதியன் பிலே சிறந்தெ
னுளு மஞ்சிடாத துங்கம் அருள்வாயே
காள முண்டநேக சங்க மோடெழுந்த பேழை யஞ்சல்
காணசெஞ் சொலே புகன்ற வொருவீரன்
கால னஞ்சு மாறெழுந்து வீறணைந்த தாகி நின்ற
காலனைந்து போக வென்ற சிவநாதன்
வேளணைந்த போது வஞ்ச மாக வந்த காளை யென்று
வீணழிந்து போக வுந்து பொறியாளன்
வேலை வந்து தாளிணங்கு மாற றைந்து மாமிழுங்க
வேகலஞ்செய் தாளுகின்ற திரிகூடன்
மாளணைந்த வாமி கொஞ்சு சேமமின் சுவாமி தந்த
மாபயன் றயாள கந்த முருகோனே
வாரணஞ் சதா முழங்கு நீள் பொதும்பர் சூழுபண்பை
மாநலம் பொளுகை மாந்த பெருமாளே.

தந்த தானன தந்த
தந்த தானன தந்த
தந்த தானன தந்த தன தான

**506.** செண்ப காதேவி யம்பை மங்கை மாதான கங்கை
தென்றலூ டாடு கின்ற மலர்மாது
சிந்தை யோவாத மைந்த புந்தி யாலே வணங்கு
திங்கள் கூறாக நின்ற நுதலாயி

பண்பு காரே மயங்கி சிந்து மாறுக வென்று
பம்பி நாணுறு யார்ந்த குழல்வீரி

பந்த மாயாதி யண்ட வின்றி யாதார முஞ்செய்
பங்கையே யாள வந்த சிவகாமி

எண் புகாதே விளங்கு கின்ற பூலோக மண்டம்
எஞ்சு பாதாள மெங்கு முளதேவி

எங்கண் மாதா பிறங்கு சங்கு காதேற நின்ற
இந்து சூடாதி பங்கில் வளர்நாரி

எங்கடாயே சுரந்த கந்த நாதா நலஞ்செய்
எண்பொறு றேறி நின்ற பெருமாளே.

தந்த தானன தந்த
தந்த தானன தந்த
தந்த தானன தந்த தன தான

**507.** தந்தை தாயா தியென்ற செண்ப காதேவி மைந்த
சம்பு வோமோது செஞ்சொ லினைமேனுள்

சங்கை போமா றமைந்த தின்சொ லாதார மொன்ற
தந்து வேதா மயங்கு பொருள்கூறி

சிந்தை வேறாகி யண்டர் நொந்து வீணாக துன்பு
சிந்து சூராதி அஞ்ச விடும்வேலா

தெங்கு மாசோகு கந்தி கொங்கு சீரார் கடம்பு
சிந்து பாலா மரங்கள் பலவோடு

சந்து மாசோலை கொண்ட பண்ணை நாடாறு மெங்கள்
தம்பி ராஜக வந்த முருகோனே

சந்தி ராவே நடந்து மங்கை பாலோடி யஞ்சல்
தந்து யேறேறு கின்ற வொருதீரன்

முந்தை மாதான முஞ்செய் தந்த வேதா லெழுந்து
முன்பு தாமாகி நின்ற செகநாதா

முந்து சேமாதி தங்க வந்து காவா னிறைந்த
மொய்ம்பு நாகேறு பண்ணை பெருமாளே.

தனன தன தான தத்த
தனன தன தான தத்த
தனன தன தான தத்த தன தான

**508.** பவவினை யிலே செனித்து கயவருட னேவி ருத்தி
பணு கொடியனே னெனக்கு னருளாலே
பகரு சர ணாலயத்தை மனம தனி லேய மைத்து
பாவி வாவே படைக்க வரவேணும்
தவவினை யுளோர்கள் மெச்சு குமர குருநாத வெற்பு
தனிலுலவு தேவ வெற்றி யயில்வீரா
தருமன விவேக முத்தர் பரவிய சுகா வனித்த
சடமி தனையே விருத்தி நிலையாக
அவலமன மாகி பத்தி பணமன திலா திளைத்த
அடிமைதனை யாள் வதற்கு வழியேதோ
அறிவு சிறிதான மட்டி மடைய னெனவே யுதித்து
அணு வளவு மேகுணத்தி லணுகாமல்
இவரு சலனுதி பற்று கடலலை யிலே அமிழ்த்தி
இறுதி யெனவே யழித்து விடுகாமல்
எமது குருநாத சுப்ர மணிய சிவ மேயருட்செய்
எழில் கொடிரு நாகமுற்ற பெருமாளே.

தன தான தந்தன
தன தான தந்தன
தன தான தந்தன தன தான

**509.** துதியாத வஞ்சக மதியேறி நின்றவர்
தொடர்பே யறுந்தினி தெழிலான
துறையேறி வந்தனை புரிமாத வஞ்செறி
சுகவாண ரன்பினை யருள்வாயே
விதிமேவு மந்திர உபதேச முஞ்சொலி
மிளிர்யோக முந்தர வரவேணும்
மிகுபாத கந்தரு கொடியோர்க ளன்றற
விறல்வேலை யுந்திய வொருவீரா

துதிபாடு செந்தமிழ் கவிபாடு மன்பர்கள்
துயர்தீர வந்தருள் புரிவோனே
தொடைசேரு பைம்புய வரதீப சுந்தர
துரையே வணங்கிய பெரியோர்கள்
நிதியாக நின்றுல கினையே புரந்தவ
நிணசூரை வென்றயி லுடையோனே
நிறை சோலையின் புடை மறை சேரு பண்பொழில்
நிலைநா கமர்ந்துறை பெருமானே.

தாத்த தத்த தான
தாத்த தத்த தான
தாத்த தத்த தான தன தான

**510.** மோட்ட கட்டு ளாகி வாட்ட வுற்ற நோவை
மூட்டி விட்ட பாப வினையாவும்
மூர்க்க முற்ற தீயி லூட்டு வித்தல் போல
மோட்ட ருட்க ணோர்மை யருள்வாயே
வாட்டடக் கணைய காட்டடக் கமான
மார்க்க முற்ற தூய குறமாதை
மாட்டடக்கி யாள நேர்த்தி யுற்று ணைய
வாட்கை பெற்று மேவு மனமோடு
தேட்டமுற்ற லாகி காட்டினுற்ற நேக
சீர்த்தி பெற்ற வாய்மை பலகூறி
தேக்க முற்ற தாய நோக்க முற்ற போது
சேர்க்கை பெற்ற நாத முருகோனே
சேட்கடுக்கை பூணு வோர்க் கடுத்த பால
தீர்க்க முற்ற சேம முடையோனே
தேர்த்திருத் தணிகம் வேற்றிருக்கை மேவ
சேர்த்திருக்கும் ஞான பெருமானே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

511. படமுடி யாத லைந்து கெடும் விதியே நினைந்து
பதர்மன தோடு நைந்து இடர்மூழ்கி

பலபவ வாதை வந்து இடையிடை மோது கின்ற
பழிவினையோ தியுந்த னடிபேணி

இடர்செய வேதனைந்து கொடுமுடியாக வந்து
யெனையடல் பாவமென்ப தறவேநீ

னினிமை யெனுளுமெந்தன் மனதிடமே யிருந்து
இருளற மேன்மை தங்கும் அருடாராய்

கடல்கதிராக நின்று வளர்குருநாத செந்தில்
கதிரயிலாள கந்த முருகோனே

கமுகெழின் மாவுதெங்கு பலமரமேவு பொங்கர்
கமழுதெய்வீக பண்ணை யுடையோனே

திடவுண திசங்க மறவொரு வேலையுந்து
செயபர வீர துங்க செகவீரா

திருமலை மீதினின்று அடியவ ரோடிணங்கு
தெரிசனையாதி தந்த பெருமாளே.

தனதன தனதன தனந்தத் தாந்தன
தனதன தனதன தனந்தத் தாந்தன
தனதன தனதன தனந்தத் தாந்தன தன தான

512. இருதலை யெரியுணு துரும்பிற் சார்ந்துள
சிறுவுயிரென வளரெறும்பைப் போன்றெனை
இனிதுற வருண்மனம் விரும்பத் தோன்றுவ
தெதுநாளோ

இதுவரை யுனதடியுளம் பற்றான்றிய
யெனதிடர் பவமறவரும் பொற்பேந்திய
இசைபத மலரிணை தருந்தட்பாந்தயை தரவேணும்

வருபவர் பிணியறவரம் பெற்றோங்கிய
அருளனு புதிதர நிறைந்தெற் காந்தநி
மருவிய குருபர சுகம்பட் டீந்தருண் முருகோனே

மகதவ முயரிய கணங் கட்காந்தல
மிதுவென வளமமை பதம்பெற்றோங்கிய
மலைதழுவிய பொழிலிலங்கத் தூங்கிய கனிநாடா

ஒருதலை துணிவுள மனம்பற்றுங்கமை
பெரியவரிட முறையு வந்துட்டேங்கிய
வுமைகுழல் மொழிசுத பெருங்கற்பேந்திய குறமாதை

வொழுகிய தினைபுன மணைந்துத்தாண்டவ
மிடுகரிவரவர மணந்தப் பாந்ததி
உறுமயிலவனென விளங்க தோன்றிய கொடியோடு

கருதிய வணமுனை மணந்துத் தாங்கிய
தியல்பிவை யறிகுவை முனம்பற் பாங்கியர்
கனிவுறு பணிவிடை புரிந்தற்பேந்துவ னெலான

கருணையி லொழுகிய செழுஞ் சொற்சாந்தம
திளகிய மொழியினை மொழிந்துத்தேன் கமழ்
கனிபிதிர் திருமலை யிருந்தற் பேந்திய பெருமாளே

தனதன தனதன தனந்தத் தாந்தன
தனதன தனதன தனந்தத் தாந்தன
தனதன தனதன தனந்தத் தாந்தன தன தான

**513.** சிவபரனருள் பரையெனுஞ் சொற்சேர்ந்திடு
யிருவரினறுமுகமொடும் பொற் பேந்திய
சிவசுத குருபரவெனும் பற்றோங்கிய நெறியாளர்

செலுமுறை யிடரென நிதம் பற்பாங்குள
சிறுமொழி துருவிய வணந்தற் பாங்கமை
செயலொடு முறைபுரி கொடுங்கற் போன்றவ னெலான

அவமன துடையவர் நொறுங்கிச் சாம்படி
வயில்விடு பிரபல விடம்பற் பாந்தனை
அரிதுணு கிறமயில் புறம் பெற்றேந்தெழி லுடையோனே

அடியவர் மனமிடர் புடர்ந்துட் டாங்கரு
கடுமொழி பகர்பவர் குலம் பட்டீண்டற
அறைசின மயிலினை மிகுந்தட் பாங்குவ டுடையோனே

தவநெறி யுடையவர் மனஞ்சற் றேய்ந்திட
யிடர்பகை புரிபவர் குலங் கெட்டாழ்ந்தவர்
சடமற வயில்விட வயம் பெற்றேந்திய வயில்வீரா

சளசள வெனமழை நிதங் கொட்டாழ்ங்குள
மடைபணை பொழில்பல வளங் கட்டாங்கிய
தவவர செனவளர் குரும்பைத் தேங்குள வளநாடா

சிவமனு குகமனு நினைந் தெப்பாங்கரு
முனைபெரி யவருறை தலங்கட் சேம்பொடு
திகழ்கமு கருநெலி கடம்பைச் சேர்ந்தமை பலசேவாடு

செறியெழி லுளபொழில் மிலைந்துத் தேன்சொரி
நதியொழுகிய வள மணிந்துத் தோய்ந்தவர்
தினமுறை திருவுயர் நகம் பெற்றோங்கிய பெருமாளே.

தனந்த தனந்த தனதன தனதன
தனந்த தனந்த தனதன தனதன
தனந்த தனந்த தனதன தனதன தன தான

**514.** கனிந்து கனிந்து இளகிய குழல்மொழி
நினைந்து நினைந்து உருகுமெ யடியவர்
கரைந்து கரைந்து பரவிய லகமிசை வளர்தேவி

கமழ்ந்து வரும்ப மருமல ரணிபவள்
சிறந்த வறங்கள் செயுமன துடையவள்
கரும்பு நிகர்ந்த வளைகர முடையவ ளபிராமி

குனிந்து விழுந்து தொழுபவ ரிடர்பகை
அறுந்து அறுந்து விழவருள் புரிபவள்
குணங்க கணிறைந்த திரிபுரை பயிரவி மகமாயி

குணங்கனி ணங்குநு தலரனிடமுறை
வணங்கொ ளணங்கு பகவதி யருள்பரை
குலுங்கு சதங்கை கலிரிடு கிறபத முளதேவி

முனின்று முனின்று வடியரொ டுறைபவள்
சினந்து சினந்து பகைவரை யடுபவள்
முருந்து முருந்து வெனநகை யிலகிய செகமாது

முழங்கி முழங்கி யெதிரொலி யெழுகடை
விளங்கி விளங்கி யருளொழு கியதளி
முதிர்ந்து முதிர்ந்த திரிகுட மருவிய சிவகாமி

514-ம் பாட்டு 10-வது வரி குணக்கீன் — சந்திரன்.

மனின்று மனின்று உதவிய குருபர
யெனென்று யெனென்று வுரிமை யொடிவண்வர
மகிழ்ந்து மகிழ்ந்து இருபத மலரிணை யருள்வாயே

மலைந்து மலைந்து துனியடை பவர்துயர்
கலைந்து கலைந்து விடவருள் புரிகிற
மனங்கொள் குணங்கள் மருவிய திருமலை பெருமாளே.

தனன தனதன தனன
தனன தனதன தனன
தனன தனதன தனன தன தான

515. கருணைபெருகிய குமர அருமை பெருகிய வரத
கனிவுபெருகிய வினிமை மிகமேவு

கவிகள் பெருகிய சொலினி னுரிமை பெருகிய மகிமை
கவினுபெருகிய முருக னெனலான

அருணை கிரிபுகழணிய மனது பெருகிய பெரும
அழகு பெருகிய குமரி யெமதாயி

அருளினட மிடுகுழலை நிகரமொழி தருகுமரி
அமையை நிகர்கரகவுரி மகமாயி

தருணவருண்மழை புதவி யகில சராசரவுயிர்கள்
தழைய வருளிய முதல்வி சிவகாமி

தனைய வெனதிடர் பகைகள் தவிடுபொடிபட வருள்பெய்
தலைவ பெருகிய புனித முடையோனே

அருண னிகரிய வகில மதனினுயரிய வெழில
அருளிலிலகிய வுருவ முடையோனே

அரிய பெரிய வருறையு ளெனவு மிளிரிய கமலை
அணிகொடி ருமலைவளரு பெருமாளே

தனதன தந்தன தன தான
தனதன தந்தன தன தான
தனதன தந்தன தன தான தன தான

516. மருவல ரென்பவ ரறவோட
வயில் விடுகின்றவ னெனலான
மரகத சுந்தர சிவகாமி மகமாயி

வளர்பரை யந்தரிய பிராமி
பயிரவி பைங்குழ லெழிலாயி
மலைமகளன்பின ருளமேவி வளர்தேவி

தருநிறை பைம்பொழில் வளமோடு
தவமலி செண்பகடவி மாது
தனைபணியுஞ் செயலறிவாணர் தமைபேணு

தருமிநிரந்தரி யபரனோடு
வதிய வளர்ந்தவ ளுமைஞான
தாணிபிடந் தழுவியமோன செகவீரி

அருணிறை கின்றவளனை காளி
குமரி பரம்பரை செகமாரி
அணிவளை செங்கரமுளநாரி யருள்பாலா

அனவர தந்துதி பணுமேழை
பிடர்பகையும் பிணி மிடிபோக
அடிமை நலம்பெறு வரமீய வரவேணும்

திருவளர் பைம்பொழி னகரூடு
பவனிவ ருஞ்செய குருநாத
தினத வணங்கிய வடியார்க ளுடையோனே

செழி பொழிலின்றலை கருமேக
முறைதுயிலுங் கொளமிக மேவு
செய்திரு விண்டுறை யருண்ஞான பெருமானே.

தனனா தன
தனனா தன
தனனா தன தன தான

517. கருணா கர முருகா வென
கருதா மன நெறியாளர்

கதி மாறிய பவ வேதனை
களி னூட்வ ரிடர்மூழ்கி

உரு வேறமை பிணி யூடவ
ருடை வாரென வுலகோதும்

-னை நாடொறு மிணி தாகிய
உயர் மாமனு வினையோதி

வரு மேழையை யிது நாள்வரை
வர மேவிய மனமோடு

மதியா திடர் பவ மூழ்கிய
வண மாய்விட லழகாமா

தருவே குரு பரமே யருள்
தனையே தர வரவேணும்

தருமா திப திரு மாமலை
தனி மேறிய பெருமாளே.

தத்தத் தனந்த தனன
தத்தத் தனந்த தனன
தத்தத் தனந்த தனன தன தான

518. கட்டிக் கரும்பி ரதமே யெட்டிக் கெழுந்த மணியே
கப்பிற் செறிந்த தளிரோ டினிதாக

கைத்தற் கழிந்த கனியே நெய்ச்சத் திருந்த முதமே
கத்தற் கமைந்த சுதனே யெனலோடு

பட்டத் தெழுந்த துயையே முத்தற் குகந்த முருகா
பட்பிற் பிறங்கு சிவமே யுயர்வான

பத்திற் கிணங்கு முதல்வா வித்தைப் புரந்த பொருளே
பச்சைச் சிறந்த சிகியே றியதேவா

நிட்டைக் குயர்ந்த பெரியோர் சித்தத் துறைந்தி யவுளே
நிற்கத் தெளிந்த சலமே நெறியான

நெற்றிற் பதிந்த மயமே வித்தற் கெழுந்த முளையே
நிர்த்தத் திலங்கு கடமே வயமான

செட்டிற் சிறந்த முதலே அற்பிற் பிறந்த நலமே
செட்டிக் குயர்ந்த மகனே முருகோனே

சித்தத் திரங்கி யருள்வாய் நத்துச் சொரிந்த வயல்சூழ்
திக்கிற் குயர்ந்த பொழிலூர் பெருமாளே.

தான தனன தனதன தானன
தான தனன தனதன தானன
தான தனன தனதன தானன தன தான

**519.** வாலைபுவனை திரிபுரை யாமளை
நீலி கவுரி பகவதி கோமதி
மாரிகுமரி பயிரவி சாமளை மகமாயி

வாமி பரமி பரிபுர மேவிய
காமிநடன சிவபரனோடுறை
மாது வமைமை நிகரியவாகுள சிவகாமி

சேலைமயல விடுகணி ஞெளுமை
பாடுமடியருள நிறை காரணி
தேவியருமை பயிலிய தாயக பரமாயி

தேவர் பரவு பரை தருமாசனி
கோவைநிகரு மிதழழகாகிய
சேம மருவுமதி பகிர்வாணகை கனிவாயும்

பாலை மதுவை யமுதினையேயிகழ்
பேறு வசன மலைமகள் மாதவர்
பாலி விளகுகுணபரி பாலினி யெமதாயி

பாலகுமர குருபர சேவக
தீரவயிர திடபர வாரண
பாகுகனியு மொழிவளி நாயக முருகோனே

வேலையிகழு மசுர்கெட மேலையில்
யேவுமொருவ வடியவரோடுறை
மேலவகுக பழமுதிர் சோலைமை யுடையோனே

வீணிலடிமை துயர்கெட வேயருள்
ஞானமுதல்வ திருமலை மேவுயர்
வீரவரத முயரிய மேலவர் பெருமாளே.

தனத்த தந்த தனத்தன
தனத்த தந்த தனத்தன
தனத்த தந்த தனத்தன தன தான

**520.** இரக்கமென்ப துனக்கிலை வுரைத்த மந்த்ர முறைப்படி
இளக்கமுந்த ரநித்திய முனையோதி

இருக்குமெந்த னுளத்திடை வருத்துகின்ற பவத்தினை
எரித்துநன்றி யளித்திலை யிதுநாளும்

பரத்துகின்ற துயர்க்கட லினுக்குளஞ்சி வெறுப்புறு
பவத்துழன்று மனத்துய ருறமூழ்கி

பதைத்துநின்று கடத்துயிர் விடுக்கபந்த வகுப்பிவை
படைத்த கந்த பயப்பட வெணமேவி

வரத்திரண்ட பவத்தினை யழித்து சந்த மிகச்செறி
மலர்ப்பதங்க ளளித்தினி தருள்வாயே

மகத்துவங்க டழைத்தெழு தலத்துயர்ந்த பொழிற்பணை
வளத்தமைந்த திருப்பதி யுடையோனே

சிரத்தைகொண்ட மனத்தொடு துதிக்கவந்த வருக்கருள்
திருத்தியன்பு கொடுத்தெழின் முருகோனே

திருப்பதிந்த வணத்தொடு நிருத்தமுஞ்செய் நகத்துறை
செயத்திலங்கு குகப்பர பெருமாளே.

தனன தானந் தனதன தனதன
தனன தானந் தனதன தனதன
தனன தானந் தனதன தனதன தன தான

521. தரணிபீடந் தனிலுறை கிறபரை
குமரிசேமந் தழுவிய பயிரவி
தருமி வேதந்துருவிய பதமல ருளதேவி

சனகி ராமன் கருமுகி லெனவளர்
அரிபி னுக்கும் பரைதிரி புரை மகிழ்
சபத வீரந் தனதுரு வெனவரு மலைநீலி

அமலை யோகந் தளிர்விர லணியென
அணிதி யாகம் பெருகிய பகவதி
அரசி கானந் தனிலுறை துரைமக ளமதாயி

அடிமை யோடும் பதிபவ ளெழில் வளர்
அழகி பாலன் றனையெரி படவிடும்
அரனி னேடுந்திட நடமிடுபவ ளுமைமாது

காவிலா சந்தழை இய திரியயி
லுடைய தீபம் பரவிய குழல்மொழி
கதிரி கூடந் திகழ் தளி மருவிய செகமாதா

கனி கொள் மா செண்பகடவி யிடமுறை
அருமை மேவும் படிவளர் சிறவனை
கனிகை போலுந் திருவுரு வொடுமென தகவாழ்வாய்

அரணி யாகும் புவனை நல் திரிபுரை
யெனவு லாசந் கெழுமிய மலைகமள்
அருள் விவேகந்தையை பொருள்வடிவென வருபாலா

அரிவு லாவுங் கருமுகில் துயில் பொழில்
மதுவு லாவுந் திருநதி வளை இய
அருளு லாவுந் திருமலை தனில் வளர் பெருமாளே.

தனத்த தனத்த தனத்த தனத்த
தனத்த தனத்த தனத்த தனத்த
தனத்த தனத்த தனத்த தனத்த தன தான

**522.** மனத்தை வருத்தி யுருக்கி யிடித்து
நொறுக்கி பவத்தி லழுத்தி யிருத்தி
வதைக்க நினைத்த வணத்தை யெவற்கு முறையோடு

வகுப்ப விதற்கு வணக்க மிகுத்த
குறிப்பை யிடர்ப்பை யுடுத்த பிணிப்பை
மதித்து வருட்பெ யெனச் சொலினைத்தி னருளாலே

சினத்தி லெடுத்த பவத்தை யொடுக்கி
அறத்தி னடக்கு முறைக்கு விருத்தி
செனிக்க வளித்து திடத்தி னலத்தொ டெளிதான

செகத்தி லடுத்த பிறப்பை யெடுத்து
மயக்கு விதத்தி லிளைக்க வருத்தி
சிரிக்க விடுக்க பழிப்பு மிகுக்கு மதனுலே

அனத்தை நடத் தினடாத்தி யெழுத்தை
யழித்து பிறப்பை யொழித்து பதத்தி
லமைத்து சிறக்க விருத்தி படைக்க வருவாயே

அருட்டய வுற்ற குறத்தி தனத்தில்
நகத்தை யழுத்தி யெடுத்த குகத்த
அனிச்சம் நிகர்த்த பதத்த கரிக்கு மணவாளா

பனிச்சை குழற் பெய் வனத்தி பரைச்சி
சிறுத்த இடைச்சி பெருத்ததனத்தி
பருப்ப தமுற்ற இறைக்கு வுதித்த மகளாயி

படைத்த பொழிற்கு ளிருக்கு நகர்க்கு
குடக்கி னிலைத்த மலைச்சி கரத்தில்
பணித்த தளிக் குளிருக்கு மொழிற்கொள்
பெருமாளே.

தனத்தன தனன
தனத்தன தனன
தனத்தன தனன தன தான

523. பருப்பத விலாச குகப்பர விநோத
பணிப்பத முளோர்க ளகவாழ்வே
பரைக்க முதமான சுதற்குமர தேவ
படைத்தருண் மெஞான முடையோனே
விருப்ப மொடெநாளு முருக்க முதமாகி
விதைக்கு முளையாகி வருவோனே
வெறுத்து ரையுளோரை கறுத்தயிலை யேவு
விதத்தி லெழுகோப முடையோனே
நிருத்த நடராய ரிடத்தில் விளையாடு
நிதிச்சுத தயாள முடையோனே
நெருக்கி யடியாரை வருத்த வருவோரி
னிணத்தை யுணவேலை விடுவோனே
பருத்த பொழிலூடு யிருக்கும் நகர்வாச
பணிக்குமர நாத முருகோனே
பழக்கு வியன்மேவு திருத்தகு பொருகை
பதிக்குயர் விலேறு பெருமாளே.

தனத்தன தனதன
தனத்தன தனதன
தனத்தன தனதன தன தான

524. அகத்தினி லுனதடி பதிப்பவர் நலமுற
அருட்பெய வருகிற முருகோனே
அடிக்கடி யெனதிடை வரப்படு துயரினை
அழித்துன தருள்பெய வரவேணும்

மகத்துவ முனிவரர் துதித்தடி பரவிய
மழைக்கொடை யுடையவ னெனவோது
வரத்திணை யுடையவ பரைக்கொரு விதசுத
வணக்க மெயடியவ ரகவாழ்வே
சகத்தினி லசுரரை நொறுக்கிய வயில்கர
தமிழ்க்குரு முனிகுரு பரநாதா
சலத்தெழு பகைவரை குலத்தொடு மவரற
சபிப்பதி னுயரிய பெரியோனே
பகற்றதி யிரவென வொருப்பட மனமருள்
படைத்தவர் மருமக னெனலாகி
பருப்பத திருமகிழ் திருப்பதி மருவிய
பரச்சர வணபவ பெருமானே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**525.** மறவாத அன்பு வுனைமேவு கின்ற
வரமே வழங்க வரவேணும்
மருவார்க ளஞ்ச வயிலேவு கின்ற
வரவீர துங்க முருகோனே
பிறவாத யின்ப நெறிபேணு கின்ற
பெரியோர்க ளன்ப ரெனைமேவ
பெருகோ மினின்ற முறையே புகன்று
பிறவாத தொந்த மருள்வாயே
உறவாக வெந்த னுளமேபு குந்து
வுயர்வாக நின்ற வொருதேவா
உமைமாது கொஞ்ச விளையாடி நின்று
வுரை யாடு கின்ற முருகோனே
அற மேறி நின்ற குலமேறி நின்று
அழ கேறு கின்ற வயலூரா
அருளேறி நின்ற வணமாக நின்று
அசையாதி பண்பை பெருமானே.

தனத்தந் தந்தன தனதன தனதன
தனத்தந் தந்தன தனதன தனதன
தனத்தந் தந்தன தனதன தனதன தன தான

526. தினத்துஞ் செண்பக மருவிய பொழிலிடை
யிருக்குஞ் சுந்தரி பயிரவி பகவதி
சிவக்கும் பங்கய நிகரிய பதமல ருளதேவி

செபிக்குஞ் சிந்தை யினடிய வரிடநித
மிருக்குஞ் சங்கரி குழலி னிலமுகுற
திதிக்குஞ் செஞ் சொலி விளகிய கனி மொழி
தூவர்வாயாள்

அனைத்துந் தந்தவளனை யினுமினி யவள்
மணக்குஞ் சந்தன பரிமள புழு கொடு
அலர்த்துங் குங்குமம் விரவிய கலவைகொ ளபிராமி

அரிக்குங் கிண்கிணி கலைஇய மலரடி
யெடுத்துந் தந்தன தனதன தனவென
அடைக்குங் கிஞ்சரி தவில்முழ வினிதொலி
முறையாக

தொனிக்கும் பைங்குழலரி முரலினை மொடு
குளிர்க்குஞ் செங்கர வளைகவிர் கலிரென
தொடுக்குங் கஞ்சமு மருவியது மணிகள் மலிவாக

துதிக்கும் பண்பமை முனிவர ரடியவர்
உருக்குஞ் சிந்தையினெ கிழுறவு வர்கணில்
துளிர்க்குந்தண் புனலெழு வவர்ப வமற நடமாடு

குனிப்பின்றுங் கமு தொழுகிய வெழிலிமை
யினுக்கண் சுந்தர மகனென வருகுக
குகைக் கண்டங்கிய பெரியவர் பரவிய முருகோனே

குறித்துன் பங்கய பதமல ரிணையினை
யடுத்துங் கெஞ்சிய வணமருள் புரிகுவை
குணத்தின் பங்கெழு குருபர திருமலை பெருமாளே.

தனனத் தாத்தன தனதன தனதன
தனனத் தாத்தன தனதன தனதன
தனனத் தாத்தன தனதன தனதன தன தான

527. மகரக் கார்த்திகை மகிழுறு பணிவிடை
யிணைநற் சேர்க்கை யொடினிதுற நடைபெற
வரநற் சீர்த்தியை யருடருததி யிது வரவேணும்

வறுமைக் காக்கிய பவவிடர் பிணிகளை
பொடியத் தாக்கிய குருபர சரவண
மகரத் தாக்கிய வலை கடல் வளை இய உலகூடே

உகரத் தாக்கிய பிரணவ முறை பொருள்
சிகரத் தாக்கிய சிவபர னறிவுற
உரையிற் றுக்கிய நவநிதி யெனவரு முருகோனே

ஒளியிற் றுக்கிய மணி மகுடதிபதி
அடியிற் காக்கி மெயமு தினை யருள்பவ
உவமைக் காக்கிய பொருளிலை யெனு மெழி
லுடையோனே

ககரக் கூட்டொடு மகர் கடை மருவிய
மறையிற் பூத்தவன் மகிழ்துணை குறமினை
கருதிக் காட்டிடைய வளொடு பயிலிய வெழில்வேளே

கரையிற் கோட்டிய பலதருதலை தலை
யமையச் சேர்த்த வணழகிய முகினிரை
கனிவிற் பாட்டளி முரலிய பொழிலிடை வளமாக

தகரத் தூற்றிய வறலென மழை பொழி
திறநற் பாக்கிய மலிபணை பலுகிய
தரநட் பூட்டிய பொழின கரிலகிய மலைநாடா

தவமுற் பேற்றினை யுடையவ ரெனவருள்
பவமுற் போக்கிய செயலருள் புரிகுவை
தனபொற் கோட்டமை தளி தனிவிலகிய
பெருமாளே.

தாத்தன தனதன
தாத்தன தனதன
தாத்தன தனதன தன தான

528. கார்த்திகை தொறு முனை நேர்த்தியில் பணிசெய
காப்பணி பவர்களி னகவாழ்வாய்

காக்கிய மொழி யொடு பாக்கிய முதவிநல்
காட்சியை யருளிய முருகோனே

ஆர்த்திரை தழுவிய மாக்கட லாணிடை
ஆர்த்தெழு மசுரரை வுடல்பீறி

ஆக்கினை யற வொரு நோக்கினி லுருவிய
ஆத்திரமுள வயி லுடையோனே

கார்த்திரள் பயிலிய தேர்த்திர ளெனவிணை
காத்து யரிய பொழில் தலைமேவி

காப்பென மழை பொழி தாப்பமை கிறவல
காப்பியன் மருவிய மலைநாடா

பார்த்திப ரடியவர் ஊர்த்திர ளுடையவர்
பார்ப்பன ரடி தொழு மெழில்வேளே

பார்ப்பதி யருள் சுத சீர்த்தி பொனல மருள்
பார்த்திரு மலைவளர் பெருமாளே.

தனன தத்தன
தனன தத்தன
தனன தத்தன தன தான

529. எனை நினைத்திடர் விளைவு பற்றிய
இகன் மிகுத்தவர் துகளாகி

எரியிலுட்படு சிதலெனப்பட
இறுதி யுற்றவ ரறவீழ

முனை யெடுத்தயி லுருவு முக்கிர
முருக விற்பன முருகோனே

முரணி னிர்த்தன மிடு மசுர்க்குல
முடிவு கட்டிய செகவீரா

கனை கடற்படு கதிர் நிகர்க்குக
கருணை பெற்றவ ளபிராமி

கமலை யற்பொடு பணியு முத்தமி
கருது முத்தம அடியார்பால்

நினைவு பற்றி நல்லமுத ளிப்பவள்
நிதியெனப் புகழ் சுதவேளே

நிருமலக்குக அருமை நட்பருள்
நிலமை பட்பொழில் பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

530. பகைத்தவர் சிரத்தை நொறுக்கிய வயிற்கை
படைத்தவ திருத்த முடையோனே
பதிப்பவ ருளத்தி லிருப்பவ குகத்த
பருப்பத முடைத்த செகவீர
நகைத்தவர் களுக்கு லிடர்ப்புக வமைத்து
நசுக்கிய திறத்தை யுடையோனே
நலத்தொடு துதித்து வணக்க மெயுடுத்த
நமைத்தவர் களுக்கு இனிதான
வகைத்தன மளித்து அறத்தினி னிலைத்த
மனத்தையு மளிக்க வருவாயே
மதித்தவர் களுக்கு குணத்துட னருட்பெய்
மகத்துவ மிகுத்த பெரியோனே
சிகைத்தலை புடைத்து அயற்கறி வுறுத்தி
திருச்திய சுகத்தி லுயர்வாழ்வே
திருப் பொழில் படைத்த வளத்தினை யுடுத்து
திருக்குவடுயர்த்த பெருமானே.

தான தனதன தான
தான தனதன தான
தான தனதன தான தன தான

531. வீர வயிரவ நாத சாமி வடகுண பாலில்
மீறு செய லொடு காவல் தனியூடே
மேவு மறுமுக ஞான மோன வரபர தேவ
வீறு பனுகிய சேவல் கொடியாளா
ஆர மிலகிய மார்ப வாமி பயிரவி காமி
ஆரண முறைதயாள முளதேவி
ஆதி பகவதி நீதி யோது முமையவள் காளி
ஆறினடன் பவானி யெனுமாதா

பார பருபத மீது போதிலுதயவுலாச
  பார்வை நளினவிலாச முகநீலி
பாடு தமிழ் கவி வாணர் காதிலரு மறை யோதி
  பாவின முதருளாயி யெனலான
தீரமனத பிராமி தேடு திரவியமான
  சேய குருபர பால முருகோனே
சேம மிலகிய தான பார்வை யினிதருள் நீதி
  சேரு திருமலை மேவு பெருமாளே.

தான தந்தன தானா தனாதன
தான தந்தன தானா தனாதன
தான தந்தன தானா தனாதன தன தான

**532.** பால கந்த சுவாமீ நமோநம
சீலவம் பிகை பாலா நமோநம
  பார குஞ்சரி பாகா நமோநம வெகுகோடி
பாடு தண்டமிழ் வாணா நமோ நம.
காலனஞ்சுறு வேலா நமோ நம
  பாகி னஞ்செறி வாசா நமோ நம வெனமேலோடு
கோல மிஞ்சிய நாதா நமோ நம
ஆரணந்துதி பாதா நமோ நம
  கூறு மந்தணர் நீதா நமோ நம குருநாதா
கோகி லந்திரள் நாடா நமோ நம
சேமபண் பொழி லூரா நமோ நம
  கோதறுந் தவமே லோய் நமோ நம முருகோனே
பால வெண் பொடி யானே நமோ நம
காரிருங் கொடை யானே நமோ நம
  பாலி லங்கிய தேனே நமோ நம வரதீபா
பாதலம் புவியானே நமோ நம
வீர சுந்தர தேவா நமோ வென்
  பாடுகின்ற வரோடே சதாவுறை பரநாதா
சால வுந்தையை யாளா மனோகர
பாத பங்கய மீவாயிதேததி
  தாரிலங்கிய மார்பாகுணாகர முடையோனே

சாறு வந்தனை போலே தினே தின
மேறு கின்றவர் கோடானு கோடிகள்
சாரு பண்பொழில் நாகாதயா நிதி பெருமாளே.

தான தனதன தான தனதன
தான தனதன தான தனதன
தான தனதன தான தனதன தன தான

**533.** தேனை விரவிய தான மழைமொழி
நேய மொழி தருஞான வபர
தீரமயில் புறமேவு குருபர முருகோனே

தேவருணவெனலான வமுதினை
யான வுருவின ளான குறமினை
சேரு புயபிரகாச மருவிய குகநாதா

வானையளவிய சோலை யிடை யிடை
வாழு முனிவரர் பேசு திருமறை
வாசமுறு கிளியே சொல் புகலிய மலைநாடா

வாளை கமுகிடை பாய பழமுதிர்
பாய வரணிடை யாட மயிலினம்
வாகை கெழுமிய நாடு பணைவள வயலூரா

மானை நிகர் விழிபாகு கனிமொழி
சோமனரை யெனலான பகுநுதல்
வாலை பயிரவியான திரிபுரை மகமாயி

வாதினெடு நடமாடு பரையுமை
காளி பகவதி வீரி சயமகள்
மாரி யெனதக மேவு பெரியவள் யெமதாயி

சோனை நிகரெனு மீகையுடையவள்
கூறுமடியவர் பாவிலருள்சொரி
சோதியிட முறைவாமி யருளிய சுதவேளே

சூழ வருபவர் வாதை துகள்பட
தோகை மயின்மிசை யேறியருடதி
சூத முனிபுகழ் நாதர் திருமலை பெருமாளே.

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தன தான

**534.** அனைத்துமுன் செயலென வுனதடியிணை
நினைத்து வந்தனை புரியு மெனுளமிசை
அருட் செய்கின்றவ குருபர சரவண முருகோனே

அடர்த்த செந்தினை மருவிய புனமிசை
கொறித்து ணுங்கிளிகளை கவணெறி கொடு
அகற்றுகின்ற வள்குறமகள் வடிவழ கியமாது

முனைக் கொழுந்துறுபெருகிய தனமய
னிற்கரம் படவருடி பினலமுற
முனைத்த கொம்பெழு கரிவர மருவிய மணிமார்பா

முடுக்குகின்றன பவபிணி மிடிபகை
வருத்துகின்றன சிறியவ ரிகழ்மொழி
முடிக்க வந்தமை பலவித துயரிடை படமூழ்கி

எனைத்துடர்ந்துடல் விடவெகு விரகொடு
வாட்டுகின்றன மனிதரிலெனை யொரு
இழப்ப மிஞ்சிய தமுளனென விவண் விடலாமா

இனித்த செந்தமிழ்மொழி வடமொழி மறை
வுணர்த்துகின்றது வருணிறை கடலென
இசைத்த மந்திர முடிமிசை நடமிடு மொருதேவா

கனைத்த தெண்டிரை பயில்விய கடனடு
பணித்த விண்டொடர் மதிலரணி னில்குடி
கதிக்க நின்றவர் குலமற வயிலுரு வியவீரா

களிக்கு வண்டின முரலிய தொடையணி
குகத்த வன்பொடு வருடரு ததியிது
கரிக் குளஞ்செறி திருமலை யறுமுக பெருமாளே.

தான தன தான தான
தான தன தான தான
தான தன தான தான் தன தான-

**535.** பாவ வுல கூடு லாவி வாழ மனமே யிலாத
பாதக சொரூப னென எளியேனை

பாழ் நரகிலே விழாத தூய பத சேவை யோடு
பால னென வேதயாள மனதோடு

சீவ வதை யோட நீதி மேவு கொடியோர்கள் சார்பு
சேருவிதமே யிலாத படியான

தீப வொளி மேவு சோதி நாடியருள் மோன வாழ்வு
தேசி நல மோடு லாவும் அருள்தாராய்

காவல மகாதி யாக பாவலவர் நாவுள் நேய
காரண மயூர நாத முருகோனே

காரென வெனுரு மீசை மேவி விளையாடு சேம
காணி கதிர் காம வாச முடையோனே

மாவல குமார ஞகி சேவல் கொடியாள ஞகி
மாவர தனுகி நாளும் அருள்வோனே

வானவர் சதா பராவு சோதி பிரகாச மான
மாமகிழ் பொருகை மேவு பெருமாளே.

தனத்தன தனனு
தனத்தன தனனு
தனத்தன தனனு தன தான

536. தெளித்த தேனென பாலென பாகென
திதித்த தேமொழி யாமளை கோமளை
செழித்த பூவல காள்பவ ளாகிய செகமாதா

சிவப்பி நாரணி சேகம லாசனி
அனத்தி லேறிவு லாவய ஞானை
செனித்த மாதன மேலுறை பூரண முளதேவி

களிப்பொ ருயகி யேழையை மாவர
செனச்செய் தாயக மேவுகு ருகரி
கனிச்சொ லாளினி தேபணி பார்பதி மகமாயி

கருத்து ளேமற வாதவ ரோடுறை
மனத்தி கோமதி சாம்ளை பாமயர்
களுக்கு ளேபுகு தாதவள் மேலவ ளமதாயி

அளித்த பாலக ஞனவ ரோதய
குணத்த யாளம ஞேகர னேவனை
அனைக்கு நேரென வேநித மேதுதி யெளியேனை

அருட்க ணலிது நாள் வரை யாதர
வளித்தி டாதவ ஞகினை யாதலின்
அழிக்க வேல்விழி வாயென வோதிய படியாக

மிளிர்த்த வேலினை யேவியெ ழுருயிர்
முடிக்க வேவிடு வாய்த்தயை யேவுரு
மிகுத்த தேவர்க ளேடிய சேவக முருகோனே

மெலித்து ளேனென லாகிய யாவையு
மனத்து ளானவ பாவலர் காரண
விருப்ப மேவிய மாதிரு மாமலை பெருமாளே.

தனன தனத்த தனன தனத்த
தனன தனத்த தனன தனத்த
தனன தனத்த தனன தனத்த தன தான

537. வினையா லெடுத்த கடமுடை பெற்று
நலிவார் பிணிக்குள் மிடியா ரிடர்க்குள்
மெலிவாகி நித்த முடைவா யலுத்த விதிவாழ்வை

வெளியே யுரைக்க மனமோவி லுற்ற
படியே யிளைத்து யிதுநாள் வரைக்கு
மெலிவேனை பத்தி பணியே துதிக்கு மெளியேனை

அனையாத ரித்த படியாத ரித்து
வினைமோ வகற்றி பதமே யளித்து
னருளே கொடுக்க வருவாய் குறத்தி மணவாளா

அனகா சகத்தர் தவமே மறைக்கு
மறியாத சத்தி யயில்வேல் பிடித்து
அழகார் பொழிற்கு ணிறைவார் நகர்க்கு ளுறைவோனே

புனைமா வனத்தி லொருமா தினுக்கு
மகனா யுதித்த வதிபா செழித்த
புனலா னிலைத்த வளமே மிகுத்த வயலூரா

புகழேறு வெற்பி தெனவே படைத்த
கழுகா சலத்தி லடியார் களுக்கு
பொருளே கொடுத்து நலமே யளிக்கு மொருதேவா

பனைநேர் கரத்த னெனவோ தலுற்ற
கணநாத ருக்கு யிளையோய் மிகுத்த
பழமே புழுத்து முதிர் சோலையுற்ற வளநாடா

பனையால் வளைத்த பொழில் சூழலுற்ற
திருமா நகத்தி லெழிலார் தளிக்குள்
பதிவாக நிற்கு முருகா தவத்தர் பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

538. எனை வாதையின் கண் மன நோவு துன்பம்
இட ரூடுழைந்து தடுமாறி
இயல் பேது மின்றி தின மேவருந்த
யிடுபாவ பந்த மயமான
பனையாழ மென்ற கடலூ டினைந்து
பயமாகி நைந்து மெலிவேனை
பதராத வஞ்சல் தர நீ சுரந்து
பதமே வழங்க வரவேணும்
கனமேக மஞ்சு செறி சோலை யண்டர்
களி நாடிலங்கு பொழிலூரா
கதிரேச குன்றை குடிவாழு கின்ற
கன சூரை வென்ற முருகோனே
நனை பூ விரிந்து மது சேர நின்ற
நதி பால ணைந்த வயலூரா
நகரீசர் தந்த முருகா சிறந்த
நகமேவு பண்டை பெருமாளே.

தனத்தனந் தந்த தான
தனத்தனந் தந்த தான
தனத்தனந் தந்த தான தன தான

539. அடர்த்திடுந் துன்ப வாழ்வி
விடர்ப்படும் பங்க மான
அமைச் செனுந் தொந்த மேவு மனமாழ்க
அமைத்திடும் பந்தமான
பவத்துடைந் தெந்த நாளும்
அலுத்தனன் கந்த நாத முருகோனே
பிடர்ப் புறந் தங்கு தோகை
நடத்திடுந் துங்க வீர
பிறப்பறும் பண்பினேய நெறிதாராய்

பிறைக் கொடுங் கங்கை சூடி
கறைக் களங்கொண்ட நேக
பெருக்க முந்தங்கு தேவர் முதலானோர்

சடத்திடந் தங்கு சீவ
வுயிர்ப்பறுந் துன்பம் வீழ
தனித்திருந் துண்ட நாத னருள்பாலா

தளிர்ப் பழந் தொங்கு சோலை
யிடத்திரும் பண்ணை மேய
தவத்தர் தம்பங்கில் வாழு முருகோனே

திடத்த மைந்தன் புமேய
குகப்பரஞ் சந்த மேவு
திருப்பரங் குன்றில் வாழு மொருதேவா

செழித்திடும் பொங்கர் மீது
முகிற் குலந்தங் கலாக
திருத்தருங் குன்று லாவு பெருமாளே.

தனதன தனதன தனதன தந்த
தனதன தனதன தனதன தந்த
தனதன தனதன தனதன தந்த தன தான

540. பணிவிடை யிடையிடை வருகிறதுன்ப
வுரைதரு கொடிய வரற வயிலுந்து
பரசிவ முழுமுதல் பரவியதுங்க முடையோனே

பகையொடு பலதுயர் தரவருகின்ற
சிறியவரிகழ்பவர் குலமறவுன் சொல்
பகர்தரு ததியிது மயிலிலெழுந்து வரவேணும்

அணியருளுத வென விதமொடு கெஞ்சி
வருபவ னெனமன தறிகிலை யின்பம்
அலைகடலென பெரியவர் துதிதங்கு முருகோனே

அடியவர் நலமுற வருளிலிலங்கி
யெழுகதி ரவனிக ரியவயில் கொண்டு
அடையலர் பொடிபடு சினமொடு நின்ற வொருவீரா

திணிமன மொடுகடை பிடியென வொன்றி
பதமலர் கதியென வருபவரஞ்ச
செயுமுறை புரிய வருயிரற வந்த பெருவாழ்வே

செயமுறு குருபர சரவண சிந்து
நகரினி லுயரிய பெருமலிலஞ்சி
செழிபொழின் மருவிய தளியுறைகின்ற செகநாதா

மணிகடை யடியவர் பலர்களிறைஞ்ச
முரசொலி முழவொலி மிகவுமுழங்கி
வளர்கடை யருணிறை பயிலியமுன்றி லுடையோனே

வராநதி குணாநதி தனாநதி பண்பை
குடமரு வியதிரு மலையுறைதுங்க
மகதவ முனிவரர் வலம் வரு கந்த பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

**541.** எனை மோது கின்ற கழ்ந்த
பவ வாழி யின்க ணின்ற
இடராலி னைந்து நைந்து மனமாழ்கி

இயல் பேது மின்றி துன்ப
மய மாகி வந்த ருந்தும்
இடி மேல்வி ழுந்த பங்க பணிமான

வினை யாளு கின்ற பந்த
பவ மூடை கொண் டருந்து
மிடி யால லைந்து லைந்து தடுமாறல்

விதி சார மென்று ணர்ந்து
பத சேவை கண்டி ணங்கி
வினை போக வந்தனஞ் செய் நெறிபேணும்

நினைவாகிய ந்தரங்க
மனதோடி றைஞ்ச முன்செய்
நிறை பாதகங்கள் துஞ்சும் அருடாராய்

நிலை மேருவுங் குலுங்க
வரு சேவகம் புரிந்த
நெடுமாற கந்த செந்தி லுடையோனே

அனையாக வந்து வந்து
மனதோடி ரங்கி யின்ப
அருளே சுரந்து துங்கம் அருள்வாயே

அணியாரு கின்ற பொங்கர்
வளைவாக நின்ற டர்ந்த
அழகேறு குன்ற மர்ந்த பெருமாளே.

தத்தா தத்தன தனதன தந்தன
தத்தா தத்தன தனதன தந்தன
தத்தா தத்தன தனதன தந்தன தன தான

542 அப்பா சற்குண மருவிநி தந்தழை
வித்தே அற்புத குமர சவுந்தர
அப்போ துற்றெழின் மயிலி லெழுங்குக முருகோனே

அத்தா நற்பத மருளரு ளென்றுனை
பட்போடுற் றனுதின முயர் வந்தனை
யத்தா லெற்கினி தருள்செயு மன்பொடு வருவாயே

ஒப்பா புற்குற மகள் மருவும்புன
முற்றே பற்பல மொழிகள் புகன்றவள்
உத்தேசப்படி மனமகி ழும்புயம் அருள்வோனே

உற்றோ ருக்கிடர் பிணிமிடி முன்பவம்
அற்றோ டப்புரிகிற பர வன்பரி
ஞெட்டாருக் குயிரற வயிலுண்டிட விடுவோனே

இப்பூ விற்பெரி யவர்துதி மந்திர
வற்பே உற்பவ மிளிரிய பண்பையி
லெக்கா லத்திலுமுறை பரவன்றிற லுடையோனே

இக்கா டற்செறி தலைஇய தண்டலை
நற்சா லிப்பயிர் வளர்பணை நன்கமை
எத்தே சத்திலு முளவள மிங்கென நிறைவாகி

தப்பாமற் பொழிமழை தவழுந் தளி
குற்றா லத்துறை குழல்மொழி யுந்தரி
சட்கோணத்துறை குமரி பயங்கரி யருள்பாலா

தட்பாகப் பொலிபணை பொழிலும்புடை
மிக்கா ரப்பயில் முனிவரர் வந்தனை
தற்கே நிற்பவ திருமலை யன்பர்கள் பெருமாளே.

தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த தன தான

543. கணைப்பொழு தேனுமின்ப முறப்படையாத பந்த
கதிக்கிடனுக வொன்ற விடலாமா

கடைச்சிறி யேனையெந்த விதத்தனு பூதிதந்து
கணிப்பதென்னுள் சிறந்த முருகோனே

மணக்குற மாதைமுந்தை முறைப்படி யாளவன்று
வனத்தினிலே யணைந்த பெருவாழ்வே

வரைக்குவ டாதியந்த மிருப்பவ வேலைகொண்ட
வலக்கர நாதசெந்தி லுடையோனே

பணக்குவடாள நின்ற தனத்தவர் பாலிலன்பு
படைத்தவனுன பண்டை யுடையோனே

பசிக்குணவேது மின்றி வருத்திய பாவபங்க
பயத்திடையே பதுங்கி பலநாளும்

பிணச்சட மாயலைந்து யிளைத்தனன் நீதிகொஞ்சு
பெருக்கமுதா யெழுந்த பெரியோனே

பிணிப்பகை யோடெழுந்த மிடிப்பகை தீர இன்பு
பெயத்திரு நாகமர்ந்த பெருமாளே.

தனதன தனதன தந்தத் தானன
தனதன தனதன தந்தத் தானன
தனதன தனதன தந்தத் தானன தன தான

544. உயிரற யிறுததி வந்திப் போதெனை
நுதியயில் கொடுமூர முண்டப்பால் செலும்
ஒருதயை தரவனை கெஞ்சிட்டேசிய முறையாக

உதவி செய்திடலது நன்றிக்கோர் விதை
யென பெரியவருரை யிந்தப் பாரிடை
உனதருள் பதமலர் வந்தித்தேவரு மெளியேன்மேல்

பியிவியல் படியவர் பண்பிற்கூறிய
தயையினை யருளிலை கந்தப்பாயினி
பருவயினுதி கொடுதுண்டித்தேவிட வசவேணும்

பழவடியவருடனின் றெக்காலமு
முதவி செய்கிற பாசந்தக் கோடிடை
பணிதளி குடியுறை செந்திற்சேவக முருகோனே

கயிரவவிதணைகை குன்றச்சேரியில்
உறை குறமகள் மணமன்றற் கோடிய
கதிரவ னிகரிய செம்பொற் பூதர மௌனலாண

கவினெழு குருபர பண்பைக் கோர்நிதி
குருமுனி பரவிய சம்புக் கோமுறை
கழறிய வறுமுக சந்தப் பாவல ருளமேவி

செயிரற நிலைபெறு விந்தைக் காரண
பயிரவி பகவதி கஞ்சிக்காகிய
சிவபரை திரிபுரை மைந்தற் பானிறை பெரியோனே

சிவசரவணபவ வென்றெக் காலமு
முரைதரு முனிவர ரன்பிற்காகிய
திருமலை தனில்வளர் சந்தப் பாவலர் பெருமாளே.

தனதன தனதன தனதனத்தன
தனதன தனதன தனதனத்தன
தனதன தனதன தனதனத்தன தன தான

545. தளிதொழி வினிவிழிவுற நடப்பவ
ரடியவர் துயரிடை யமை யளிப்பவர்
தருமுறை தவறிடு செயலளிப்பவ ரிவரோடு

தளிபணி விடைகெட வமில் நடத்திகள்
சுடரொளி படவணை தொழின டத்திகள்
தனநல மருவிய பொருள் வரத்திகள் பலரோடு

அளியரு ணிலைபெற வளர் கிருத்திகை
திருமுறை தனில் துயருற விருத்திசெய்
அசடுற வினமுள கசடடர்த்திகள் அறிவினர்

அகமுற வெளிநிலை கதவடைப்பவர்
பலவிகழ் மொழியினை சொலிலெடுப்பவர்
அறவவர் குலமற மயில்நடத்திடு மயில்வீரா

தெளிவொடு முனையணு தினமுநத்திய
பெரியவ ரிடமுறை பகவ நித்திய
சிவபர அறுமுக குமர சற்குண முடையோனே

திருமுகில் மருமக னென வுரைத்திடு
குருபர சரவண பவ துதிப்பவர்
திறமுற வருளிய புளிதவிற்பன ரகவாழ்வே

களிதகர் புறமிசை வரதசுப்பிர
மணிய பொனிலகிய தருமவற்புத
கமழ்பரி மளமுள மரும பொற்பழ கியவேளே

கனி மூகில் மருவிய பொழில் வளைத்துள
தலமுள திருமலை சிகர பொற்றளி
கவினுறு வணமுறை வரத முத்தர்கள் பெருமாளே.

தனன தனந்த தனந் தானதன
தனன தனந்த தனந் தானதன
தனன தனந்த தனந் தானதன தன தான

546. கருணை நிறைந்த பெரும் பேறே வளர்
அருமை நிறைந்த குணஞ் சேர்பேகுண
கனிவு நிறைந்த வரின் சார்பேவுறை முருகோனே

கனக மிகுந்த நிறம் பூவார் பொழி
னகர மிகுந்த தவந் தானேயென
கனிய விளங்கு பதம் போதாகிய செகநாதா

தருண மிலங்கி வருந்தேவா மன
வுரிமை நிறைந்த வெனன்பே வாரண
சரத பிறங்கு கடம் பாமேலவ ருடையோனே

தகரி லிவர்ந்து வருந் தூயாதிப
புகழி லுயர்ந்து சொலும் பாவணர்கள்
தனது சிறந்த வருஞ்சேயே யென வருள்வோனே

அருளை விரும்பி நிதம் பாவோதிய
முறையி லிருந்த வணஞ்சீர் தேர்பர
அறிவு பொருந்து பதந்தானே தர வரவேணும்

அளியி லெழுந்து வருங் காரே மழை
துளியு ணிறைந்த நலம்பாலே நறை
யதனி லமைந்த பழம் பாகே யடி யவர்பாலே

பெருமை வழங்கி வருந் தாயாகிய
குமர சவுந்தர கந்தா பூரண
பிரிய மிகுந்த வரும்பே நாதர்க ளுகவாழ்வே

பிரபல வெங்கு நிறைந் தோனே பொழில்
நகருறை கின்ற சிவன் காலே யருள்
பெருகி நிமிர்ந்த தடம் போாதர பெருமாளே.

தனதன தனதன தனதன தந்த
தனதன தனதன தனதன தந்த
தனதன தனதன தனதன தந்த தன தான

**547.** பழகிய வடியவ ரிடரில் வருந்த
விடுவதி லழகிலை குருபர கந்த
பாசா வணபவ வரநதி செந்தி லுடையோனே

பதமலர் கெதியென நிதமு மிறைஞ்சு
மெளியனி னிலையினை யறிகிலை துன்ப
பருவா னய நய வருகிற தென்ற படியாக

கழறிய மொழியினை நினைவிடை கண்டு
தயைதர மனமிள கியநிலை கொண்டு
கடை யனை நலமுற வருளுவ லென்று நிலையாக

களி நட மிடுமயி லுயர் புற நின்று
தெரிசனை யருடரு ததியிது வந்து
கனிவுறு மனமொடு சுதனெனு மன்பு தருவாயே

பழவினை தருதுயர் மெல மெல வந்து
செயு முறை யிது வென சொல வறி வின்றி
பதறிய வடிமையை யிதுதகி வந்து அருளாயேல்

பரு வயில் கொடு வுடல் துணிபட யின்று
புரிகுவை யல தெனிலருளி லெழுந்த
படிதயை யுதவுவை யிது தனி லெந்த முறையேனும்

மழவிடை சிவசுத செய நல மென்ற
உறுதி கொளெளி யன திடமன பண்பை
மதி மறை தழுவிய மனு விலிலங்கு முருகோனே

வசி முகில் மருவிய பொழி னகரின் கண்
அறம கடிரிபுரை பயிர விதந்த
வளமலி திருமலை முடிமி யினின்ற பெருமாளே.

தனதன தனன தான
தனதன தனன தான
தனதன தனன தான தன தான

**548.** படிமிசை கடைய னான வெளிய புனா னு மாகி
பதமலர் பரவி நாளு முனைநேடி

பருவர விடையின் மூழ்கி வருவதை முறைமை யோடு
பகர் தர செவியு ருத படியாக

விடி லெனை யுரிமை யாக தயை தருபவர் களைவர்
வெகு வித உதவி யீயு முருகோனே

வினை வழி யுறவ மேக பிணி மிடி பகை யினூடு
வெருவிய வடிமை மீது இதுகாறும்

அடிமலர் கமல மான யினை யினை யருளிடாது
அழிவுல கிடையில் வாழ விடலாகா

அறுமுக குமர நாத பயிரவி சுத தயாள
அனை யினு மினிமை மேவு முருகோனே

தடி மனது டைய வேழை யென யிது வரை யுநீதி
தர விலை யெனினு நீயு மினியேனும்

தயை யொடு மயிலை யேவி எனதுயிர் பருகவே செய்
தன திருமலை யில் மேவு பெருமாளே.

தனதன தனதன தந்தத் தானன
தனதன தனதன தந்தத் தானன
தனதன தனதன தந்தத் தானன தன தான

**549** இதுவரை யுனதடி வந்தித் தேவரும்
எளியுனு நலமுற சிந்தித் தாயிலை
இதையெவர் புறமுரை தந்தெற்காதர மெனவோத

இடுபணி விடையிடை வந்தெற்கேதுயர்
தருகொடி யவாறி கொன்றற்காகிய
எழிலயில் கரமுள கந்தப்பாருக முருகோனே

சதுர்மறை பரவிய செந்திற்சேவக
பரசிவ குருபர சங்கத்தா ரொடு
தமிழுரை நீறுவிய விந்தைப்போதக முடையோனே

தனதன தனதன தந்தத் தானன
வெனநட மிடுபவளன் பிற்கார்சுத
சரவண பவகுக பண்மைக்காரண வெழில்வேளே

முதுமொழி யென்வளர் சந்தப்பாபுனை
யடியவரகமிசை நின்றெக் காலமும்
முறைதரு பனிமொழியின் சொற் சேகரவுரையோடு

முடிவுறு கவி மழை சிந்தித் தேரிவர்
பகலவ னிகரியது நகத்தா னிறை
முனிவரர் பரவிய குன்றிற் கேறிய செகதீபா

கதுமென வுனதருள் தந்திப் போதினி
நல முறு தெரிசனை செஞ்சொற் பாமுறை
கவினுற வுதவி செய் பண்புச் சீரொடு வரவேணும்

கனிமிகு பொழில் தலை மஞ்சுற் றேறு கில்
வசிவளை மலி நில நன் செய்ச் சூழ்புள
கதிதிரு நகமுறை யெந்தைப் பூவல பெருமாளே.

தந்த தனத்த தனந்தான தன
தந்த தனத்த தனந்தான தன
தந்த தனத்த தனந்தான தன தன தான

550. அன்பர கத்தினுறைந் தோனே வுல
கங்கள் படைத்து னிறைந் தோனே மறை
யந்த முடிக்கு நிவந் தோனே மலை யுடையோனே

அம்பர முட்ட வளர்ந் தோனே பர
சங்க தமிழ்க்கு ளுயர்ந் தோனே தவ
அந்தணருக்கு முனின் றோனே முகில் மருகோனே

துன்பை யகற்ற வெழுந் தோனே யரு
ளின் பரசத்தில மிழ்ந் தோனே யுயர்
தொந்த மிகுத்த பழந்தேனே வய மயிலோனே

தும்பை கடுக்கை யணிந்தோனே சரம்
நின்ற வனத்தில் பிறந்தோனே சிவ
துங்க மலித்த பெருங் கோனே குக முருகோனே

தன்பர மத்த மணிந்தோனே மறை
யின் பொருள் கற்க வுறைந்தோனே மயல்
தந்த குறத்தி யணைந்தோனே பிணி முகமேலே

549-ம் பாட்டு வசி — இருப்பிடம்

தங்கி பவத்தை யரிந்தோனே மய
மெங்கு நிலைக்க யிருந்தோனே செய
தம்ப மெனச் சொலளந் தோனே மிகு வெழிலோனே

மன் பர வித்தி லமைந் தோனே உக
ரின் பொருணிர்த்த நடந்தோனே யென
வந்தமை யச்செய் விதந்தானே புகல் பெரியோனே

மைந்த னெனச் சொல் சுரந்தே தாயக
வன்பு படைத்த மனந்தா மாதிரு
வண் பொழி லுற்று வளைந்தோர் மாமலை பெருமாளே.

தானன தந்த தந்த
தானன தந்த தந்த
தானன தந்த தந்த தன தான

551. ஓயாத துன்ப மொன்று மாபாதகந் துடர்ந்து
வூடாடு கின்ற பந்த மயல்மீது

ஓய் வேலை யந்தரங்க மேவாழு கின்ற சிந்தை
யூடே விளங்கு மன்பு தருவாயே

வாயாரு கின்ற செஞ்சொல் பாவாணிதம் புனைந்தும்
மாதாரகம் புரந்து இதுகாறும்

மாமாய் கையுஞ் சிதைந்து போமாறிதம் புரிந்து
வாழ்வானதும் பிறங்க வருளாமல்

நீயாரெனுங் கொடுஞ்சொ லாலே யிரைந்தறைந்த
நேரானை யொன்ற நின்ற படியாக

நியே யிருந்தருந்த யேமாறி நைந்துநைந்து
நீறுகவுந் தயங்க விடலாமா

ஆயாக வந்தனந்த சேமாதி யுஞ்சுரந்து
ஆள்சேம செந்தில் தங்கு முருகோனே

ஆறேறு கின்ற பண்பை மாவேறு குன்றுறைந்த
ஆசாரமுஞ் செறிந்த பெருமாளே.

தாந்தனந் தான தான
தாந்தனந் தான தான
தாந்தனந் தான தான தன தான

552. தேன் கரும் பானபாட லாங்கமைந் தோதியோதி
தீங்கரும் பாத சேம முடையோரால்

தேன் கசிந் தோடலான பூங் கடம் பாதி மாலை
தோர்ந்திடும் பார மார்ப முடையோனே

வான் கரும் பாடு சோலை யாங் கடுந்தூம மேவ
வாய் ந்திடு ந்தான மான வயலூரா

மாய்ந்திடும் பாவ மூடை தாங் குறும் பாவி யாகி
வார்ந்திடும் பேறிலான வெளிமையனின்

ஊன் கடம் பாழ தாக நேர்ந்துணுந் தீய நோவி
லோய்ந் திடும் கூடி தோடு பலவாறும்

ஊண் டினந் தேடலான நாண் டினும் பேதை யாளி
ஓம் பதஞ்சேர நாளு முணாராது

கான் கடஞ் சேர வோடு மான் குலம் போல வோடி
காண் கரும் போத நீதி யிலனுகி

காம் புறும் பாவ யேழை யீங் கெழுந்தாள் வைநாத
காந்தளம் போது சூடு பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

**553.** மிடிபாவ வஞ்சகங்கள் குடியாக வந்துநின்று
மெலிவாக மென்றருந்து வதினாலே

விடியாம லுந்தயங்கு மிருளோடு டைந்துநைந்த
விதியாக வுன்பதங்கள் துதியாத

தடிபோலும் நின்றசிந்தை தொழுகாத வன்கரங்கள்
தறுகாதவன் பிதங்க. ளெனலோடு

தமிழோதி வுன்பதங்கள் பணியாமலும் பவஞ்செய்
தவரோடு நின்றிணங்க விடலாமா

அடியேனை யந்தரங்க முளநாயெனும் பதங்கள்
அருள்வாய் நலஞ்சிறந்த முருகோனே

அணி யாரு கின்ற கங்கை மலை மாது பொன் புரந்து
அடிபேணு கின்ற நங்கை யேமதாயி

துடிமேரு வுங்கு லுங்க நட மாடு பண்ப மைந்த
துரை பாலிலங்கி நின்ற வொருதேவி

சுதனே வணங்கு மன்பு தருவாய் பொலம் பிறங்கு
சய மேவு குன்ற மர்ந்த பெருமாளே.

தன தான தனன தந்த
தன தான தனன தந்த
தன தான தனன தந்த தன தான

**554.** அடியார்கள் மனது நொந்து துயரேற மொழி புகன்ற
அநி யாயர் கெட விடைஞ்சல் புரிவோனே

அறி வீனர் மடையர் வஞ்ச முடையோர்களற வொழிந்து
அருணை யவராதர் தங்கு பொழிலூரா

கடிமேவு பொழி லடர்ந்து நறை மாரி பெயவமைந்து
கதிரோடு செல வருந்து வயலூரா

கதிரேச முருக கந்த குருநாத வரத சிந்து
கரை யோர மிளிர நின்ற வொருவீரா

வடிவேலை யிலகு செங்கை பிடியோடு வலமிலங்க
வளி யோடு முலவ நின்ற செகநாதா

மக தேவ குமர சம்பு சுதவீர சரத விஞ்சை
வரதீப தரும துங்க முடையோனே

படி மீதிலள விறந்த வசு ராதியர விந்து
பட வேலை யுருவ நின்ற செயலாளா

பல காலு முனை வணங்கு மெளியேனு முயரு பண்பு
படை ஞான முதிரு பண்பை பெருமாளே.

தனத்த தந்தன தனதன தந்தன
தனத்த தந்தன தனதன தந்தன
தனத்த தந்தன தனதன தந்தன தன தான

**555.** நினைக்கு மந்தணர் முதலிய வன்பர்கள்
மனத்தி ருந்தரு ளுதவிய சுந்தர
நிலைத்த பண்பொழி லுறைபர தெங்கொடு பலமாவும்

நிலத்த டம்படி பலவுயர் குங்கும
முடுத்த சந்தன மிலவுக டம்பணி
நிறத்த கந்திகள் குரவகில் கொங்கமை மருதோடு

அனைத்து நின்றெழி லொழுகிய தண்டலை
வளைத்த பண்பணை மருவிய பண்பமை
அழுத்த மிஞ்சிய வளமலி பொன்செறி வயலூரா

அனர்த்த முந்தரு கொடியவ ரின்குல
மொழிக்க நின்றவ வடியவ ரின்புற
அருட்செய் கின்றவ குருபர விந்திரன் முதலானோர்

வனைத்த துன்பற வருளெனவன் பொடு
வுரைத்து வன்பகை யிருள சூரன்றற
வடித்த தன்கர வயிலினை யுந்திய செகவீரா

மதித்துனன் பரை பலவுயர் செஞ்சொலி
லுயர்த்தி வந்தனை புரிபவர் தன்குலம்
வளர்த்தி தந்தவ சரவண செந்திலை யுடையோனே

வினைக்கெ ழுந்தவம் விளையுமிவம்புவி
யிடத்த மைந்தன னலமுறு மன்பினை
விதிக்க வந்திலை யெனினெனை யின்புற யெவராள்வர்

மிகுத்த பொங்கரை மருவிய நன்செயி
லுதித்த பங்கய மலர்மகள் குன்றுறை
விழைத்தரு ந்தவர் பரவிய மந்திர பெருமானே.

தனதன தனன தந்த
தனதன தனன தந்த
தனதன தனன தந்த தன தான

556. உடனல மிலாமனைந்து மெலிவுதனிலே வுழன்று
உனதருடையாள மின்றி யழிவேனோ

உயர்குமர நாதகந்த செகபர விநோததுங்க
உகரகர நாதசெந்தி லுடையோனே

படபடெனவே மிகுந்து வருதுயரிலே நலிந்து
பகருதராணி யிந்த வுலகேழும்

பரவுபதமே நினைந்து உருகு மயமாகிவந்து
பணியுமெளியேனை யுந்த னருளாலே

கடமையெனவே புரந்து வுரிமை மிகவே வழங்கி
கருணைபொழி வாயுகந்த முருகோனே

கடலிரவி போலெழுந்து வருதகியிதே சிறந்து
கனகமய மாயிலங்கு பொழிலூரா

வடவருவி நாதரம்பை பயிரவிகுமாரி செங்கை
மருவு சுதனென பண்மை யுடையோனே

வளருபொழிலே வளைந்த திருவுறை மகா நகங்கொள்
வர.த சிவஞான வன்பர் பெருமாளே.

தன தனன தான தந்த
தன தனன தான தந்த
தன தனன தான தந்த தன தான

557. வளாருணை மீதெழுந்த வொருகுமர நாதவன்பு
வரவுனது தாள்வணங்கு மொருநாதன்

மனதினிறை வாயமைந்து புகழ் பகரவேவழங்கி
வருமறு முகா செயந்தி வரைவாழ்வே

தனதனென வேயிலங்க வருகிற மயூர கந்த
சதுர்மறை பராவு துங்க முடையோனே

தமியனெனை யாள வந்து னருமை மிகவே புரிந்து
தயை யருளுவாய் சிறந்த முருகோனே

களப புழுகாதி சந்த கலவை பல வாயணிந்து
கனகமய மாயமைந்த மணிமார்பா

கவனகுற மானிணங்க புனமறு கிலே நடந்து
கவருகுற வேடரின்ப மருகோனே

அளகைநிக ராகநின்று தரும நிறைவான வன்பர்
அருளுருவ மாய் விளங்கு பொழிலூரா

அடிய னெளியே னலஞ் செய் சாத முறையே நினைந்து
அணி கொடி ருநாகமர்ந்த பெருமாளே.

தனதன தனதன தானன தந்த
தனதன தனதன தானன தந்த
தனதன தனதன தானன தந்த தன தான

558. அடியவர் மன மறியா மலனந்த
இழி மொழி பகரறி வீனர் களஞ்ச
அயில் வல முருவிய கீரணி கந்த செகவீரா

அரிகர குருபர வீர செயந்தி
அறுமுக சரவண மாவிர தங்கள்
அநுபவ முள பெரியோர் களிறைஞ்சு மொருதேவா

படி மிசை யருளுரு வாயமை கின்ற
சக பர சிவபர யோக மிகுந்த
பயிரவி பகவதி காளி நலஞ்செய் மகமாயி

பயிலுல கனைபரை நாரி வணங்கு
பவருள முள மணி தேவி யறஞ்செய்
பவளுமை யரி யிவர் நீலி விளைந்த தவமேலோர்

இடமுறை மலைமக டேயவள் என்று
நிலை பெறு துரை மகள் மாகனி மங்கை
இறை யிட முறை யருளேறிய நங்கை யெனுமாதா

இமை யவர் துதி புரிவோர் கணிறைந்த
பதிபொழி னகர் வளர் சாறி லெழுந்த
இளகிய குழல் மொழி வாயுறை தந்த சிவகாமி

துடி யிடை யுடைய வளாரண வம்மை
தவவுரு வென வமை காரண மைந்த
துயரற வொரு மொழி தாவென கெஞ்சி யிதுகாறும்

சுக நல மருளிலை யாவர் களன்பு
தருபவ ரினிதருள் சேமம் விளங்க
சுய திருமலை வளர் பூரண துங்க பெருமாளே.

தனதன தனதன தனன தனந்த
தனதன தனதன தனன தனந்த
தனதன தனதன தனன தனந்த தன தான

559. மனமயலற வருளருள வெழுந்த
குருபர சரவணகுமர வறஞ்செய்
மகிதல முடையவரிலக விளங்கு முருகோனே

மகபதி பரவிய சரத விலஞ்சி
நதிமருவிய பொழில் வளைவு ளிலங்கி
வளர்தளியுறைபர வரதமுகுந்தன் மருகோனே

உனதெழின் மலரிணை மனதினினைந்து
வருமடியவரிட ரொழிய சினந்து
வொளிரயிலுருவிய வயிரமிகுந்த செகவீரா

உறுதுணை யிலையருள் பகவசுகந்த
பரிமள புழுகொடு களபமணிந்த
வொருபர சிவமுதல் நுதலிலெழுந்த மகதேவா

அனமிசை வருமயனறிய விரும்பு
மறைமொழி பொருணல முதவிபிறைஞ்ச
அறிவுற நலமருடழைய வறைந்த குருநாதா

அகருகர் மகரொடு மருவி விளைந்த
பிரணவ முழுமுதலருமை செறிந்த
அணிகரி முகனிளையவ னெனவந்த வாதீபா

தனபதி குணபதி உகரிலமைந்த
விதைவழி யெழுமுளை பயிரவியம்மை
தருசுதசு பகைவரை நொடியிலரிந்த திடவேளே

தழைபொழில் வளமலிபணைகள் விளைந்த
திருமலை முடிமிசை யழகுகிளர்ந்த
தளியுறை நவநிதி யெனவுமுயர்ந்த பெருமாளே.

தான தந்தன தானு தனுதன
தான தந்தன தானு தனுதன
தான தந்தன தானு தனுதன தன தான

560. பாதபங்கய கோலா கலாகுண
சீலவம்பிகை பாலா சதாவுனை
பாடுமன்பர்கணேயா மகாதயை யுறுவேளே

பாரதிண்புய வீராகனுதிப
ஞேடெழுந்தவ சேமாதிபாருக
பால கந்தசுவாமீ மனோகர வாதீபா

சீதசெந்தமிழீசா நலாதர
மேவு பண்பொழில் வாசா குணாகர
சேம செம்பணை நடாகலாநிதி யெனலோடு

தேவதுந்துமி வாசா சராசர
[illegible]யெங்கணு மூவர் மகாமுதல்
தேருமந்தணர் நாவேறிதாசன மகதேவா

காதலன்பொடு மேனுள்முனேவரு
கானவன் குறமா தோடுலாவுப
கார வஞ்சனை தீதோடுடரிடிய கொடியோரை

காரவன்றிறவே லேவியேயவர்
தீரவன் சினமோடே கடாவிய
காணி கொண்டமை மேலோய் பராபர முருகோனே

மாதலம்புவி யாகாய மோடுறை
ஞான சுந்தர தேவா தயாபர
மான தன்பர மாயாவி நோதமு முடையோனே

வானரம்பயில் மேலோக மேவிய
மாமரங்க ளொடாளும ராமரம்
வாழு பண்பொழில் மேல் நாகிலேவளர் பெருமாளே.

தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன தன தான

561. சாது சங்க மகாதவ யோகியர்
கூறு மந்தணர் மாவிர தாதியர்
சார்வலன் பினர் மாகரு ணாலய மௌனலான

சாமி பண்பொழில் மாவள மேவிய
ஆரி னின்றவ மாதவ தாயக
தார்கடம் பணிமார் பவரோதய முருகோனே

ஏது கொண்டுன தாளிணை யேபணி
யேழையின் பவ வாதனை யேயற
யீசர் மைந்த மயூர தயாநிதி வரவேணும்

ஈழையின் பிணி யோடமை மாமிடி
சேருவன் பகையே கவுண ரயில்
யேவு கின்றவ வீர குணாகர முடையோனே

வாது கொண்டெனை யேசிய தீயவர்
மாள வந்தவ மாமறை யாசன
வாலையம் பிகை தேவி பராபரை மகமாயி

மாரி யந்தரி பூரணி காரணி
காளி யம்பிகை கோமதி மாமதி
மாது சுந்தரி வேய்குழல் வாய்மொழி யெமதாயி

தாது சென்ற வனேறுறை தாயவள்
பாடு மன்பர்கள் நேய தயாபரி
சோலை தண்டலை சூடிய மாநக ருறைமாதா

சோதினன் புடனே தருமாசுத
காளை யின்றெனை யாதரி யாதரி
சூதமிஞ்சிய மாதிரு மாமலை பெருமாளே.

தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன தன தான

**562.** மாதவம் புரியோக வந்தணர்
தீதிலன் பொடு சேர நின்றவர்
மாமன் மந்திர மோது கின்றவ ரிவர்பாலின்

மாமன ந்திகழ் பேற நின்றவ
சூது வஞ்சகர் நீற வென்றவ
மாதமும் பணி வோர கந்தனில் விளையாடி

வோது செந்தமிழ் பாடலின் புற
வாடவந்தவ நாத சங்கரா
வோமறிந்திட வேயறைந்தவ னெனலாகி

ஊறு வந்தணு காத தந்திர
மேற நின்றவ காவனந்தனி
லோடியங்குற மாதனைந் தருண் முருகோனே

பேதகம் புரிவார்க ணெஞ்சினை
யீறுகின்ற வசாவகங் குறி
பேதை யென்றெனை யாள வந்தருள் புரிவாயே

பீடுயர்ந்தெழு நாடணிந்தவ
வாமி சுந்தரி காமி யந்தரி
பேறு யர்ந்தருண் மாரியம்பிகை சிவகாமி

வேதனைஞ்சிர மோட வந்தவள்
தாதி வர்ந்துயர் மாலை கொண்டவள்
வீரி மங்கல சூலி தன்சுத செயவேளே

வீறெழும் பொழில்சூழு பண்டையில்
மேவு பண்பினர் ஞானமும் பெற
மேலுயர்ந்திரு மேவு குன்றுறை பெருமாளே.

தனன தனத்த தனந்தான தன
தனன தனத்த தனந்தான தன
தனன தனத்த தனந்தான தன தன தான

**563.** உறுதி படைத்த மனந்தா னேவுற
வருமை படைத்து நலந்தா மேதவென
உனது பதத்தி னிதந்தானோ தியு மிதுகாறும்

உயர்வை யளிக்க மனந்தா னோயிலை
யெனலை யெவர்க்கு வரைந்தே கூறுவல்
உவமை யொழித்து நிதந்தானே வுரை முருகோனே

அறுதி படைக்க யுகந்தா யாகினு
மிதுதகி யற்பி லெழுந்தே வேலினை
அமைய விறுத்தி வகிர்ந்தே யாவியை கொளுவாயே

அறுமுக முற்று வளர்ந் தோனே சக
வுரிமை படைக்க வெழுந் தோனே நுத
லனலி லுதித்த கொழுந்தே நாரணன் மருகோனே

தறுகணி னத்தை யரிந்தே பாரிடை
யமரர் தமக்கு வரம்பே ராசிகள்
தழைய வுரைத்த சுகம் பேராதர முடையோனே

தனன தனத்த தனந்தான வென
நடன பரத்திணிடஞ் சேராரண
தலைக டுதிக்க வரும் பாதா மரை யுளதேவி

குறுவகை யிடத்தி லுறைந்தே வாழ்பவ
னினிமை கலித்த வறஞ்சேர் சோதரி
குமரிய ருட்செய் சுதன் பேருகிய முருகோனே

குகை களிடத்தி லிருந்தே மாதவர்
தவமுறை பற்றவு கந்தே சீரருள்
குருபர பட்பொழில் கந்தா நாவலர் பெருமாளே.

தனன தத்தன தன்ன தத்தன
தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன தனன தத்தன தன தான

**564.** எனை யடுத்தவர் நல முறத்தய
வினை யளிப்பவ வருணை வெற்புறை
இனிய சுப்பிரமணிய விற்பன னெனலாகி

இள குளத்தவர் நினை வினிற் பவை
முடியவற் புதம் அருள் செயுத்தம
இமைய வர்க்கொரு தள பதித்துரை யதிவீரா

பனை யினுக்கிணை சொற சொறப்புள
கர தலக்கரி முக வனுக்குயர்
பகரு நற்றுணை யதிப சற்குண முடையோனே

பணிபவர்க் கருளுதவ நிற்பவ
அமுத சொற் பொழி முகினி கர்த்தவ
பகை யறச்செயு மயில் படைத்தெழு முருகோனே

சனை யிடைப்படு குவளை நற் றொடை
மரும கற்பவ ரிதய வுற்பவ
சமுக வற்பமை யடியர் கட்கரு டருவோனே

துரித நித்திய விரதர்கட் குயர்
பதமளிப்பவ சரதகற் பர
சுய நிலைப் பொருளென வுரைப்பவ ரகவாழ்வே

அனையி னுக்குயர் பிரிய முற்றவ
தனத நற்குக வரத சிற்பர
அமுத ருட்பத முத வயித்தகி . வரவேணும்

அழகி நட்பொடு பயிலு பட்பொழில்
குடதி சைப்பதி விருது பெற்றுயர்
அருள் நவிர்த்திரு மலை யினிற் புகழ் பெருமாளே.

தந்த தனந்த தனந்தா தானன
தந்த தனந்த தனந்தா தானன
தந்த தனந்த தனந்தா தானன தன தான

565 அன்பி னிறைந்த செழுந்தேன வுல
கெங்கு நிறைந்து விளைந்தோனே பவம்
அஞ்ச வருந்து பெருங்கோவே யென வுலகோர்கள்

அண்டி வணங்க வரும்பேறே என
கந்த மிருந்து விரிந்தோனே சுக
அங்கி புனைந்த பெரும் போதவ னிகர்வேலோய்

இன்ப மலிந்த விருந்தே மாதவர்
பண்பி லுயர்ந்த வென்பே தாயகம்
என்று பிறந்து கடம்பா பாவில ரகவாழ்வே

இன்ப சுகங்க ளமைந்தே யாரண
மன்பர் கந்த பதந்தா தாவென
எங்கு முழங்க வெழுந்தே யாமயி — விடமேவி

துன்பற நின்று வுணர்ந்தோர் கூடிய
சங்க மிருந்து வுயர்ந்தோனே யிடர்
தொன்று பவங்க ளறுந்தே வோடிடு — மறைகூறி

தொண்ட ரிடைஞ்ச லொழிந்தே நாடொறு
மின்செ யறங்க டளர்ந்தே வாழ்வுறு
தொந்த மலிந்த வரந்தானே தரு — வருவோனே

பொன் பரமன்ற நடந்தா னுடைய
வன்சுத னென்று வளர்ந்தே மாவளி
புந்தி யிணங்க வணிந்தே நாய் மாகரி — யுடையோனே

பொங்கு லகங்களி கழ்ந்தே பேசிய
பங்க மொதுங்க பதந்தா நாயக
பொன்செறி பண்பை நகந்தானேறிய — பெருமாளே.

தனத் தனன தான தந்த
தனத் தனன தான தந்த
தனத் தனன தான தந்த — தன தான

566. அருட் பரமயோக துங்க பருப்பத விலாச மங்கை
அணைத்து யிருலாவி யெங்கு — மயமாகி

அனிச்ச மலரேடை வென்ற பதச்சரண வீரி கங்கை
அமைக்கு நிகர் தோளி நங்கை — யெனுமாதா

மருட் செறி விலே யுழன்று பவக் கொடி யரா யெழுந்து
மயக்கிய மிஞர் கடங்கள் — மயன்மூழ்கு

வரத்தி னிடையே வளர்ந்த தரத்துடைய பாப வஞ்சர்
மனத்திடை யுறுத பண்பி — னபிராமி

பொருப்பென தயாள மொன்று பரைச்சி சிவகாமி தந்து
பொருட் பினிடையே விளங்கு — முருகோனே

புகழ்க்கவி சதா பகர்ந்து நினைக்கு மெளியேனை யன்பு
பொருத்தினி சதா வணங்கும் — அருடாராய்

திருப் பதியிலே நிறைந்த முகிற்கு மருகா வறஞ்செய்
திறத்துடைய ரோடுறைந்த — வொருதேவா

திருக்கு வடிவேலேறி யன்பர் பவத்தை யரிவோய் சிறந்த
திருக்குமர நாத பண்பை பெருமாளே.

தனன தந்த தனதன தந்தன
தனன தந்த தனதன தந்தன
தனன தந்த தனதன தந்தன தன தான

567. மன மிறந்த மகா தவ ரன் பினி
லொழுக வந்த நருவுனு வண்டென
வளருகின்ற குகா பரை யம்பிகை சிவகாமி

மகதியின் சுர மாயமை செஞ்சொலி
னுரிமை யந்திரி யாமி நலங் கெழு
வாத மிஞ்சிய தேவி பரம் பரை யெனுமாதா

கன மிகுந்தவ ளுரி வணங்கிய
அடி யபன் புறை பூரணி சந்தன
கள பகுங்கும நான மணிந்தழ கியவீரி

கவிதை கொண்டெனை யாதர வன்பொடும்
அருளு கின்றவள் வாமி நிதம் புகழ்
கனகி பண் புரவே பணி கின்றவ ளுமைநீலி

அனக னின்புறு மாறு விடங்கனி
குமரி செண்பக மேவு வனந்தனில்
அமைதி கொண்டெ னையாள விளங்கிய மகமாயி

அரசி கந்தரு வாதிய ரென்றினு
முருகு பண் பொடு பாடல் களின் புற
அருள நின்றவள் சேம மிகுந் தவள் சுதவேளே

ஊனது பங்கய மோகதி யென்றெனை
யருள வந்திலை யேயெனி லென்கதி
யொழியு மென் பதையோர் கிலை தண்புகழ்
உடையோனே

உயரு பைம் பொழி லூடமை பண் பொழில்
அடகு நின்றுயர் மாமலை யின்றலை
வெளியின் மிஞ்சியவீரயில் கொண்டமை
பெருமாளே.

தான தந்தன தானன தந்தன
தான தந்தன தானன தந்தன
தான தந்தன தானன தந்தன தன தான

**568.** வாமிசுந்தரி நாரிபரன்பரை
தேவியம்பிகை மாரிகுணந்தழை
வாலைசெண்பக மேவுவனந்தனி லுறைமாதா

மாமகம்புரி சாதனையன்பர்கள்
பாலிலங்கிய வேதபுரந்தரி
வாணிமிர்ந்தெழு பாணியருப்பிய மகமாயி

பூமியந்தர மேவியசங்கரி
ஆரணிந்தவ டாயக மென்பவள்
போதமுந்தரு வீரி நலந்திக ழபிராமி

போதுபங்கய பாதபயங்கரி
நீலிமன்சிவ காமிசவுந்தரி
பூசுகுங்கும வாசமணிந்தவ ளுமதாயி

காமிசுந்தரிநாயகி யென்பிணி
யோடவந்தவள் தீயவரின்கிளை
காயவந்தவள் மாசடையும்பவ முடையோரை

காலனின்கணி லேபடவிண்டவள்
மாலயன்படு மேவ வளர்ந்தவள்
காரியின்பய மோட வறைந்தவ ளௌனலாகி

சேமியம்பொனை நேரவெழுந்தவள்
மாதவஞ்செயு மேதுவில் வந்தமை
சேயதுங்கவ ரோதய சுந்தர குகநாதா

சேய னன்பொடு நேடு பதந்தனை
ஈயவந்தருள் சேம சுதந்திர
தேவ பண்பையிலே வளர் குன்றுறை பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த ததந்
தன தான தந்த தந்த தன தான

**569** குருவாக வந்து வந்து மனுவோதி தம்புரிந்து மயல்போக
கொடிதான மந்தபங்க

குலகால னஞ்ச வஞ்ச பகைவீண ருந்துலைந்து
குழிவீழ வன்றிரங்கொ ளயிலேவி

வருவீர செம்பதங்கள் துதிமேவி யன்புயர்ந்த
மகதேவர் கொஞ்சுகின்ற குருநாதா

மகமேருவுங் கலங்கி விடமோதுகின்ற செங்கை
வரதீர பண்பமைந்த வொருதேவா

தருவாக நின்றுனன்பர் பதிமேவி யந்தரங்க
தயவோடி லங்குகந்த முருகோனே

தமியேனிடங்க சிந்த மனமோடிருந்துயர்ந்த
சரணை பங்கயங்க டருவாயே

திருவேறு கின்ற பண்பை நகரூடிருந்த வம்பர்
திரணீறவும் பிறங்கு பெரியோனே

செயமாருகின்ற பொங்கர் வளைவாகி யன்பர்தங்கு
திருவாண கஞ்சிறந்த பெருமாளே.

தனதன தனை தந்த
தனதன தனை தந்த
தனதன தனை தந்த தன தான

570. பணிவிடை யிலே சிறந்து வருகுண முளோர்கள் துன்பு
படவிடு விரோதி யென்ற பகைநீசர்

பவகடலிலே யுழன்று உடனல மிலாது நைந்து
பதறியற வேலையுந்து மயில்வீரா

துணிவு கொளு பாவ வஞ்ச முறுமடையராகி யன்பர்
துயர வருவேதை தந்த கொடியோர்கள்

தொலைய வவர் தீயெழுந்து எரி நரகிலே விழுந்து
துடர் படை விடாதனந்த யுகமூழ்கி

பிணிபட தயாள மின்றி விடுபர குகா யிலஞ்சி
பெரியவர் சதா வணங்கு முருகோனே

பெரும குருவாகி வந்து தரும முறையே புகன்று
பிழை படவிடா துயர்ந்த நெறிதாராய்

அணி குருபரா வயங்கொள் அரிய குமரேச செந்தில்
அறுமுக விலாசம் நின்ற செகவீரா

அழகு பொழிலூ ருறைந்து மெளியனிலை யூடிருந்து
அருள் செய்திரு நாகமர்ந்த பெருமாளே.

தனதன தந்த தனந்தா தானன
தனதன தந்த தனந்தா தானன
தனதன தந்த தனந்தா தானன தன தான

**571.** பழனி யிலஞ்சி வளர்ந்தோனே மறை
புகழ வெழுந்து சிறந்தோனே பனை
பதும கரங்க ளுறைந்தோனே நல முடையோனே

பரவகி லங்க ணிறைந்தோனே வுயர்
கலைக ளனந்த மறிந்தோனே விரி
பரிமள கந்த மணிந்தோனே மயி லெழுவோனே

கழனி வளைந்து வளஞ்சேர் காவிரி
வளைவுள டங்கி யிருந்தே மாபல
கனிகொள் மரங்க ளினந்தா னிறை வயலூரா

கமுகு செறிந்து நிமிர்ந்தே வானுல
களவினு யர்ந்து விரிந்தே வானவர்
கருதமு திர்ந்த பழந்தானே யவர் கரமேவ

அழகின மென்று மணந்தே தாபதர்
குணமென வந்த வணந்தானு மென
அறமுறு செஞ்சொனு ணர்ந்தோர் கூறிய முறையாக

அமையு நலங்களு வந்தே வாழ்புள
மலைவள முந்தை பெறும் பேருலியை
அருமை செறிந்த தலஞ்சீரோர் புறு பொழிலூரா

துழனி யெழுந்து மணஞ்சேர் தாதொடு
மருவிய தென்றன் விரைந்தே சோலைபெய்
துளி நறையின் கணனைந்தாரோர் பியல் வளநாடா

சுடர்தளி நின்ற பெருந்தே வாயெனை
அளிய ருடந்து பரிந்தே யாள்குவை
சயதிரு பண்பை நகந்தானேறிய பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

**572.** கடமுடை கொண்டலைந்து பவமாய்கை யின்கணின்று
கழிவாகி நைந்து நைந்து தடுமாறி

கதியேது மின்றிதுன்ப மயமாகி நொந்து நொந்து
கனவேதை யும்பி றங்கு கொடியேனை

சுடவேணு மென்றுமுந்தை வினைமேவு கின்றதென்ற
தொடர்போதி யும்பணிந்து பலகாலும்

சுகமீவை யென்று கெஞ்சி வருமாற றிந்துமன்பில்
சுடுகாடு சென்றுவெந்து பொடியாகி

விடவேணு மென்றசிந்தை வுளபோது முந்தனன்பு
வெகுமோச முந்தயங்கு வதினாலே

வினையோடு முன்னைநின்ற வழிமேலோடும் வந்துயின்று
விதிவேலை யுந்தியென்ற னுடல்பீறு

படவாகி னுஞ்செய் நன்றி உருவாக வந்துயர்ந்த
பரநாத செந்தில்தங்கு முருகோனே

பழமேவுகின்ற பொங்கர் வயல்சூழு கின்றபண்ணை
பதிமேவுகின்ற கந்த பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

**573.** மதியாமலன்ப ரென்று பதியாமல் வம்புகொண்டு
மறைவாக நின்றுவஞ்ச மொழியோது

மதியினாரஞ்ச நின்ற வழிமேவு கின்றசெங்கை
மறவீர பண்பைதங்கு முருகோனே

பதிவாக நின்றனந்த மொழிபேசி வந்தனஞ்செய்
பவர்வாழ நன்கிதஞ்செய் தருள்வோனே

பனைசோலை யுஞ்செறிந்த வயலூடிருந் திலஞ்சி
பகவார்கடம் பணிந்த வயலூரா

ததிதோறு முந்தனன்பு பெறவோதி வந்தடைந்த
தமியேனை யென்றுவந்து னருளாலே
தனபாத பங்கயங்க ளுருவாய் நலஞ்சிறந்த
தளிராக மங்கள்கொஞ்சு மயில்வீரா
குதிபாயு மம்பெழுந்து நதியார நின்றுயர்ந்த
குளமேவுகின்ற நன்செய் வளநாடா
குணமான வன்பர்தங்கு மிடமாயமைந்த பண்பை
குடமேவு குன்றுறைந்த பெருமாளே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

574. அருமை நிறைவான பண்பி னுயர்பரம நாதகந்த
அழகிய விம்வக பண்பை யுடையோனே
அனவ ரதமேபணிந்து மிது வரையிலே நலஞ்செ
யருண்மன மிலாதிருந்த படியாலே
பெருமை சிறிதேனுமின்றி வளருபவி யூடிடைந்து
பெருகுதுயரா னலிந்து தடுமாறி
பிழைபடு விரோதியென்ற கொடியவர் களாலிகழ்ந்து
பிணிமிடியினால் வருந்தி பலநாளும்
மருண் மனதிலேயுழன்று கணினறவினுள னைந்த
மருமமுடையே னிடைஞ்ச விடைமூழ்கி
வருநிலமை யோடடைந்த சிறியவ னெனு நினைந்து
மறதிசிறி தேனுமின்றி யருள்வாயே
உருடன மினோர்கடங்கள் மயலினிடையே படிந்து
உறையுமனமே வொழிந்த பெரியோர்கள்
உறையு ளெனவே யுறைந்த குருபரசிவா வறஞ்செய்
உயருதிரு நாகமர்ந்த பெருமாளே.

தனனு தந்த தனதன தனதன
தனனு தந்த தனதன தனதன
தனனு தந்த தனதன தனதன தன தான

575. பரமானந்த மழைபொழி முகிலென
மயின்மேனின்று வளர் சரவணபவ
பகவாசெந்தி லறுமுக குருபர முருகோனே

பணிவோர் தங்க ளகமுறை கிறசிவ
முதல்வா பண்பை நகர்வயினிலகிய
பரமே யெங்கள் குலநலமுறவரு பெரியோனே

அரமே னின்று நடமிடு மொருமுகில்
மருகா தந்தி பிரணவ முறுமுக
அழகானந்த கணபதி இளையவ னெனலான

அரசேயன்ப ரிடர்துயர் அறவரு
சுகமே ரென்ற வரநிதி தபதர்கள்
அறிவாய் நின்று மிளிரிய சிவகுரு பரனுன

உரமே மங்கை பயிரவி பகவதி
யுமைமா தம்பை பரிமள புழுகொடு
உயர்நா னங்க மழியல் புளகலவை யணிதேவி

வொளிர் மாதங்கி பரிபுர மிலகிய
மதமார் கின்ற திரிபுரை குழல்மொழி
உலகார் செண்பக டவியிலுறைபர சிவகாமி

வரமே னின்ற சுதனென வளரிய
அறமே தங்கி வருதவ முனிவரர்
மனமே அன்பின் விளைபொருளெனவரு
மொருதேவா

வரதா வுந்தனழகிய பதமலர்
கெதியாமென்ற படியருள் புரிகுவை
மகிபா பண்பை திருமலை தனிலுறை பெருமாளே.

தந்தா தனந்த தன
தந்தா தனந்த தன
தந்தா தனந்த தன தன தான்

576. அன்பே நிறைந்து குக இன்பா தரங் கடையை
அஞ்சே லெனுஞ் சொலுட னிதோடு

அம்போருகம் பலுகு நந்தா வளம் பரவு
அஞ்சேலினந் தழுவு வளநாடா

மன் பாதகங் களற என் பாவிலன் புதவ
வந்தே மிகுந்த நலம் அருள்வாயே

வண்டாடு கின்ற குழல் கண்டே மயங்கிவெறி
மன்றாட நின்ற மன முடையோர்கள்

தன் பானு கந்தருமை யின்சேர் பிலங்க வருள்
தன்றூய கம்புரைய வருவோனே

சங்காடு கின்ற குழை மங்காது பண்பை நகர்
தங்காதி மைந்த குரு பரநாதா

பொன்பூ நிறைந்த பொழில் விண்சார் பமைந்த மரா
பொன்றூது திர்ந்ததரு விடமேவி

பொங்கோத னந்தழைய நின்றாடு தண்டலை கொள்
பொன் சேருகின்ற மலை பெருமாளே.

தந்தன தனதன தனதன தனதன
தந்தன தனதன தனதன தனதன
தந்தன தனதன தனதன தனதன தன தான

577. சந்தன மருவிய திடபுய குருபர
வந்தனை புரிபவ ருளமதி லிலகிய
சங்கரி பயிரவி பகவதி யருளிய முருகோனே

தண்டலை யழகிய பொதுளிய தலைமிசை
வந்தமை துயிலியல் வளமமை வொடுபுகழ்
தங்கிய வயனிரை பயிலுநெல் மணிகுவை பலவோடு

அந்தர முயரிய தெனையடி கமுகடி
குங்கும மடிவுயர் பலவடி தருவினம்
அங்கமை கிறதலை நறைமழை பொழிவள வயலூரா

அம்புவி தனிலுனை சரணடை பவர்பவம்
நைந்திட அருடர வருபர சரவண
அங்குற மகளினை மருவழ கியபுய முடையோனே

மந்திர மனுமுறை அருவிய சிவமுதல்
அம்பிகையொடு நலமுறு வயிரவனொடு
மன்பொழி னகர்வி யினிலகிய அறுமுக முளவேனே

வண்டணி குழலிய ரிடைமயல் கொளுபவர்
பண்பற விதுததி யினிதருள் புரிகுவை
வன்சிகி புறமுய ரியமுழு முதலென வருவோனே

தந்திர மொடுசொலி லெனையிகழ் மடையர்க
ளின்குல மவரொடு மறவயில் விடுபவ
சங்கரி கரமணி கிறவொரு பெருமுகின் முருகோனே

சண்பக மரமகில் மரவமு மிளிரிய
பண்புனை பலகுல தருநிரை பயிலிய
தண்டிரு மலைமுடி குடிகொளு மடியவர் பெருமாளே.

தந்தன தனந்தனந்
தந்தன தனந்தனந்
தந்தன தனந்தனந் தன தான

578. சங்கர சுயம்புவின் பண்பமை யுமைந்தனின்
றண்கழல் வணங்கிடும் பெரியோர்கள்

தங்கி வளர் குன்றினின் றெங்கு முயரன்பரின்
றன்பகை வொழிந்திடும் படியாக

தங்கண ரவின் கடந் தின்று பகை யுண்டிடுந்
தன்சிகி புறந்தழைந் தழகோடு

தண்டையணி கொஞ்சிடுங் கிண் கிணிச தங்கையுந்
தங்க வருமன் பர்தன் குகவேளே

கங்கை சுதமைந்தவுன் பங்கய பதந்தினம்
கந்தமலர் கொண்டுவந் துயர்வாக

கண்டுருகி யென்பவந் தொந்தமற நைந்திடுங்
கங்கையருள் பண்பையம் பதிவாழ்வே

கொங்கிலவு சந்தினம் பைந்தினை வனங்களும்
குங்கும மரங்களும் பலவாக

கொண்டல் படிகின்ற பொன் தங்கு திரு விண்டுவங்
கொண்டருகு கந்ததண் பெருமாளே.

தந்த தனந்தன தந்தன தானன
தந்த தனந்தன தந்தன தானன
தந்த தனந்தன தந்தன தானன தன தான

579. அன்ப ரகங்குடி கொண்டுறைவாரண
செந்தில் வளம்பதி தங்கிய தாயக
அங்கி புனைந்தவ சந்தவி நோதனு மெனலாகி

அம்பர மெங்கு நிறைந்துயர்வாகிய
கந்த சுதந்திர சுந்தர மேவிய
அங்க யலின்கணிபுன் குறவேடுவர் மகளாகி

பொன் பரவுந்தன மங்கையினுளென
வங்கு நடந்தவ ளின்றயை யோடுறை
புந்தி நிறைந்து குளிர்ந்த விரோதய முருகோனே

புண்கணடைந்து வருந்திய நோர்வொடு
முந்தை பவங்கள் தொடர்ந்தென தாவியை
பொன்ற வருந்த வருங்குறைவாகிய தொடர்பாலே

என்பற வுண்டு நவிந்திடு வேகமொ
டொன்று மிடைஞ்சலிலஞ்சின னுதலின்
இன்றுயர் செம்பத பங்கயமேதர வரவேணும்

இன்றல வன்றல வன்றலவேயென
மிஞ்சு தினங்களை யுந்துதலே வொழி
எங்கள் குலங்கள் வளர்ந்திடவேவரு மெழில்வேளே

துன்பறவுன் பணி யென்றினுமேபுரி
யுஞ்ச ரணம்பினை யன்புடனுதரி
தொண்டர் பணிந்துயர் வந்தனை யாணிறை பொழிலூரா

சுந்தரி யம்பிகை தந்தகுணலைய
பண்பை குடந்தைழை குன்றுறையாதிப
துங்க வரந்தரு மந்திர மேலவர் பெருமாளே.

தனத்தன தனனு
தனத்தன தனனு
தனத்தன தனனு தன தான

580. துடப்படு வினையா விடர்ப்படு விதியே
தொகுத்தனை யிதுநாள் வரைநீயும்

சுதத்துணை யெனவே யருட்பெய மனமோ
தொடுத்திலை யிதையா னெவர்பாலின்

அடர்த்திய வுரையான் முறைப்படி புகல்வேன்
அழிக்கினு மகமேல னதனுமேல

அடிக்கடி யுனையான் நெருக்கிட முடியா
தருட்பொழி மழையே பொழிலூரா

கடற்கரை யுடையாய் நதித்துறை யுடையாய்
கனிப்பொழி லுடையாய் முருகோனே

கனித்தவ ரிடையே விருப்பமு திடுவோய்
கனப்பர குமரா வயலூரா

படர்ப்பகை யறவே வொழித்திட வருவாய்
பருப்பத முடையோய் பெருவாழ்வே

பழப்பொழி லிடையே யிருப்பமை திருமா
பதிக்குவ டழகோர் பெருமாளே.

தன தன தான தந்த
தன தன தான தந்த
தன தன தான தந்த தன தான

**581.** பிணிமிடி யூடு நைந்து வருகிற நாயை யென்று
பிரிய மொடாள வந்து னருளாலே

பெருபவ வாரியின்க ணுலைதர லாகநின்ற
பிழைபடு மேழைதுங்க நலமேவ

பிணிமுக மீதெழுந்து வணிமுக சேவை தந்து
பெருமறை யோதியஞ்சல் தருவாயே

பெரியவ ராதியன்பர் பரவிய சேமகந்த
பிணையெழி லோடை தங்கு மிபநாதர்

துணிதுணை யாள வெந்த னுயர்மனதே நிறைந்த
சுயசுமுகா செயந்தி முருகோனே

சுருதிசி வாகமங்கள் நிறைமுத லாதிமந்த்ர
துறைமுக மேவணங்கு மடியார்கள்

பணி மனதே கனிந்த வுறை யமுதே யிலங்கு
பழமணியே நலஞ்செய் பொழிலூரா

பழகிய மேகமஞ்சு துயில்கொ ளலான பொங்கர்
பதிதிரு நாகமர்ந்த பெருமாளே

தன தன தான தந்த
தன தன தான தந்த
தன தன தான தந்த தன தான

582. விதி வழியே நிறைந்த துயர் கடலூ டுறைந்து
மெலிதலி னுனலிந்து தடுமாறி

மிகமிகவே வருந்தி மதிபல தாகி நொந்து
விழிவழி நீர்ததும்ப பலவாறாய்

குதிதர வாதி கந்த நிதிபதியே சிறந்த
குருபரனே கனிந்த முருகோனே

குகபர நாத செந்தில் வரத தயாள சிந்தை
குலவிய சேமதுங்க குணதீபா

கதியருளே மலிந்த பதமலரே வணங்கு
கடமையிலே யடைந்த வெளியேனும்

கமழுபுயா கடம்பு முதலுறைவோய் மிளிர்ந்த
கதிர் மதியே துலங்கும் அருடாராய்

திதிபுரி வோர் முகுந்த னரிமருகா வளங்கள்
செறிபொழி லூருறைந்த சிகிநாதா

சிவகுரு தேவ பொங்கர் மருவிய தான துங்க
திருமலை மீதமர்ந்த பெருமாளே.

தந்த தன தான தந்த
தந்த தன தான தந்த
தந்த தன தான தந்த தன தான

583. பந்தமுல கூடெழுந்து முந்தை பவமுடை கொண்டு
பஞ்சி படலான துன்ப மயலோடே

பம்பு பிணி யானலிந்து வந்த மிடியா லுளைந்து
பண்டை முருகா வெனுஞ்சொ லடியார்கள்

சந்த பதமே பணிந்து வந்த வெளியேன் முகுந்து
தங்கை மருகா கனிந்த மொழியாளா

சந்தத தயாள கந்த செந்தின் முதல் வாயிலஞ்சி
தங்கு மணியே குறிஞ்சி யுடையோனே

எந்தை சிவமே வயங்கு சந்த வரையே பொருந்தும்
இன்ப மயமே களங்க மிலதான

என்றி ஞெளியே யகன்ற கன்றி னலமே மிகுந்த
எஞ்ச முதமே மயங்கு மெளியேனை

சொந்த வடியே னெனுஞ்சொல் தந்து தினமே நலஞ்செய்
துங்க குமரா வறஞ்செய் பவர்வாழும்

தொங்கு கனியே மலிந்த பண்பை நகராளு கின்ற
தொந்தமுற லான எங்கள் பெருமாளே.

தாந்த தன தான தந்த
தாந்த தன தான தந்த
தாந்த தன தான தந்த தன தான

584. தாங்க முடியாம னைந்து யேங்க வருதே முனைந்து
சாம்ப கடமே மெலிந்து தளர்வாக

தாண்டவ மதாடு கின்ற மூண்டபிணி யாலுலைந்து
சாந்த மிதுகாறு மின்றி யுழல்வேனை

வேங்கடமதா லுலைந்து நீந்த வறியாத துன்பை
வேய்ந்த கடலூடி னைந்து மனமாழ்கி

வேங்கடமகா நகங்கொ ளாண்டகை யெனு முகுந்து
வீழ்ந்த மருகா வளர்ந்த குறமாதை

வாங்குபுய மேவுகின்ற சாந்தமுல ராத கந்த
மாந்த வுயர்வான தங்க மணிமார்பன்

வாய்ந்த செகசோதி யண்டர் ஓங்குதுய ராதிதுஞ்ச
வாங்குமயி லானின்ற வொருதீரன்

தேங்கு கருணை லயகங் ளோங்கு வசனுதி யெந்தை
தீங்கரிகு வானெழுந்து வெனநாடி

தேர்ந்த வடியே னலஞ்செய் கூர்ந்த வயில்வீர பொங்கர்
சேர்ந்த திருநா கமர்ந்த பெருமாளே.

தனதனத் தனத்த தாத்த
தனதனத் தனத்த தாத்த
தனதனத் தனத்த தாத்த தன தான

**585.** படுபவத் துயர்க்கு ளாக்கி
யடுபகைக் குளிக்குள் வீழ்த்தி
பதைபதைத் திடர்க்கு வாய்த்த கடமூடு

படுபிணிப் படுத்து மூர்த்தி
யுரைதரத் தெடுத்த நோய்க்குள்
பழகிடற் கமைத்த சேய்க்கு னருளாலே

நடுநிலைப் படுத்தி நேர்த்தி
தருசுகப் பதத்தை யூட்டி
நலமுறத் திருத்தி வாழ்க்கை தரவேணும்

நமனறத் துடைத்து வேட்கை
தருபதத் திணைத்து வாழ்த்தி
நளிர்நயத் தமைக்க வாய்ப்ப தெதுகாணோ

கடுவிடக் குணத்தி லாழ்த்த
கொடிபடர்ப் புரத்தை மாய்த்து
கயவரைத் துலைத்த சீர்த்தி யுடையோனும்

கனபரைக் கொருத்த னீட்சி
தருசடைச் சமர்த்து வேய்க்குள்
கதிர்பிறப் பெடுத்த கூத்த னருள்சேயே

மடுவிடைக் குளித்து ணீத்தி
லெழு பகட்டுயர்த்த மேட்டின்
வரைவளத் துடுத்த பூக்கு ளிசைமேவும்

மலிபொழிற் செழித்த சேர்க்கை
திருவியற் குவட்டி லூக்க
மருவு சற்குணத்தி னூர்த்த பெருமாளே.

தன தன தான
தன தன தான
தன தன தான தன தான

**586.** பவகட மூடை யிடையிடர் சூடி
படுமிடி யூடு தடுமாறி

பகைபிணி வேதை தருகிற நோவில்
பழகிய வேழை பலநாளாய்

அவமுற லான கெடுமய லாடி
அணுமற வாத செயலோடு

அறமொரு காலு முறவறி யாத
அறிவிலி யான பெருமூடன்

தவமுறு வோர்கள் வழியணு காத
தானியல் பாள னெனலான

தமியனை யாள வருமுறை யோது
தரமில னேனும் அருளாளா

சிவகுரு நாத பரமுரு கேச
செயவர தீப தயைதாராய்

திருமலை மேவு மொருபெரு ஞான
செறிவுரு வான பெருமாளே.

தனதன தான தந்தத்
தனதன தான தந்தத்
தனதன தான தந்தத் தன தான

587. குகபரநாத செந்திற் கொரு முதலான துங்கக்
குருமணியான பண்பைக் கொருதேவா

குணபதியே யிலஞ்சிக் கொருமுதலே நலஞ்சொற்
குரியவனே யிலங்கற் புதவேளே

செகநிறைவே யனந்தத் திருமுருகா முகுந்தற்
செயமருகா வணங்கற் படியார்கள்

திகழிதயா மணக்கத் தியமருகா வலங்கற்
செறிவுடையாய் கடம்பிற் றொடைபூணும்

சுகபர வேத விஞ்சைக் கொருமணி யாகி கங்கைச்
சுதவயிலேவு செங்கைத் திடவீரா

துயரிடை மூழ்கி பந்தத் திடுமய லூடு நைந்துச்
சயநலமேது மின்றித் தடுமாறி

துடர் பிறவாழி யின்கட்செறி கடமூடை கொண்டுத்
தொடுகீறை காணலின்றிச் சுழல்வேனை

துடர்பிணி போக வின்றைக் கினிதரு ளீவை பண்டைத்
ஆதி திருநாக கந்தப் பெருமாளே.

தன தனனு தந்தத்
தன தனனு தந்தத்
தன தனனு தந்தத் தன தான

**588.** செயமுருகா கந்தப் புயவரதா பண்டைத்
திருமகிபா னந்தச் செகவீரா

திகழிய தேபின்பிற் பரவடி வேமுந்தைச்
சிவகுரு வேஅன்பர்க் குடையோனே

கயவலவா வெந்தற் கொருகுரவா செந்திற்
கதிபதியே கங்கைச் சுதவேளே

கமழுபுயா செம்பொற் பொறியுடையாய் துங்கக்
களிறுடையாய் மஞ்சட் செறிசோலை

சயமுடையாய் பொங்கர்ச் செறிவுடையா யின்பத்
துதியுடையார் பங்கிற் கொருதேவா

துணையுடையாய் திங்கட் குலமுடையாய் செங்கைத்
துரிதயிலோ யம்பைக் கொருபாலா

பயமறவே யின்றைக் கொருவரமே சொந்தப்
பழவடியா னென்றற் பருள்வாயே

பழபொழி லூரின்கட் செறியரு ளானந்தப்
பதிமுதல்வா துங்கப் பெருமாளே.

தனத்த தானன தானன தானன
தனத்த தானன தீனன தானன
தனத்த தானன தானன தீனன தன தான

**589.** இனைக்க மாமன மேவடி யாருள
வுருக்க மானவ ரோதய நாயக
இருக்கு சாமம காமறை தேடிய முருகோனே

இசைத்த மாபுக ழோதிய பாவல
ரிடத்தி லேவுறை மாதவனே கவி
யிடைப் புரா தரமா பொருளாகிய வொருதேவா

குணக்கி லேகடன் மீதெழு மாரவி
நிகர்த்த மாமயி லேறிய வாகுக
குடத்தி லேயெழு மாமுனி தேர்குரு வெனலான

குறத்தி யாகிய மாவளி நாயகி
தனத்தை நாடிய வாகரு ணாகர
குறிப்பி னாலடி யாரரு ளேபெற வருள்வோனே

பணப்பொ னாதர மேதர மாமென
வுரைத்த பூவிடை யேமிடி யால்வரு
பவத்தி லாடிய வேழையை நீசிறி தறியாயா

பருத்த மாமர மேவிய வோரணில்
நலத்தை நாடொறு மேவுறு மேயென
பணித்த மாமறை போலுனை நானனு குறலாலே

வணத்த தூயகு ணாலயனே தனை
நிறைத்த போத சதாவ மூதானவ
மனத்தி னோடுன தாரருளே தர வரவேணும்

வளத்த சோலையி லேமயி லாடுற
கருத்த மாமுகி லேநிறைவாகிய
வரத்த மாதிரு மாமலை மேவிய பெருமாளே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

**590.** கருணை யேவுரு வானப ராபர
மதுர மானகு ணாகனி வாகிய
கனியுளே நிறைதே னலமேபர முருகோனே

கனக பூடண வேதவ ரோதிய
கருது மேலவ ரானவ ரேபுகழ்
கரைகொளாதத யாளம காவென வுலகோது

பெருமையாகிய நாயக பூரண
மவுன யோகர் மனோகரனேசெய
பிரம னோதிய ரோதிய மாமறை யுடையோனே

பிரபலா குகநாத தயாநிதி
வரத வீரகு மாரிச தாதயை
பெருகு மாதவு தாரம கதபரை யெமதாயி

உருகு மாதவ ரோடுற வானவ
ளருமை யாளி யராவொடு மாமதி
யொழுகு மாசடை யாதிபனோடுறை சிவகாமி

உயருமா வறமேபுரி கோமதி
யிமய கோமகனார் மகிழ் மாமகள்
உமைந லாதர மாதரசாகிய வொருதேவி

தருகுகா வுனதாளிணையேகெதி
யலது வேறிலையே யெனவே துதி
சரத வாய்மையை நீசிறிதோர்கிலை யினியேனும்

தமியனாகிய வேழையின் மேல்தயை
புரிய வேவரு வாயிது வேதநி
தனத் மாதிரு மாமலை மேவிய பெருமாளே.

தான தன தான தந்த
தான தன தான தந்த
தான தன தான தந்த தன தான

591. தேக நலமேதுமின்றி வாதையினி லேயுழன்று
சேவை யிலதாகி நொந்து தடுமாறி

சேருபவ மேவருந்த வீறு தர லான்மெலிந்து
சீறுகொடி தானபந்த மயலூடே

ஏக மனதே யிரங்கி வாடுகிறதே பதங்கி
யீடுபடலான சிந்தை யுடையோனாய்

ஏழைபடு பாடறிந்து மாக ருணையோடெழுந்து
ஏதிலெளி யேனையுந்த னருளாலே

மாகருணையே சுரந்து பாதகமிநீதி துஞ்ச
வாழ்வையருள் வாய்சிறந்த முருகோனே

மாவர தயாள கந்தநாத குகயோக செந்தில்
வாழுமுருகா வணங்கு மடியார்கள்

பாகமுடையா யிலஞ்சி வேதமுதல்வா நலஞ்செய்
பாலகுருநாத பண்பை யுடையோனே

பாடு புகழா னிறைந்து நீடு திருநா கமர்ந்த
பாசவிசு வாச துங்க பெருமாளே.

---

591-ம் பாட்டு. வீறு — வெறுப்பு.

தனன தான தனந்தன தந்தன
தனன தான தனந்தன தந்தன
தனன தான தனந்தன தந்தன தன தான

592. குமர நாத வரந்தரு மஞ்செறி
இறகு பேர வணங்கிய வன்பர்கள்
குலவு சேம செயந்தி வளம்பதி யுடையோனே

குணவு தாரமி குந்து தினந்தொறு
முருகு நேயரி டந்தழை கின்றவ
குகைவி லாசம விந்த தவஞ்செயு முனிவோர்கள்

தமது நாயக பண்பொழில் தங்கிய
நகரி வீசர் பரம்பரை சுந்தரி
சாத வீரி யறஞ்செயு மந்தரி சிவகாமி

தளிரு நீலி பயங்கரி யம்பிகை
குமரி யாமளை சங்கரி செங்கயல்
சரியி லாதவ ணங்கிகழுங் கனி யெமதாயி

அமரர் கோமக ளிந்திர னஞ்சசி
கமலை சோதி நிதம்பத மும்பணி
அருமை நாரி சிதம்பரி பொங்கர வணிதேவி

அருளு பால நிறைந்து புரந்தரு
ளுரிமை யாள விரிந்த சகந்தனி
லடிமை யேழை சுதன்றர மும்பெற வரவேணும்

அரிய சேவை தினந்தின மும்பெறு
முரிமை யீய வருந்ததி நன்கறி
அருண சோதி நிகர்ந்த நிறந்தழு வியவேலா

அணிகொ ளுக சிரந்தனி லன்பொடு
வுறையு நாத புரந்தர பண்பொழில்
அழகு மாமலை தங்கிய சுந்தர பெருமாளே.

தன தன தன தன
தன தன தன தன
தன தன தன தன தன தான

593. விதிமல மருளிய வறுமுக சரவண
விகசித வாரிதி யெனவோது

வெருவித நடமிடு மொருசிகி புறமிசை
மிளிரிய குருபர முருகோனே

திரிபுரி கருமுகில் மருமக னெனவரு
சிவசுத வடிவயி லுடையோனே

சிறுவனெ னகமிசை மருவிய பரகுக
திருமறை முடிபர வியதேவா

துதிதிரு பொதிகையி லுயரிய குருமுனி
சுருதிக டெளிவுற அருள்வோனே

துனி படு கடன் மிசை யிடி படு மர வென
துயர் பட விடு வதி லழகாமா

கதி தர வருததி மதியிது துயர் பிணி
கலைதர தயை செய வரவேணும்

கமழியல் புழு கொழு கிய திரு மலைமிசை
கனவயி லுள கர பெருமாளே.

தனன தனத்த
தனன தனத்த
தனன தனத்த தன தான

594. முருகா குறத்தி கொழு நா கரிக்கு
முதல் வா வெனச்கு முரியோனே

முது நாரை முத்தி பெற வா தாத்தை
முறை யோட ளித்த வொருதேவ

னொரு காதி டத்தி லுறவோ முறைத்த
வொருவா மலைக்கு ளுயர்வோனே

உரு வேறு பத்தி பெருகரி ரிடத்தி
லுறை யாத சித்த முடையோனே

மரு கா வனத்தி னொருபா லடுத்த
வாமா கவிக்கு முனமேவி

மருளேற வைத்து அருளே படைத்த
மகிபா கரிக்கு மிளையோனே

தருவா னிறைத்த பொழி லாரிடத்த
தனதா பயைக்கு மகனாகி

தனி வேல் பிடித்த குமரா வருட் பெய்
தனமா மலைக்குள் பெருமாளே.

தான தன தன
தான தன தன
தான தன தன தன தான

595. தேக மெலி வுற லான பிணி யுற
தேவ வருடா வரவேணும்
தேரு துணை யிலை வேறு கதி யிலை
தேடு பொருளிலை யெனலான
சோக மயலிடை வீழும டியனை
தோதி னருளுவ தெதுநாளோ
சோதி பயரவி நீலி திரி புரை
சூலி பரி மள குழலாயி
பாகு கனி மொழி தேவி யருள் பரை
பால வினி தருள் புரியாயேல்
பாவி யெனு மெனை வேலி லுயிர் கொளல்
பார மென வினி நினையாமல்
சாக வுயி ரற வேக வயில் விட
சாமி பரவிய தியல் பாய்வை
தாழ விட வெணி னேழை அருள்புரி
தான திருமலை பெருமாளே.

தத்தத் தனதன தனதன தனதன
தத்தத் தனதன தனதன தனதன
தத்தத் தனதன தனதன தனதன தன தான

596. சத்திச் சரவண பவவர நிதியென
நித்தப் பயிரவி திரிபுரை சுதனென
சட்டக் காகுரு பரகுக சிவமென வுலகோது
தத்வத் தனிமுத லெனபெரி யவர்புகழ்
வித்தைக் கொருமுத லெனமரு வியதர
சர்ப்பப் பணியர னுதவிய சுதவயி லுடையோனே

துத்திப் படவகி யுயிர்ற கவுமியல்
புற்றச் சிகிபுற மினிரிய வொருமுதல்
சுத்தப் பிரணவ கரிமுக னிளையவ னெனலான

சுத்தப் பரிமள களபமெய் புழுகிவை
அப்பப் பருகிய திடபுய முடையவ
சொக்கத் தமனிய கிகரிய நிறபர முருகோனே

அத்திக் குறமக ளிருவரு மருவிய
பொற்புக் கணிபர பிணிமுக முளவல
அத்திக் கொருவயி லுருவிய திடகர முடையோனே

அச்சத் துயர்கட லிடைபடு மடியவர்
உச்சத் திரமுற வருளிய தினகர
அற்புக் கடலென குருமுனி துதிபணு மொருதேவா

தித்தித் திமிதிமி திமிதிமி திமியென
நிர்த்தத் தியவுளி னுதன்விழி தருசுத
சித்தத் தகவுடை யவரிட முறைகிற பெரியோனே

செப்பச் செழுமறை முகிலென வுயர்தமிழ்
சித்தக் கடன்மடை வருகிற தெனவருள்
சித்தித் திருமலை சினகர முயரிய பெருமாளே.

தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த தன தான

597. கொந்தழிந்தி ரங்கிநின்று வந்தபுன்ப வங்களைந்து
நுன்பதங்க ளிந்தவன்பு தருவாயே

நுண்பலிந்து கங்கை மங்கைபங்கினங்கு சங்க ணிந்த
நுண்டி ரண்ட நஞ்சுகண்ட னெனலாக

வந்தவெங்கை தந்தமைந்த சுந்தரந்த மைந்தகந்த
வந்தனம்பு ரிந்துவுந்த னடிபேணி

மண்டடர்ந்த சிந்தையன்பர் பங்கிருந்த னந்தவின்பு
மன்றநின்ற பண்புதந்த முருகோனே

சந்ததம்பு கழ்ந்தசந்தி குங்குமஞ்செ றிந்த பொங்கர்
தங்குசெந்தி யின்கணின்ற குருநாதா

தண்டையுஞ்சி லம்பணிந்த செம்பதஞ்சி றந்திலங்கு
தண்கவின்ற தாம்புகின்ற பெரியோனே

மஞ்சளிஞ்சி யும்படர்ந்த கொங்குதெங்கி னம்படிந்து
மந்திமஞ்சி னந்தவழ்ந்த பொழிலூரா

வண்டுகிண்டு கின்றதொங்கல் கொண்டதிண்பு யம்பணிந்து
மண்டுபண்ணை குன்றுறைந்த பெருமாளே

தான தன தன
தான தன தன
தான தன தன தன தான

598. தேக நலமருளீ யவருததி
தேவகுருபர முருகோனே

தீரவரகுண பாகுகனிமொழி
தேவியருளிய வரதீபா

மோக முறுகுற மாது மருவிய
மோன பரசிவ குருநாதா

மூது தமிழ்மறை யோது குருமுனி
மூலமனுபெற அருள்வோனே

வேகமுறு மயின் மீதிலிலகிய
வேலைவலகர முடையோனே

வேதனெழில்சிர மாடபுடைதரு
வீரவரததி யெனவோது

மாகமுறுபொழில் சூழுவளமுள
மாகமுருகுமலை வளர்வோனே

வாசமுறவரு ணேசமிலகருள்
வாழி திருமலை பெருமாளே.

தனத்தன தனன
தனத்தன தனன
தனத்தன தனன தன தான

599. எடுத்திடு விடய முடித்திட வருவை
யிசைப்பத முடைய குருநாதா

இருக்கசுர் மறைகட டுத்திடு முதல்வ
யிணக்க மெய்யடிய ரகவாழ்வே

படித்திடு மருணை கிரிப்புகழ முதை
பதிப்பவ ருருகு மொருதேவா

பவப்பிணி மிடியி லிடர்ப்பட மருவி
பகைத்திடு கொடிய பலநோவும்

கடுப்புற நிமிட மழித்தவ குமர
கதிர்க்க டனிகர வருவோனே

நடித்தற வகியை யெடுத்தணு சரண
கனப்புற மிலகு முருகோனே

திடுக்கொள வசுரர் பகைத்தற வொழிய
செயிர்த்திடு மயிலை யுடையோனே

திருப்பதி வளரு மலைப்பதி யுடைய
திருக்குக வரத பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

600. படமுடி யாத துன்ப மிடிபிணி யூடு நைந்து
பதறுட லாகி நொந்து படுவேனை

பரகுக நாத பண்டை மலைமுடி யீச செந்தில்
பதிவள ராதி பண்பி னருடாராய்

கடமுடி வாகவந்து தொடர்பிணி யானவிந்து
கதறுத லேழை யென்ப தறியாயா

கதிவிதி யாது மின்றி மதிபல வாய் ததும்பி
கடமுடை வாகவென்று பலநோவால்

உடனசை போக நின்ற முழுமதி மூட மிஞ்சி
உலைகிற நாயை யன்பி னருளாலே

ஒரு மனதாகி வந்து நல மருளீ யிலஞ்சி
உயரடி யார்கள் கொஞ்சு மயில்வீரா

திடமுடை யோர்க ளன்பி லுறைபர நாத துங்க
செய வரதா கனிந்த முருகோனே.

திருமலி வான மஞ்சு பொதுளிய சோலை தங்கு
திருமலை மீதினின்ற பெருமாளே.

தான தன தான தந்த
தான தன தான தந்த
தான தன தான தந்த தன தான

601. சோக மிக வேநிறைந்து தேக மெலி வாகி நொந்து
தூய பத சேவை யின்றி யுழல்வேனோ
தோதிலெம காலர் வந்து வாசனடை மீதினின்று
தூது வருமேதயி தென்ற தறிநீயும்
வேகமுட னேயெழுந்து மாசரண மேலிலங்கு
வீரமுடனே விளங்க வரவேணும்
வேல்வல தயாள கந்த காரண குகா சிறந்த
மேலவருளே புகழ்ந்த முருகோனே
பாக முடனே கனிந்த பாடன் மிகவே தினஞ்செய்
பாடலுடையோ ரகங்கொள் பொழிலூரா
பால விழி மீதெழுந்து மானவன மேன் வளர்ந்து
பாலனெனவே வழங்கு மொருதேவா
பூகமுகி னோடரம்பை வாழை பலசோகு சந்து
பூமுழுதுமே நிறைந்த வயலூரா
பூரணத யாள கும்ப மாமுனி சதா வணங்கு
போத திருநா கமர்ந்த பெருமாளே.

தான தன தன
தான தன தன
தான தன தன தன தானா

602. நோவி னிடை யிடை யேழை படு துயர்
நூற வருகிற தெனவோது
நூறுபல பல வான்கவி சொலு
நூலையறி கிலை யினியேனும்
பாவியென வெனை நீகைவிட லெவர்
பாலி லடைகுவ னினிதான

பால குருபர சேம வரநிதி
பாகு கனிமொழி மகமாயி

தேவி திரிபுரை மாரி பயிரவி
தீர முடையவ ளபிராமி

தேடு சுதபர நாத நவநிதி
தேவ வருடர வரவேணும்

காவினிடை முகின் மேவிதுயில் புரி
கான மருவிய மலைநாடா

காண வடியவர் கூடு திருமலை
காரை நிகர்தரு பெருமாளே.

தன தன தான தந்த
தன தன தான தந்த
தன தன தான தந்த தன தான

603. உடைபட லான சிந்தை பிணி மிடி யூடினைந்து
உறைகட லூடை யின்க ணுறுமேமை

ஒருவித மேனு மின்ப முறையறி யாத தொந்த
முறுமுழு மூட மண்டு வெனலோடு

இடையிடை மாத ரின்ப முறவர லான நெஞ்சி
னிடர்பட வாதை மிஞ்சி மனமாழ்கி

இடுபத சேவை யின்றி நடுநிலை யேது மின்றி
இடிபடு நாக மொன்று துயராலே

கடையெளி யேனு நைந்துப் பட முறையோ நிறைந்த
கருணை குகா சிறந்த முருகோனே

கதிரயி லேவு கின்ற பரமுரு கேச கந்த
கனிகுற மாதணைந்த புயவீரா

தடைசிறி தேனு மின்றி பவமுழு மூடை கொண்ட
தமியெனை யாள வந்து னருளாலே

தயைதர வேணு மெந்தை திருமலை மேலமர்ந்த
சதுர்மறை தேடுகின்ற பெருமாளே.

தனனா தனந்த
தனனா தனந்த
தனனா தனந்த தன தான

**604.** குறமா தணைந்த புயனே சிறந்த
குறவா விலஞ்சி முருகோனே

குமரா பிறங்கு வரதா நலஞ்செய்
குளிரா னிறைந்த பொழிலூரா

அறமா தணைந்த யிடமே பகிர்ந்த
அரனார் வணங்க வுயரோமை

அறிவாயி தென்று பொருளா தரங்கள்
அருளான் மொழிந்த குருநாதா

புறமே யணைந்து வொருபாடல் கொண்ட
புலவா குறிஞ்சி யுடையோனே

புழுகோடு சந்த முறவே யணிந்த
புயலே முகுந்தன் மருகோனே

மறமானினங்கள் மதமானினங்கள்
மனவேறதன்றி விளையாடு

வரநாடணிந்த சரதா கலஞ்செய்
வளர்மா நகங்கொள் பெருமாளே.

தனத்த தந்தன தானன தானன
தனத்த தந்தன தானன தானன
தனத்த தந்தன தானன தானன தன தான

**605.** இடுக்க ணின்றென லாகிய வோர்மொழி
அடுக்க வந்துரை யேதரு வாய்குக
இருக்கு மந்திர மூலவ ரோதய முருகோனே

இசைத்த தண்டமி ழானிறை வார் புகழ்
தொடுக்கு மன்பர்கண் மாமன வாலய
மிருக்கு மெந்தை மகாகரு ணாகர வாரீபா

மடுத்த தெண்டிரை சூழுல காதிப
மதத்தில் வண்டொரு மாபுக ராலொளிர்
வகுத்த வண்டிறன் பாபிணி மாமுக முடையோனே

வரைக்க ணின்றவை மேபுரி மாதவ
ரிடத்து றைந்தவை மாமயின் வாகன
மதித்து வன்குற மாதுமு னேகியு மனமாழ்கி

எடுத்த ரும்புய மேவம காகரி
வருத்த வந்தமை போதினி லேயவள்
இசைத்த பொன்புய மேவுற வேதமு வியவேளே

எழில்த்த மன்சிகி சேவலு ளோமென
விசைத்த முன்புற மேவவு ளோமகிழ்
இணைத்த புன்குற மாதும னோகர முனநாதா

கடுத்த வன்றிர ளாமசு ராதியர்
குலைத்தை யன்றற வேல்வல மேவிய
கனத்த திண்புய தீரப ராபரை யருள்பாலா

கனிக்க னின்றிர ளேயனு மார்நதி
யெனத்த வழ்ந்தெழி லுடணி வார்பொழில்
கவிழ்த்த மன்றிரு மாமலை மேலுயர் பெருமாளே.

தன தான தனன தந்த
தன தான தனன தந்த
தன தான தனன தந்த தன தான

606. பரநாத முருககந்த னெனவோது வாததுங்க
பவநாச மதுரமுண்ட கனிவாயா

பழமேவு பொழிலடர்ந்த நகரீச ருதவுமைந்த
பரைநாரி கவுரி தந்த மகனேநீள்

வரதீப வுருகுமன்பர் உளமேவி வளருகின்ற
மதிஞான முதவ வந்த செகதீபா

மதியாத கயவரஞ்ச வருவேலை கரமிலங்கு
மகதேவ வளிமணந்த மணிமார்பா

அர மேறு தவில மைந்த நுதி மீறு மயில்க ரங்கொள்
அசுராதி பகைவர் துஞ்ச விடுவேலா

அணி லேற வரிய பொங்க ரிடை யான நகரி லங்கு
புணி வீர சகுத கங்கை தருபாலா

உர மீறு மதமெ ழுந்து வரு வீர முயரு தந்தி
யுறு தீப துணைவ னென்ற வொருதேவர

உன தேழை யடிமை யென்று மெனை யாள வருக பண்பை
உயர் மேல மலையி னின்ற பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

607. உருகாத சிந்தை யன்பர் மருவாத கந்த செந்தில்
உறை தேவ துங்க பொங்க முடையோனே

உயர் வேத மந்தி ரங்கள் நினை வேற நின்ற பந்த
உல கோது கின்ற தந்தி மணவாளா

தருகாத லின்க ணின்ற விலை மாத ரின்பமுண்ட
தர மேது மின்றியுந்த னடிபேணு

தமியேனை யண்டு துன்ப பவமேது மின்றி யின்ப
சரணூல யங்க ளிந்த பதமீவாய்

ஒருகாலு முன்பதங் கண் மறவாத சிந்தையின் கண்
உருவாக நின்றி லங்கும் அருடாராய்

உபதேச மந்திரங்கள் பெறவோதி தம் புரிந்து
உயராக மங்க டங்கு நெறிதாராய்

குருபாத பங்கயங்கள் தருசீல மும்பிறங்கு
குறியாக வந்தனந்த மறைநூல்கள்

குலவா தரங்கடங்க அருள்வாய் நலஞ்சிறந்த
குவடேறி நின்றிலங்கு பெருமாளே.

தனன தந்தான தந்த
தனன தந்தான தந்த
தனன தந்தான தந்த தன தான

608. வரதா சிங்கார கந்த குமர சிந்தூர ணைந்த
மகிப லங்காரி தந்த முருகோனே

மறலி கொண்டோடு பந்த மயலி லண்டாத செஞ்சொன்
மனுவை யின்றோதி யுந்த னருடாராய்

சரத மஞ்சாடு பொங்க ரிலகு தெங்கோடு கந்தி
தளிரு கொங்கோடு சந்து பலவோடு

தமர மந்தாரை கொன்றை யிலவு சிந்தாரை மந்தி
தவழ வண்டோல மண்டு வளநாடா

மிரத மிங்கோடு கொன்றை யரளி சங்காழி நஞ்சு
மிலையு மெண்டோளி பங்க னெனலாகி

மிளிரு செஞ்சோதி யண்டர் பரவி நின்றோது மன்பு
விரிய மன்றாடி மைந்த வரதீபா

விரத மண்பேறு கின்ற குறவர் தங் கோதை யின்பு
விரவு சந்தாரு கந்த மணிமார்பா

மெலிவ டைந்தோர்க ளின்ப முறுநலஞ் சேர வன்பு
மிளிர்தருந் தேவ பண்பை பெருமாளே.

தத்தத் தன தத்தத் தனதன
தத்தத் தன தத்தத் தனதன
தத்தத் தன தத்தத் தனதன தன தான

**609.** செப்பற் பொடு நித்தக் கவிசொலு
சித்தத் தவ ரற்புக் குருகிய
சிற்பச் சிவ னுக்குக் குருவெனு முருகோனே

செப்புத் தன பொற்புக் கெழுமிய
வத்திக் கெழி னட்புக் குரியவ
செக்கர்க் குரு மிக்குப் பெருகிய பரனேயா

ஒப்பற் குறவர்க் குச்சுதை யென
புற்புற் றினை யிற்பட் டிடுகிளி
யொட்டப் படர் கிட்டிற் கவணெறி புரிமாது

உட்பட் டுடை மத்தத் ததியென
பட்புற் றமை வுற்றத் ததிகரி
உச்சத் திற முற்றுத் தடபுட லெனவோடி

அப்பத் தருணத்திற் குறமினு
மிக்கற் பொரிடு தத்தத் தழுவிய
அச்சத் தவிர் தற்சூச் சிகிமிசை வருவோனே

608-ம் பாட்டு மிரதம்—பாம்பு.

அத்திக் கொரு விற்கொட் டயில்விடு
சட்டக் கர முத்துத் திருநகை
அத்தற் றுதி பத்தர்க் கருளிய வாதீபா

முப்புச் செயமுற்புக் குருமுனி
வற்குத் துறைமுற் பட்டுதவிய
முட்டைப் பெயர் பெற்றற்க கமகிழ் செகதீரா

முற்பெற் கருளொப்பப் படியருள்
பட்புச் செறி பொற்புத் திருமகள்
முற்பட்டுறை வெற்புத் திருமலை பெருமாளே.

தன தான தாத்த
தன தான தாத்த
தன தான தாதத தன தான

**610.** உலகோது வாழ்க்கை யிடைமேவு கூற்றை
யுதையேற வீழ்த்தி விடவேணும்

ஒருகாலு மாற்ற முடியாத பேற்றை
யுறுஞான நீற்றை யுடையோனே

பலகாலு மேத்து மடியார்க ணோர்த்தி
பல மேறு சீர்த்தி தருவோனே

பரைஞான மூர்த்தி தருபால சூர்த்த
பருபார்வை கூர்த்த பலரூர்

குலகால தீர்க்க ஜெயதீர வேற்கை
குமரேச நாற்கை யிபநாத

குணநேய ரூர்க்கு துணையான தீர்த்த
குருதீப மார்க்கம் அருள்வோனே

சிலகால மேத்தி யொருகா லமாற்று
சிறியோ ரெதார்த்த மறிவோனே

திருமேவி யேத்த கணையான தீர்த்த
திருநாக மேற்ற பெருமாளே.

தன தான தத்த
தன தான தத்த
தன தான தத்த தன தான

611. மறைவேத வெற்பி லுறைநாத சுப்ர
மணியா யெனக்கு னருடாராய்

மருவார் புரத்தை யொரு தீயிலிட்ட
மகதேவ ருக்கு மகனாகி

சிறை யூடுபட்ட வமராதி கட்கு
சிறை வேரறுத்த வொருவேலா

தினவோதி மத்தி லுறை வேத னுக்கு
திருமா மறைக்கு வுரையோதி

கறையே நிறைத்த வுரமே விரித்த
கடமே பெருத்த வசுராதி

களையே களத்தி றவே வொழிக்க
கதிர்வே லெடுத்த வொருதீரா

தறை யாதரித்த திருமா றனுக்கு
தருமா றனுக்கு மருகோனே

தனமா தினுக்கு வுறையா யமைத்த
தலைமா நகத்துள் பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

612. உலை யாத துன்பு விலை மாத ரின்பு
வொரு காலு மன்பு படலாகா

உரை வேத மந்த்ர முறை யோது கின்ற
உணர் வேது மின்றி யிதுகாறும்

அலைமோத முங்கு வணமாக நின்று
அழிவேனை யென்று னருளாலே

அறமேறி நின்ற மரபேறி நின்று
அருளாத ரங்கள் பெறுவேனோ

தலையாதி பண்டை நகர்சேம கந்த
தளவீர துங்க முருகோனே

தனமேது மின்றி வருபீழை மன்ற
தமியேனை யஞ்ச விடலாமா

கலையாதி கொஞ்சு பதநாத செந்தில்
கனகா முகுந்து மருகோனே

கவிவாண ரன்பு மிகமீறு கின்ற
கனமா நகங்கொள் பெருமாளே.

தனதன தந்த தான
தனதன தந்த தான
தனதன தந்த தான தன தான

**613.** திடமுறு கின்ற ஞான முடையவர் கண்டயோக
செகபர செந்தி ஞதை முருகோனே

தினகர னிந்தி ரேடு உடுகண மொன்ற லான
சிவமென நின்ற தேவ னெனவோது

அடலயில் கொண்டதீர குருபர தென்றன் மேவு
அணிநகர் பொங்கர் சூழும் வளநாடா

அறுமுக மஞ்சு லாவு கிறமலை தங்கு மூல
அருணிறை கின்ற சீல முடையோனே

படவகி கண்டு பீறி அலகிடை கொண்ட வீர
பலமலி கின்ற சேம மயில்மீது

பயில்புற நின்றுலாவு குகவிரி சந்த மார்ப
பழனியி னின்ற பால வபதீபா

இடமகல் கின்ற தான பொழின கரின்ப நாரி
எழிலுற நங்கை தேவி சுதவேளே

எளியனை யுந்த னேய மகனென அன்பு நீவை
இசைதிரு குன்றின் மேவு பெருமாளே.

தனன தானன தந்தன தானன
தனன தானன தந்தன தானன
தனன தானன தந்தன தானன தன தான

**614.** விரத யோகிக ளந்தணர் தாபதர்
முனிவர் மேலவர் கந்தரு வாதியர்
மினிரு மாமனு மந்திர மேசொலு நெறியாளர்

விரியு மாவுல கன்பர்க டேடிய
குமர நாதப யங்கரி யாமளை
மெலிவி லேர்பிடை யந்தரி கோமதி யெமதாயி

சரத வீரி யறஞ்செயு மாடண
யிமய மாது பரம்பரை மீனவ
டரும தேவி நலந்தரு கூரரு ளபிராமி

தனது பாலசெ யந்தரு மாசன
மமரு நேய வணங்கிய தூயவர்
சரண மேவ வரந்தரு பூரண முருகோனே

பரத நாடக மும்பணு மாநட
வரச தேவபு ரந்தர மாதவர்
பரவ மாமறை தந்தரு ளோமுனை பகர்வோனே

பகலை நேரு நிறந்தர மேனிய
அயில்கொணுத சிறந்தவ ரோதய
பதும பாத வயந்தரு சேவக மயில்வீரா

தரத ராதல கந்தபு ராதன
பொதிகை மாமுனியும் பணியேபண
தளிர்த யாளமி குந்துரையே செயு மொருதேவா

தமிய னேய்ப்பிடி முன்பவ வாதைக
ளொழிய வேதயை தந்தருள்வாய்தகி
தன பொன்மாது வளர்ந்தெழின் மாமலை பெருமாளே.

தன தான தந்த தன
தன தான தந்த தன
தன தான தந்த தன தன தான

**615.** முருகா பரம்பரையி னருளே விளைந்தமணி
முதல்வா குறிஞ்சிநில முடையோனே

முதியோர் நிறைந்தபுகழ் சொலுவோ ரகங்குழைய
முனமே யெழுந்தருளு முருகோனே
வருமா முகுந்த னெழில் மருகா தினம்பரவு
மதியோரிடங் குடிகொள் வர்தீபா
வளர்காத லன்புருகு குறமாதணைந்த புய
வரதா நடம்புரியு மயில்வீரா
மருமா விலஞ்சி நகரதிபா செழுங்கமல
மலர்மா திலங்கு வயல் பொழிலூரா
மகிபா செயந்திநக ருடையா யலங்குதொடை
மருமா மிளிர்ந்தபுய குகநாதா
தருவா யிலங்கு பொழில் வளநாடமைந்த பர
சரதா முகுந்தனெழின் மருகோனே
தமியே னிடங்குடிகொள் வரமே சுரந்தருள்வை
தனமா திலங்குவரை பெருமாளே.

தனன தந்தன தான தனுதன
தனன தந்தன தான தனுதன
தனன தந்தன தான தனுதன தன தானு

616 கவுரி யம்பிகை தேவி குணகரி
குமரி யந்தரி வாலை மனோன்மணி
கனக சுந்தரமாது பராபரை வடிவாயி
கதிரிலங்கிய சோதியுமை யொளிர்
பசுமைதங்கிய தேகமுளா ளெழில்
கமழுகின்றவ ளாமெனவே மறை நிதமோது
மவுன முந்தவ மேபணு மாதவ
ருருகு மன்பின ளானத யாபரி
மகித லந்தனை யேபெற லாகிய வொருமாது
வசைகொ ளன்பில ரோடுறை யாதவள்
புகிதை செந்திரு மாதுசு தாபணி
வாழி பங்கய பாதமு ளேதுதி புரிவோர்கள்
ஒவு பரம்பரை நீலிகலா தர
மருவு செங்கயல் நேருகணள் நனி
உறுதி தந்தரு ளானிறை வாகிய மகமாயி

உமை நிரந்தரி வாலை மனோகரி
தரும சிந்தனை யோரித யாசனி
உயரு செண்பக கானிட மேவிய சிவகாமி

தவசு தந்தர வாறுமு காருக
பவ விடந்தனி லேயுழ லேழையை
சடமு லர்ந்திட லாகிய கோழையை பலகாலும்

தணிய வந்திட ருடுழை வாழியை
கருணை யன்பொடு காகரு ணாகர
தருநி றைந்தெழின் மாதிரு மாமலை பெருமாளே.

தந்தன தனந் தானன தானன
தந்தன தனந் தானன தானன
தந்தன தனந் தானன தானன தன தான

617. அன்பிலே விளைந் தேயெழு மாமணி
யின்க ணேபிறங் காதர மாவொளி
அந்தண வரந் தாவென வோதிய பலநாளும்

அன்றி யானிதந் தேடியுளே பணி
கின்ற சாசனந் தேர்கிலை யாரிடம்
அண்டி யோதுவன் ருயக மாகிய முருகோனே

இன்பமே முகந் தேபொழி மாமுகில்
கும்பனே டுறைந் தேமறை யாகமம்
இஞ்சலே தரும் போதம னோகர முடையோனே

எங்க ணாயகம் பூரண காரண
மென்ற நாயகம் பூமியு ணாயகம்
இந்தி ரேடியர்ந் தேவரு மாவடு கணமோடு

என்றி நாயகம் பூவமு தேவமு
தென்ற நாயகம் பேரரு ணாயகம்
என்று நாயகஞ் சீர்பெறு நாயக மௌனலான

இன்சொ ணாயகந் தேவர்க ணாயகம்
மன்று ணாயகஞ் சாகர நாயகம்
எங்கு நாயகம் பூமுத ணாயக மினிதான

என்பு நாயகம் போதக நாயகம்
நன்றி நாயகந் தாபதர் நாயகம்
எண்பொ ணாயகஞ் சாதனை நாயக வரதீபா

என்றிலோ நலஞ்சேர தயாளம
தொன்றுமோ மனஞ்சோர் கிறதே யருள்
இன்பொ னுதனம் பூதிரு மாமலை பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

**618.** எங்க ளையக மேகிரு பாகர
கந்த நாதகு காபர மானவ
இந்து சூடிய மாசிவ னோடுறை மகமாயி

இன்ப வாருதி யாமளையானவள்
துங்க நீலிப ராபரை கோமதி
என்சொ லாதர மேவிய பூரணி யெமதாயி

பொங்க மீறிய வீரித ராதல
மங்கை மாதும னோகரி சாமளை
புந்தி வீழ்பவ ரோடுரை யாடிய மகதேவி

புங்க மார்பவளோ முறைமேலவள்
சங்கையாளி சகோதரி காரணி
பொன்செய் மாதரு மாசனியானவள் எனுமாதா

கங்கை பாவவி மோசனி பாரதி
கொங்குலாவிய நீள்சடையாளெழில்
கண்டதேவி பவானி தயாபரி சிவகாமி

கண்டுளே மகிழ்வோ டுனையேசுத
வந்து பாலுணுவா யெனவே சொல
கந்த நீளெழி லோடவ ளேடியு மடிமீது

தங்கியே சுகிராலய மாகிய
துங்க மாரிதழேகுவி வாயிடை
தங்கவே வுணுமா முருகாவரி மருகோனே

தந்தையேவுன தாருளாலிவண்
வந்துநீதயை யாதர மேயருள்
தங்கமா திரு மாமலை மேவிய பெருமாளே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

**619.** தருமமேஜெய மாமென வோதிய
அருமை நூன்வழியேசெலு மாமுறை
தவறு ணுவணமேசெல வோர்தயை தருவாயே

சகல ஞானபு ராதன கோமள
சரத வீரத யாபர வாரண
தருமதேவகு மாரத ராதல முருகோனே

அருமை மேவிய சீலம னேகர
அரிய மான்மரு காருக வேலவ
அமுத சாகர கார ண பூரண வரதீபா

அகில நாயக மாதரு மாசன
அடிய ரோடுற வாடிய தூயவ
அளியுளே நிறைவாகிய தாரணி மணிமார்பா

பெருமையாகிய மாமுனி தேர்குரு
வெளிய ஞனச தாமடி யாளனை
பிணியிலேதுய ரூடுடையேழையை மயலூடே

பிழைபடாதர வாலமை யாளியை
வெகுளி வேதனை யூடமை பாவியை
பிறர்கண் ஞேவுசொல் கூறிய கூளியை யினிதான

திருவிலாசவு மாசுத சேவக
பகவொ ணுவணமே நிறைவாகிய
திபிய மானந ருநிகர்வாசக குருநாதா

செகவி னோதம ருநிலையேபெறு
குமர நாதநலாதர மாதரி
திருமகாதல மாகிய மாமலை பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**620.** கடமூ டெழுந்து பிணியா லுலைந்து
கழியேழை துன்ப மயல்தீரு

கரை காணலின்றி யுழல் வீணனன்றி
கனிவான துங்க பதசேவை

திடமோடு கண்டு நலமேவு கின்ற
தினமேது மின்றி யழிவேனோ

செகநாத கந்த முருகேச செந்தில்
திரைமோது கின்ற கடலூடா

வடமூ டெழுந்து சனகாதி கொஞ்ச
மறையே மொழிந்த சிவதேவர்

மலையாய் மலைந்த வுயரோமி னின்ற
மறைவான செஞ்சொ லருள்வோனே

இடமே வளைந்த வயல் சூழுகின்ற
எழிலாரு பண்பை யுடையோனே

இமையோர்கள் வந்து துதிபேணு பண்பை
இசைநா கமர்ந்த பெருமாளே.

தான தன தான தந்த
தான தன தான தந்த
தான தன தான தந்த தன தான

621. பூரண தயாள கந்த மாமுனி மனலயங் கொள்
போதக சதா சிறந்த முருகோனே

பூதிதிரு நீறிலங்கு பாலகர மார்பணிந்து
பூமலரு தாரணிந்த வொருதேவா

காரண குகா மலிந்த சாதனை யிலா தமைந்த
காமமத னூலெழுந்த வழிபேணி

காரிகைய ரோடுறைந்து வேதனையிலே படிந்து
காலமிது காறு நொந்து படுவேனோ

வீரண சூரை வென்ற தீரவதி கார துங்க
மேலவருளே மகிழ்ந்த வரதீபா

வேயடவியிலே பிறந்து காளைபுற மீதிருந்து
மீறிமய மாதிடங்கொ ளரனார்

பார தவமே புரிந்த சீருமையே புணர்ந்து
பாலமறையோ மறைந்த குருநாதா

பாலனெனை யாள வந்து சாலதயை யானலஞ் செய்
பாக திருநா கமர்ந்த பெருமாளே.

தாந்த தனதன
தாந்த தனதன
தாந்த தனதன தன தான

**622.** சேந்த னெனவருள் ஆர்ந்த குருபர
தேர்ந்த மயின்மிசை வருவோனே
தீர்ந்த வடியவர் ஊன்று முளமிசை
சேர்ந்த பரநிதி வளிமேவு
காந்த வறுமுக வேந்து வயில்கர
காண்க பழனியி லுறைவோனே
காஞ்சி பயிரவி தாங்கு மொருசுத
காம்பு பயிலிய பொழிலுடா
தாந்த னிகரென வேய்ந்த துயரிடை
சாய்ந்த வடிமையை யருளாலே
தாங்கி மனமருளோங்க வருததி
சாந்த மருவிய குமரேசா
தீந்த னுயர்சுனை யார்ந்த மலரணி
சேர்ந்த புயமுகில் மருகோனே
சீந்தில் பலபல சேப்பு மருவுதல்
சேர்ந்த திருமலை பெருமாளே.

தனத்தா தனதன
தனத்தா தனதன
தனத்தா தனதன தன தான

**623.** மரக்கான் மிசைபத மெடுத்தே நடமிடு
மணத்தா ளருள்பவை யொருதேவி
மதித்தே சுதனென வுரித்தோ டமுதுண
வரத்தே ததியென வுணையோது
தரத்தே சிறுநடை பிடித்தே மெலமெல
தவித்தே மடிமிசை யுறமேவி

தனத்தே பருகிய வகட்டோ யறுமுக
சகத்தே யெனையொரு மகனென

வரத்தோ னெனமன துரித்தாய் நினைநினை
மகத்தோய் பொழில்நக ருடையோனே

மதிப்போ ருளமிசை யிருப்போ யடியவர்
வரத்தா ரகமுறை முருகோனே

கரத்தா ரயிலணி மறத்தார் மருவிய
கனத்தோய் திரிபுர முறுசூரர்

கனத்தே பொடிபட நகைத்தோர் தருமுனை
கனச்சீர் திருமலை பெருமானே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

624. மருவார்க ளஞ்ச வருவீர துங்க
மதி மேவு பொங்க ருடையோனே

வரதா முகுந்து மருகா விலஞ்சி
மகிபா குறிஞ்சி வளநாடா

தருவா னிறைந்த பொழி லூருறைந்த
தனதா சுகந்த மணிமார்பா

சரதா பரந்த மாதா பரங்கள்
தழைவோ டெழுந்த வயலூரா

குருவே மகஞ்செய் பெருவாழ்வு தங்கு
குமரா செயந்தி முருகோனே

குணமோ டெழுந்து நலமேவ வந்து
குலமே விளங்கும் அருடாராய்

திருவே சிறந்த பலமே சுரந்த
சிவமே தவஞ்செ யடியார்கள்

தினமே றுகின்ற வரமே வழங்கு
திருநா கமர்ந்த பெருமானே.

தனனு தனந்த
தனனு தனந்த
தனனு தனந்த தன தான

625 கொடியோர் களஞ்சி யறவே மறங்கொள்
குலவேலை கொண்ட டவீரா

குமரா செயந்தி முருகா பிறங்கு
குருவாக வந்த முருகோனே

படிமே லறஞ்செ யொருமாது தந்த
பகவா விலஞ்சி யுறைவாழ்வே

பலகாலு முந்த னடிபேணி வந்த
பவ வீனைஞ்சி வருமேழை

இடிமேன் விழுந்த அரவாக வொன்று
மினல் மேவுகின்ற படியாக

இனமோதுகின்ற துயரூடுழைந்த
வெளியேனை வந்து னருளாலே

மடியாத சிந்தை யுடனே நிறைந்த
வரமா தனங்க டருவாயே

வள நீதி கொஞ்சு பொழி லூர மைந்த
மலை மேவு கின்ற பெருமாளே.

தான தானன தானன தானன
தான தானன தானன தானன
தான தானன தானன தானன தன தான

626 பாவமே லொரு ரூபம தாகிய
கோவ மேவிய வாசக தீதமை
பால வேதனை யூடமை வாகிய கடமூடை

பாரிலே பல மாதவ ராகியர்
சீசி யாமென வோதிய தாமிதை
பாழி லேயிலை யாதென வேவுண்ர பலவோதி

ஆவ தாகிய காலமு னேதவ
மேவு மோர்வழி பூரண மாமனு
ஆய மாமறை யோதியு ளேவுயர் அறிவோடு

ஆறு மா முகனே குக காரண
சேம தீரத யாளந லாதர
ஆதி நாயக வேதபு ராதன மகதேவ

மாவ ரோதய தாபதர் மாபத
தூய நேயம ஞேகர சாகர
மாம னுலைய தாயக தாரக முருகாநீள்

வாம நேம பயோதர மாகர
தாம நீப மரா மர மாமலர்
வாய தாரணி மாமரு மாகுண வரதீபா

காவ லாவென நாளும ஞேதிட
மேவ வேதுதி பாடி யுளாரக
காவ லாவரு ளாதர மேதர வருவாயே

காம னுர் சுதை யானைம ணுளநல்
வாம மே கலை மாவளி நாயக
கான மாதிரு மாமலை மேவிய பெருமாளே.

தத்தன தான தான
தத்தன தான தான
தத்தன தான தான தன தான

627. புற்குற வேடர் மாதை நற்குண மோடு மேவி
பொற்பமை வான தேவ னெனவோது

பொற்சர ணுதி ஞான வுற்பவ மான சோதி
புத்திர னேமயூர முருகோனே

அற்புத மான மூவர் உற் புறமாக மேவி
அற்பரு ளீயவேணு மெனலாக

அற்றையி லோத னுடி கற்றறி வாள னுகை
அச்சிறை வேதன் மேவு முறைகூறி

தற்பத மீய வீர்வர் முற்பத மேவி நாற
சற் சொலி லார்பு நீதி தருவோனே

தத்துவ மாதி யீாய நித்திய போத பாநு
தட்பமை வான தீர மயில்வீரா

எற்குற வாகி நாளு முற்ற ருளீவி நோத
விச்சக சோதி நாத வூருளாளா

இத்தரை மீதி லேழை யெத்தனை யாட யாள
எற்றிரு நாக மேவு பெருமாளே.

தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன தன தான

**628.** மயக்க மோடக டிடை யேவலி
வருத்து நோவினை யாரிட மேசொல
வருத்த தேவினை யேயலதே நெதி டலநாளும்
வரத்த காபவ மூடையு ளேதின
முதித்த தாகிய மாபிணி யாலுடை
மனத்த ளாடியை வீணனை நாணனை துயர்மூட
நியக்க மேவிட வார்விழி நீர்தரு
தரத்திலே யமை காயனை நாயினை
திருத்தியே பிணி போய் விடவே வரு டரவேணும்
செனித்த போதெனை யேதுடர் பாகிய
அவத்த பாதக மேவுடன் மூடிட
திணித்த நாயக கோமள வேலவ முருகோனே
வயக்க ளுலய மாதவ ராலய
குலக்க ளுலய கோவரை யாலய
மருக் கொளாலய தேவர் களாலய னெனலோடு
மதுக்க ளாலய மாமறை யாலய
தருக்க ளாலய தாமரை யாலய
மதத்த ளுலய மாமணி யாலய பலகோடி
நயத்தி னலய நாளமை யாலய
பலத்தி னுயை பாவல ராலய
நவிர்க்கு ளாலய நாய கவால்ய மணியான
நதிப்பொ ன்டாறு மார்நதி சூடிய
பொழிற் குளுருடை யாயரு ளேபுரி
நயப் பொனுலயு மாதிரு மாமலை பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

**629.** தென்றன் மேவிய தாகிய பொங்கரி
லொன்று மாமுகி லேறுயில் கின்றலர்
சிந்து மாநறை யாமழை யும்பொழி வளமேவும்

தெங்கி லேறிய வானர மங்கொரு
கந்தி தாவிம ராமர கொங்கையில்
தென்றியேறிப யோதர முண்டதில் விளையாடும்

கொன்றை மாபல வாயிடை குங்கும
சந்து வாழைபு மாமர மஞ்சள்புல்
கொங்கு சீரையசோகடி யிஞ்சியு மிலவோடு

குண்டு லாவிய மாபுளி யண்டர்கள்
யண்டமேவுற வேணியிலங்குயர்
கொண்ட சீர்பலவாகிய தண்டலை மலைநாடா

மன்ற நீதியு ளோநிறை கின்றவ
அந்த ணாளர்க ளோடமர் கின்றவ
மங் கொணு விறை யாகிய சங்கர னருள்சேயே

வஞ்க ணாளர் களாமென வந்துடல்
நொந்து போமிடரே புரி கின்றன
மங்கு மாபிணி யேழையை யுன்றன தருளாலே

கன்றுணு வணமே யருடந் தெனை
யொன்று மாதர மேவவுகந் தருள்
கந்த நாத மனோகர சுந்தர வடிவேலா

கண்டுதே னெனவே சொலு செஞ் சொலி
லொன்று மாவளி நாயக பண்பொழில்
கந்த மார் திருமாமலை கண்டுறை பெருமாளே.

தன தனத் தனத்த தாத்த
தன தனத் தனத்த தாத்த
தன தனத் தனத்த தாத்த தன தான

**630** அழிவழப் படுத்தி வீழ்த்து
கொடு பிணித் துயர்க்கு ளாக்கு
அரி பவத் துடக்கை யேற்று கொடியேனும்

அருள் பழுத் தெடுத்த தூய்த்த
பத மலர்த் தடத்தை வாழ்த்தி
அணி பெறத் துதித்து நேர்த்தி பெறுவேனோ

மறுவிடைப் புறத்தி லூக்க
மருவரற் கெழிற் கணை யுத்து
வருபொரிக் கடத்த னேர்த்த னெனலான

மகி தலத் தொருத்த சீர்த்தி
யழகுறப் படைத்த தீர்த்த
மகிழுமைச் சுதத்த ஞார்த்த குணதீபா

பழ மலிப் பொழிற் கொணுட்டில்
உறு பணைச் செழித்த சேர்க்கை
பயிலியற் றாத்தின் மூத்த வளநாடா

பக வசற் குணத்த தீர்த்த
மருவு நற்சுனைக் குளூற்றில்
பனி யறற் படைப்பி லேர்த்த மலர்மாலை

நிழ னிழற் பரப்பு கூர்த்த
தட புயத் தணித்து ளோர்க்கு
நிலமை நற் பதத்தின் வாழ்க்கை யருள்வோனே

நிதி யருட் பெருக்க மேற்ற
தகு பொழிற் செழிக்க வாய்த்த
நிலை திருக்கு வட்டி லார்த்த பெருமாளே.

தனதன தனத்தன
தனதன தனத்தன
தனதன தனத்தன தன தான

631. பசியுடைய வற்கன மிடவீரு மனப்படி
பழவடியனுக்குன தருடாராய்

பல பல விதப்படி கவியமை பதப்படி
பருவரல் துடைத்திலை யிதுகாறும்

வசிவள முடுத்தெழில் பொழில்பல படைத்துயர்
மகபதி நகர்க்கிணை யெனலான

வாபொழி னகர்ப்பதி யுடையவ தவத்தர்கள்
வழிபடு மலைக்குவ டுடையோனே

சசியர வணிச்சடை முழுமுத னுதற்கணில்
தழைதரு மகச்சுத னெனவோது

சரவண பவத்திர குருபர மகத்திடை
தளிர்பர சகத்திடை யடியார்கள்

புசிய முதனத்தினை நித நித மளிப்பவ
புகலிட மெனக்குடி கொளுநாதா

புகலரு திருப்பதி வரைதனி லிருப்பவ
புகழுறு முகச்சிவ பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

**632.** மிடிப்படு துயர்க்கிடை பிணிப்படு கடத்திடை
மிதித்தவ ணிருத்திய தியல்பாமா

விதிப்படி விதிப்படி யெனப் புகல்பவர்க்கிரு
மிளிர்ப் பதமளித்தருள் புரிவோனே

தடிப்படு மனக்குவ டுடைத்திவ ணருட்செய
தனிச்சிகி புறத்திடை வரவேணும்

சரிப்பட மனத்திடை யுதித்திலை யுனக்கெனில்
சடக்கட மழித்திட வயிலேவி

குடித்துயி ருணச்செய நலத்ததி சுருக்கென
குகப்பர சகத்திர முடையோனே

குலத்தவர் நலத்தவர் சகத்தவர் பகைத்தவர்
குறைத்திட வுரைத்திட வழியாகா

இடித்துரை கொளுத்திய மறைப்படி வழக்கிட
எனக்குள முறைப்படி இனியாணும்

இணைத்தொரு மனுச்சிவ பரத்திட நுரைத்திடும்
எழிற்றிருமலைக் குக பெருமாளே.

தந்தன தனதன
தந்தன தனதன
தந்தன தனதன தன தானே

**633.** நம்பின வடியவ ரின்புற வருளிய
நன்குருபர குக முருகோனே

நஞ்சணி பாசிவ னின்சுத துயரிடை
நைந்தவர் பலமுற வருவோனே
அம்பரா துதிபணு கும்பனு மருவிய
அன்புற வருமறை தருவோனே
ஐங்கர னிளையவ சங்கரி தருமுளை
அம்பொழி னகரினி லுறைவோனே
வெம்பினவ சுரர்கள் வம்பினி லுயிரற
வெங்கதி ரயில்செல வவர்மாழ
விண்பர வமரர்கள் தன்சிறை விடுதலை
மின்பெற வுளபகிழ் மிகவாக
வம்பசுர் குலமற வெம்பயில் விடுபர
வந்தனை புரிபவ ரகவாழ்வே
மன்பொழின் மருவிய பொன்பயில் திருமலை
மங்கல மிளிரிய பெருமாளே.

தனதன தான
தனதன தான
தனதன தான தன தான

634. படுபவ வாதை யிடையிடர் மூழ்கி
படுமிடி யூடு தடுமாறி
பழகிய நோவி லுடைபட லான
பருவர லேழை யெதுநாளில்
நடுநிலையான பதமலர் மேவு
நலதின மாவ தறியேனே
நதிபதி யான பொதுளிய சோலை
தளிர்வள மான மலைநாடா
உடுகண மோடு டகரறு கோளும்
உலைவரு ராசி பதினீரும்
ஒருவடி வான குருபர தேவ
உமைசுத சேமம் அருள்வாயே
கடுமொழி யாள ரெனவென லான
கயவர்கள் கேண்மை யுறலாகா

கனதிரு மாது மருவிய தான
 கனிதிரு நாக பெருமாளே.

தந்தா தனந் தந்த
தந்தா தனந் தந்த
தந்தா தனந் தந்த தன தான

**635.** எந்தாய் தினங் கொஞ்சு மைந்தா வெனுஞ் செஞ்சொ
 லென்றே தவந் தின்பம் அருள்வாயோ
இந்தோ டருங் கொன்றை யுஞ்சேர் நலங் கங்கை
 என்பா ரணிந் தங்க சிவநாதன்
மைந்தா கனந் தங்கு தந்தா வளன் றம்பி
 வம்போர் புலுந் தொங்க லுடையோனே
வண்டோ விடும் பொங்க ருஞ்சூடலஞ் சந்து
 மஞ்சா டெழுந் தெங்கு வளமோடு
பந்தாடிடுங் கொங்கை யின்பா லெழுந் தங்கு
 பண்பார் பலந் தந்த நறைகூடி
பண்டா றுடன் சென்று கண்டோ ருளங் கொன்று
 பண்டேயுறுஞ் செஞ்சொல் கடைமானூர்
வந்தே யிடுந் துங்க செஞ்சாலி யின் கன்று
 மன்றூ ரநின் றண்டு வயல்பாய
மங்கா வளந் தங்க பொன்றூ யுறுங் குன்றின்
 மன்றே வருங் கந்த பெருமாளே.

தனதன தானா
தனதன தானா
தனதன தானா தன தான

**636.** மனமெலி வாலே பழ வினையாலே
 மருவிய தோரா இயல்பாலே
மடிமிடி யாலே வருபிணி யாலே
 மதியில தாலே பலகாலே
அன மெலிவாலே பகை வர்க ளாலே
 அருளிலு தாலே நலமேலே

அமை விலதாலே கமை யிலதாலே
அடியவர்காலே மனதாலே

உனவரி தாலே கயவர்கள்பாலே
உரை தாலாலே வினையாலே

உறுமிட ராலே கடநலிவாலே
உளைய கடாலே ஒருபாலே

தினவரலாலே பல மறலாலே
சிறியவனுயே னெனலாலே

திருவருணுதா பெருநரு ளீவாய்
திருமலை மேலோர் பெருமானே.

தனனு தனந் தந்த
தனனு தனந் தந்த
தனனு தனந் தந்த தன தான

637. சரணு லயங் கண்டு தினமோ திதந் தொண்டு
சலியா துவந் தொன்று மடியார்கள்

தவவே டமுங்கண்டு மனவோர்மையுங் கண்டு
தன தாவரந் தந்த செகநாதா

மரணு லயம் பந்த வினையா லுறுந்துன்ப
வரவேதுமின்றின்பம் அருள்வோனே

மகிபா சுகந் தந்த முருகா செயந்தங்கு
வரதா பரந் தந்த முருகோனே

பரணு யெங் கண்டு விறையூ சனங் கொண்ட
படியே தினங் குன்றி னருகாக

பரவா சுகந் தண்டு வளிமா தணைந்தன்ப
பகவா நிதந் தொந்த முடையார்கள்

தாமா தனந் தந்து நலமே விளங் கொன்று
சரணை தருஞ் செந்தி லுடையோனே

சருகா தியுந் தின்ற பெரியோ ருறும் பண்பை
தளிர்மேவு கின்றன்பர் பெருமானே.

தனதன தனனா
தனதன தனனா
தனதன தனனா தன தான

**638.** குருபர முருகா சரவண பவனே
குணகட லமுதே விரிவான

குகைமிகு பொதிகா சலமரு வியதோர்
குருமுனி யறிவே பெறவோதி

வருகிற குமரா நவநிதி யனையாய்
மழைநிகர் கருணை கரவாழ்வே

மணிநவ மணியே புலவர்க ளமுதே
வரநிதி மதனார் இளையோனே

கருமுகி னிறமே நிகருயர் திருமால்
கருதிய மருகா வருடாராய்

கனவயி ரவனார் பிரபல முடையார்
கதிவட குணமே வுறவாழ

திருசின காமு டிலகிய பகவா
சிவசுத முதல்வா வாதீபா

திகழ்பொழின் முறையே பயிலிய திருமா
தினமுறை மலைமேல் பெருமாளே.

தனன தனனா
தனன தனனா
தனன தனனா தன தான

**639.** கருணை முருகா தரும துரையே
கதிரை குமரா வாதீபா

கனகனகமே பிளவ தெழவே
கவிழு முகிரால் பலவாறாய்

உருவ மறவே தருக வருமோர்
உருமு வரிமான் மருகோனே

உயரு கிரிமா னசுரை யொருகா
லொளிய புழைவாய் வழிகாலை

வருக வெனமேவ வுறிய மிகவேய்
வலிமை யதனுன் மிகுசூரர்

வமிச மறவே விடபல் துகளாய்
மகிழு துணையே முருகோனே

அருணை கிரியார் புகழு மணியே
அருளு மனதோ டருள்வாயே

அனக கனகா குமர பரனே
அணிபொன் மலைமேல் பெருமாளே.

தன தந்த தந்த
தன தந்த தந்த
தன தந்த தந்த தன தான

640 செயலொன்று மின்றி வருகின்ற துன்பை
செயமென்ற வென்றி யயிலாலே

தினவென்று வுந்த னருளின்ப செஞ்சொல்
திரவென்று கெஞ்சி யிதுகாறும்

மயமொன்று மின்றி யடுதுன்ப மொன்று
மயலுண்ண் டடங்க விடலாமா

வரகந்த பண்பை நகர்தங்க நின்ற
வரதுங்க செந்தி லுடையோனே

பயமென்ற பந்த கடமொன்று நின்ற
பவம்வந்து வந்து மிடியாலும்

பலவந்த முண்டு பணநின்ற தென்ற
பகைவந்து சிந்த விடுகாமுன்

நயமொன்று முந்தன் அருளன்பு தந்து
நளிர்மொங்கு மின்பம் அருள்வாயே

நடுமன்ற மென்று மிளிர்கின்ற பண்பை
நகைகுன்று யர்ந்த பெருமாளே.

தனன தந்தன தந்தன தானன
தனன தந்தன தந்தன தானன
தனன தந்தன தந்தன தானன தன தான

**641.** பருகு மன்பினர் கந்தரு வாதியர்
பரவு மம்பரர் அந்தணர் தூயவர்
பயிலு பண்பினர் என்றினு மேதொழு மடியார்கள்

பழகு பங்கய செம்பத போதினை
யெளிய னன்பொடு வந்தனை யேபுரி
பழமை தங்கிய மைந்தனெ னுவெனை யிருகாலும்

பெருகு மன்பு சுரந்திலை யேயெனில்
அருளு கின்றவ ரெங்குள ராமினி
பெருமை தங்கிய நின் சரணலைய மெனலான

பிணி மருந்தினை யின்பமை யாழியை
மனதி னின்று சுரந்து சதாபொழி
பெரிய கொண்டலை யந்தணர் வாழ்வினை பலகாலும்

முருகு மன்பரு ளங்குடி யாயுறை
குடிலை தங்கி வரந்தரு பேறினை
முதிய ரென்று மனந்தள ராவண முறையோடு

முடிவி லன்புத ருஞ்சிவ போதினை
யளிசி றைந்தம னேதய நீதியை
முருகு சிந்துர ரந்தா பூவினை முனிவோர்கள்

திருகறுந்தவ மந்திர வாதியை
பெருமை தங்கி மிளிர்ந்தனு பூதியை
செயமணங் கமழ் குன்றினை மேலவர் தினநேடு

திப்பிய சுந்தர செம்பத மீதுவை
அருமையுங் கனமுந் தருமிரவ
திருநகந்தனில் வந்துறை நாயக பெருமாளே.

தந்தந்த தான
தந்தந்த தான
தந்தந்த தான தன தான

**642.** கண்டொன்று கூறி சென்றொன்று பேசி
கம் பொன்று போடு மறிவினர்

கண் சொந்த மாக புன் கொண்ட கேண்மை
கம் பொன்ற வேணு மினியேனும்

திண் கொண்ட வாய்மை மன் கண்ட தூயர்
சென்ற ண்டு மேன்மை யருள்வாயே

செம் பொங்க ரூடு பொன் பொங்கு மூரில்
சென்ற ங்க ணீயு மருளாலே

தண்டங்க லான குண்டங்கள் கோடி
தங்கண்டர் வாழு மிடமான

சம்பந்த மேய தந் தெந்தை யேழை
தம் பங்கி லாக வருவாயே

விண் கண்ட சோலை தண் கொண்டல் மேய
மின் கண்ட தான வொளியாக

மென் சங்க தீன பொன் பங்க தான
விண் டின் கண் மேவு பெருமாளே.

தன தன தான தந்த
தன தன தான தந்த
தன தன தான தந்த தன தான

643. பட முடியாத துன்ப மிடை யெளி யேனும் நைந்து
படு கட மூடை கொண்டு தடுமாறி

பட விதியோயி தென்று மன முடைவாகி நொந்து
பல மிலதாய் வருந்து முழுமூடன்

அடல் பவமே புரிந்த கொடு மையினு ளலிந்து
அலறுகிறு னினைந்து வெனலாக

அருளிலை போ னினைந்து விடில் கெதியே தடைந்த
அடிமை யெனு வெழுந்து வருவாயே

சுடர் பிணியே துவன்றி கடமுடை வாக வந்து
துனி படுவேதை யெந்த முறையாலும்

சொல வறியா மனின்று விதி வழியே வருந்தி
துனிகட னூடுறைந்த கடையேனை

இட ரிடையே பதுங்க வருபவமே வொதுங்க
எழி லருளே பிறங்கு நடாராய்

எழிலிசை தாபொழிந்து வள மிகவே சிறந்த
இறை திருநாக மர்ந்த பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

644. இடுப்படை பிடிப்பினை கணத்திடை யொழித்தருக
லெழிற் சுக மளித்திட வரவேணும்
இருக்கசுர் முறைப்படி துதித்திடு பரைக் குயர்
இளச்சுத குகப்பர முருகோனே
கடுக் கறை மிடற் றிறை நுதற் கனி லுதித்தவ
கனத்தயில் பிடித்துட னயிலேவி
கறுக் கொளு மசுர்க்குல மறப்பொடி படுத்திய
கனப்பர சுகப்பத முடையோனே
கடுப்படு கருக்குழி யிடைப்படுபிறப்பினை
கழித் துன தருட்கழல் தரவேணும்
கதிர்க்கட னிகர்ப் பென சிகிப்புற மிருப்பவ
கமழ்ப்புய வரைக் குடி யுடையோனே
திடுக்கென திடுக்கென பிணிப்படை மிடிப்படை
திருக்கிய துயர்க் கெடும் அருடாராய்
திருப்பதி மலைக்குயர் பொருட்செறி தரத்தமை
திருப்பதி மலைக்கொரு பெருமாளே.

தன தான தன தான
தன தான தன தான
தன தான தன தான தன தான

645. படு வாதை யிடைமூழ்கு கடையேனை யெது நாளில்
பவ மூடை யறவோத வருவாயோ
பலநாளுமுனை நாடு மடியேனை தவமூடு
பிலமேற வரவோத லெதுநாளோ
கடுபீடை மிடியாதி யுறவாடு மெனலான
கடமேவு பிறவாழி யறவேநீள்

கனமேவு சிகிமீது அழகான வடிவோடு
கனிவாகி மறையோத — லெதுநாளோ

கடுநேர வருதூத னெமகாலன் முதலான
கபடோர்களற வோத — லெதுநாளோ

கனமேவு செகநாத குருநாத பரநாத
கவிநாத வரநாத — முருகோனே

நடுவான நிலைமேவு பெரியோர் களுளமேவு
நலபால சிவபால — வரதீபா

நதிமேவு பொழில்சூழ நகர்மேல வரைமேவு
நவிர்சேம குருநாத — பெருமாளே.

தனன தந்தன தனன
தனன தந்தன தனன
தனன தந்தன தனன தன தான

646. இடறு கின்றது பிணிகள்
துடரு கின்றது வினைகள்
எதிரு கின்றது பகைக — ளெனலாகி

இடியி னொந்திடு மரவை
நிகர வந்திடு மிடியில்
இனைய நைந்திடு மடிமை — யெனுமேழை

கடமையின்றிடு பிணியில்
மயலு கின்றது மனது
கருது கின்றது பழைய — பவமாக

கவலை கொண்டன வினியும்
மலரு பங்கய சரணை
கனிய வந்தனை புரிய — அருள்வாயே

மிடறினஞ் சொடு சடையி
லரவு கங்கையு மதியு
மிளிரு கின்ற வனுதவு — முருகோனே

மெலிவில் வந்தவர் துயர்கள்
பருக நின்றருள் குமர
மிளிரு சந்தன மிலகு — புயனேநீள்

தடவு மம்பர பொழில்க
ளிலகு பண்பொழி னகர
சரத சுந்தர வரத குருநாதா
தனத பங்கய மலரில்
வளரு செந்திரு வனிதை
தளிரு குன்றுறை புனித பெருமாளே.

தனதன தான தான
தனதன தான தான
தனதன தான தான தன தான

**647.** பிணிதரு வாதை மேவ உடல் மெலிவாகி வாடி
பிழை படலான நோவி னிடைமூழ்கி
பெருகிய தான பாவ கடமுடை வாக வாவி
பிரிபடலாக வேதை யடைவேனோ
பணிகவுமா மயூர புறமில காதி சோதி
பரசிவ ஞான மோன முருகோனே
பழமலி வான சோலை பொதுளிநல் தேவ நாடு
பயிலுற மேவு தான வளநாடா
வணிகனு மாகி மேலை மதுரையி லேகி மேன்மை
வளைடகர் சேம நாத னெனலான
மகிபர ஞான மூல முழுமுத லுரை வாழ்வு
மகிழுற வோதி யுயிய மொருதேவன்
அணிவிழி யாறி னுரு வுருவம தாகி சூர்
அறவொரு வேலை யேவு முருகோனே
அறுமுகனே தயாள முகின் மருகா குமார
அருடிரு நாக மேறு பெருமாளே.

தனத்த தனத்தன
தனத்த தனத்தன
தனத்த தனத்தன தன தான

**648.** படுத்து பவப்பிணி நொறுக்கு கடத்துயிர்
பதைத்து புதைத்தற விடலாமா

படைத்த குடிக்கொரு சினத்த கனத்தயில்
பறக்க விடுத்திடு முருகோனே

தடுத்து பவத்தினை யழிக்க மனத்திடை
தளிர்க்கு மருட் பர விதுகாறும்

தவிக்க விடுத் தெனை துயர்க்கு ளழுத்தினை
சடத்தை யழித்திட லெதுநாளோ

தொடுத்த மிடித்துயர் தணித்த பிணித்துயர்
தொகுத்த பகைத்துய ரிவையாவும்

சுறுக்கு சுறுக்கென வறுக்க வறுக்கமை
துடக்கு கடத்தினி லழிவேனோ

எடுத்து நலத்திதி புரப்பது னக்கென
இசைத்த தமிட்கவி யதனாலே

எடுத்த முறைப்படி யருட்பெய் தவத்தவ
ரிசைத்த நகத்துறை பெருமாளே.

தனத்தன தனனா
தனத்தன தனனா
தனத்தன தனனா தன தான.

649. துணிப்பட முடியா தழித்திட வருவாய்
சுகப்பத முடையா ருடையோனே

சுதந்தர மருள்வா யெனப்பர வியல்பே
தொடுத்தனை நிதமே புகழ்பாடு

நணித்தமிழ் கவியா னினைக்கமை பரனே
நதிக்கொரு முதலே யெனலான

நளிர்க்குக மலைவாழ் குறக்கொடி கொழுநா
நகைத்தெனை நிதமே பலவாக

நினைத்திழி வுறவே பிணிப்பகை யுடையான்
நிதிப்பகை யுடையா னெனலாக

நிலத்தவ ருரையா முறைப்படி யருள்வாய்
நிதிக்கீருணிதியா யுடையோனே

செனித்திட நிலமேல் படைத்தனை யெனையே
திகைப்படை வினையால் நலிவேனே

திருத்தக நலமே யளித்தருள் குமரா
செயத் திருமலைமேல் பெருமாளே.

தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த தன தான

**650.** சொலற்கரி யாததுன்ப பவக்கட லூடுநைந்து
துணைச்செய யாருமின்றி யழிவேனோ

துரைச் சமுகா செயந்தி வரைக்கமுதே சிறந்த
சுகக்கடலே நிறைந்த முருகோனே

வெலற்கரி தானபந்த மயக்கதிலே வருந்தி
விழிக்கவுளே வருந்து துயர்மூழ்கி

விதிப்படியே தொடர்ந்த வரத்ததினு னலிந்து
விளர்ப்புடனே கரைந்து மனமாழ்கி

நிலப் பொருளேது மின்றி தனப் பொருளேது மின்றி
நிலைப் பொருளேது மின்றி யயர்வேனோ

நிதிப்பதமே நிறைந்த கலைப்பதமே வுணர்ந்து
நினைப்பதமே யிறைஞ்சும் அடியார்கள்

நலப்பதமே விளங்கு தவப்பதமே வுயர்ந்த
நகைப்பதமே யிரங்கி யருடாராய்

நளிர்ப்பதமே சுகந்த தடப்புயனே யிலங்கு
நளித்திரு நாகமர்ந்த பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

**651.** நினைப்பவ ருளத்தினி லிருப்பவ வெனக்கொரு
நிலைப்பொரு ளளித்திட வரவேணும்

நிதிப்பர குகச்சிவ பரைக்குய ரருட்சுத
நிசிக்குரு வசுர்க்குல வெமகாலா

பனைத்துணை புழைக்கர கரிக்கொரு துணைப்பர
பருத்தயில் பிடித்திடு மொருதேவா

பசுக்கொரு முளைச்சுத னெனப்படு பவர்க்குறு
பதப்படி யெழுத்தமை விதியாலே

திணைத்துணை நலச்சுக மளித்திலை தூயர்த்துணை
செறித்தெனை நடத்தினை யிதுகாறும்

சிறித்தெனை யிகழ்ச்சியி னினைத்ததை மதித்தனை
செயப்பொரு ளளித்திட லெனுநாளோ

நனைச்செறி வனப்பொழின் மிகுத்துள நகர்ப்பதி
நளிர்க்குரு பரக்குக முருகோனே

நலத்தவ மிகுத்தவ ரிருப்புள தெனப்புகல்
நளிர்த்திரு மலைக்கொரு பெருமாளே.

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன தன தான

652. கருணை நாயகி யம்பிகை சுந்தரி
குமரி தேவி பரம்பரை யங்கயல்
கணிதயாள மிகுந்து சுரந்தரு ளெமதாயி

கவுரி யாமளை யன்பர கந்தனி
லிலகி வாழ்பவ ளந்தரி தந்திர
கனகமாது நிறைந்தவ ளெங்கினு மெனலான

பொருவிலாவுமை சண்டிகை யெண்டிசை
துதிகொள்வாமி நிரந்தரி பங்கய
புனிதமாது வணங்கி வருஞ்செய மகமாயி

புவனை கோமதி சங்கரி மங்கலை
குறமின்மாமி நலந்தருமம் புரி
புரையிலாதவ ளம்பை பயங்கரி சிவகாமி

தருமிபூரணி கொங்குல வுங்குழல்
எழிலிவாலைம கம்புரி யந்தணர்
சாத வீரிம றந்தழை கின்றவ ளபிராமி

சகல லோக நிறைந்து புரந்தரு
ளுரிமை யானவள் பண்பொழில் தங்கிய
தருமநாயகி தந்த சுதந்தர முடையோனே

தருவுமேலுல கெங்குமடர்ந்தெழில்
பயிலுசோலை மலிந்த பழம்பதி
தனதனார் நகருஞ்சிறி தொன்றில தெனலான

தகைய தாகிய பண்பைநல் குன்றுறை
குமரனே தனை தந்திவண் வந்தருள்
சனகனாதிய ருந்துதி தங்கிய பெருமானே.

தனன தனனா தனன தனனா
தனன தனனா தனன தனனா
தனன தனனா தனன தனனா தனதான

653. கருணை முருகா கருணை முருகா
கருணை முருகா கருணை முருகா
கருணை முருகா கருணை முருகா வெனவோதி

கருது கனிவே வுருவ மெனவே
பணியு மடியா ரிதய வமுதே
கருணை மழையே பொழியு முகிலே யெனலான

அருணை யரசே யருணை கிரியார்
புகழு முதலே பொருவில் பெரியோய்
அனவ ரதமே நிலவு மெழிலோய் வாதீபா

அமுத வடிவே பரம சிவமே
புனித மகமே வரிய பரமே
அளியுண் மதுவே நளின குணமே தவமேவு

பெருமை யறிவோ ரினம துரமே
பிணிமுக முனே செலவரு பவா
பிரபல குகா வருமறை யுளோய் நலமேன்மை

பிருகு முதலா யுளமுனி வரால்
பரவு கிருபா கரநலையே
பிணிகொ ளடியே னெனு மெளியனை னெனலாக

மருவு பவமே வொழிய வருணீ
தரியு மிதுவே குமர குருவே
வரத சரதா பழனி யுறைவோய் குருநாதா

வளர் திருமா மலையி னிடமே
யுறையு மமுதா கரவு ருவமே
மழலை குழல்வாய் மொழியி னருள்கால் பெருமானே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

**654.** கருணை யாதர வானபு ராதன
முருக நாதகு காகதி ராகர
கனக பூஷண தேவவ போதய முருகோனே

கருது மாதவ ராதிய ரோடுரை
பகரு சேமகு ணாலய தாரக
ககன வார்கதி ரேகிக ராகிய வயில்வீரா

பொருநை தாயக மார்பொதி காசல
மிடமு டேறிய ராவண னைமனை
புகழ்செய் வாதினி லேவெனு மாகுரு முனிராஜன்

புனித மாகதி னேதின மேபணி
குமர நாதத யாபரி பாமனை
புதல்வ னேவளி மாதுச தாமரு வியதேவா

அருமை யாயுனை யேதொழு மேழையை
கயவ ரோடுரை யாடிய பேயனை
அசட னீனம காபவ மூடியை யெளியேனை

அறிவி லாமுழு மூடம தேயமை
மிடியை யாளனை மாதர்கண் மோகியை
அறமு காவென வோதியு ளேமகிழ் வடையாத

கரும பாசப யோதரமே பொழி
பிணியு ளோனை பாழ்கட கேடனை
கபட நாடக மேநடி யாளியை யருளாலே

கடைய னாகினும் நீயனு பூதியை
யுதவி யாதரி மாதவர் போதக
கனக மாதுறை மாமலை மேவிய பெருமாளே.

தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த தன தான

**655.** உருக்க மிக வேயெழுந்து வணக்க மிகவே புரிந்து
வொழுக்க முறையே நிறைந்த வடியார்கள்

உளக் கமலமே விரிந்த மலர்க் கிடையிலே ததும்பு
உறைத் தணைறையே யருந்து மரியாகி
இருக்கு முத லாயமைந்த பெருக்க மறைதேரு கின்ற
இணைக்கமுற மேலை நின்ற முதலாகி
இசைத்த தமிழாக மங்கள் நெறிக்கியவு ளாக நின்று
இசைக்கு நடமாடு கின்ற வொருதேவாய்
வருக்கமர வாடுகின்ற பெருத்த சடையோ டுகந்த
வருக்கு சுதனாக வந்த செகவாழ்வாய்
மதிக்கு மதியா யிலங்கு கடத்தி லுயிராய் விளங்கி
மதிக்கு மணுவூடு றைந்த நிலையாகி
பெருக்க முலகே ணிறைந்து இருக்கு மகதேவ கந்த
பிணைக் கொளடியே னிலங்கும் அருடாராய்
பிணைத்தபல சோலை யண்ட நிருக்குமிட மோடு றழ்ந்து
பெருத்த திரு நாகமர்ந்த பெருமாளே.

தனத்த தனதன தானா
தனத்த தனதன தானா
தனத்த தனதன தானா தன தான

656. மயக்க மருவிய மானா ரிடத்தின் மருவிய தீதோய்
வரத்தின் மருவிய சேமா திபனாகி
மதத்த வமணரை வாதா லொழித்த கடவுளர் மேலோர்
மதத்தை நிலைதரு பேறே னெனலான
செயத்தை மருவிய வேல்சேர் பயத்தை மருவிய மாலோன்
தெளித்த மருமக னேனே னதிதீரன்
செழித்த திரிபுரம் நீறா யெரித்த முழுமுதல் காலாய்
செனித்த குருபரன் நாலா மறையோது
நயத்தை யுதவிய நானா விதத்தி லடியவர் பாலே
நகைப்பொ டுறைபவண் மாதா மகமாயி
நளிர்த்த பயிரவி தானே யுதித்த மலைமக ளாயாள்
நகைத்த னறல் குழலானா ளொனுமாது
வியக்க வருமுனை தேனே நிகர்த்த மொழிபகர் சேயோன்
மிகுத்த வளபொழி லூரோன் எனலாக

விளித்து துதிபணு வாயேல் மயக்க மறவரு வாரே
மிளிர்த்த திருமலை தேர்வார் பெருமாளே.

தனன தன தனன தன
தனன தன தனன தன
தனன தன தனன தன தன தான

**657.** கொடியமிடி படபடென பொடிகள்பட வொருநொடியில்
குலவுமயின் மிசையிலகி வரவேணும்

குமரகுருபர முருக சரதபுரவல கமலை
கொழுந னரிமருககுக செயவேளே

படியிலெனை நரரிலொரு சிறுவனென வுதவிமிடி
படியபிணி யிடைசுழல விடலாமா

பதறுமுடன விவடைய கடையனினு மெளியனென
பழையபவ புதர்புகுத லுடையேனும்

கடுவகிகள் குடிகொளுல குறுதவனை யடைதுயரை
கவுபெரிய துனிகரலை நடுமூழ்கி

கரையடையு நெறியறிய இதுவரையி லுணரவிலை
கருணைபழகிய வருமை யுடையோனே

நடுநிலைமை யுடையவர்கள் உளமகிழ வருமியவுள்
நளினபத மிருகமத மணிவோனே

நதியனு மநதிமருவு பணைபொழில் கள்வளைவிலுயர்
நலமவிரு திருமலையுள் பெருமாளே.

தனதன தனத்த தான
தனதன தனத்த தான
தனதன தனத்த தான தன தான

**658.** மதர்விழி படைமாதரிடமுறு கருத்தனுகி
வரவறி விதத்திலேது மறியாது

மறைவழி படைத்தபாதை மறைவழி படைத்ததாகி
மறைவழி கடத்தினேமை யிதுகாறும்

சிதர்படு மனத்தனுகி வொருவழி நிலைக்கொளாத
திடமிடி படைத்துவேதை படலோடு

சிதைபிணி சடத்துளாா வருதுனி மயக்கின்மூழ்கு
சிறுவனென கத்துணூ முனைநேடி

கதறுறு தாத்தை நீயு முணர்குவை யிரக்கமேய
கருதிலை ஜெயத்தைமேவு முருகோனே

கடுகறை மிடற்றரான வொருசிவ முதற்குமேலை
கதிபிரணவத்தை யோது மொருதேவா

பதமல ரெனக்கு ஈய வரமன முனக்கிலாத
படியிது வரைக்கு நீட விடலாமா

பணிபகை நிகர்த்த வேலை வலகா பொழிற்குள்வாச
பகர்பிர பலத்த சேம பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

**659.** இடர்ப்படு பவத்திடை யிருத்தினை துயர்ப்பிணி
யிறத்திற மளித்திட லெதுநாளோ

இருப்பவ லெனப்புகல் திருப்புகழ் படிப்பவ
ரிசைத்தமிழ் முடிப்பவ ரிவர்பாலில்

தடப்படு குணத்தொடு விருப்பம தளிப்பவ
சகத்திரர் புரக்கயில் விடுவோனே

தழைச்சிகி புறத்தினி லிருப்பவ வெனக்கருள்
தழைத்திட வாத்தகி யெதுநாளோ

கடற்படு படைத்திரள் அறப்பொடி படுத்திய
கனத்தயில் பிடித்திடு மொருவீரா

கதிர்க்குல மிலக்கம தெனப்புகல் தரத்தினில்
கவிழ்த்தமை மணிக்கொளு மகுடேசா

மடற்பனை கிளைச்செறி மரப்பொழி லடுக்கிய
வளத்தமை பணைப்புடை வளநாடா

மதிக்கதிர் வழுக்குற மதுச்செறி வுறச்செய
மலர்த்திரு மலைக்குயர் பெருமாளே.

தந்தன்ன தானு
தந்தன்ன தானு
தந்தன்ன தானு தன தான

660. வன்கண்மை யானுய் புன்கண்மை நோவே
வந்தென்னை நானு விதமாக

வன்புண்ணில் வேலே நுண்டுன்னலே போல்
மண்டின்ன லாலே மெலிவேனை

நன் கண்ணாலேநீ உன் கண்ணினுலே
நம்புன்னு நாயே னெனலாக

நன்றண்ணா வேசிர் கொண்டென்னையே பார்
நஞ்சுண்ணு மேலோ னெழில்சேயே

இன்றென்னை யாளா தொன்றெண்ண மாகா
தெஞ்சொன்ன வேலா யுதநாதா

இன்பன்ன வேதா முன்சொன்ன வாதா
லெண்டன்ன வார்கூர் உகிரோகம்

துன்பண்ண வேயீர் பங்கென்ன வேகீர்
தொண் டுன்னதாதே வடகீழ்பால்

தொன்றுன்ன வேவாழ் குன்றன்ன நாயோர்
தொந்தங் கனுனோர் பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

601. மஞ்சுலாவிய மாபொழி லூரிடை
வந்த சேவக னேகிரு பாகர
வண்டு ணுமல ராநிற மாகிய மடமானர்

வஞ்ப யோதர மேநிக ராகிய
கொங்கு லாவிய தார்குழன் மாமரு
மங்கு வாசக மேவிய பேதமை யுடையோர்பால்

நெஞ்சு னேவரு மாயுவி காரம
தொன்றி டாவண மேவரு ளேபுரி
நின்க ணேமன மேபதி வாயமை நிலைதாராய்

நிந்தை தீயவ ராதியரே சொல
நொந்து பூவிடை மாசுடை யாளனை
நின்றபாதக மூடிய கூடியை யெளியேனை

அஞ்சு பூதம லாடிய தால்வழி
கண்டு தேர்தலி லாதக வாதியை
அஞ்சொ லார்தமி ழாரியல் தேர்தலில் கடையேனை

அம்பொனே வறி தாகிய மாபிடி
கொண்ட பேயனை ரோகியை நீதியை
அண்டி டாவிதி யாளனை நாளினை யிதுகாறும்

துஞ்சு வேதனை மூழ்கிய பாதக
வம்பி னேயனை யாதர வாகிய
தொண்டி லேவுற மேவிடு சீர்தர வரவேணும்

தொண்டர் கூடிச தாபணி யேபுரி
கின்ற தானம காபொழில் சூடிய
துங்க மேவிய மாதிரு மாமலை பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தனதான

662. குருபர சுழிமுனை நடுநிலை யினிலொளி
குலவிய பரசிவ முருகோனே

குறுகிய வணுவுரு மணுவென நிலவிய
குடிலையு மறிவதி லரிதான

பெருமுத லதிபதி யடியவ ருளமலர்
பெருகிய நறையுணு மரியாகி

பிலமுதன் முடிவரை யுள்நிலை வுலகினுள்
பிரபல கதிரொளி யெனலான

குருமுனி சிவமுனி வார்துதி பணுமுனி
குணமுனி மணமுனி மனமாழ்கு

குறியுடை யவர்பவ மறவருளிய வா
ரீகை நிறையிருடிகள் மலைவாழ்வே

பிருவரல் துடையென துதிபணி வருகிற
பழகிய வடிமைபொ னலமேவ

பயிலியன் மயின்மிசை யருடா வருததி
பதி திருமலை வளர் பெருமாளே.

தன தான தான
தன தான தான
தன தான தான தன தான

663. மறவாத நேய ரிடமேவு நாத
மகதேவ தேவ முருகோனே
மருவார்க ளுசை முறவேலை யேவு
வரதீர கார செகவீரா
உறவாதை மீறி வருநோவி னேழை
உயவாவ தேது மறியாது
உலைவாகி சேம மறியாத பாவி
யுனையோதி யோதி யிதுகாறும்
அறமேறு நீதி யுதவாம லுளும்
அனியாய மாக விடலாமா
அருளார மார்ப குணதூய வேழை
யதியோக மேவும் அருடாராய்
திறமேறு கான குறமாதை நேடி
தினைமேவு கானி னிடையேகு
சிவமால மேக முறைவான சோலை
திருநாக மேவு பெருமாளே.

தான தன தன
தான தன தன
தான தன தன தன தான

664. பாவி னல மொழி பாகு கனி மொழி
பால மனை மதி யெனலோடு
பாசவினை யொரு ரூபமென வரு
பார்வை குவடுக ளிணையாகா
சீலமுறு தன மாதர் மயலற
தேவ மயின்மிசை வரவேணும்

தீர முறுபர நாத குருபர
 தீப வொளிசுழி முனைமீது

சால வமைபவ ஞான வொருமுதல்
 தால முழுவது முடையோனே

சாமி சிவபர ஜோதி பரவிய
 தாக பிரணவ முறையோதி

கோல மருவிய யோக முனிவரர்
 கூறு மறைமுடி வளர்வோனே

கோல மிகுமயி லாடு பொழிலமை
 கூறு திருமலை பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

665. இசைகட மிடுபர னுதவிய வொருசுத
 எழில்குக வரமணி எனவோது

இமையவர் முனிவரர் பரவுமெ யடியவ
 ரிளகிய மனமலரு றுதேனே

வசைமொழி பனுகிய கொடியவர் குலமற
 மணியயி லுருவிய வொருவீரா

மகபதி தளபதி தனபதி சகபதி
 மதிபதி ரவிபதி வுலகோது

திசைபதி நசைபதி இசைபதி தசைபதி
 சிறுவனு முதலமை பதியாக

செகமருள் பரவிய பெருமுத லடிமைநல்
 திறமுற வருளுவ தெதுநாளோ

பசைபயி லியபொழில் பொதுளிய மலர்மது
 பழகிய பலவழி யுடனேகி

பலிமலி கழனியி லுறைதரு வளமலி
 பரபொழி னகர்வளர் பெருமாளே.

தத்தன தான தந்தந்
தத்தன தான தந்தந்
தத்தன தான தந்தந் தன தான

666. பற்பல வாதை யின்கண் சூற்பல மாகி நொந்தும்
பத்திசெய் தோதி யுந்தன் பதமீது
பக்குவ மான வன்பின் சொற்செறி வாகி யொன்றும்
பட்புகழ் பாடி யென்றும் பணிவோர்கள்
பொற்பர மேபிறங்கும் புற்பவமே வொதுங்கும்
புத்தமுதே வழங்குஞ் செயவேளே
பொற்றிணி தோளிலங்கும் செக்கரணுத பண்பின்
புத்திர ஞானதுங்கந் தருவாயே
தற்பரமே வணங்குஞ் சித்தமுளோர்க ளஞ்சுந்
தத்துவி யாதிதுஞ்சும் படிவாழ்வை
சத்தியமாய் வழங்குஞ் சிற்பர மேவிறைஞ்சுஞ்
சற்குணமே யிலங்கும் படிவாராய்
செற்பொழி லாரிடங்கொண் டற்புதமாக நின்றுஞ்
சித்தர்களாதி கெஞ்சுஞ் செகவாழ்வே
சித்திர மாயனந்தந் தட்சணை பாவிலங்குஞ்
சித்திருநாக கந்தன் பெருமாளே.

தன தான தந்தந்
தன தான தந்தந்
தன தான தந்தந் தன தான

667. பவவாதை யஞ்சும் படிவாழ்வு தந்தும்
பதமீய வந்தின் பருள்வாயே
பரநாத கந்தன் செயவேல துங்கம்
படிமீதி லங்கும் பெருவாழ்வே
தவவேடமுங் கொண் டுறைவோர்க ளெஞ்சந்
தனின் மேவுகின்றம் பரதேவா
தளிரரக மங்கண் டுணர்வேற வென்றுந்
தனியே விளங்கும் பெரியோனே

சிவமே விளங்குஞ் சுதனா கவந்துஞ்
செயசூரர் துஞ்சும் படிவேலை

திறமேவி குன்றம் பிளவாயனந்தத்
திரள்சூரர் நெஞ்சம் பிளவாக

கவவே பருந்தும் பலகோடி சங்கங்
கணமே யருந்தும் படியேசெய்

காதீர செம்பொன் றிருமாது தங்குங்
கனமேவு குன்றின் பெருமாளே.

தன தான தந்தந்
தன தான தந்தந்
தன தான தந்தந் தன தான

**668.** செயமாது கொஞ்சும் படிவாழ்வு தங்குந்
திறவீர சந்தம் புழுகோடு

திருநீறி லங்குங் குகனே முகுந்தன்
திருவே விளங்கும் பொழிலூரா

பயமே களைந்திங் குனேயோது தொண்டின்
படியாய சந்தம் பலபாடல்

பரிவா யணிந்துன் றனைநேடு மென்றன்
பதமே வறிந்தன் பருளாரு

தயவோ டெழுந்திங் கெனையாள வந்துன்
சரணு லயந்தந் தருள்வாயே

சராதா கனிந்தன் புடையா யிரங்குஞ்
சகமே வணங்கும் பெரியோனே

கனிமா மரந்தெங் குயர்வாய கொங்குங்
கழைசோ கிலங்கும் பழநாடா

கயன்மேவு பொன்றண் சுனைமேவு குன்றங்
கவின்மேவு கந்தன் பெருமாளே.

தனத்தன தனதன
தனத்தன தனதன
தனத்தன தனதன தன தான

669. உருக்க மெய்யடியவ ரிடத்தி னினுறைபர
உமைச்சுத குருபர முருகோனே
உனைப்பர வியவென திடத்தினி லிதுவரை
உவப்புரு ளுதவிலை யதனாலே
தருக்கமொ டிழிமொழி யுரைத்திடு பவரிடை
தவித்தன னெனவுல கினிலோது
தரத்துடை யவனென நகைத்திட பலர்கொளு
சலத்திடை விடுவது மழகாமா
நெருக்குறு மரபொழி லுடுத்திய பொழினகர்
நிலைப்பர சிவனுதல் வரவேசேர்
நிறைத்திரள் பயிலிய கலைத் திரளுடையவ
நிசிக்குருவ வுணர்க ளறவேலால்
பருப்பத பிளவென வுடைத்தவ குருபர
பகைத்தவர் குலமற வருவோனே
பலப்பொழின் மருவிய தலத்தெழில் திருமலை
பதிக்குயரிய நல பெருமாளே.

தனதனத் தனத்த தான
தனதனத் தனத்த தான
தனதனத் தனத்த தான தன தான

670. அடியவர்க் கிழப்பமாகு
மொழிசொலித் துயர்க்குள்வீழ
அமைதரத் துரைத்த தீய கொடியோர்கள்
அறவயிற் பிடித்த தீர
குவடுடைத் தரக்கர்மாள
அரைகணத் தொழித்த வீர மூடையோனே
குடிகுடித் தொழுக்கமேயி
லவர்களுக் கிணக்கமான
குணமொழித் தறத்தை மேவு முறையோடு

குலவுயிர்க் கிரக்கமான
கருணையைக் கொடுத்து நீதி
குறைவறப் பெருக்கமேவ மடவாரால்

இடிமனத் தழுக்கை மேலை
பவமறத் துடைத்து யேழை
யினை நலத்திருத்தி வாழ்வு தருவாயே

இசைநடத் தொருத்த ஞாதி
சுத கயற்கணிச்சி தேவி
இமையவற் குருக்கமான மகமாயி

குடிலையற் புதத்து வீரி
நலமருட் குணத்தி காளி
குவலயத் தனைத்தின் மாது சிவகாமி

குலவு நற்சு தத்த தேவர்
தளபதிச் சுகத்த சீர்மை
குளிர் திருப்பதிக் குளான பெருமாளே.

தான தான தனதன தானன
தான தான தனதன தானன
தான தான தனதன தானன தன தான

671. வாதவாயு வயிறினி லூறிய
தான தீய பிணியினி லேபடு
வாதை யாளி மெலிவமை காயினை யனையேனை

மாதர் மோக மருவிய பேயனை
பாப ரூப மிலகிய கோபியை
வாதின் மோதுகிற கடு வாழியை கடையேனை

நீத தான செயலினையே புரி
வார் கணேச மனதினை கோளனை
சேம மேது மறிதலிலா தடை கொடியேனை

தேனை நேர வரு தமிழ் வாசக
மான பாடையியல் கலை யாதிகள்
தேரு நேர்மையில தமை பாழனை மடிமேவி

போத ஞான முடையவ ரோடுற
வாட தூய குணமிலி கோழையை
பூவிலாய மிடிநலி வால்வரு மொளியேனை

பூதி பூசி மனநிலை சாதனை
யாதிசேரு முறையில னாகிய
போலி யான மனி தனிலே யொரு வனுமான

கோத னீதி பயிலிய கேடனை
சாத னோர மனமிசை வாழினை
கூவி யாள வருவதெ னாளென மனமாழ்கி

கூறு பாட லினை மன தோடறி
நாத தேவ குருபரனே யருள்
கோல மேவு திருமலை மேலுறை பெருமாளே.

தனதன தனதன தனதன தந்தந்
தனதன தனதன தனதன தந்தந்
தனதன தனதன தனதன தந்தந் தன தான

672 பலவித வலிவயி றினில்வர நொந்தும்
படுபவ விதியென வுருகிவ ருந்தும்
படியிது வரையெனை யுளவினி டந்தந் திடலாமா

பயிரவி திரிபுரை குமரிசு கந்தம்
பரிமள முளகுழ லுடையவளெங்கும்
பரவிய வடியவ ரிதய மிலங் குஞ் சிவகாமி

குலமறை நலமுற நிதமும் வணங்கும்
பகவதி யருள் பரை சாதி விளங்குங்
குணமணி மகிடனதுயிர் கொளை கொண்டம் பலமாதா

கொடியவர் குமைற வருபவ ளென்றுங்
கருணையை யுடையவள் சிவமுதல் கொஞ்சுங்
கொடி யிடைமனை யவள் சுக நிதியன் பின் செகரூபி

கலகல வெனவொலி பரிபுரமுங்கொண்
டழகிய நடமிடு பவளுமை சண்டன்
கடமற வருபவ ளிமையவர் கெஞ்சும் பரதேவி

கபடுடை யவர்குல மறவவர் நெஞ்சம்
பிளவெழ திரியயில் விடுபரை தஞ்சங்
கழலென வடைபவ ருடையவள் கஞ்சம் பததாயாள்

சலசல வெனமழை பொழிவள முந்தங்
கியமலை மகடரு குருபர வின்றென்
றனையடை துயர்கெட மயின்மிசை வந்திங் கருள்வாயே

தழைபொழி லிலகமை கனிகள் பிதிர்ந்தும்
பலதுளி மழையென பொழிவள மிஞ்சுந்
தலமலி திருமலை தனியி லிலங்கும் பெருமாளே.

தன தனன தான
தன தனன தான
தன தனன தான தன தான

**673.** பல கலைவி னோத குருபர சகாய
பழமுதிரு சோலை வளர்வாழ்வே
பரவு மடியார்களிதய மிலகாதி
பழனி மலை வாழு முருகோனே
நலமவிரு ஞான குமர குருநாத
நளினகுண வாலை மகமாயி
நரையிடப நாத ரிடமருவு தேவி
நளிர ருமையான சிவகாமி
இலகி மயமர்து தருசுத தயாள
வெனதிதய மேவு மொருதேவா
எளியன்மிடி நோய்கள் கெடமயிலின் மேவி
யிசையு மருளீய வரவேணும்
தலமகிமை யான பொழினகரின் மேவு
சரத திடவீர முடையோனே
தளிர் குவளை மேவு சுனையுடைய தான
தன கமலை நாக பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**674.** மருவார்க ணெஞ்சு பிளவாக வென்ற
வடதீர துங்க செகவீரா
மீதியா ரடர்ந்த புரமே கனைந்த
மகதேவர் கொஞ்சு முருகோனே

குருவாக வந்து உபதேசமுஞ் செய்
குகனே செயந்தி வரைவாழ்வே
குமரா விலஞ்சி நகர் வாழுகின்ற
குரவா வணங்கு மடியார்கள்
தருவே பகர்ந்த மறையா கமங்கள்
தலை மேவிலங்கு மொருதேவா
தனனா தனந்த வெனநா டகஞ்செய்
தரமே லெழுந்த சிகிமீது
வருவோய் சிறந்த பொழிலூரு றைந்த
வரதா முகுந்தன் மருகோனே
வளிமா தணைந்த புயமாவளர்ந்த
வரை நாகமர்ந்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**675.** பலகாலு முந்தனடி பேணிவந்த
பவ வினைனெஞ்சு தடுமாறு
பட மோதுகின்ற மிடி யூடிடைந்து
பலமேது மின்றி யுழல்வேனை
விலகா ரணங்களுள மேலெழுந்த
விதமே வருந்த விடலாகா
மெவிவா னலிந்து பிணியா லுலைந்து
விடமே லெழுந்த படியாக
உலகோது கின்ற கெடுமூடமண்டு
வொருகாலு மின்ப மறியாமல்
உலைவாகி நின்ற கடமூடை கொண்டு
உறைவேனை யுந்த னருளாலே
நலமே பிறங்கு மயில் மீதெழுந்து
நளிரா தரங்க டருவாயே
நகரீசர் தந்த செகபால கந்த
நகைநாக பண்பை பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

676. உலகோது கின்ற தங்க மலைமே லுயர்ந்து நின்ற
உமைபால கந்த செந்தி லுறைவோனே
உனையே வணங்கி யன்பி லுருகாத சிந்தை வம்பி
லுயர்வா யெழுந்த பந்த முடையோராய்
நலமேது மின்றி துன்ப மயமா யிரங்கி நொந்து
நலிவால் வருந்து கின்ற கொடியோராய்
நடையா னலிந்த லைந்து மிடைநோ யடைந்த பங்க
நமை வாலுடைந்த புன்க ணுடையோர்போல்
பல காலமுஞ் செறிந்த பிணியா லுலைந்து லைந்து
படுவாதையின் கணின்ற வெளியேனை
பரிபாலனஞ் செயன்பு மலிவாக நின்றிலங்கு
பரநாத துங்க பண்பை வளர்வாழ்வே
இலகாதி யந்தரங்க மறைதேரு கின்ற சங்க
இமையோ ரிறைஞ்சு சந்த முருகோனே
இடாதி யஞ்சவஞ்ச வருவாய் சுகஞ் சிறந்த
எழின் மாவிளங்கு குன்றில் பெருமாளே.

தன தான தன தனந்த
தன தான தன தனந்த
தன தான தன தனந்த தன தான

677. படு மாய்கை யிடை யுண்டைந்து தடுமாறி நிலை குலைந்து
பவ மூடு கட்டமெலிந்து மிடியாலே
படு வாதை யொடு மிகுந்த பிணி யேழையினை யருந்து
படியாக வர வருந்தி யயர்வேனே
நடுவாகி வுட னிறைந்த வுயிராகி விலகனந்த
நலமாகி மகிமை தங்கு முருகோனே
நதியாதி பரவு கங்கை சுதவீர பிரம கந்த
நளிர் மேவுகிற சிறந்த கதிர்வேலா

உடுவாதி மதி பிறங்க வருசோதி ரவி யிலங்க
உதிராசி முதலனந்த முதலாக
உயர் வான மறை யிறைஞ்சு பத தீர வர சுகந்த
உமை பாலக செயந்தி வரைவாழ்வே
மடுவோடு தட தடங்கள் நிறைவாக மழைபொழிந்து
வளமேவுகிற பொதும்பர் மலைநாடா
மறையோதி தினம் வணங்கு முனிவோர் களின மலிந்த
வரமேவு திரு நகங்கொள் பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

678. தடை யேது மின்றி முடிவாக வந்து
தயவே பிறங்கும் அருடாராய்
சரணா லயங்கள் பரவாதி யன்பர்
தமையே புரந்த முருகோனே
அடை வாய நின்ற மறை யாதி மந்த்ர
வனுபூதி தந்த பெருவாழ்வே
அருளே பிறங்க வருவோர் கணெஞ்சி
லமைவா யிடங்க ளிடமேவ
கடைவா யழுந்து பிடியா னலிந்து
கதிமான் முகுந்த னெனவோது
கரிமீ திரங்கி யருளே சுரந்து
கரமே பிளந்த வொருமாயன்
இடையாய ரன்பின் மடமாதர் கொஞ்சு
மெழிலாளி தங்கை சுதனேசீர்
இமையோர்கள் வந்து தினமேவு பண்டை
எழிலாரு குன்றில் பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

679. மடமாதர் தங்க ளிடமேவு கின்ற
மயல்தீர வந்தெ னுளமேவி

மறையோது மந்த்ர உபதேசமுஞ் செய்
வரமே வழங்க வரவேணும்

தடமான செம்பொன் மயமாயி லங்கு
தலமான சந்த வரைவாழ்வே

தலமா தெழுந்த மலர்மா தணைந்த
தரமாறு கந்த மருகோனே

கடமேவு பங்க பவமே வொதுங்க
கடன்மே லெழுந்த ரவிபோல

கதிரோ டிலங்கி வருவோய் நிறைந்த
கனகா சிறந்த முருகோனே

திடமேவு மண்டர் துதிபாடு கின்ற
செயல்மேவு பண்பை நகர்வாழ்வே

சிவனாரி றைஞ்சு குருநாத கந்த
திருநா கமர்ந்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**680.** அருளால் நிறைந்த குருவே பிறங்கும்
அணிபோ லிரங்கு மொருதேவா

அழகே மலிந்த மயில்மீ தெழுந்த
அரசே செயந்தி முருகோனே

தெருளாரு கின்ற மறை மேலை நின்ற
சிவமே வணங்கும் அடியார்கள்

சிதை யாத பந்த மயல் போக வந்து
சிவ ஞான மென்றும் அருள்வோனே

மருளாளர் துன்பு படமோது கின்ற
வரவீர கந்த ஸ்ரீகநாதா

வளர்தா பரங்கள் மிகமேவு கின்ற
வளமேறு பண்பை யுறைவாழ்வே

இருள்போ லெழுந்த தனமார் குறிஞ்சி
யுறுமா தணைந்த மணிமார்பா

உயர்வேற நின்ற திருமா நகங்கொள்
உமை பால கந்த பெருமாளே.

தனன தன தன
தனன தன தன
தனன தன தன தன தான

**681.** கருணை யொழுகிய விழிக ளிலகிய
கனக குருபர முருகோனே
கடலின் மிசையெழு கதிரை நிகரிய
கவினொ டொளிதரு மயில்வீரா
அருணைகிரி புகழ் மருமமிசையணி
அருமை மருவிய வரதீபா
அகில வுயிர் தொறு நிலவு கிறபர
அணுவி னணுவென வுறைவாழ்வே
தருண முகிலென கருணை மழைபொழி
சரத வரநிதி யெனலான
தனத பொழில்நக ருறையு மொரு முதல்
தபத ரடியவ ருளமேவி
அருண கிரியின் மருவு காருக
அழகு பழனியி லுறைவோனே
அவுணர் பொடிபட வயிலை யுருவிய
அணிகொள் திருமலை பெருமாளே.

தன தனன தான தந்த
தன தனன தான தந்த
தன தனன தான தந்த தன தான

**682.** அர கரசி வாவுயர்ந்த முரு கபர நேயகந்த
அறு முககுகா செயந்தி யுறைவாழ்வே
அடிய ரித யாலயங்கள் மருவு குரு நாத பண்டை
அரசசெக வீர துங்க முடையோனே
பரம கிருபா பிறங்கு தரும முகிலே யறஞ்செய்
பகவ சுமுகா யிலஞ்சி யுறைவோனே

பருவ முகிலாக நின்ற வொருவன் மருகா நிறைந்த
பரம வணுவே பவங்கள் பொடியாக

வரத மருள்வோய் சிறந்த பழனி மலைமீ தமர்ந்து
மழலை மொழி பேசுகின்ற வொருதேவா

வருண மயின்மீ தெழுந்து வுலக ளவதாய் நிறைந்த
வயிர வடிவே யிலங்கு மயிலாளா

சரத சிவகாமி தந்த புதல்வ குறமா தணைந்து
தயைதரு தயாள பண்பை யுடையோனே

தமிய னெனையாள வந்து அருமைதருவா யுகந்த
தனதிரு மகா நகங்கொள் பெருமாளே.

தந்தன தனா தனன
தந்தன தனா தனன
தந்தன தனா தனன தன தான

**683.** இன்ப ரசமே கருணை பொங்குக டலே மதுரம்
இஞ்சு சுவையே யருமை யுடையோனே

எங்கள் துரையே பழனி யின்க ணிறைவே பொறுமை
என்றவு ருவே யணுவி லணுவான

மன்பா மமே விபுலை யந்தண முதே யடியர்
வந்தனை யுளேவளரு முருகோனே

வண்டுணை வொணா மலர்கள் தண்டலை யுளே புவனை
மைந்தகுரு நாத முகின் மருகோனே

என்பரவி ஞேடுமதி கொண்டசிவ னார்மதலை
யென்ற செக வீரசிகி யிடமேவி

எங்கள் குலமே வளர வந்தரு ளுவாய் குமர
எந்தை யினிதான குண வரதீபா

பொன்பிர மனார் மயல தன்கர மதால் சிரசு
புண்கள் படவே புரியு மொருதேவா

பொங்கர் பல சூழ்புயரு கின்ற திருமா மலையுள்
பெரிங்க மிகு மாவசிய பெருமாளே

தந்தன தனதன
தந்தன தனதன
தந்தன தனதன தன தான

**684.** அந்தண ரடியவர் வந்தனை புரிபவ
ரன்பினி லுறைபவ ளெனலான

அந்தரி திரிபுரை சுந்தரி பயிரவி
யம்பிகை யருள்தரும் எமதாயி

சந்தன பரிமள குங்கும மணிபவை
தன்சுத குருபர முருகோனே

தண்டமிழ் குருமுனி வந்தடி பரவிய
தண்பத பழனியி லுறைவோனே

சந்தன வரையினி லங்குறு மயில்மிசை
சந்தத மருவிய வரதீபா

சம்புவின் மனமய லன்றற வருளிய
தன்றிற முபரிய பெரியோனே

பந்தமொ டுறைபிணி முந்தையில் புரிபவ
பங்கம தறவருள் புரிவாயே

பண்பொழில் மருவிய சுந்தர திருவரை
பண்தளி யினிலுறை பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான்

**685.** குருநாத சந்த வரைமே லுயர்ந்த
குமரா யிலஞ்சி நகர்வாழ்வே

கொடியோர்கள் பஞ்சு படவே லெறிந்த
குகனே யிலங்கை வளர்கோவை

கருவோ டொடுங்க வவர் வாழ்வு கொண்ட
கருமே கனின்றன் மருகோனே

கனகா பொதும்பர் மலைமே லிலங்கு
கதிரோ டெழுந்த குகதீபா

தருகாதல் கொண்ட வனமாத ணைந்த
தனதா குறிஞ்சி யுடையோனே

தமியேனை யுந்தன் மகனாய் நினைந்து
தாமேவு கின்ற படிவாழ்வே

தருநாளி தென்று வுரையோதி யஞ்சல்
தருவாய் வணங்கு மடியார்கள்

தனமாக நின்று வுனவே சொரிந்த
தனிநாட பண்பை பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**686.** மணியாகி வந்து வுளமே யிருந்து
மதியா யிலங்கு மொருதேவா

வயலூ ருறைந்த குருநாத கந்த
வரதா செயந்தி வரைவாழ்வே

தணியாத பந்த மயலூ டுடைந்த
தமியேனை யெந்த வகையாலே

சதுராக மங்கள் பெறவோத வந்து
தனியே யிருந்து மறைகூறி

பிணியாவு மின்றி மிடியாவு மின்றி
பெரிதான யின்பம் அருள்வாயே

பிருகாதி கும்பன் முனிவோர் வணங்கு
பிரகாச அங்க முருகோனே

அணிமேலுறி கொம்பர் முடியேற வின்றி
அடிவீழு கின்ற பொழில்சூழும்

அழகான பண்பை நகர் வாழுகின்ற
அரசே சிறந்த பெருமாளே.

தனனா தனந்த
தனனா தனந்த
தனனா தனந்த தன தான

**687.** —னியேன் வருந்து விதி நோவறிந்து
இதமே வழங்க விதகாறும்

இலதாகி நொந்து படுவேனை யஞ்சல்
எதுநாளிணங்கு மனதோடு

அளியீவை செந்தில் முருகா குறிஞ்சி
யரசே சிறந்த குருநாதா

அநியாய மிஞ்சு படி மீதிடைந்து
அழிவேனை யுந்த னெழிலான

தளியூடு நின்று கவிபாடு கின்ற
தரமே வழங்க வரவேணும்

தமியேனை யுந்த னடியே னுகின்ற
தவமே பிறங்கும் அருடாராய்

வெளியாவு நின்ற முதலை யிலங்கை
வெளியாக வந்த ரகுராமன்

மிகவே வுயர்ந்த மருகா பொதும்பர்
மிளிர் மாநகங்கொள் பெருமாளே.

தன தான தான
தன தான தான
தன தான தான தன தான

688. இடையூ றிலாத படியாக வாழ்வு
யெதுநாளிலீய வருவாயோ

இமையோர் பராவு குருநாத தேவ
எழிலீச சேம முடையோனே

கடையேனை யாளு முறையே தெனுது
கதி யீதல் வேணு முருகோனே

கனிமூல மாதி வுணு வோர்கணேயு
கனகாபிடேக பரவாழ்வே

தடையே யிலாத புகழ் பாடுநேய
தமிழ் பாடுதூய வடியார்கள்

தன தாக வாழு மொரு கோவிலாக
தவறுந்து லாவு மெழில்வேளே

படையாதி சேரு மசுராதி மாள
பருவேலை யேவு மொருவீரா

பழையனை யாள வருவாய் குமார
பகர் நாக மேவு பெருமாளே.

தனத் தனத் தனதன
தனத் தனத் தனதன
தனத் தனத் தனதன தன தான

**689.** கிருத்திகைப் பணிவிடை யினுக்கிடர்ப் படுமொழி
கிளத்து புற்குணமுள கொடியோரை

கிழித்துடற் புரையுற வழுத்தயிற் கரகுக
கெசத்துணைப் பரசிவ முருகோனே

வருத்து முற்பவ முறத் துயர்க் கிடைப் படமொழி
வகுத்தவர்க் கிடர் செய வருவோனே

வளத்தமுப் புரமற எரித்தவற் கருமறை
வழக்குநற் பொருளினை யருள்வோனே

திருத்தியுற் றனுதின முனைத்துதிப் பவர்க்கருள்
செழிப்புறத் தருபர ஞெனவோதி

திருக்கடற் கவுணரை யழித்தநற் பிரபல
செயப்பரைக் கொருசுத வடிவேலா

பருத்தெழுத் தருநிறை வளைப்பொழிற் கிடையுறை
பதிக்கருட் பெயவரு பெரியோனே

பதிப்பவர்க் குளமிசை யிருப்பவற் குருபர
பகர்த்தாத் திருமலை பெருமாளே.

தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந் தன தான

**690.** பிணிப்படு துயர்ப்புன் கடத்தினை வருத்தும்
பெருக்கமு ளலைக்குஞ் செயலோடு

பிணித்தெனை முனைப்புன் பவத்தழல் கொளுத்தும்
பிறப்பினை யொழிக்கும் படிவாராய்

கணித்திளி தளிக்குங் குகப்பர செழிக்குங்
கனிப்பொழி லுடுத்தம் பொழிலூரா

கனிப்புக ழுரைக்கும் படிக்கருள் கொடுக்குங்
கதிர்க்குக திருச்செந் தியின்வேளே

திணித்தயில் கரத்தின் புறத்தவழ் செயத்திண்
திறத்தவ வெழிற்குஞ் சரிமாது
தினத்தழு வியத்திண் புயத்தவ வளிக்குந்
திகட்புய மளிக்கும் பெரியோனே
பணிப்பகை மயிற்பின் புறத்திடை கதிர்க்கும்
பனிப்புற விமைக்குங் குமரேசா
பழப்பொழி லடுக்கந் திருப்பொலி மிகுக்கும்
பதித்திருமலைப் பொன் பெருமாளே.

தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந் தன தான

691. பகைத்தவர் களுக்குஞ் சினத்தவர் களுக்கும்
பருத்தயில் விடுத்தங் கவர்வாழ்வே
பறித்தற வொழிக்குங் குணத்தவ இகழ்ப்புன்
பழிச்சொலை யியற்றுங் கொடியோர்கள்
சிகைத்தலை யிடத்திண் டடிக் கொடு புடைக்குந்
திரட்படை யெடுக்குஞ் செகவீரா
செருத்த சூரறக் கொன் றொருப்படு மனத்திண்
டிறத்தொடு நொறுக்கும் புயவேளே
குகைச்சிறை யதிற்றங் கியற்கையர் வளர்க்குங்
குறத்தியை மணக்கும் பெரியோனே
குகப்பர சிவற்கும் சகப்பிர மருக்கும்
கொளப் பெருமறைப் பொன் பொருள்கூறி
திகைத்தவர் களுக்கும் பதப் பொருளுரைக்குஞ்
செழிப் பொழிலுடுக்கும் பொழிலூரா
சிறப்பமை முழக்கஞ் செறித் திருமலைப் பொன்
திருத்தலை யிருக்கும் பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

692. மனதறு புணுகி நொந்து விடபல வேது வுண்ட
வழி மொழி யோதுகின்ற கொடியோர்கள்

மர பழிவாக வென்று அயில் வல மேவுகின்ற
வா முருகா சிறந்த குருநாதா
தினைவனம் மீது நின்று கிளிக வரா மலுக்கு
சிறுமியை யாள வன்று மனமோடு
செய கரியேயெதிர்ந்து பயமுற மார் பழுந்து
திறமுற வாக ணைந்த செயதீரா
வனகரி மாது கொஞ்சு குணவதி கார கந்த
வரதத யாள செந்தி லுடையோனே
மயில் மிசை யேறி யன்பர் இடமுற வேணு மென்ற
மனதொடு லாவு கின்ற செயலாளா
எனதிட ரோடி யஞ்ச வொருமொழி யோதி யின்று
இசைநல மேவு மன்பு தருவாயே
எளியன தாசை மிஞ்சு பணிவிடை யாதி தந்த
இசைதிரு நாக மர்ந்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

693. மனதே மெலிந்து விடவாதை தந்த
மதியாத வஞ்ச முடையோரை
வரவே லெறிந்து அவர் வாழ்வு பொன்றும்
வணமே புரிந்து விடவேணும்
வன வேடர் கொஞ்சு கிளியாக நின்று
மயிலாக நின்று பலகாலும்
வளர் காதல் கொண்டு தினமே தவஞ் செய்
வரமேறி நின்ற குறமாது
முனமே சிறந்த புன மீது நின்று
மொழியால் மொழிந்து மணமாழ்கி
முனையே வியஞ்ச வரமார் பணைந்த
முருகா குறிஞ்சி யுடையோனே
கனகா முகுந்து மருகா விலஞ்சி
கனி சேருகின்ற பொழிலூரா

கதிர்வே விலங்கு மொருவீர கந்த
கனமா நகங்கொள் பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**694.** எனை நோவவன் சொலெளி தோதுகின்ற
எரி வீணர் பஞ்சு படநேரு

எரியாக நின்று அவர்வாழ்வு பொன்ற
இசைவோ டெழுந்த புகழ்வீரா

தினைமேவி நின்ற புனமேவி நின்று
செயமேவுகின்ற குறமாது

திதலாதி தங்கு தனமாதி கண்ட
தினமே யணைந்த மணிமார்பா

கன மாதிரங்க ளளவா யெழுந்த
கரமேவு தந்தி இளையோனே

கதிர்காலு கின்ற வயில்வே விலங்கு
கர சேவகஞ் செய் முருகோனே

புனைவாவிலங்கு மலர்மாலை கொண்ட
புயவீர செந்தி லுடையோனே

புகழ் வாகைகொண்ட திடமார்ப பண்பை
பொலநாக மர்ந்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**695.** அனியாய வஞ்ச முடையோர்க ணெஞ்ச
மறவே லெறிந்த வொருவீரா

அடியார் களன்பை யறியாம னின்றி
அணுவேனும் நன்றி யிலதான

முனிவாகு புன் சொல்வினை யோதுகின்ற
முழுமூடர் துஞ்சி விடவேணும்

முனிவோர்கள் கொஞ்சுபத சேவகஞ் செய்
முருகா குறிஞ்சி யுடையோனே

பனியா னனைந்து வெயிலா னுலர்ந்து
பசியா லலைந்து பலகாலும்

பணியாறுகண்ட முறையே யுவந்து
படியே வணங்கு மெளியேனும்

துனியா வினைந்து விடவோதுகின்ற
துடர்பேறி நின்ற கொடியோரை

துயரே யருந்த வயிலேவு பண்பை
சுயநாக மர்ந்த பெருமாளே.

தாந்த தன தான தந்த
தாந்த தன தான தந்த
தாந்த தன தான தந்த தன தான

696. தாங்க முடியாத பந்த மோங்கு மன தாலுழன்று
தாண்டவ மதாடு கின்ற பவமூடே

தாழ்ந்து நிலையா மனின்று வோய்ந்த லரிவாய் ததும்பி
சாம்பிண மாதக நொந்து அழிவேனோ

வாங்கு கடல் சூழுகின்ற பூந்தணுல கூடெழுந்து
வாய்ந்த வயதாகி யின்ப மயலாலே

மாங்குயிலை நேருகின்ற தீங்குதலையான செஞ்சொல்
மாந்தியவர் வாயில் சென்று மனமாழ்கி

தேங்கி மலைவாகி நின்று காய்ந்த மதனுக மங்கள்
தேர்ந்த நிலையால் வருந்த விடுவாயோ

சேர்ந்தடியர் வாழுகின்ற பூந்தணளி னையங்கள்
சேர்ந்துரிமையாய் வணங்க விடுவாயோ

ஏங்கி மனமே தளர்ந்து சாந்த மிதுகாறு மின்றி
யேய்ந்த கொடியேனை யுந்த னருளாலே

ஏந்தி யினிதாகு மன்பு யீந்தருள்வை யீச பண்பை
யேய்ந்த திருநாகமர்ந்த பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த    தன தான

**697.** அடியார் கணைஞ்ச மஞ்ச உரையாடு கின்ற வஞ்ச
அறிவீனர் துஞ்ச நஞ்ச    மெனலாக
அயிலேவு கின்ற செங்கை யுறுவீர மிஞ்சு கின்ற
அரசே சிறந்த பண்பை    முருகோனே
மிடியா லினைந்து நைந்து பசியோ டலைந் தலைந்து
விதியோ யிதென்று நொந்து    மெலிவாகி
விடவாதை யுண்டடர்ந்த கடமாயையின் கணின்று
மிகு மோசமுந்த தும்பு    கொடியோரால்
இடரேவுகின்ற புன் சொலிழி வாசகந் தெரிந்து
யெளிதாக வந்த பந்த    மயலூடு
எளியே னிடைந்துடைந்து தடுமாறுகின்ற துன்ப
மிடையே பதுங்கி நின்று    உழல்வேனோ
திடமேறுகின்ற செந்தில் நகர் வாழுகின்ற கந்த
செயமேறுகின்ற துங்க    முடையோனே
திற மேறுகின்ற அன்பு தருவாய் நலஞ் சிறந்த
திருநாகமர்ந் துயர்ந்த    பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த    தன தான

**698.** மனவாதை யின்க ணுழல்வேனை யெந்த
வகையாக வந்து    னருளாலே
வளமே சுரந்த தருவாக நின்று
வரமே வழங்க    வருவாயோ
தனமேது மின்றி யுழல் வீணனென்றே
தரமாக நொந்து    இதுநாளும்
தரை மீதினைந்த கொடியேன் விளங்கு
தனதா பரங்கள்    பெறுவேனோ

அனமாரறங்கள் செய மேவுகின்ற
அடியார் மயங்க விடலாமா

அனியாய மிஞ்சு கிறவாழ்வி னின்ற
அறிவீனர் பஞ்சு படநேரு

கனலா யெழுந்த வயிலேவு கின்ற
கதிர்காம செந்தின் முருகோனே

கவிதாவுகின்ற பொழில் சூழு பண்டை
கனநாக மர்ந்த பெருமாளே.

தன தான தத்த
தன தான தத்த
தன தான தத்த தன தான

**699.** இடையூ றெனக்கு வரவோதி நித்தம்
இழிவாயு ரைத்த மொழியாவும்

எரியூடு பட்ட சருகா வெரித்து
யெனையே புரக்க வரவேணும்

தடையோ டிகழ்ச்சி சொலுவோர் கடத்தில்
தனிவேல் புகுத்தி யவர்வாழ்வை

தவிடாய் நொறுக்கி விடவேல் பிடித்த
தலைவாகரிக்கு மிளையோனே

இடையோதி மத்தி னெழு மாவயற்கு
இசையோ முரைத்த குருநாதா

எழிலாயர் தர்க்க மிடமாதர் கட்கு
யிசைவாகி வுற்ற மயல்தீர

உடையே யெடுத்து மரமேல் தொடுத்த
வொரு மாறனக்கு மருகோனே

உயர்வான பட்டை மலை மேலிருக்கும்
உறுஞான முத்தர் பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

**700.** பிணிமிடி யிடைபடு துயர்சொலி யிதுவரை
பெருகிய புகழ்கவி பலவோதி

பிணையுன தருள்மலர் பதமென வுருகிய
பிரபல மறிகிலை இனியேனும்

அணியழ கியவளி குறமகள் மருவிய
அறுமுக குருபர முருகோனே

அடியனை யுனதருண் மகனென மனமிசை
அமைவுற வருள்பெய வரவேணும்

பிணிமுக புறமுறு கதிரென மிளிரிய
பெரியவ சரவண பவநாதா

பிணிமுக முடையவர் மலர்தலை யுலகிடை
பிணியற வளர்கிற முருகோனே

மணிமறை யொலிமலி மிகுமடி யவர்துதி
மருவிய பொழினக ருடையோனே

வரபதி குணபதி தனபதி திருமலை
மகபதி பரவிய பெருமாளே.

தான தனத்த
தான தனத்த
தான தனத்த தன தான

**701.** மானார் மயக்கி னூலை யிளைத்து
மாறு தனுத்த சிறியோர்கள்

மாடே மனத்தை யோடா தகற்றி
வாழ்வா தரிக்க வரவேணும்

தேனார் மொழிச்சி கானார் குறத்தி
சேர்மார் பணைத்த முருகோனே

தீதோ திபெற்கு வாதாக வூற்ற
தீயோர் குலத்தை யயிலாலே

பானூற வைத்த வீரா பரைக்கு
பாலா கரிக்கும் இளையோனே

பாவோ திநித்த மேவா திபத்தர்
பாலே யிருக்கு மெழில்வேளே

வானோர் கணித்த மேவாழ் வளித்த
வானே கரிக்கு மணவாளா

வானேறு பட்டை மாமா மலைக்குள்
மாதான முற்ற பெருமாளே.

தந்த தன தான
தந்த தன தான
தந்த தன தான தன தான

**702.** பந்தபவ முடை யென்ற கடமான
பண்புடலி னூடு பிணிதான

பண்டிய கடார உண்டி பலசேர
பங்க மயலேற மனமாழ்கி

அந்தமிக மேவு மங்கையர் களாசை
அண்டவரு நோவி னிடைமூழ்கி

யந்த மறியாது நின்று தடுமாறும்
அன்புரிமையாக இதுகாறும்

நொந்த ழிதலான துன்ப வசமாகி
நுன்பதும பாத மலர்பேணு

நுண்டுறையு ளோர்கள் தங்களிடமேவ
நொந்திழி விலான கடையேனை

எந்தவித மேனும் வந்தடிமையாக
இன்பவனுபூதி தருவாயே

எஞ்சுதலி லாத பண்பைநகர் வாழும்
எங்கள் குருநாத பெருமாளே.

தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன தன தான

**703.** வயிற்றினூடமை வாகிய வாயுவி
னிடத்தி லேழை சதாதுயர் மூடிய
வாத்த ஞகிய பேதமை யாளிலைய மடையேனை

வருத்து நோவின மாகிய வாழ்வினில்
நிலைக் கொளாதமை வாமனு வேயென
மதிக்கு மூழ்மையிலாதுறு மேபயனே யெளியேனை

உயிர்ப்பிலேபல யோசனை யேசெயு
மனத்தளாடியை பாவியை கோவியை
உருக்கமேவவி லாதமை கோளினை யனையோனை

உறுத்து மேலவர் மேனு முருமொழி
பொருத்து வீணனை மாணினை வேயற
உடைத்த தீயினையே நிகராகிய கடையேனை

பயிற்சிசாதனையே பணுமாதவர்
இடத்தை நாடிடவே மனவேதனை
படைத்து நீதியிலா முழுமூடனை சிறியேனை

பகைத்த தீயவரோடுற வாடிய
தரத்தை யாளனை மாதர்கண் மோகியை
பதத்தை நாடு மனோதிடமே விட வறியேனை

பயில்ப்புண லயமாம னவாதியை
எடுத்தெனுளினி லோவருள் சேர்தர
பதிப்பிலே நிலையேபெறு பூரணம் அருள்வாயோ

பகர்ப்பொ ருலயமாகிய மாமலை
யிடத்துலாவிய தீரவரோதய
பரைச்சுதா கிருபாகர மேலவர் பெருமாளே.

தனன தன தான தத்த
தனன தன தான தத்த
தனன தன தான தத்த தன தான

704. முருக குகநாத சுப்ரமணிய சிவமே யருட்பெய்
முதல்வ பரஞான முத்தி யருள்வோனே

முதியபொதி காசலத்தில் அருளுருவ மாயிருக்கும்
முனிவர் மறையாகமத்தின் முறைதேற

தருகுருத யாளமுற்ற பகவசரணலயத்தை
தகுமனதிலேபதித்த அடியார்பால்

தவறு பலவாயெடுத்து குறைகளென வே வுரைத்த
தடிகுண விசாலமுற்ற கொடியோர்கள்

கருதிய மனோலயத்தை வொருநொடியிலே யழித்தே
கறுகிவிடவே வொழித்த வொருவீரா

கவிகள் பலதாயுரைத்து உனதுபுகழ் பேசியற்பு
கனியுமன தோரகத்துள் வளர்வோனே

வருகயிது வேலையெற்கு உதவிதர நானினைத்த
வரமருள்வ வாசெயத்தை யுடையோனே

மரமிகுதியாகி யோற்பு வளருபொழி லூடுத்த
மலைதளியுமே நிலைத்த பெருமாளே.

தனத்தத்த தான தான
தனத்தத்த தான தான
தனத்தத்த தான தான தன தான

**705.** வருத்தத்திலே யுலாவி மனத்தைப் படாத பாடின்
மயக்கத்திலே யுளாழ விடலாமா

மலைக்கற்புதா தயாள பரைக்கற்புதா சுகாதி
மறைக்கற்புதா தியாகி எனவோது

பெருக்கத்திலே நிலாவு பொருட் பற்றிலே வுளான
பிறப்பற்றவா நியாய முடையோனே

பிணைக்கற் புதாதியான மனத்தற்புதா குமார
பெயர்க்கற்புதா விநோத முடையோனே

உருக்கத்திலே யிலாது மனப்பற்றிலே விரோதம்
உறப்பற்றிலே வுளோர்க ளறவீழ

உளப்பற்றுளோய் விசாக பகற் பற்றுளோ யனுதி
உகர்ப் பற்றுளோ யகார முடையோனே

நெருக்கத்திலேய நேக தவப் பற்றுளோர்கள் தேவ
நிருத்தத்திலே மயூர மிசையேறி

நிலைத்தற் பொடே தியாக அருட்பற்றி வாழ யீவை
நிதிப் பட்டையாதி நாத பெருமாளே.

தனதனத் தனதன தனதன தந்தன
தனதனத் தனதன தனதன தந்தன
தனதனத் தனதன தனதன தந்தன தன தான

**706.** அருள்பழுத் தொழுகிய விழியுமை யம்பிகை
சிவனிடத் துறைபவள் பயிரவி யந்தணர்
அகமுறப் பயிலிய திரிபுரை சுந்தரி மகமாயி

அணியினுக் கணியென யிலகிய சங்கரி
மகிடனைக் கொலைபுரி பவளரு ளென்றினும்
அறம் வளர்த்திடுபவ ளகில சுதந்தரி சிவகாமி

தெருள் பழுத்தரு மறைமுடி நடனம்புரி
பரை மகத்துவமுள பகவதி யன்பர்கள்
செயமுறத் திருவருள் புரிபவள் பொங்கா வணிதேவி

செகவுயிர்ப் பெறுமனை பிரபல செண்பக
வடவியிற் றொழுவமை புவனை யனந்தரி
திருமுகிற் கிளையவ ளருமை நிறைந்தவ ளமதாயி

மருள்பழுத்த வரவ முறமறமுஞ் செறி
திரிவயிற் கொளுகர முடையவள் சந்தன
மருவு பொற்குவடிணை நிகரிய சுந்தர தனமாது

வாரிதிக் கடலென நிலவிய பண்பமை
குமரி சற்குண முளபுனிதை நிரந்தரி
மதிகுரைத் திடுநுதல் கவுரி பரன்பரை சிவகாமி

சுருள் பழுத்தெழு குழல் எழிலி நிகர்ந்திடு
சாதிவுத் தமமலி வனிதை தவஞ்செயு
சுதனெனத் தவமுறு முகருக செந்திலை யுடையோனே

சுக வில்க்கண வடிவமை பர பண்பையி
லிலகுமற்புத வருடருதகி வந்தருள்
சுயதிருப் பதிமலை தனில்வளர் தொண்டர்கள்
பெருமாளே.

தந்தனந் தாத்த தன
தந்தனந் தாத்த தன
தந்தனந் தாத்த தன தன தான

707. சங்கடம் போக்கவொரு தந்திரம் பார்த்துதவு
சந்ததங் காத்துவரு முருகோனே

தண்குடைந் தார்த்தசுனை யின்கணின் பூத்தமலர்
தன்கணஞ் சேர்த்ததொடை யணிவோனே

மங்கலம் பூத்தபொழி லிங்கிதம் பூத்தநகர்
வந்தனம் பூத்ததளி யுறைவோனே

வந்து வந்தேற்றமுயர வன்பர் கொண்டாட்டமலி
மஞ்சிருந் தாட்டுபொழி லுடையோனே

எங்கடன் போற்றுதொழி லுன்கடன் காத்தலருள்
என்றரும் பேற்றைநிறை மறைகூறும்

இன்பமைந் தேற்றமுள கந்தவந் தேற்கினிமை
என்றுவந் தீத்துரிமை யருள்வாயோ

தங்கு செந்தூர்ப்பகவ பண்பையன் பார்த்தகுக
தண்கவின் போர்த்தகுரு பரநாதா

சந்தனம் பூத்ததிரு குன்றினின் றேற்றமுள
சம்புமைந்தார்ப் புனித பெருமாளே.

தனத்தத் தனத்தத் தனத்தத் தனத்தத்
தனத்தத் தனத்தத் தனத்தத் தனத்தத்
தனத்தத் தனத்தத் தனத்தத் தனத்தத் தன தான

708. சினத்தைச் சிதைத்துத் தகர்த்துப் பொடித்துப்
புடைத்துக் கொளுத்திக் கெடுத்துத் திருப்பொற்
செயத்திற் செழித்தற் புதத்திற் பழுத்தற் பதசேவை

தினத்தற் புருக்கத் தடத்திற் குளித்துக்
குளித்துக் குணத்திற் றுதித்துப் பதித்தற்
றிரத்திற் பவத்தைத் தொலைத்துப் பிறப்பிற் பிறவாத

கனத்தைக் கொடுத்துப் புரத்தற் குதிக்கற்
பகத்திற் பழுத்தற் படைத்தற் பதத்திற்
கணித்துட் டிருத்திப் பதித்தற் கிணக்கத் துடனுன

கருத்திற் சிகிப்பொற் புறத்திற் கதிர்த்தத்
திருப்பிற் பெருக்கத் தருப்பெய்ச் சுகிர்த்திற்
கணத்திற் களிக்கத் திடத்திற் றெளித்தற் பருள்வாயே

தனத்திற் செழிப்பிட் பொழிற்குட் டளிக்குட்
கவிக்குட் பொருட்குட் டிருத்தத் துதிக்குட்
டளிர்த்துப் பவத்தைப் பறித்துத் தொலைத்தற்
புறுவீரா

சகத்தைப் படைத்தற் கிடைத்தற் குரித்திற்
படிப்பிற் பதைத்தற் குணத்திற் றரித்துட்
டரத்தைத் தெளிக்கிற் பிழைக்குட் செனிக்கப்
புடவோயுன்

பனத்தைத் தகர்த்துச் சிறைக்குட் படுத்தித்
துலைத்தற் புரித்தற் சினத்திற் பெருத்தற்
பரத்தற்குகத்தற் குறத்திக் கமைத்தூற் பவவேளே

பரத்திற் கிளைத்துத் திறத்திற் பொருத்தத்
தயிற்கைக் குகப்பொற் குவட்டிற் றளிக்குட்
பதிக்குட் டிருத்தத் தினிற்குத் துரைப்பொற்
பெருமாளே.

தான தானன தானன தாத்தன
தான தானன தானன தாத்தன
தான தானன தானன தாத்தன தன தான

**709.** பாவமேவிய தோல்தசை யாக்கையி
லேவுள் மேவிய மாயையை மாற்றிய
பாலரூபவ ரோதய பார்க்கவ னிளையோனே

பாடலாலுனை யேதுதி போற்றிய
சீலமாதவ ராலய கார்த்திகை
பாலதேவ குணாகர பார்ப்பதி யருள்வோனே

காவனேயம னோலய வேற்கர
தீபசோதியுளே நிறைவாற்பதி
காரணாசுக வாருதி பேர்ப்புக ழுடையோனே

கானவேடுவ மாதொடு வார்த்தைநக
ளாடி மோகமுனே தலைகார்க்கரி
காணமார்பினி லேவுற வாக்கிய முருகோனே

சேவல் வானுற வாடிய பேர்க்கொடி
யாளநாத குகாபர மேச்சுர
தீரவீர பராபர மூர்த்தியு மெனலான

சேயமான் மருகாதிரி நேத்திர
சோமனாத மகாகுரு வேத்திய
சேம பூம பயோதர நேர்க்கர வரதீபா

மாவ லாயெனையாள் பவபூப்பத
ஞான காரண பூரண வேற்கருள்
வாழ்விலேவுற நீதயை யாற்பரி வருள்வாயே

மாபரா பொழின் மாநகர் மேற்கமை
சோலை சூடிய மாதிரு பேர்ப்பெற
வாழு மாமலை மேவிய சீர்ப்பர பெருமாளே.

தன தான தான
தன தான தான
தன தான தான தன தான

710. பலமான வாதை யினில் மூழ்கலான
படியாக நாளு முழல்வேனை
பரமான ஞான குருநாத தேவ
பகை போக நீதி யருள்வாயே
தல மேலநேக சதகோடி நாதர்
தனதாக மேவு முருகோனே
தருகாத லோடு குறமாதை நேடு
சரதா மயூர முடையோனே
வலவீர தீர செகபால காளி
மகனே தயாள வரதீபா
மதியாத பேரை யயில் பிறயேவும்
மறவீர கோறல் புரிவோனே
விலை மாதரோடு முறவாடலான
மிகையாளர் நேசம் அறவேவீர்
மினிர் சேம மேவு பொழிலூருளான
விரதா மயூர பெருமாளே.

தான தன தன
தான தன தன
தான தன தன தன தான

711. வாதை பலவித மோது பகையினில்
வாட விடுவது மழகாமா
வாதை புரிபவர் நீதிலமை வுற
மாளவயில் விட வருவோனே
தீதை மருவிய சூரர் குலமற
சேவ னடமிடு கொடியாளா
சீத மலிவு சுவாமி மலைதனில்
தேவர் பரவிய முருகோனே

காதை யயிலென மோது விழிவளர்
கான மருவிய குறமாதை

காண மயல் கொள லான குருபர
காவி சுனைமலர் அணிவோனே

பாதை யிதுவென வோது பெரியவர்
பாலிலருண் மறை பொழிவோனே

பாடன் மிகமலி வான திருமலை
பால சரவண பெருமாளே.

தந்தன தான தந்த
தந்தன தான தந்த
தந்தன தான தந்த தன தான

**712.** நெஞ்சு புணுகி நைந்து நொந்திட லாக வந்து
நின்றிடு பாவ துன்ப மயலாலே

நின்பத சேவை யின்றி வம்பினி லேயு ழன்று
நிம்பமு தாக வந்த படிவாழ்வை

நஞ்செனலான பந்த பங்கமு டாடலொன்றி
நன்றறி வேது மின்றி யிதுகாறும்

நம்படியார்கள் நெஞ்சு குஞ்சித பாத மண்டு
நன்கதரே து மின்றி யழிவேனோ

கொஞ்சு சொலாள் குறிஞ்சி வன்குற வேடர் நங்கை
கொண்டவளோ டிணங்கு மணிமார்பா

குண்டுணி கோடினஞ் சொல் வஞ்சக ரூபரின் சொல்
கொன்றினி தாக வந்த னருளாலே

அஞ்சல் சதா வழங்கி செஞ்சரணு லயங்கள்
அன்புடனீய வின்று வரவேணும்

அம்பிகை பால செந்தில் தங்கிய தேவ பண்பை
அங்குவடேறி நின்ற பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

**713.** மனமெலி வாகிநொந்து விடவெனை மோதுகின்ற
மலிபவ மோட வென்று வருவாயோ

மகிதல மீது துன்ப வடிவுடை யேழை யுந்தன்
மலரடி பேணு மன்பு தாவேணும்

தனமலி வான பண்பை நகரசே செயந்தி
தலமருளே திலஞ்சி யுடையோனே

தவவடி வாயெழுந்த பரைகவு மாரிநங்கை
தருகர நீலி யம்பை மகமாயி

அனமருடேவி செம்பொன் மலைமகள் காளியன்பர்
அகமுறை வாலை நங்கை சிவகாமி

அருளிய பால கந்த குருபர சேமதுங்க
அறுமுக வேடர் தங்கள் மகளாகி

புனமறு கூடமைந்த தினைவன மேபுரந்த
புனைவளி மாதணைந்த முருகோனே

பொழில்வள மேவு பண்பை நகர்குட மேவ நின்ற
புகழ்திரு நாகமர்ந்த பெருமாளே.

தந்தன தனதன தனந்த தானன
தந்தன தனதன தனந்த தானன
தந்தன தனதன தனந்த தானன தன தான

**714.** சந்தன பரிமள முறும்ப னீரொடு
குங்கும மருவிய விரிந்த மார்பின
தண்டொடை யணிகுக சிறந்த பூரண முருகோனே

தண்பொழி னகர் வயினிலங்கு காரண
சுந்தர குருபர வயங்கொள் வேலின
சங்கரி பயிரவி அறஞ்செய் மாதுமை மகமாயி

அந்தரி பகவதி நடஞ்செய் மாபரை
சுந்தரி திரிபுரை வயங்கு சூலினி
அம்பிகை குழல்மொழி சிறந்த வீரியு மெனலாகி

அன்பர்களிடமுறை நலஞ்செ யாரணி
பொங்கர வணிபரை யகன்ற பூவிடை
அங்கய னிகர்கணி மகிழ்ந்தெ ஞளினும் வளர்தேவி

இந்தின முயர்விலை பகர்ந்த வானவ
னன்பக நிறைவுற மணந்த பார்பதி
இந்திரை மலர்மகள் வணங்கு தாயக முளமாதா

எங்கணு முறைபவள் நிறைந்த சீர்மையள்
அன்பமை யுருவென வளர்ந்த நாயகி
யின்சுத குருபர பதந்த யாளமொ டருள்வாயே

கொந்த விழ்குழ னிறை வெழுந்த மாவலி
தன்புய மகிழுற வணைந்த மாமத
குன்றுறை பயிலியன் மலிந்த நேயம துடையோனே

கொண்டல்கள் துயில்கொள வெழுந்த வானுயர்
தண்டலை மருவிய வளங்கள் மேவிய
கொங்கவிர் திருமலை விளங்க வாழ்வுயர் பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

715. மயிலேறி நின்று விளையாடுகின்ற
வரதா செயந்தி வரைவாழ்வே

மறையோ மினின்ற பொருளோதி கங்கை
மதி சூடுகின்ற சிவநாதர்

கயிலேறி நின்று உபதேசமுஞ் செய்
கனியே சிறந்த முருகோனே

கதிர்வே லணிந்த கரனே யிலஞ்சி
கதிர்காம பண்டை வயலூரா

செயிரேறுகின்ற கொடுசூ ரொன்று
திரளோடழிந்து விடவேலை

செலவேவுகின்ற வாவீர துங்க
செகநாதகந்த குகதீபா

குயில்நேரு செஞ்சொல் குறமாதணைத்த
குறவூா நலஞ்செய் தருள்வாயே

குலமேவு பண்டை குடமேவுகின்ற
குவடேறி நின்ற பெருமாளே.

தான தனதன
தான தனதன
தான தனதன தன தான

716. தேகம் நலிவுற லான பிணியினில்
சேர வருபவ மறவோட
தேவ வருள்செய வேதிவிது வரை
தீய விடுவது மழகாமா
பாக மிகமலி பாகு கனிமது
பாலி லெழுபத மழமேதோடு
பார சுவைதரலான விரகிவை
பார மொழிவளர் குறமாது
தாக மெனவவ ணீடு கரமலர்
சார மணமல ரணிவோனே
சாது முனிவரர் தேறு மறுமுக
சாமி குருபர முருகோனே
வேக முறுமயின் மீதி லிலகிய
வீர சரவண பவநாதா
வீசு புகழ்செறி நாக திருமலை
மேவி நிலவிய பெருமாளே.

தானன தானன தானன தானன
தானன தானன தானன தானன
தானன தானன தானன தானன தன தான

717. காரணவீரகு காசெக நாயக
தாயக பூரண மான்வரோதய
சாமனுமே நிகராத் முகாகிய முருகோனே
கானுறை வேடுவனுமென வோர்கவி
பாடியவா கருணைகர தூயவ
காவடர் மாவயலூரினி லேவள ரெழில்வேளே
ஆரணமேவுபு ராதன தாபதர்
ஆலய மாமென வேவுறை பாலக
ஆறுமு காநிதி சேகர னேயரு ளுடையோனே

ஆதர வேவரு வோன்வரை வேயற
நீதயை யேதர வேவரு வாய்பர
ஆயென நீயெனை யாளலெனுளென லறியேனே

மாரணமாயினி மாமிடி வாதையி
லேவுழலாவியை நீகொளு வாயெனும்
வாசகம் நீயறியாத வனுகினை யெளியேனும்

வாழவுனை நினைவேயிலை மாபவ
வாதை சதாவெனையே யடர் வேதையில்
மாளவு மோவிதி யேழையெனுவிடன் முறையேயோ

தாரணி மாமரு மாசல வேலவ
நீலமகாமுகி லோன் மருகாவினி
தானகுனலய சேமாலாதர வருள்வோனே

தாமத மாயெனை நீவிடில் மானுவல்
மாபொழி லூருறை மாமுரு காவருள்
சாறுறு மாதிரு மாமலை மேவிய பெருமாளே.

தந்தன தான தான
தந்தன தான தான
தந்தன தான தான தன தான

718. வஞ்சக லோப மூடர் புன்சொலிலார் வமான
வம்பினரோடு கூடன் முறையாமா

வண்புகழ் சேரலான வுன்புகழ் பாடநேக
மன்கவி வாணர் நேசம் அருள்வாயே

தஞ்சமெனவு ணேயர் அஞ்சலெனு மூனேகி
தன்சரணுதி சேவை தருவோனே

தண்டலை சூழலான மன்றிரி கூடவீரி
சண்பக தேவிவாலை மகமாயி

யெஞ்சொலி லேவுலாவு கின்றவள் சேமமாக
யென்றினு மேதயாள முளமாதா

இந்தரையான பாதி என்றுரையாட நேரும்
இன்பெழிலான தூய நுதல்நாரி

கொஞ்சிய பால ஞான விண்சுடரான வேலை
கொண்டவ சூரர்மாள வருவோனே

கொண்டல்கள் மேவு சோலை பண்பொழில் நாக மேலை
குன்றுறைவான தேவர் பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

719. நிலையில தாகபங்க மயல்தரலாக வந்த
நெறியிடை மூழ்கநின்ற பவவாழ்வை
நிலையெனலாக நம்பி யிதுவரை நானடைந்த
நிலைமையை யோர்திலைந்த படியாகி
தலைமிசையே சுமந்த பவவினையானவிந்த
தரமுள நாயையுந்த னருளான
தயைதரவே யிரங்கி அருள்செயவோ மறஞ்செய்
தனியயிலேவி நெஞ்சை யிருகூறுய்
கொலைசெயவோ யிசைந்த படிபுரி பாலகந்த
குருவெனலாக வந்த முருகோனே
குறியென வேவுவந்து னடிமலர் பேணுகின்ற
குணமிலி யேழை துன்ப மயலான
வலையினிலே வருந்த இனிமுடியாது கந்த
வாதமயூர வந்து அருள்வாயே
வளமலி சோலையண்ட ருலகளவா யுயர்ந்த
மலைதிரு நாகமர்ந்த பெருமாளே.

தான தானன தானன தானன
தான தானன தானன தானன
தான தானன தானன தானன தன தான

720. பாவசேகர மாகிய கூடினில்
ஆவிசேர சதாதுயர் மூழ்கிய
பாதகாதி மகாகொடிதாகிய கடையேனை
பாழிலேயிது நாள்வரை தீயவ
ரோடுகூடிய வீணனை யேழையை
பாசமீதுமை வாகிய கூளியை யினிதான

காவலாசுரர் சேவக மாதவர்
பாலிலே விளையாடிய வாரண
கானமாதுமுனே செலுமாய்கையு முடையோனே

காலகாலனெ னுவுறை பேரரா
னேயமாது மனோகர கான்முனை
காரவீரத யாளகுணாகர முருகோனே

ஆவலோடுனையே பணிவாரக
மேவுசேம நலாதர காரண
ஆறுமாமுக வானை சகோதர னெனலான

ஆதிநாதவெ னுபணிவார்பகை
நாசமாக முனேவயிலேவிய
ஆசிலாதவ நாயக தாயக வாதீபா

பாவலாள குகாயினி யேனுமுன்
ஞான சோதியிலேவுற வோர்தயை
பாலநீதரவே மயில் மீதினில் வரவேணும்

பாரிலே பெரியோருறை வார்குக
சாலமேவு மகாதிரு மாமலை
பாடல் சூடிய கூடிய தேவர்கள் பெருமாளே.

தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன தன தான

721. நினைத்துளேவுன தாண்மலரேகெதி
யெனச் சதாநுதி பாடிடு வோரகம்
நிலைத்த பேரா சேயெனை யாள்வது மெதுநாளோ

நிருத்த மாமயின் மீதினிலேறிய
குகப்பராபர மாமலை யாலய
நிசிக்கு நேர்நிற மாவவுணாதியர் கொடுசூரர்

அனைத்து ளோர்களு மேயற வேல்விடு
பலத்த வீரகு காகிரு பாநிதி
அனிச்ச மாமலரே நிகராகிய பதமோடு

அறத்திலே விளைவாகிய பேரெழில்
தனக்கு ளேயமை வாயென வாழியல்
பமைக்கு நேரிய தோள்வளை நீள்கர வடிவோடு

மனைத்த ணுலைய மாவிழியாரமு
தெனச் சொலாலினி தானவள் மாசற
வருத்த மாமதி யாமென வாணுத லறமாது

வரைக் கெலா மாசாயுயர் பேறிய
மலைக்கு மாமகளாமென வேவளர்
மறைக்கு ளானவள் பூரண மானவள் மகமாயி

வளைத்த பேருல காள்பவ ளாமனை
தனக்கு மாமகனாகிய காரண
மலர்த்த கானுறை வேடுவ னுமென கவிபாடு

வரத்தினைவ தேவவ ரோதய
யெனக்கு ளுதரமேதரு வாய்தயை
மகிழ்ப் பொனுலைய மாதிரு மாமலை பெருமாளே.

தனத்தன தனத்த
தனத்தன தனத்த
தனத்தன தனத்த தன தான

722. மனத்தினை வருத்து பவத்தினி விளைத்து
மயக்கமுள மூத்தி விடலாமா

மதிப்பவர்களுக்கு இடர்ப்பகை யமைத்து
மனத் துயரளிப்ப தழுகேயோ

தனத்தினை நிறைத்த வளத்தினை யுடுத்த
தரத் துடையவர்க்கு இனிதான

சகத்திடை யறத்தை வளர்த்திட வருட்பெய்
தனிக்குக சுகத்தை யுடையோனே

கனத்தன குறத்தி யினுக்கருள் படைத்து
கரத்தொடு மணைத்த செகநாதா

கவிப் புலவருக்கு பொருட்செறி வளித்து
கனப்பத மளிக்கு முருகோனே

சினத்தவர் குலத்தை துகட்பட முடித்து
திருத்திய வரத்தை யருள்வோனே

சீசகப்பர பொழிற்கு ளிருப்புள நகர்க்குள்
திருப்பொலி மலைக்குள் பெருமாளே.

தனதனத் தனதன தான தானன
தனதனத் தனதன தான தானன
தனதனத் தனதன தான தானன தன தான

723. அடியவர்க் கருடரலான தூயவ
மிடியொழித் தெனைவுன தாளிலாளென
அமைவுறச் சொலுகவி யோதலே தொழி லெனநாளும்

அனையருட் குருபர நாத தாயக
மெனவுனைத் துதிபணலான வேழைநல்
அருள்பெறத் தயை சிறிதேனு நீ செய வுணராமல்

இடிவிழப் படுமரவாக நீ யெனை
விடிலதற் கெவரிடமேயி தோதுவ
வினியயிற் கொடுவெனை பீறவேசெய வரவேணும்

இதிலுனக் கிழிவிலை யாதலாலெனை
துயிரறக் கொலைபுரி நானுமோயினி
இடர்படப் பலமிலை தேகமோ மெலி வுறலானேன்

படியினிற் கொடியவனுன பாவியை
மிடிகெடுத் தருளுநெறு நீதியோயிலை
பலவிதத் துயிரற வேதை மேவிய செயலாலே

பகைவரைக் கொலும் வகை யேழை யேழையை
யொரு கணத்தினி லறவேலை யேவுதல்
பலமெனத் தயைபுரி நேய மேவிய முருகோனே

குடியிடைக் குறமகளோடு கானக
முறு தினைப் புனவனை மூடலாவிய
சுக செயக் குருபர நாதர் தேடிய முருகோனே

தொடு பொழிற் செறிவகமான நாடக
மருவு நற்றிருமலை மேவி மூர்மறை
சுருதியிற் கெழுமிய ஞானசேகர பெருமானே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

724. மிடி யூடுகின்று தடுமாறி நைந்து
மெலிவேனையுந்த னருளாலே

வினைபோக வென்று அருள்மேசகாங்கள்
மிகவே வழங்க வரவேணும்

தடிபோலமைந்த கொடிதான சிந்தை
தனைமேவுகின்ற எளியேனும்

சரணான துங்க பதமேவணங்கு
தராகுமன்பு தருவாயே

கடிமேவுபொங்கர் வயல்சூழுகின்ற
கதிர்காம செந்தி லுடையோனே

கனகாகுறிஞ்சி சியாசே சிறந்த
கதிர் வேலணிந்த முருகோனே

பிடியார நின்று களிகூரடிணங்கு
பெருகாரணங்கள் நிறைநாடா

பிரியாத வன்பர் மிகமேவு பண்பை
பெறுநாகமர்ந்த பெருமாளே.

தான தான தனத்தத்த தானன
தான தான தனத்தத்த தானன
தான தான தனத்தத்த தானன தன தான

725 மாதர்மோக மயக்கத்திலேயுழல்
வார்களோய விருப்பற்ற வாபரை
வாலைதேவி பெறப் பெற்ற வாகுக முருகோனே

வானுளோர்கள் நிதப்பற்றிலேதுதி
சேமநாத மலைப்பற்றுளோயரன்
வாழவோமை வுரைத்திட்ட நாவல னெனலாகி

காதலோடு வுரைத்திட்ட மீகூற
மாதைநேடி சுகப்பற்றிலேகலை
காரமோடு எறித்திட்ட வார்புன மிகசேயகி

காணமார்பி லணைத்திட்ட மாபர
தேவதேவ கடற்பக்கலானவ
கானஞான முகத்துற்ற வாசக வாதீபா

வேதமோது விதத்துற்ற மாவய
னோடுகேள்வி யுரைத்திட்ட தாலவன்
வேறுகூறி மறைப்பற்றிலேவிழ சிரமீது

வீரிரேனுடு புடைத்திட்ட தூயவ
சேவலாள சகத்திட்ட னேவுயர்
வேழமோடு பிறப்புற்ற வாகரி மணவாளா

சாதனொரு விதப்பற்றி லேயுழ
லேழை யாளுமருட்பற்றி னுடனே
சார்தயாள முறப்பற்றி னுடினி தருள்வாயே

சாலை சோலையிருட் பற்றுளேயெழ
லானபூமி வளைத்திட்ட மாவலை
தானமான திருப்பற்று ளோர்மலை பெருமாளே.

தந்தா தனந்த
தந்தா தனந்த
தந்தா தனந்த தன தான

726. வண்டாடு கொண்டை செண்டாடு கொங்கை
மன்றாடுகின்ற மயலாலே

வந்தாடு தென்றல் உண்டாடு மன்றில்
மங்காத வின்சொல் தாலாலே

கொண்டாடு பண்பி னன்போடு யர்ந்த
கொங்கோட நின்ற மொழிமானார்

குன்றா தடர்ந்து நின்றார் வமன்று
குன்றாட நின்ற தனமூழ்கி

கண்டாட நின்று வன்றாழு மின்சொல்
கண்டாடுகின்ற புவிமீது

கந்தாவு னன்பு நந்தா வரங்கள்
கண்டே வழங்க வரவேணும்

எண்டோளணங்கு கொண்டாடு மைந்த
எந்தாய்சிறந்த முருகோனே

எண்சேரு பண்பை குன்றேறி நின்ற
இன்சீரமைந்த பெருமாளே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

727. உலகவாழ்வினிலே யிடர்மூழ்கிய
கொடிய பாணனை வீணனை நீணிதி
உயரவே நினைவாகிய பாவியை யெளியேனை
உறுதயாள மிலாதவி ரோதியை
தருமமே செயவே நினையாதமை
யொருவனாகிய பேதமை யாளியை மடையேனை
கலகமே செயுமாமன மூடியை
அரியதேவர் கடாடொழ வேயிகழ்
கடினநாசக காலனை மாதவர் வழிபேணு
கசடவாதியை நாயினை பேயினை
நிகருதீயனை காமனதாலய
கவருநேர்மைய ரோடுறவாடியை சிறியேனை
பலகலாநிதி யாமென வோதிய
வுனதுபாதமுளே நினையாதவர்
பயிலு கேண்மையிலே நிதமேவிய படியாகி
பழைய பாவமதால் வருகேடிடை
மெலிய வேதை சதாதா லாவிடர்
பதியு நோவினிலாடிய பாதக வடிவேனை
அலகிலா முனிவோராக மேவிய
குமரநாத மயூரதயாபர
அருளினாலுனை யேதொழு மார்வமும் அருள்வாயே
அருமையாகிய மாமலை வேடுவர்
சுதையை மேவிய வாதிரு மாமலை
அரசஞான பராபர மேலவர் பெருமானே.

தானா தனத்த தன
தானா தனத்த தன
தானா தனத்த தன தன தான

728. ஞானா விதத்துயரி னாலே யிளைத்துமெலி
நாயேனுனக் கடிமை யெனலாக

நாடா திருப்பதொரு வாதா யெனக் குரிய
நாதா கடப்பமலை ரணிவோனே
ஆறாத பத்திவழி சேராதவற் குறுதி
ஆயாத சித்த நிலை யுடையோனே
ஆராதவற்கு நிகர் வேலாயுதக் கடவுள்
ஆவேற ரற்குகரம் அருள்வோனே
தானா யுதித்த சிவ சேமா மறைப்பதும
தாளா யெனக் குனருள் தரவேணும்
சாரா தவர்க் கிடர்கள் பேரா வணத்திவிடு
தாதா தடுத்தடிமை கொளுவோனே
மானார் மயக்கவழி சேரா விதத்துரிமை
வாழ்வே கொடுத் தருளு முருகோனே
வானார் பொழிற் குணகர் மேல் பாலுயர்த்த திரு
மாவேறு வெற் பினுறை பெருமாளே.

தான தனன தன
தான தனன தன
தான தனன தன தன தான

729. வாலையுதய சிவ காமி புவனையருள்
மாலினி ளையவளு மெனலான
வாமிகுமரி பரை சேம மருவுவளி
மாமி வுலகவனை மகமாயி
சேலை நிகருவிழி யாறு கருணைவிழி
சேரு பயிரவிக லபிராமி
சீர்கொளடி யவர்கள் பாலிலரு ளுதவு
தீர மிலகிவள ரெமதாயி
நாலு காமுதலை நேய புதல்வனென
நாளு மகிழுமன துளதேவி
நாரி பாமியுமை மாது கவுரி குழல்
நாண மொழிபகரு மொருமாதா
வேலையென கருணையாயி னருமை நிறை
வேலை மருவுசுத முருகோனே
வீறுசெயு மிடிகளோட வரமருள்வை
மேலை திருமலையுள் பெருமாளே.

தனத்த தன தான தன
தனத்த தன தான தன
தனத்த தன தான தன தன தான

730. பொறுக்க முடியாத பவ விருத்தி யினிலே மயல
புகுத்தன் முறையா யிதுவும் அருளாமா
புகட்கு மரசே கருணை நிறைத்த குளமே நளின
பொகுட்டின் மதுவே மதுர முடையோனே
மறுக்க முடியா திடர்கள் நொறுக்குகிற தேயிதனை
வகுக்க வறியே னெனலை யறியாயோ
வழக்கிடவு மோவுரிமை யெனக்கு முளதே யெனலை
மதித்து ணருவாய் குமர முருகோனே
வறுக்க வருதே மிடிகள் பொரிக்க வருதே பிணிகள்
மறிக்க வருதே பகைகள் இவையாலே
மயக்க முறலாலயரும் விதத்தி லெளியேனு றுதல்
மனப்புணி னிலே சுடுதி யிடலேபோல்
கறுக்குகிற தேவினைகள் எனக்க வியினுவிதனை
கருத்தமைய வேபதறு முறையோடு
கடைப் பிடிய தான வுரை வழக்கு ணருவாய் முருக
கதிர்த்த திருநாக முறை பெருமானே.

தன தன தான தந்த
தன தன தான தந்த
தன தன தான தந்த தன தான

731. சொல முடியாத துன்ப வினை யினிலே மை நைந்து
சுட வரலான் பந்த மயலூடே
தொடர் புடலாக நின்ற வினைபற வோது கின்ற
சுத னென லாக வந்த னருளோடு
நலமிக மேவ வந்து தயைதருவாய் சிறந்த
நதிமதி யாடுகின்ற அரவோடு
நளிர் மலரான கொன்றை பணியணி நாதர் தந்த
நவநிதி யூனமைந்த முருகோனே

வலகுக தேவ பண்பை நகருறை யாதி சந்த
மலைவள மேவ நின்ற செகநாதா

மருவலர் தீயவன்று பொரு வயிலேவ நின்ற
மயில் மிசை யேறுகின்ற வொருவீரா

பலமறை யோதி யந்த முடி வறியாத துங்க
பகவச தாவணங்கும் அடியார்கள்

பவமற வோது பண்பை மலைமிசை மேவி யன்பு
பலுகியல் பாகி நின்ற பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

732. செக பால கந்த அருள் மேவுகின்ற
திருவாழ்வு தங்கு பொழிலூரா

சிறியேன டைந்த துயர்வாழ்வு பொன்ற
செயமே வழங்க வரவேணும்

குகதேவ பொங்கர் வளைவாரி லஞ்சி
குருநாத வெங்கள் முருகோனே

குருவாக வந்து உபதேச முஞ்செய்
குமரா செயந்தி வரைவாழ்வே

அகமேவி நின்று விளையாடு கின்ற
அரசே நலங்க ளருள்வோனே

அழகாரு மன்பர் மணியே யிலங்கை
அறவே வளர்ந்த ரகுராமன்

தகவாரு தங்கை மகனே குறிஞ்சி
தலைவூர வயங்கு வயலூரா

தமிழ்சேரு பண்பை மலைமே விலங்கு
தனியூட மர்ந்த பெருமாளே.

தனான தானன தானன தானன
தனான தானன தானன தானன
தனான தானன தானன தானன தன தான

733. பொருமை மேலிட லாலெனை யேபகை
விரோத மாகவு ளேநினை வாளர்கள்
புகார்கள் கூறிய கோளர்கள் தீயர்கள் மறைவாக

பொலாத தேவதை யேவியெனு ருடல்
படாத பாடுற வேபுரி நீசர்கள்
புகாதவேதை யிலேயிட வேநினை வுடையோர்கள்

அறாத மாதவ சேவக மேபுரி
தயாள வாதிக ளேதுய ரூடுற
அகாத கேடுரை யாலிக ழீனர்கள் கொடியோர்கள்

அபார மானபொ யேபுகல் வாயர்கள்
குகாத யாளவி ரோதபு ராதன
அகாரு காரமு மேவிய வாவென உரைகூற

உறாத பாதகர் நாசகர் கீணர்கள்
அவாவினால் வரு பாதக ரூபிகள்
உலோப மீறிய வாசகர் காசணி மிகையாளர்

உலோக மீதினி லேயற வேல்விடு
கயாதி யாகம னேகர நாயக
யுகாதி தோறும ருகிலை யாகிய முருகோனே

கருவின் வாயினி லேயமை மாகரி
முராரி வோலமி தேதரி வாவென
கருவின் வாயற வேவரு மாயவன் மருகோனே

கனக கணவென மாமணி யாரொலி
சதாச தாமலி வாகிய மாபொறி
கலீர்க வீரென மாநட மார்மலை பெருமாளே.

தன தனத் தன தன
தன தனத் தன தன
தன தனத் தன தன தன தான

734. கடமெனப் படுசட மறவருட் பெயவுனை
கருது மெற் கிதுவரை யருளாமல்

கழியவிட்டிடி லெனை யுரிமையற் பொடு மினி
கனிவினட் பருள் பவ ரெவராகும்

வட மதிற்றுகில் கொளு மொரு முகிற் கிளையவள்
மகனெனப் படுமறு முகவேளே

மகிதலத்து யரிய பொழினகர்க் கிறை குற
மகள்தனக் கிசைவுறு மணவாளா

நடமயிற் புறமுறை பரமசற் குருபர
நதி மதிச்சடை சிவ னுதல்மீதே

நளிரெழிற் றிகழ்கணி ஞெளி விரிப் பொறியுரு
நலமிகக் கெழுமிய முருகோனே

வடவைதூர்க் குணமுள கரளைப் பொரியெழ
வதை செயற்குறு மயி லுடையோனே

மழை வளத் தெழு மெழில் மருவு பட்பொழி னகர்
வரமருட்டி மலை பெருமாளே.

தனன தாந் தான தான
தனன தாந் தான தான
தனன தாந் தான தான தன தான

735. சடலை யாங்காரி மூதி யடல் செயாங்கார மோடு
சொலிய தீங்கான வாதை யறவேகீள்

துரித வோங்கார மேவு மயிலி லாங்கார மோடு
சுடர வாங்காரி மூதி யிருகூறாய்

விடவு மாங்கான தீயில் மடிய சாங்கால மாக
விதனை தாங்காமல் வேலை விடவேணும்

மிருதுவாம் பால மீதி லருமையாம் பூதி பூசி
மிளிரு மாங்கான மீதி லுறைமாதின்

உடலெ லாந்தானு டாட மருவு பூந்தார மார்ப
உயருமேதன் பாகதான மொழிகூறும்

உயர் வுளோன் றேவ நாடி னரையர் கோன் பால தான
வொளியுலாந் தேவயானை மணவாளா

படரு லாஞ்சினி சேனை கருணை சேம்பாதி யோடு
பசிய மாஞ் சோலை சூழும் வளநாடா

பரமதீங் காரிவாலை யருளுவான் பால சேம
பதி யெனுந்தான நாக பெருமாளே.

தனன தத்தன தத்தன தத்தன
தனன தத்தன தத்தன தத்தன
தனன தத்தன தத்தன தத்தன தன தான

736. பரமசற்குண நித்திய தத்துவ
குமர ஷிற்பன வுற்பவ வற்புயர்
பகவ துர்ச்சன ரற்றிட விற்பெறு மயில்வீரா

பழனி வெற்பிறை முக்கனி யிற்பெறு
மழுத நற்சொலி லக்கண வற்புத
பரத நிர்த்தன வுத்தம தற்பர மெனலான

சரத னற்பணி பொற்சடை யிற்பெறு
விரதனுக் கெழி லுற்றமை புத்திர
தனத நச்சர வத்திணை பற்றிய மயின்மீதே

சமைய நிற்பவ தற்பர நற்றுதி
புரியு முத்தமர் சித்தமதிற் குடி-
தழையு மெய்த்தவ புற்குற வற்கினி தெழிலான

அரமி ழைத்தவ யிற்கிணை பற்றிய
கணிவுடுக்கை நிகர்த்திடை யுற்றவள்
அறமிகுத்தவள் பொற்பமை வுற்றவ ளெனமேலோடு

அரணி னித்தனு முற்றிய புற்றினை
படியு நற்கிளி பற்றிய விற்கலை
அகல விட்டவள் முத்தமி ழிற்கனி மொழிமாது

தரமி குத்தவள் நற்செய லுற்றவள்
மரு வெழிற்புய முற்றவ நற்குரு
தவசினுக்குயர் வுற்றவ ருக்கமை முருகோனே

தமிய னுக்கினி தற்புத நட்பருள்
கவிலை யற்றிட வெற்கரு ளைத்தரு
தருண மித்தகு பட்பொழின் வெற்புறை பெருமாளே.

தந்தன தனதன
தந்தன தனதன
தந்தன தனதன தன தான

**737.** நம்பின னிதுவரை யன்பருள் புரிகிலை
நஞ்சினை யுணமன முறலாலே
நைந்தென துடலற உண்டினி தொழிகுவன்
நன்கறி சரதமு மிதுவாகும்
பம்பிய சூர்மலை கும்பனி னகமுறை
பண்புள குருபர முருகோனே
பண்மொழி னகர்வயின் நின்றெழு மறுமுக
பைம்புனன் மருவிய வயலூரா
கம்பமெய் மதகரி தம்பிநல் குறமகள்
கண்டனை திறபுய முடையோனே
கந்தவு னருளிலை யென்றிவண் மயலுறல்
கண்டனை தயவிலை யெனலான
தம்பம தெனநிலை கொண்டனை யினிதமை
தன்பத மெனநித முயர்வாயே
தண்பொழின் மருவிய பண்பொழில் திருமலை
தங்கிய வரநிதி பெருமாளே.

தந்தன தந்த தான
தந்தன தந்த தான
தந்தன தந்த தான தன தான

**738.** நஞ்சினை யுண்டு போத னெஞ்சிடை கொண்டதான
நம்பின மைந்த னேழை யறியாயா
நன்கறி பந்த பாச முஞ்செறி தொண்டி னூடு
நைந்துட லொன்றி வீணில் இதுகாறும்
பஞ்சினை கின்ற தான துன்பம தொன்ற லோடு
பண்மற நின்ற பாவ நெறியூடே
பண்டுடல் நைந்து தீய வம்பிட ருண்டு மூழ்கி
பங்கய மஞ்சு பாதம் மறவாத

நெஞ்சிடை நின்ற நோவு பஞ்செனை வைந்து போக
நின்சர ணாந்த யாளும் அருள்வாயே
நிம்ப வரும்பு நால கண்டிடு தொங்கன் மார்ப
நின்பத தொண்டரான அடியார்பால்
வஞ்சக முண்ட தீயரின் சொலிலண்டு தீமை
வந்தமை நொந்து தீயும் வணமாக
மன்றமை தந்த நாத யென்றனை யன்பிலாள்வை
வண்டிரு குன்ற மேவு பெருமானே.

தந்தன தந்த தனந்த தனந்தன
தந்தன தந்த தனந்த தனந்தன
தந்தன தந்த தனந்த தனந்தன தன தான

**739.** பொன் செறிகின்ற குறிஞ்சி நிலந்தனில்
தங்கு வளஞ் செறிகின்ற புனந்தினை
பொங்க மலிந்த வணம்புரி கிஞ்சுக மொழிமாது
பொங்கு தனங்கள் நினைந்து நலஞ் செறி
கின்ற யிடங்களை யணைந்து மணந்தவ
புந்தி நிறைந்த வறந்தழை யுந்தன முடையோனே
நன்செய் வளங்கள் வளர்ந்த தடம் பொழில்
தங்கு மிலஞ்சி தலம் பதியின் புடை
நன்கவிர் சந்த முயர்ந்த செயந்தியில் வளர்வோனே
நம்பின வன்ப ரிடைஞ்ச லொழிந்திட
வந்தருள் கின்ற குணந்தழை கின்றவ
நன்றி தருங்குக பண்பொழில் தங்கிய முருகோனே
மன்செறி கங்கை யிடந்தவழ் சுந்தர
அன்பர கங்குடி கொண்டவ வந்தணர்
வந்து வணங்கு பரங்கிரி யின்றளி யுறைவோனே
மஞ்சுத வழ்ந்த நகங்க டொறும் பதி
கின்றவ கந்த முகுந்த னருந்துணை
மங்கை சுதந்தர மைந்த வருந்திற லெழில்வீரா
வன்றெறி பங்க பவங்கள் மிகுந்தெனை
யுஞ்ச வருந்த மயங்க வருந்திறல்
மங்கபதந்தர வந்தினி தென்றருள் புரிவாயோ

மன்பர பண்ணை யிலங்கு நறுங்கிரி
யெங்கு நிறைந்தருள் கின்ற சுதந்தர
வண்டிருகுன்றி னுறைந்தெழில் தங்கிய பெருமாளே.

தனனத் தானன தானன தானன
தனனத் தானன தானன தானன
தனனத் தானன தானன தானன தன தான

740 வறுமைப் பேய்பிடி யாமனுஞதர
வுரிமைச் சீரருள் வாயென வோதிய
மனுவைப் பார்வை யிடாவண மாமன வியல்போடு

வருதற்காகிய நீதியை யாரிட
மருவித் தேரினை வேறிலையேகெதி
வரநற்போதக மாமறை யோதிடு மொருதேவா

தறுகட் சூரரை வேல்கொடு கோறல்செய்
வயிரப்பேர் பலமானவ ரோதய
தருமிக்காக முஞனொரு கீரனை டிகலாடி

சயமுற்றே கிழியேபெற கூரரு
ளுதவிச் சேமம காதயை யாவருள்
தழை சொக் கேசரினுல் வருபாலக னெனலான

சிறுமைக்கானவர் மாதுமு னேகரி
வருவித்தே மருமாசல மேவுற
தினைபுற் காட்டமை மாகும ராகுக முருகோனே

செயவற் பாதரமாகிய நாயக
கருணைக் காமலை மேனுறை பூரண
தினை நட்பாள் குணகாரண வாரண முடிமீதே

உறுசட் கோணமுளே நடுவாநிலை
பெறுபொற் பாதமு ளேயடி யாரிட
முறைவித் யாதர மாபர சேவக மயில்வீரா

உனைவிட் டேனெனிலோகெதி வேறிலை
அருமைத் தாயக மானவனேயரு
ளொளிபெற்றார் திருமாமலை மேவிய பெருமாளே.

தனன தன தனன தன
தனன தன தனன தன
தனன தன தனன தன தன தான

**741.** கனிவுதரு முகவதன கிருபை யொழுகிய சாத
கவன முனிவரர் பரவு முருகோனே
காமிலகு மொருவயிர மிளிரயில பரசமய
கலகருற மிணைமருவு மதவேளே
புனித தமிழ் பயிலுபவ ரகமுறையு மொரு பகவ
புகழுருவை கிரிபுகழை யணிவோனே
பொருவரிய கழுகுமலை திருமலைசை யருள் பழனி
புதிய நறைபரவு வயல் பொழிலூரா
துனிபரவு மடியர்மிடி பொடிகள் படவருமயில்
சுமுகபரி மளகளப மணிவோனே
தொகைய வுணரவர்கள் மரபழிய வயிலுருவியவ
துறைதரும வரதநெறி யுடையோனே
இனியெனது மனுவின் முறை யருள் புரிதலுனது கடன்
இலையெனிலெ னுயிர் பருக வரவேணும்
இதுசாத மொழியறிவை குமர குருபர நளின
மிசை திருவின் மலையில்வளர் பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

**742.** நினைப்புற நினைப்பவர் நினைப்பினி னிலைத்தவ
நிறைப் பகவனுக்கொரு சுதனகி
நெடிற்ற மிழகத்திய முனிக்கினி தருத்திய
நெறிச்சதுர் மறைத்துதி முடிமீதே
நனைப்பத மிருத்திய மறைப்பிர மனைத்தலை
நடுக்குற புடைத் தெழின் முருகோனே
நளிப்புடை யுடுத்திய வயற்பொழில் செழித்தறல்
நறைத்திரள் மிகுத்தெழு வயலூரா

சுனைக்கு வளையைத் தொடு மலர்ப்பிணை யலைப்பணி
துடர்ப் பொடு மணித்திடு மொருதேவா

சுரர்க்க முதருத்திய முகிற்கிளை யவட்கருள்
சுதத்தர மகத்துவ முடையோனே

உனைப்பர வெனக்குன தருட்டர நினைத்திலை
உரித்தொடு புரப்பவ ரெவராகும்

உடைப்படு பவத்திடை நெருக்குற விடுத்திட
லுயர்த் திருமலைக்குயர் பெருமாளே.

தந்த தன தான தந்த
தந்த தன தான தந்த
தந்த தன தான தந்த தன தான

743. நெஞ்சு பலதாக நொந்து பஞ்சு படு வாதையுண்டு
நின்ற வடியார்களன்பி னுருவான

நின்பதும பாத பண்பு தந்தருள் செயோக சந்த
நிம்ப மலர்மாலை தங்கு மணிமார்பா

அஞ்சுதவிலை யினைந்து பந்த மயலூடுழைந்து
அன்பினர்கள் பாவில் வஞ்ச நெறிபேணி

அண்டிவரு பாவபங்க மென்றகடமா யெழுந்த
அன்பிலெனையாள் வதெந்த முறையாமோ

கஞ்ச முடையோர் களைஞ்ச நெஞ்சுருவ வேலை கொண்ட
கந்த செகநாத பண்பை யுடையோனே

கண்டு கனிவாய்மை கொண்ட மங்கை குறமாதணைந்த
கங்கை சுததேவ செந்தில் வளர்வாழ்வே

இஞ்சடையினால் வருந்தி நைந்த யெளியே னையின்று
யின்புதவியாளு மன்பு தருவாயே

எங்கள்குல மேன்மைதங்க பண்பைமலை மேலமர்ந்த
இன்புருவமாக நின்ற பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

744. குருவாக வந்து யெனை யாளுகின்ற
குகநாத கந்த முருகோனே

குமரா யிலஞ்சி வரதா செயந்தி
குவடேறி நின்று விளையாடு
தருவே யறஞ் செய்பவர் வாழ்வுதங்கு
தாமே வழங்கு மொருதேவா
தனிராக மங்கள் முடிமீது நின்ற
தவமே வணங்கும் அடியார்கள்
பெருவாழ்வ தென்ற சிவமே குறிஞ்சி
பெருமா விடைஞ்சல் புரிவார்கள்
பிளவாக வென்ற அயில் வேலணிந்த
பிரகாசமுண்ட கரவீரா
உருகாத நெஞ்சமுறு வீணனுந்த
னுளிர் மாபதங்க ளடைவேனோ
உறைசே மதுங்க வளமேவுகின்ற
வுயர்மா நகங்கொள் பெருமாளே.

தனதான தந்த தந்த
தனதான தந்த தந்த
தனதான தந்த தந்த தன தான

745. உனையோதி வந்தனஞ்செய் கவியேசொலுந் தரங்க
ளுறநீயெழுந்து வந்து னருளாலே
உறைசேமமும் பிறங்க அருள்வாய் நலஞ்சிறந்த
உமைமாது தந்தகந்த முருகோனே
பனைபோலு ருண்டெழுந்த கரமாமுகன் பொலிந்து
பலகூர்வளஞ் சிறந்த பொழிலூரா
பணிகாதலன் புயர்ந்த குறமாதி ணங்க நின்ற
பாவீரதுங்க செந்தி லுடையோனே
தெனைமா மரங்கள்கந்தி வளமேவு கின்ற பொங்கர்
செறிவாரி லஞ்சிதங்கு மயில்வீரா
திருவாருகின்ற பண்பை நகரீசர் தந்தமைந்த
செய மேவு கின்ற தந்தி யுடையோனே
உனையே வணங்கு கின்ற வெனையாள்வ தென்று யிந்த
உடல் போன பின்பு வந்து அருள்வாயோ

உருகாதவம்பர் நெஞ்சி லமையாத பண்பமைந்த
உயர்தேவ பண்பைகுன்றில் பெருமாளே.

தான தன தான தந்த
தான தன தான தந்த
தான தன தான தந்த தன தான

**746.** ஆலமென லான பந்த மாயை யிடையேயு முன்று
ஆவதறி யாமனின்று தடுமாறி
ஆழ்கடலிலே மிதந்து பாவவலை யாலிளைந்து
ஆடுகொடியே னையுந்தன் அருள்மேவு
கோலமயின் மீதெழுந்து சாலதயை யேபுரிந்து
கூறுமுப தேசமுஞ் செய் தருள்வாயே
கோகுமர நாத செந்தில் வாழுமொரு தீப துங்க
கூர்வயிர வேல் கரங்கொள் வரதீபா
நீலவ பிராமி கங்கை ஆதிமக மாயிநங்கை
நேயகயி லாசர்பங்கி னுளமாதா
நீடுபொழி லூரிலங்கு மாதுகவு மாரியம்பை
நீலிசிவகாமி தந்த முருகோனே
பாலவுல காதியந்த மாகிசிவ மாயமைந்த
பாநுநிகராக நின்ற வொருதீபா
பாரசக தீசரன்பர் சேமநிதியே சிறந்த
பாடல்திரு நாகமர்ந்த பெருமாளே.

தானு தனு தனந்த
தானு தனு தனந்த
தானு தனு தனந்த தன் தான

**747.** ஓயாத பாவ பந்த மூடாடியா விளைந்து
வோலோலமே யெனுஞ் சொலினிதோதி
வோடோடியே பதங்கள் தாதாவெனு பணிந்த
தோர்ரதெனுரு மஞ்ச விடலாமா
மாயா விநோத துங்க தேவர் குமார பண்பை
வாழ்வே தியாது செந்தி லுடையோனே

மாறு குபேர வெந்த னுதாரமே சிறந்த
மாதா வெனு வழங்கு முருகோனே

ஆயாதுமே புரிந்த பாவாதியே வொதுங்க
ஆள்வாய்கு காமு குந்தன் மருகோனே

ஆறோடு நாக மிந்து சூடாதியே வணங்க
ஆமோனமையே விளங்க அருள்வோனே

சேயாய் தயாளமுஞ் செய் வாயே பராவு கந்த
சேமாதிபா யிலஞ்சி வயலூரா

தேனே சதா பொழிந்து வானு றெனு வளங்கள்
சேர்சோலை மாநகங்கொள் பெருமாளே.

தந்தா தனதன தனதன தந்தா
தந்தா தனதன தனதன தந்தா
தந்தா தனதன தனதன தந்தா தன தான

748. அன்பே சிவமென முதுமறை கண்டோர்
பண்போடமைசிவ குருபர கந்தா
அஞ்சே லெனவொரு மொழிதரவின்றே வரவேணும்

அந்தோ வெனதிடர் தொலைபட லென்றோ
வென்றே மயலுற வெனையிடல் நன்றோ
அன்பாகிய வெனதனை யெனவந்தே அருள்வோனே

இன்பே வடிவென மருவிய கந்தா
பண்பார் திருவறு முகவா தஞ்சேர்
எண்சேவகருக தயைதரு மன்பே உடையோனே

இன்பாரனலறல் வளிவிணமைந்தே
நின்றோ யுனையல திலைகதி கண்பா
ரெந்தா யுனைவிட் லெனைவிட லென்றே யிதுநாளும்

உன்பேர்பத மலரிணையை நினைந்தேன்
வந்தாத ரியெனவருள் செயவென்பால்
வொன்று மன்முறு நிலையென நின்றே யினியேனும்

ஒண்டாரி ணையுறை திருவருடந் தாள்
நீந்தாமணி பரை திரிபுரை யின்பா
லுண்டே வளரிய சிவமுனை துங்கா வரதீபா

வன்பே றசுரர்கள் பொடிபட வன்றே
குன்றூ டறவவர் மாடறவந்தோய்
மன்கார் நிரைமலி பொதுளிய பண்பார் பொழிலூரா

மஞ்சாடிய பொழில் திருமலை யின்பால்
வந்தோருள மகிழுற வருளெந்தாய்
வண்போர் மருவிய குருபரவின்பார் பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

**749.** படமுடியாத துன்ப மிடையிடை மோதுகின்ற
படிநெடு நாளுமஞ்ச விடலாமா

பவவுரு வாயெழுந்த வொருகொடியேனையன்பு
பதிதரவாள் வதெந்த வகையாலோ

கடமெலிவாகி நொந்து படுதுயரூ டுழைந்து
கலிமிக லான்வருந்த வருநோவால்

கழிகடையேனை யென்று மனமகிழ்வாக வந்து
கதிதரு சேவையின்பம் அருள்வாயோ

திடவசுராதி துஞ்ச விடுமயில் வேல் கைகொண்ட
திரமுருகா செயந்தி வரைவாழ்வே

சிவகுருநாத பண்பை நகருறை யீசர்மைந்த
தினதயாள கந்த முருகோனே

வடகுவடாட வன்று நடமிடு தேவிகங்கை
மகதவ ரூபமென்ற மலைமாது

வரமெனலாக வந்து திருமலை மேவிநின்ற
வரகுண சேமதுங்க பெருமாளே.

தான தந்தன தானன தத்தன
தான தந்தன தானன தத்தன
தான தந்தன தானன தத்தன தன தான

**750.** பால வஞ்சக மேவிய வித்தென
லாக வந்தமை யேழையை முத்தமிழ்
பாடை நன்சொலை யேயறி விற்சிறி தறியாதே

பாத கந்தனை யேபுரி மட்டியை
மாசகங் கொளமூடிய பெட்டியை
பாரநஞ் செனலாகிய சொற்றியை — மடையேனை

கோவ மிஞ்சிய நாயை நிகர்த்தவ
ஞகிவம்பினி லேவுழல் கத்தியை
கோல மிஞ்சிய நாத வுனற்புத — மிதுகாறும்

கூறி வந்தனையே செயு மற்பமை
யாத சிந்தை சதாதுயர் முற்றிய
கோழை பண்பமை யாத மனத்திற — முடையோனை

ஆவலன் பொடு மாளுவ தெத்தகி
பால கந்த சுவாமி மகத்துவ
ஆதி மந்திரவேத முழக்கமை — பொழிலூரா

ஆசி தந்தெனை யாள்நல முற்றிய
பாத பங்கய மீதரு மத்துரை
ஆதரஞ் செறி வானிறை யுத்தம — முடையோனே

சேவலின் கொடியாள சிகிப்புற
மேவலின்றிர லான கடற்கரை
சேம செந்தியிலே வளர் பக்தர்க — ளுடையோனே

தீத மைந்தவரே பொடி பட்டுடை
வாக பண்பையிலே தளி பெற்றருள்
சேரு பொன்றிரு மாமலைபிற் குக — பெருமானே.

தந்தன தான தான
தந்தன தான தான
தந்தன தான தான — தன தான

751. வஞ்சக ரூப மேவு புன்சொலி னலநேக
வம்புகள் பேசி மூட — ருறவாகா

மந்திர மோதி யோதி யுன்றிரு நாமமே சொல்
வண்புகழ் பாடியாடு — தவநேயர்

நெஞ்சகமே பராவு செஞ்சொலிலே யுலாவு
நின்பதபாத சேவை — தருவாயே

நிம்பணி மார்ப சோம சுந்தர மீற பால
நிந்தனை பேசி யேசு — மறிவீனர்

பஞ்செரி யூடதாக வொன்றிட வேலை யேவி
பங்க மதாகி நீற விடுவோனே
பண் படியார் களோடு சந்தத மேவி வாழு
பங்கய பாத நாத முருகோனே
குஞ்சரி யோடு மேவு கிளைற வகான மாது
கொஞ்சி யல் பாருசேம முடையோனே
குண்டுணி நாச காலர் வந்தமை யாத சேம
குன்றுறை வான தேவர் பெருமாளே.

தனன தான தனதன தானன
தனன தான தனதன தானன
தனன தான தனதன தானன தன தான

752. பழைய பாடலிதே யெனவோதியு
மிகழு மூடர் சதாயெனை யாதனை
பழுகவோது மகாகொடி யோர்களை சிறியோரை
பயில்பொருமை யினுலெனை நாடொறு
மறிவிலா திகழ்வாய்மொழி கூறிய
பகைமை யாளரை தீதுறைவாய்மொழி யுடையோரை
பிழையுளோ னெனவேயில தாமொழி
பகரு கேடரை வேதனையே தர
பிரிவுமாரண பேதனமாகிய பலசார்பும்
பெருகவேபுரி நீசரை காலரை
பலவிரோதியை மூழ்பிணி வாதையை
பிறவியால்வரு நோவினை சாவினை யறவேநீள்
தழையு மாரணவேத மாகாதுதி
பரவுசேம நிலாவென லாகிய
சரதவீரவ ரோதய மாகிய வயிலேவி
சருகிலேறிய மாவெரியாமென
பருக வேவிடு வாயிது வேதகி
சமணரூ றமவே கழுவூடுற விடுவோனே
மழைகளேதின மேபொழி மாபொழில்
நகருளானவ னேகுக காரண
வளிமணள தயாள பராபர முருகோனே

வடிவினுள் பரை யாமளை கோமளை
தருசு தாதிரு மாமலை மேவிய
வாத நாதந லாதரமேசெய பெருமாளே.

தந்தா தனந்த
தந்தா தனந்த
தந்தா தனந்த தன தான

753. வந்தா தரங்கள் தந்தே புரந்து
பூங்கா பதங்கள் தருவாயே
வன்பாத கங்கள் கொண்டோ ரிணங்கல்
வம்பான தென்ற நெறியாகும்
அந்தேவர் துன்ப மண்டாத செஞ்சொ
லங்கோத வந்த முருகோனே
அஞ்சாத செந்தில் தங்காதி யுந்தன்
அன்பே பிறங்கு மொழிதாராய்
கந்தா சிறந்த பண்பா ரிலஞ்சி
கண்போ விலங்கு மொருதேவா
கங்காளர் தந்த மைந்தா குறிஞ்சி
கண்டேறுகின்ற மலைநாடா
இந்தா வரங்கள் என்றே வழங்கல்
என்றோ யிரங்க வறியேனே
எண்சேருகின்ற பைந்தாரணிந்த
இன்பால பண்பை பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

754. புங்கமேவிய ஞானவ ரோதய
மென்ற பூரண சேமத யாபர
புந்தி வீழ்பவ ரோடுற வாடிய முருகோனே
புண்கணோ வினிமேலழை சதாபடு
கின்ற வாதை யெனுளி லோவிடர்
பொன்ற நீதியை யாதர வாலரு ளுருவாயோ

தங்கமே கிருபாகர சாகர
வென்று தேவர்க ளேட்டிய சேவக
சந்ததா நலமேவு ருவாகிய குருநாதா

சம்பு வோமுறை தேர முனிவினி
லொன்று மாவுரை கூறிய வாரிதி
சந்தனாசல மாமலை யாள்கிரி யெனவோது

சிங்க மாதவ ரோடுறை வாயமை
கின்ற காரண நாரண னார் மகிழ்
செந்தினாயக மேயென தாருயி ரகவாழ்வே

செண்டிலுலகை மேருவை யோர் புடை
தந்த வீரதயா பரனே யருள்
திங்கள் சூடிய நாடகனாருள் சுதவேளே

கங்கை கோமதி யாமளை கோமளை
கொங்கு லாவிய மாகுழ லாள்பவை
கண்டபால கனேகுக தூயவ ருடையோனே

கண்கொளா நிலை யாலுயர் மாபொழில்
பண்பை மேல்புற மேவிய மாமலை
கண்டு மேலுறை மேலவர் நாயக பெருமாளே.

தந்தன தான தான
தந்தன தான தான
தந்தன தான தான தன தான

755. புன்பவ மான வாதை யென்றனை நோவ நோவ
பொங்கிய தாக நாளு முழல்வேனே

புண்களில் வேலை யேவு கின்றமை போல வாடி
பொன் சிறிதே யிலாத படிவாழ்வில்

நின்றுனை நேடி நேடி வந்தினை யோத வோத
நெஞ்சிடையே கொளாத நிலையாக

நின்றிடு லேவாரள்வர் பண்பொழில் வாழு நாத
நின்பர மான நேர்மை யறிவாயே

கன்றதை தாய் தளாத தென்பதை யோர்வை நேய
கன்றினை யாகி லேழை யெவர்பாலில்

கண்டிதை யோத நீதி தந்திடு வார்க ளோகை
கண்டவ னனேசம முடையோனே

முன்பவ வாதை பேர யென்பிணி யாவு மாள
முண்டக பாத சேவை தருவாயே

முந்திரி மாப லாவி லொன்றிய தாகி நாளும்
முன்றிரு நாக மேவு பெருமாளே.

தந்தன தந்தன
தந்தன தந்தன
தந்தன தந்தன தன தான

756 பந்த பாசங்களால் நொந்து ளேனைந்துநாள்
பங்கமாகி ன்றதே இனிதான

பண்பு சேருங்குண நந்தனே செந்திலோய்
பண்பை வாழ்கின்றவா குருநாதா

வந்து நீயன்பிலாள் இன்ற நாளென்றிலோ
மன்பரா சுந்தரா செகதீபா

மன்றிலோரஞ் சொலா ரின்கணே நின்றவா
மந்திராவென்றிவே லுடையோனே

கந்தனே யன்புளோர் சிந்தைமே வும்பரா
கண்டுநேரின் சொலோ டெழிலான

கம்பனோடு ஞ்சதா பங்கில்வாழ் மங்கைகால்
கந்திசேர் பொங்கர்சூழ் வயலூரா

தந்தி சேரும்புயா விஞ்சை தேரும்பதா
தண்டயாளஞ் சதா தருவாயே

சந்தனாலங் கிர்தா பண்பைமேல் குன்றிலே
தங்கிவாழ் கின்றதோர் பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

757. பலவிதை வாதை யஞ்ச வருகிற நோவினைந்து
பதறுதலாக நின்று எளியேனும்

பகவியாத வன்பு தருவதெனளி லென்ற
படிமன மாழ்கிபுன்க ணிடைமூழ்கி

நலமிது காறுமின்றி புலைதவிலே புழன்று
நயவிதி யோசிறந்த முருகோனே
நளிர்மதி சூடுகின்ற வனசடிலேசன்மென்ற
நதிபதியா திதந்த செகநாதா
உலவுலை மீதமைந்த மெழுகெனவாக வொன்றி
வுறுதவ மேதுமின்றி யயர்வேனோ
உமைமகனை யறஞ்செய் பவரனு கூலகந்த
வொருநெ.காழி லேதுமின்றி புவிமீது
சிலபக லேனுமின்ப முறவறியாத பந்த
சிறுவனையாள வின்று வரவேணும்
சிவகுரு நாதபண்பை நகருறை யீசர்தந்த
திருமலை மீதில்நின்ற பெருமானே.

தன தனன தன தனன
தன தனன தன தனன
தன தனன தன தனன தன தான

758. உனது பணி விடைகள் புரியென இதய மிகமகிழ
உதவி செய விலை யெனினும் அவமாக
உறுதுயர் கடுருமொழிகள் பலவழியில் சொலுமடையர்
உடல் பிளவு செய வயிலை விடுவோனே
கனக குருபர முருக புனித முனிவரர் பரவு
கழுகுமலை யதனிடை மிடுவோனே
கமலை பரவிய குமரி சுமுக பரிமள குழலி
கவுரிய ருளிய குமர னெனவோது
தனதபொழினகர் பவனி வருமடியுரிதய முறை
சரத கரி வளி மருவு மணவாளா
சகமத னிலெளியனொரு பழவடிமையென நினைவு
தவறி யிகழ் முழுமடைய றவேசீர்
கனதனமு மறவயிலை விடுகுமர குகவரத
கமலபதமது விரைவின் அருள்வாயே
கமழு மலரிலகு புய அடியர்பணி பரசரத
கவினிலகு திருமலையில் பெருமானே.

தனத்த தன தான தான
தனத்த தன தான தான
தனத்த தன தான தான தன தான.

759. பொறுக்க முடியாத பாவ மிடிக்குளுற வாகி யேழை
புவிக்குண் மயன்மூழ்கி நாளு மயர்வேனோ
புனத்தி னிடையேக வேடர் குலக்கனிகை யானமாது
பொருந்து மணிமார்ப சேம முருகோனே
தறுக்கொள சுராதி சூரை நொறுக்கியவர் வாழ்வு மாள
சணத்தி லயிலேவு வீர முடையோனே
சகப் பிரமமே தயாள குகப் பிரமமே விநோத
தவப் பிரமமே மயூர பரதேவா
முறுக்குதிற கோட தான அசப்புற மதேறி வூறு
முடக்கிநல மேவவாழு மொருவீரா
முயற்குறி யிலாத தூய மதிப்பிரபை சூடுநாத
முதற்கு வுபதேச ஞானம் அருள்வோனே
குறுக்குபனை நீருநேரு மொழிச்சி மலைநாத தேடு
குணக்கனி விலாசசேம சுதவேளே
குவட்டிலமை கான தான மெனப்புகலு நாக மேவி
குடிக்கொளு மூலாசதேவர் பெருமாளே.

தனத்த தனத்த தனத்த தனு தன
தனத்த தனதத தனத்த தனு தன
தனத்த தனத்த தனதத தனு தன தன தான

760. மனத்தி னினைத்த படிக்கிது நாண் வரை
முடிக்க விருப்ப முனக்கிலை யேதயை
வகுத்த படிக்கு புரப்பவ ரோயிலை யதனாலே
மறத்தின் மிகுத்த வயிற்கொ டெனுவினை
யொழிக்க மனத்தினி னைத்துட னேவுவை
வனப்பு படைத்த பொழிற் செறிவாருறு மலைவாழ்வே
மணத்தி கனத்த தனத்தி மகாவெழில்
செறித்த குறத்தி தனக்கு மணாளநல்
வளத்தி னுயர்த்த திருப்பொலி நாடணி வயலூரா

வழக்கு வுனக்கு மெனக்கு முருமுறை
அருட்பெய் நலத்தை யளிக்க விதேததி
வரத்தின் மிகுத்த குகத்த பராபரை மகமாயி

சினத்தை யடக்கு பவர்க்கு வரோதய
யெனச்சொல் பரைச்சி யிடைச்சி நிலாவரை
திருத்த நுதற்சி யறப்பொருள் மேவிய சிவகாமி

திறத்தி நடத்தை நடத்தி தயாசனி
மலைச்சி கலைச்சி மலைச்சி கராலய
சிறப்பு படைத்த சிவற்கு வுமைமகி ழொருதேவி

தனத்தி னெடுத்த முகத்தை சதாபரு
கியற்கை சுதத்த உரித்தி னொடாதரி
தருக்கள் நிறைத்த வயற் பொழிலூருறை முருகோனே

தவத்தி னுயர்த்த வருக்க முதாகிய
கடத்த வெழிற் கொணிருத்தகு ணாகர
சகத்தர் புகழ்ச்செய் திருக்குவ டேறிய பெருமாளே

தனன தானத் தனதன தானன
தனன தானத் தனதன தானன
தனன தானத் தனதன தானன தன தான

**761.** பழைய பாடற் கவிகளிதே யென
வுறை களாடற் குறியவ ரேதுயர்
பலுக வோதற் குரியவ னேகுக முருகோனே

பகவ காணற் கரியவ நாதர்கள்
உயர வேதத்துறை பொருளீ தென
பகரு ஞானக் குருபர தூயவ ரகவாழ்வே

பிழைகள் தேடிப் பகரியல் நாவினர்
மடியவே லைத்திட மொடு மேவியல்
பெரும சேமத்துரை நலமா முகில் மருகோனே

பெரிய பூமிக் கொருதுணை யானவ
அடியரோடுற்று றைதிட மாபுர
பிரிவு மோசத்துறை பலவே புரி கொடியோர்கள்

அழிய சீறிப் பொருது வயிலேவிய
குமர சேவற் கொடியுய ராலய
வாச மோகத்துறை யிடை மேவிய சிறியோர்பால்

அணு கொணுத பரமுரு காமறை
பரவு கானத்துரை மகளோடுறை
அழுக காகற் பகமுறை மாகரி மணவாளா

மழைகள் சூடிப் பலவள மேவிய
பொழில் கொணுடிற் குரியவ தாபதர்
மலிய வோதித்துதி பணுவார் பொழில் நகர்வாழ்வே

வளரும் யோகத் தவமுனிவோர் குழு
பயிலும் வாகைக் குகை பலதோடுயர்
வூரதவீரத் திருமலை மேலுயர் பெருமாளே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

762. மதுரவாசக மான் மருகாகுக
புனித வேத புராதன சேவக
மகிபதூயவ ராலய மாவுறை முருகோனே

மகிழுமோ முறையேபெற மாசிவ
னுயரு மோர்தவமே செய ஞனினில்
வரை விலாதினமாகிய சேர்புரை புகல்வோனே

சதுர வீரதயாபர நாயக
குமரபோதவ ரோதய காரண
தமிழினூக மேவிய பூரண குருநாதா

சருகுமூலம தேவுணவாகிய
முனிவராதி மனோகர தேவர்கள்
தவசிலேவரு சேமதயாளமெ யுடையோனே

பதும பாததியாக குணாகர
உரிமையாள் சுகவீரிதி நாவலர்
பரிவிலே விளையாடிய மாதவர் வரதீபா

பகரொணு மறை மேலுறை வோயென
தகமெலா நிறைதாயக மானவ
பகரு நேரயிலார் கரமாமலை யுடையோனே

மதுசதா பொழிமா பொழிலூருறை
நகர வீசர்சுதா கிருபாகர
மதனு நேரிலதாகிய பேரெழி லுடையோனே

வளிமணுளகு காபரை கோமதி
யருளு பாலவி னோத தராதல
வடிவ மாதிரு மாமலை மேவிய பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

763. கடமுடைடவாக வந்து யெளியனை மோதுகின்ற
கனபிணி யூடினைந்து பலநாளும்
கதறுதலாக நின்று மெலிவதிலே மலிந்த
கடையனை யாள்வதெந்த வகையாலோ
உடனலமேது மின்றி மடிமிடியான் வருந்தி
உழல்தரஞ்க வொன்று படிவாழ்வில்
ஒருதர மேனுமின்றி பயில்பகை யாதிதுஞ்ச
வுறுதுயரான் மயங்க விடலாமா
நடமிடு நாதர்தந்த குருபர சேமகந்த
நளின வுலாசதுங்க முருகோனே
நகைபல தோடணிந்த குறமகள் நேயவெங்கள்
நளிர் திருவாகநின்ற பெரியோனே
தடமுயர் வானவிண்டு நிகரென லாகநின்று
தழைபல மேறு பொங்க ருடையோனே
ததியிது வாகுமெந்தை யெழில் சிகிமீதெழுந்த
தனமருள் நாகபண்ணை பெருமாளே.

தந்த தான தனதன தானன
தந்த தான தனதன தானன
தந்த தான தனதன தானன தன தான

764. நெஞ்சிலீழை யிருமலிஞலெனை
யஞ்சவாதை புரிபல வேதனை
நின்றுதேக நலமுற வேவுன தருடாராய்
நிம்பமாலை யணிபர மேருவை
யண்டிவேதை புரிபர சேவக
நிந்தை பேசியிதழ் புவர்நாசகர் பலதீயோர்

பஞ்சிலேறி யுணுமெரி யாமென
செஞ்சொல் வேலையவர் வயினேவிய
பண்புளாள பயிரவி கோமதி சுதவேளே

பந்தமாய்கை யிடையிடையே யெனை
வந்துமோச வழியினிலே செல
பம்புவாதை புரிகிறதே யிதை யறியாயா

கஞ்சபாத பரமத யாகிதி
யென் சொலாள வருபராதுாயவ
கங்கைசூடியா வணி நீள்சடை யொருதேவர்

கங்கைபால சுரரித யாலய
கொங்குகான மருவிய வேடர்கள்
கண்டசேம வுறைவிடமாகிய குறமாது

தஞ்சமாகவ வளிடமேவிய
கந்தநாத குருபர நாயக
தஞ்சமேழை ததியிது நீயிவண் வரவேணும்

தண்டயாள கரிமுகனேகனி
கொண்ட மூலையிலகிய மாதிரு
தங்குதான மெனவுறை மாமலை பெருமாளே.

தாந்த தன தான தன
தாந்த தன தான தன
தாந்த தன தான தன தன தான

765. தாங்க முடியாத துய ரோங்கி வருதே யிதனை
சார்ந்து வெளியேன யால் முறையேயோ

தாண்டவ மதாட பவ மூண்டு புகை போல வெனை
சாம்பல் பணிவே வருவ தறியாயா

யேங்கு கிறதே மனது மாய்ந்தழிய வோயிறுதி
யீண்ட டையவோ யெதுவு மறியேனே

யேந்தி யெனை யாளவினை நான்றுதி யினால் புகல
வேய்ந்த குக நாத சிவ முருகோனே

வூங்கு விலை நேர் புருவ மோங்கமுத மோடு நறை
மாந்து குற மாதணையு மணிமார்பா

வான் பழனி சோலை மலை தேங்கு வயலூரி னொடு
வாய்ந்த பொழிலூரி லெழு மொருசேயே

கோங்கு பலவோடு செறி வேங்கு புனை மாவகில்கள்
கூந்தல் பனைமேவி வளர் மலைநாடா

கூர்ந்த வயிலா ளுகர சாந்த முறலார் மருமு
கோன்றி ருவிலாச மலை பெருமாளே.

தந்த தான தனத்த தனந்தன
தந்த தான தனத்த தனந்தன
தந்த தான தனத்த தனந்தன தன தான

766. தண்டயாள மிருத்த பரம்பரை
கங்கை வாலை மலைச்சி கரந்தனில்
தங்கு தேவி கனத்த தனங்கெழு மியதேவி

தந்தியானை முகத்தனை முன்சுத
னென்றதாக வளித்த சுதந்தரி
சம்பு வாம மிடத்துறை கின்றவ ளொமதாயி

கொண்ட னேர நிகர்த்த கருங்குழல்
கொண்ட காமி பரைச்சி யருந்தமிழ்
கொண்ட வேழை புகழ்ச் சொலினுந்தழை யொருதேவி

கொங்கு தேரு கடத்தி யனந்தா
மெங்கு மேவி யிருப்பவளம் பிகை
குண்டுவோ மினிருத்த மிடும்பரை யெனலோடு

கண்டை நேரு மொழிச்சி தினந்தோறு
மண்டி யோது பவர்க்கருள் சுந்தரி
கந்தி வாழை மிருத்த பொதும்பரி னிடையான

கண் கொளாத வளப்ப மிகுந்துள
பண்டை யாளும் அறத்தி தருஞ்சுத
கந்த நாத மகத்துவ வந்தண ர்கவாழ்வே

கெண்டை நேரு கணிச்சி குறிஞ்சியி
லொன்ற லான குறத்தி யிடந்தழை
கின்ற மோக கரிக்கமை யுஞ்சுதை மணவாளா

கிண்டி யோதை கூலித்த விறும்பிடை
வண்ட ராடி தழைத்த பழங்கனி
கின்ற சேம நகத்துறை யந்தணர் பெருமாளே.

தந்தன தான தான
தந்தன தான தான
தந்தன தான தான தன தான

**767.** வஞ்சக லோப மூடர் பொன்றிட வேலையேவு
வன்கர வீரதீர முருகோனே
மண்டமராடு சூர னன்றறவே மயூரம்
வந்தமை வாகவேறு மொருதேவா
கஞ்சிகை மீதுலாவி புன்சமணோர்கள் வாழ்வு
கன்றிட ஞானமேவ வருவோனே
கங்கை பவானிவாலை சங்கரி வாமிகாமி
கண்சுத சாமி நாத னெனவோது
குஞ்சரி பாக வேடர் தன்குல மாதுளான
குங்கும மேவு மார்ப மதவேளே
குண்டுணி கோள்கள் பேசி வந்தவர் நோவில் வாழ்வு
குன்றிட வோதுதீர முடையோனே
செஞ்சர ணோதியோதி வந்தனையால் பராவ
திண்புய பாத சேவை தருவாயே
செங்கதிராதி கோள்கள் என்றினு மேவலான
திண்டிரு நாக மேவு பெருமாளே

தந்தன தான தந்த
தந்தன தான தந்த
தந்தன தான தந்த தன தான

**768.** நெஞ்சுளைவே வலைந்த பஞ்செரி போலுமண்டி
நின்றுறை வான்துன்ப பிணியாலே
நின்றனைநாடுகின்ற வந்தனை யாதுமின்றி
நின்புக ழோதலின்றி யயர்வேனோ
கஞ்சரா ணாலயங்கள் தந்திணி யாள்வதென்று
கந்தசுவாமி கங்கை வரைவாழ்வே
கம்பலையான செந்தில் பைம்புனன் மேவநின்ற
கந்தவீ யூடுறைந்த முருகோனே

வஞ்சக லோபர் துன்ப மன்புவி மீதெழுந்து
வந்தனை மாரணங்கள் பலதாலே
வம்புகளே புரிந்த துன்புகளே யொதுங்க
வந்தருள் சேமதுங்க முடையோனே
மஞ்சினமோ டெழுந்து பைம்பொழின் மேலுறைந்து
மங்கலமேவ நின்று விளையாடும்
மன்பொழி லூரதுங்க பங்கய பாதவெங்கள்
வண்டிரு நாகமர்ந்த பெருமாளே.

தந்தன தனதன
தந்தன தனதன
தந்தன தனதன தன தான

769. கண்டினை நிகர்மொழி வண்டினை நிகர்குழல்
கண்கவர் கிரிதன மடமாதர்
கண்பொர மயலிய வின்புறு சிறியவ
கண்செல வறியவ னெனலோடு
வண்டினை விளைவுயர் பொன்புன வளிமரு
மம்பெற மருவிய முருகோனே
வந்தனை புரிபவர் சிந்தையி லுறைபர
மஞ்சின முறைபொழில் வளநாடா
எண்டிகழ் பழனியில் தண்டணி கரகுக
வின் சரவணபவ வருடாராய்
இங்கித பயிரவி சங்கரி பகவதி
யின்சுத கருமுகில் மருகோனே
சண்டணி மணிபல தின்றிரள ணிகுவை
துண்டென பலவயி னுறமேவு
துங்க மொடுயரிய பைஞ்சுனை தழுவிய
தொன்றிரு மலைவளர் பெருமாளே.

தந்தா தனதன
தந்தா தனதன
தந்தா தனதன தன தான

770. சந்தா சலமுறை கந்தா குருபர
சம்பே துதிபணு முருகோனே

தண்டா ரணிபரை கொந்தார் குழலுமை
தண்கா வனமுளை மலைமாது

பைந்தார் செறிபொழி லின்சார் புளாகர்
பண்பார றமக ளெனலான

பஞ்சாயுத முகில் தங்கா யெனவரு
பம்பார் பயிரவி சுதவேளே

வந்தாளி துததி அஞ்சே லெனவருள்
மைந்தா வெனவுரை தரவேணும்

மஞ்சாடிய பொழில் கண்டே மயினட
மன்றுடியவளா மலைநாடா

பந்தாடிடு தன வண்டோ விடுகுழல்
பண்பாடிடு மொழி வளிமாது

புங்கேறிய பர அன்பேறிய திரு
பண்பேறிய மலை பெருமாளே.

தனத்தன தனந்த
தனத்தன தனந்த
தனத்தன தனந்த தன தான

771. பகைத்தெனை வருந்த விடுப்பவர் குலங்கள்
பசித்தழல் அருந்த விடுவோனே

பதித்துனை வணங்கு பவர்க்கருள் சுரந்து
பருப்பத பதங்க ளருள்வோனே

குகைக் குயர்பிலங்கு தவத்தவர் விளங்க
குறிப்பினை யுணர்ந்த படியாக

கொடுப்பவ சிறந்த நலத்தெறி லெழுந்த
குணப்பதி யிலிஞ்சி முருகோனே

திகைத்துல கடங்க நசித்திட வெழுந்த
திறத்தசுர் கலங்க வயிலேவி

செருத்தவ முழங்க கடற்கரை செயந்தி
திருத்திய தலங்கொ ளுயர்வாழ்வே

நகைத்திரள் படர்ந்த பொழிற்பதி வலஞ்செய்
நளிர்த்துறை வயங்கொள் மயில்வீரா

நதித்துறை தடங்கள் மிகுத்துள வளங்கள்
நகைத்திரு நகங்கொள் பெருமாளே.

தான தான தனதன தானன
தான தான தனதன தானன
தான தான தனதன தானன தன தான

**772.** தேகவாதை பலவகை யாலெனை
நோவ நோவ வருகிறதே யிதை
தேரிவியாவர் வயினிவை யோதுவல் அறியாயா

சீர்மை மேவு குருபர பூரண
யானைமாது மருவிய மாமத
தீரவீர முறைவிடமாகிய முருகோனே

யோகமேவு பவரினி தாயுறை
வார்கள் நேயமுருகிய தாயக
ஊனமான பவமற நீதயை புரிவாயே

ஓமிலேறு பொருளினை யேசிவ
நாதனாரவருளிய வோர்பர
வோது வேதமுடி தொறுமே நிறை செகவாழ்வே

தாகமாக பலதுறை நாடொறு
மேகி யேகி யொரு கதியேயிலை
சாமி நாதகுக கிருபாகர செயவேளே

சார்பிலாத படியெளி யேனிடர்
சேரவாடிமயலு தலாலுழல்
தால மீதிலருள் புரிவோரிலை யதனாலே

பாகை நேருமொழி வளிநாயக
ஏழை யேழை கிருபை செய்வாய்தந்தி
பாலைவாழு மொருபரை யாமளை சிவகாமி

பால சேமநில வியல்பாகிய
தாயதான திருவுறை மாமலை
பாலயோக முனிவர்ர் தாபதர் பெருமாளே.

தந்தன தான தந்த
தந்தன தான தந்த
தந்தன தான தந்த தன தான

**773.** நஞ்செனலான பந்த
மங்கையர் பாவி லொன்று
நன்கதி யேதுமின்றி யழிவேனோ

நம் யடியார் களின்ப
பொன் பொருளாவி யென்ற
நம்பரசேம தங்க முருகோனே

பஞ்செனலா யெழுந்து
நைந்திட வேதை யுண்டு
பங்கமதாகி யுந்த னடிபேணு

பண்படியேனை யெந்த
தந்திரமோடு வந்து
பங்கய பாதவின்பம் அருள்வாயோ

குஞ்சரி கானமங்கை
தங்கிய பாக செந்தில்
கொண்டுறை தேவகந்த செகநாதா

குண்டுணி கோள்கள் வஞ்ச
வன்சொலினு லினைந்து
குன்றிட வேதை தந்த கொடியோர்கள்

அஞ்சுற யேவுதுன்ப
நைந்தறவே விளங்கும்
அன்புடனே யெழுந்து வரவேணும்

அம்பிகை வாலைதந்த
சுந்தரமான பண்பை
அந்திரு நாகமர்ந்த பெருமாளே.

தான தானன தானன தானன
தான தானன தானன தானன
தான தானன தானனதானன தன தான

**774.** மோகவிரி தியாகி பூவிடை
பாதசேவை யிலாது சதாதுயர்
மூடுநாயினை யேழையை பேயினை யனையேனை

மூழ்குகாமிய ரோடுற வாடிய
தீயநேயனை காயனை மாயனை
மூதுமாமறை வாசகமே சிறி தறியாத

சாகமோடொரு தாமென லாகிய
பீழை வாதியை மாபிணி யாளனை
தாரகாமனு வோதமை யாமன முடையேனை

சாதமே நிறை மாவ கடாகிய
பேழை பேணிய தான விகாரனை
சாரு கோவியை மேலவர் தாழ்வென விகழ்வேனை

வேகமாக சதா பொருளாசையி
லோடு காமியை யாளவெ னுள்மயில்
மீதுலாவி தயாளம தாகிய பதசேவை

மேவவேழை முனுள்புரி பாவமொ
டானதீமைகள் போகவு னுதர
மேவிவாழுத லாமென நாடொறு நினைவாகி

நோவ வோவிதி யாமனை கோமனை
சேமபால தயாபர நாயக
நூறு சேரிதழ் மாமரை மாபத முருகோனே

நூலிலோதிய மாபொருள் தேர்வல
ஞானமூலவ ரோதய காரண
நூறிலா திரு மாமலை மேவிய பெருமாளே.

தன தனன தான தந்த
தன தனன தான தந்த
தன தனன தான தந்த தன தான

775. உயர் கதியிலாது கைந்து துயரி னிடையே யுழன்று
உறு மிடியினால் நலிந்து பலவாக

வுளபகை ஞரான் மெலிந்து நலிய வருபாவ பங்க
உறை யுளிடமே பதுங்க விடலாமா

தயவினுருவே செயந்தி குமரசிவ மேயிலஞ்சி
சரவுண பவா முகுந்து மருகோனே

சருகுபல மூல முண்டு தவவுருவமாயெழுந்து
தபதரகமேல் வளர்ந்த முருகோனே

கயல்கள் மிகவே நிறைந்த வயல்கள் மிகவே பொலிந்து
கதிர்கள் மிகவே செறிந்த வயலூரா

கமுகு பலமாவு தெங்கு அமாருலகேற நின்று
கமழு பலமே வழங்கு பொழிலூரா

புயவலிமையால் நிறைந்த அரிகரிகளே மலிந்து
பொரு பகை யிலாதி ரங்கி விளையாடு

புனிதவள மேவுகின்ற திருமலை மகா நகங்கொள்
புரவலசதா நலஞ்செய் பெருமாளே.

தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந் தன தான

776 புகழ்ச்சொலி தினத்தும் துதிப்பன துதித்தும்
பொருத்திய மனத்தன் பருளாமல்

புகைத்திட வருத்தும் பவத்திடை யிருத்தும்
புலத்தினை யொழித்தின் பருள்வாயே

சகத்தவர்களுக்கும் சிவப்பர மூகிற்கும்
தழைத்தருள் விரிக்கும் பெரியோனே

சகிப்பன சகித்தும் பொறுப்பன பொறுத்துஞ்
சடத்தினை யொழிக்கும் படியான

இகழ்ச்சியி லெனைத்துன் புறுத்திய பவத்துன்
பிறுத்துன தருட் தந்திடவேணும்

எழிற்செறி பொழிற்றண் பணைத்திரள் மிகுத்திங்
கிசைப்பலன ளிக்கும் பொழிலூரா

சுகத்தவ மலைத்திண் புயத்த வகரிக்கும்
துதிக்குற மகட்குங் கொழுநாநீள்

தொடர்ப் பொழிலுடுத்துந் திரட்டிரு மலைப்பொன்
சுடர்த்தளி யிருக்கும் பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

777. துடைத் தெனை யழிக்கினும் கடைப்பிடி விடுக்கிலன்
துடர்ப்படு வழக்கெனுந் துறையாகும்

சுகத்தவ தவத்தரின் பகத்தறு முகத்த நின்
துணைப் பதமளித் திடும் படிவாராய்

சடைத்திரள் படைத்தவன் கடைச்சுத னெனப்படுந்
தாத்தவ மகத்துவந் தருவோனே

தருச்செறி வளத்தெழும் பொழிற்பதி யிடத்தினுந்
தனிக்கு கவருட்செயும் பெரியோனே

படைத்திர ளெடுத்திடும் கரத்தசுர் களைக்கொலும்
பருத்தயில் விடுத்திடுஞ் ஜெகவீரா

பருப்பத மகட்கருஞ் சுதத்தெழில் மிகுத்திடும்
பாற்குக குறத்தியின் கொழுநாநீள்

கொடைக் காவிருத்தியன் பருத்திய மனத்தொடுங்
குணத்தொடு நிலைத்திடும் புகழ்வீரா

குலக்கரியினுக் கரும் புயத்தவ திருத்தகும்
குலக்கிரி யிருப்புறும் பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

**778.** உனையோதி வந்தனங்கள் பலவோதியும் புகழ்ந்து
உளம் நாடுகின்ற தொந்த மிதுகாறும்

உணராமல் நின்ற தெந்தன் விதியோ யிதென்று நைந்து
உலைவேனை யென்று வந்து அருள்வாயோ

கனைமேவுகின்ற செந்தில் பதிவாழுகின்ற கந்த
கருணாலயஞ் சிறந்த முருகோனே

கனி நாலுகின்ற பொங்கரிடமேவுகின்ற பண்ணை
கனமேவுகின்ற துங்க வாதீபா

மனைமேவி நின்றடர்ந்த தனமேவுகின்ற சிந்து
வளமேவுகின்ற பண்டை வயலூரா

மகதேவரும் பணிந்து குகநாதனென்று கொஞ்சு
மகிபாத வம்பிறங்கு மலைவாழ்வே

சுனையோதி மஞ்செறிந்து புனலாடி நின்றிலங்கு
துடர்பாலயங்கள் தங்கு மதனோடு

சுகவாழ்வு தந்துயர்ந்த திருவேல வார்ந்துயர்ந்த
துதி மேவுகின்ற குன்றை பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

779. துதியாத வஞ்ச நெஞ்ச சுகவாழ்வு பொன்ற நின்ற
துரை ராஜ சிங்க கந்த முருகோனே

துதிமேவுகின்ற வன்பர் மதி மீதுறைந்திலங்கு
சுகமே வழங்க வந்த பெருவாழ்வே

பதிதானமுஞ் சிறந்த நகரா மிலஞ்சி தங்கு
பரமே நலஞ் செறிந்த வயலூரா

பகவா தினம் புரந்து அருள்வோய் சினம்படர்ந்த
பகையோக வந்து வஞ்சல் தருவாயோ

கெதி யேதுமின்றி யிந்த புவிமீதுழன் றலைந்து
கெடவோ யிதென்று நைந்து பலநாளும்

கிரி மேவுகின்ற வுந்தன் அடிபேணி வந்தனங்கள்
கெதி வேணுமென்ற தென்ற வணமாக

ததியீது வென்று கெஞ்சி வருநேர் பறிந்து மன்பு
தழையா திருந்த தெந்த முறையாமோ

சடமேகி வெந்தபின்பு யெனையாளுகின்ற தெங்கு
தலைவா பிறங்கு பண்பை பெருமாளே.

தந்த தானன தானன தாந்தன
தந்த தானன தானன தாந்தன
தந்த தானன தானன தாந்தன தன தான

780. துன்ப வாதையிலு லெளியேன் படு
பங்க வாழ்வினை நோவினை யேந்திய
துன்ப தேகவியோதி யதாம் பவ மொனுமுடை

துஞ்ச வோதியிதே யருள் வாங்கென
யெந்த வேளையிலோ யெனையாண் டருள்
தொந்த மேவுமெனு துயர் மூண்டமை யெளியேனை

அன்பினுள வினுள் வரை வாய்ந்துன
தஞ்சல் கூறிலையே யெனில் காய்ந்திலை
அண்டிமேனி னைகாவல் செயாண்டகை முருகோனே

அஞ்சு மாமுக துயவனுஞ் சிவ
சம்புதேர் குரு நாயக மாந்தளிர்
அஞ்சு மாநிற மேவிய கான்குற வளிமாது

பொன்ப யோதர மேவுற வாண்டகை
கந்த நாத புராதன காந்தள்கள்
பொன்ற வார்விர லாள்கரி சேர்ந்திடு மணவாளா

பொங்கர் சூடிய மாவயில் சூழ்ந்துள
பண்டை மாநக ராலய மாந்தளி
பொன் செய்வார் சடையீ சுரனேந்திய வொருசேயே

மண்பொரு ரணுர் மகிழ் வோங்கிய
தங்கை கோமளை யாமளை யாம்பரை
மங்கை மாது குமாரி வருந்தர மலைமாது

மைந்த நாயகமா வெளியே ன்றனை
யஞ்சல் கூறி நலாதர மீந்தருள்
மஞ்சுசேர் திருமாமலை சார்ந்துறை பெருமாளே.

தனத்ததன தான தந்த
தனத்ததன தான தந்த
தனத்ததன தான தந்த தன தான

781 மறக்க முடியாத துன்ப பவக்கடலிலே மிதந்து
வருந்துத லிலே வுழன்று மெலிவேனே

வனத்தி குறமாத னைந்த குகப்பிரமமே சிறந்த
வயற்பொழில் களேவளைந்த வயலூரா

அறத்தி சிவகாமி தந்த திருக்குமரனே யிலஞ்சி
அரற்கு மகனுகவந்த வொருதேவா

அகர்க்கு முதலாயெழுந்த கரிக்கிளையவா பிறங்கும்
அயிற்கரகுகா வளங்கொள் மலைவாழ்வே

கறிக்கொடி சதாபடர்ந்து செழித்த பொழிலூரிலங்கு
கதிர்க்குக தயாள செந்தி லுடையோனே

கருத்த முகிலார் புகழ்ந்த சிவத்த மருகா குறிஞ்சி
களிக்கு முதல்வா வணங்கும் அடியார்கள்

780-பாட்டு-அயில் அழகு மதிலுறப்பு.

சிறக்க வரமே புரிந்து அருட்பெய் பரமே யிரங்கி
திருத்தி யருளே வழங்க வரவேணும்

செழித்த பொழிலால் வளைந்து பழுத்த திருநா கமர்ந்த
செகப் பிரமமே கலஞ்செய் பெருமாளே.

தத்தன தத்தன தந்தா தானன
தத்தன தத்தன தந்தா தானன
தத்தன தத்தன தந்தா தானன தன தான

782 அற்புத வித்தக கந்தா மாமறை
சொற்புகழிற் செறிகின் றோய் வானுறை
அத்தி சுதைக் குயரன் போராதர மணவாளா

அச்சுத மச்சனு கந்தே நாடோறு
மெச்சு நலத்திலு வந்தோய் கானவர்
அற்பு படைக்க வளர்ந்தே மாதினை வனமேகி

புற்புன மத்தி விழுந்தே வார்குரல்
பற்றி யெடுத்து யெழுந்தே வோடமை
புற்கிளியைக் கடிகின்ற ளாகிய குறமாதை

பொற்பு மிகுக்க வணைந்தோனே சிவ
னுக்குயர் வித்தைபகர்ந் தோனே வுமை
புத்திர பத்தர் மிகுந்தோனே வய முடையோனே

கற்பவர் கற்க வளர்ந்தே நேரலர்
துக்க கடற்குள் நலிந்தே வோய்வுற
கைப்பவர் சொற் களழிந்தே போய்விட வருவோனே

கத்து கடற்கு ளொழிந்தே கீழ்தலை
யுற்ற மரத்தை வகிர்ந்தே தேவர்கள்
கட்ட மொழித்த வெறும் பேறே குகவாதிபா

தத்தன தத்த தனந்தானு வென
நிர்த்த பதத்த னெனுந்தே வேதுதி
தத்துவ முத்த சுகந்தா வாரண முருகோனே

தட்செறி வுற்ற வளஞ்சீர் சூடிய
பொற்பமை பட்பொழி லின்பாலா மலை
தத்துவ முற்றுயர் கந்தா நாதர்கள் பெருமாளே.

---

தத்துவம் — அதிகாரம், உண்மை.

தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன தன தான

783. இரக்க மாகிய மனதுன திடமிலை
வரைக்குளானவ மலைமகள் பயிரவி
இருக்கு வாரண முதலிய சதுர்மறைப் புகழ்தேவி

இசைப் பொனுனவள் பணிவுறு பகவதி
வனத்தில் வேடுவர் மனமகிழுற வள
ரெழிற்சி மாமியுமென வுறைகிற பரை மகமாயி

தரத்தயா பரையற மொரு வுருவென
வுதித்த கோமளை யடியவர் நலமுற
தழைத்த பூரணி திரிபுரை கயிரவ விதழாயி

தனத்தி சேமமு முடையவள் பரிமள
குழற்சி யாதர முருகிய பெரியவள்
சகத்தையாள் பவள் சிவனிட முறைகிற சிவகாமி

வரத்திறல் வருகுருபர வாமொரு
வுருக்கொள் நாயக மகிதல விரிவென
மதித்த யாளமு மலிவுறு பழமலை முருகோனே

வடித்த வேலணி கரமுறு பிரபல
மெனச் சொல்சேவ கவளை பகரியல்தர
மதித்திடாதவர் குலமற வயில் விடு மொருவேளே

சிரத்தையோடு னதடி தொழு மடியவர்
மிகுத்த வாழ்வுற வருளிய பரனென
திதித்தது மொழி பொருடர வுலகிடை பலரோதும்

திரத்திலோர் சிறிதருளிலை யெனிலெனை
புரத்தலார் கடன் நறைமலிழ் பொழிகிற
திருத்த மேவிய திருமலை முடிவளர் பெருமாளே.

தனந்தனன தானதந்த
தனந்தனன தானதந்த
தனந்தனன தானதந்த தன தான

784. கடஞ்சிதைய வேரியிதென் றுவரும்பிணியினு லைமைந்து
கலங்கியிது நாளுமஞ்சு பசுவேதை

கணம்பிரிய வேதுவின்றி விழுங்குகிறதே யழிந்து
கழிந்து விடவே வருந்து மதனோடு
துடர்ந்தமிடி யூடுறைந்து விளைந்து வயிலேற நின்று
சுருண்டுபரி தாபமொன்று படியாகி
சுமந்துபகை யாதிவந்து நலிந்தழியவே குறும்பு
சொலுஞ் செறிவிஞ லழிந்து படுவேனை
அடர்ந்த வயிலேவி முன்பு புரிந்தபவ மோடுவஞ்ச
மகன்றமிடி தேகதுன்ப பலநோவும்
அரிந்து விடவேணு மெந்தை சுகந்த முருகா குறிஞ்சி
அமைந்து வளர் ஞானதுங்க முருகோனே
இடங்கள் பல மாவடர்ந்த தலம்பதியுளா யிலஞ்சி
இலங்குகுக நாதகந்த செகவீரா
எழுந்து பல மாதவங்கள் புரிந்ததிரு நாகமர்ந்த
இரங்கு மனதேவ யெந்தை பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

785. படமுடியாத துன்பம் இடையிடை மோதி வந்து
பருகுதலாக நின்ற படிவாழ்வில்
பயிலிய லேழையெந்த வகையினில் வாழ்வதென்ற
படியறியாமல் நின்று நெடுநாளாய்
கடமெலி வாகி நொந்து மனமுடை வாகி நின்று
கதறுத லாகவொன்று மெளியேனை
கபடுடையோர்கள் வஞ்ச மொழி பலவே புகன்ற
கடிதுடியால் நலிந்த சிறியேனை
துடர்பிணி வேதை தந்த பவமிடி யாவு மஞ்ச
துதிமயிலேறி வுந்தன் அருள்தாராய்
தொகை பலவாய் மிகுந்த பொழில்வள மேவு பண்பை
துரைமுருகா ஜெயந்தி வரைவாழ்வே
நடமிடு நாதர் தந்த ஜெகபர சேமதுங்க
நளிர்பணை சூழு பொங்கர் வயலூரா

நவகனி மார்கள் தங்கு சுனைகுட மேவுகின்ற
நதிதிரு நாகமர்ந்த பெருமாளே.

தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த தன தான

786. மனக்க வலையால லைந்து பொறுத்த விதியோயி தென்று
வருத்துபவ மூடுளைந்து மதிமாழ்கி
வழக்கிலு னையே புனைந்து புகழ்ப் பனுவலால் புகன்று
மனத்துதி சதா புரிந்து வருவேனை
தனக்குற மினுளை ணைந்த குகச்சுர வணு முகுந்து
தனக்கு மருகா யிரங்கி யருடாராய்
தவத்துடைய ரோடுறைந்து யிருக்குமுதல் வாவளங்கள்
தழைத்த ஜெகநாத கந்த முருகோனே
கனத்ததன மாது மங்கை பரைச்சிய பிராமி நங்கை
கருத்த நிறமாய மைந்த வொருதேவி
கலைச்சி சிவகாமி யன்பு நிறைத்த குமரா வணங்கு
கடைச்சிறி யனேழை யென்ப தறியாயா
இனத்தி லெனை யேழை யென்ற தாத்திலிது நாளு மொன்றி
இருத்தலழ கோவிறந்து விடவேணும்
இருக்கு மறையாக மங்கள் முழக்கு திருநாக மர்ந்த
இசைக்குயர் வதாக நின்ற பெருமாளே.

தனத்த தான தான தான
தனத்த தான தான தான
தனத்த தான தான தான தன தான

787. இரக்கமே யிலாத தான மனத்தனே யெனுளில் நீதி
இசைத்து வாழ்த யாள மோடு வருவாயோ
இமைப் பிலாவ நேககோடி சுரர்க்கு மேல தானவாழ்வி
விருத்தி யாள்வரோ தியாக முருகோனே
விரிக்கலாப மேவு தோகை யிடத்து லாசமான தேவ
மிளிர்த்து தாரமான வேலை யுடையோனே

விதைக்குள்ளான தான வாதி மூலைக்குள்ளான தான நேய
விதிக்கணுதி யான தூய வரதீபா

உரத்தவீர ஆலமேலை குடித்த நாத பால சீல
முதித்த ஞான மூலசோதி யெனலாகும்

உரித்தினேய கான மாது தனக்கு நேய மானமார்ப
வுனைச் சதாதி யான மோடு புகழ்கூறி

வரத்தனான யேழை யேனை புரத்தலோ யிலாத தாகி
மறிக்க வோதியே விடாத படியாக

மகிழ்ச்சிதா குமார நாத பொழிற் செயூர தேவ யானை
மணத்த தீரதேவ தேவர் பெருமாளே.

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தன தான

**788.** இருக்கு மந்திர முதலிய பலமறை
துதிக்க நின்றவ குருபர சரவண
இசைத்த தண்டமிழ் பயிலிய பிரபல முருகோனே

எனக்குனன்பருள் கதியிலை யெனவுன
திடத்துவந்தனை புரிபவ னெனமன
திசைக்கவந்திலை யெனிலருள் புரிபவ ரெவராகும்

தருக்குமிஞ்சிய கொடியவர் பலசொல
வருத்துகின்ற வெனுயிர் நல முறவருள்
தரத்தகுந்ததி யிதுவென மயில்மிசை வரவேணும்

சகத்தி லந்தணர் பரவிய பழமலை
யிடத்து றைந்தவ வசுரகிளை பொடிபட
தழைத்த திண்டிற லயில்கர புயவலி யுடையோனே

உருக்க மிஞ்சிய வனையினு மனையென
நினைத்து வந்தன தடிமல ரிணையினை
உளத்தி லன்பொடு பரவியல் பினைசிறி தறியாயா

வெறுக்க வந்தமை பவமிடி பகையினை
நொறுக்கி யுன்பத மலர்தரு ததியிது
உகர்க்கு லின்றவ தவநெறி யுடையவர் பலகோடி

நெருக்கு தண்டலை யிடையிடை தவமுறு
பொழிற்கு ணின்றவ குருமுனி வர்குரு
 நிருந்த மிஞ்சிய சிவசுத பயிரவி மகமாயி

நெறித்த தண்குழ லுமையவள் தருசுத
குறிச்சி யென்றுரை வரைதிரு மலைமிசை
 நிலைத்த வன்பர்க ளருள்பெற மினிரிய பெருமாளே.

தனத்த தந்தன தானன தந்தன
தனத்த தந்தன தானன தந்தன
தனத்த தந்தன தானன தந்தன தன தான

789. தெளித்த செந்தினை மாபிசை யுந்திர
ளெடுத்த ருந்திய வாகுக சந்தன
 திருச்செய் குன்றினி லேவுறை கின்றவ னெனலான

செகத்த சுந்தர மாமயி லின்புற
மிருக்கு மந்திர வேலணி யுங்கர
 சிறுத்தை யுங்கரி மாவரி தங்கிய மலைநாடா

கனித்த வம்பிகை யாமளை யந்தரி
மகத்து வந்தரு கோமதி யங்கயல்
 கணிச்சி தம்பரி மாபரை குஞ்சரி மகமாயி

கனத்த பைந்தன மேவுமை சங்கரி
தவத்தெ ழுந்தவ மாதவ ரன்புறை
 கரிக்க மைந்தவ போதக முந்தரு செயவேளே

துளித்து திர்ந்திடு மாநறை பொங்கிய
வளப்ப மிஞ்சிய சோலையி லம்பரர்
 தொகைக்க ணஞ்செறி வாயமை யுந்தர வயலூரா

துதிக்கு மன்பர்களோடமை யுந்திர
மிகுத்த கந்தசுவாமி நலந்திகழ்
 சுகிர்த்தி லங்கிய வாவர தந்திர வுரவேணும்

அளிக்குலஞ்செறி மாமலர் நந்தன
வனத்தி ரங்கிய தேனி னிடங்தொறும்
 அலர்த்து பங்கய வோடைகுளந்தொறும் நிறைவாக

அமைத்த பண்பொழில் மாநகரம்புடை
குடக்கி னின்றெழு மாமலை யின்றலை
 அடுக்கு தண்டளி மேவுறை கின்றதோர் பெருமாளே.

தானன தான தந்த
தானன தான தந்த
தானன தான தந்த தன தான

790. கோடான கோடி துன்ப பாடான வாழ்விலொன்றி
கூசாது நாணமின்றி யலைவேனோ
கோவே குகாயிலஞ்சி மாவேலனே செயந்தி
கோலாகலா வறஞ்செ யடியார்கள்
வாடாத மேன்மைதங்கி தாராள மாயுவந்து
மாசேமமே பிறங்க வருள்வோனே
மாவீர மோடெழுந்து போராட லோடமைந்த
மாசூரரையே பிளந்த மயில்வீரா
நாடாளனே குறிஞ்சி மேலாளனே வயங்கொள்
நாகாலமே விழுங்கு மொருதேவன்
நாலான வேததுங்க ஓமீதிலார் பதங்கொள்
நாவேற வேபுகன்ற குருநாதா
வீடான தானகஞ்ச மாதானமே வழங்கி
மேலாகவே நலஞ்செய் தருள்வாயே
வீராதி வீரபண்பை மேல்பாலிலே வுயர்ந்த
வேளேறு நாகமர்ந்த பெருமாளே.

தனன தனந்த
தனன தனந்த
தனன தனந்த தன தான

791. அருளா விலங்கு மொருதேவ கந்த
அரசே மயங்கு விடலாகா
அரியாய மொன்று படிமீ தினைந்து
அருளேது மின்றி யலைவேனோ
மருளேற நின்ற கொடியோர் வழங்கு
மதியாத வஞ்ச மொழியாலே
மனமே நலிந்து கடமே வருந்தி
வரலே பொருந்தி யிதுநாளும்

தெருளாம னின்று தனமேது மின்றி
தினமே பயந்து வுழல்வேனை

செகநாத பண்பை நகரா ளு மெங்கள்
சிவமே பவங்கள் மிடியோடும்

இருளாக வந்து பிணிமாய்கை பந்த
மிவையாவு மஞ்ச மயிலேறி

எனையாளு மன்பு தருவாய் நலங்க
சைளிநாக மர்ந்த பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

792. துடர்பாக வந்து வந்து பெணையாளு கின்ற பங்க
துயரூடு னைந்து நொந்து மனமாழ்கி

துதிபேணு கின்ற வெந்த னகமே யிருந்திருந்து
சுகவாழ்வு தங்கு மன்மை யருளாமல்

விடவாயி லொன்ற நின்ற கடமாக நைந்து நைந்து
விதியேது மின்றி மங்க விடலான

வினையா னதுண்டு மிழ்ந்த படிவாழ்வி னெஞ்சுளைந்து
மிடியா லழிந்தழிந்து தடுமாறி

கடமோய வென்று வுந்த னிடமேவு சிந்தை கொண்டு
கழிவேனை யஞ்சலஞ்ச லெனவோது

கனவாச கங்கடங்கு மொழிகூறி யாள்வதென்று
கதிரேச பண்பை கந்த முருகோனே

தடமேவு கின்ற பொங்கர் பலசூழ நின்றிலங்கு
தணிகாசலம் புரந்த பெரியோனே

தளிராக மங்கள் கொண்ட முனிவோர் வணங்கு பண்பை
தலைநாக மர்ந்த வன்பர் பெருமாளே.

தனனா தனன தந்த
தனனா தனன தந்த
தனனா தனன தந்த தன தான

793. உனையே சரணடைந்த வெளியே னெனது சிந்தை
உலைவாய் கடமெலிந்த மிடியூடு

உறைவாய் பிணி வருந்த வருநோ விடை தளர்ந்து
உடைவாய் தினமு மஞ்சி யயர்வேனோ

அனையே நிகர நின்ற மன தோடுலவு கின்ற
அருளே வளரு மெங்கள் முருகோனே

அழகார் மலைசை சிந்து நகரூ டிலக நின்று
அடியாரிடர் களைந்த வொருதேவா

பனைபோ லெழிலு யர்ந்த கர சேவகனி டைஞ்சல்
பவ வாதனை நொதுங்க வருதீரன்

பகரோமி னிலெ ழுந்த உகரான வன் முகுந்து
பரி பூரண சுகந்த மணிமார்பன்

முனையாகவு மடைந்த குக சாதனை யடைந்த
முனிவோரிட மடைந்த செகநாதா

முதி ராகம முழங்கு திருநாகமும் விளங்க
முடிமே லொளிர நின்ற பெருமாளே.

தனந்த தனதன
தனந்த தனதன
தனந்த தனதன தன தான

794. இடைஞ் சலற வருள் புரிந்து வருபர
இலங்கு குருபர முருகோனே

எனைந்து புலமுன தறஞ்செய் பதமிசை
யிருந்து வருநிலை யறியாயா

கடைந்த வெணையகம் நுழைந்து திருடெழில்
கனிந்த வொருமுகில் மருகோனே

கவிழ்ந்த திணைகுரல் அருந்தி கிளியினை
கடிந்த குறமகள் மணவாளா

அடைந்த வடியவர் தவங்கள் பலபெற
அமர்ந்த பழனியி லுறைவோனே

அருந்த பவவினை வருந்து பிணிமிடி
அணிமந்த வுணவென பலகாலும்

இடைந்து பூதமலர் சிறந்த துணையென
இரங்கு முனமல திசையாது

இருந்து வருவது உயர்ந்த நிலையருள்
இறைஞ்சு திருமலை பெருமாளே.

தனதன தத்தத் தனந்த தானன
தனதன தத்தத் தனந்த தானன
தனதன தத்தத் தனந்த தானன தன தான

**795.** உருகிய பத்தற் கிரங்கு தாரக
குருபர சத்திக் குகந்த பாலக
வொளிர் வளரற்பிற் கெழுந்த தேவர்க ளுடையோனே

உலகமை வித்திற் கமைந்த நாயக
பலகலை கற்றற் குயர்ந்த மேலவ
உரைத ருமுத்திற் சிறந்த பேருயர் முருகோனே

பெருகு தடத்திற் குளிர்ந்த வாளைகள்
கமுகி னிடத்திற் செறிந்த பாளையில்
பிதிரவு திர்த்துச் சொரிந்து தாவிய வயலூரா

பெரியத வத்திற் கிடைஞ்ச லேபுரி
பவர்கள் குலத்தைப் பிளந்து தூயவர்
பெருமைய கத்திற் புகுந்து ளேவள ரொருதேவா

குருகு கழுத்திற் கிடந்த மாமணி
அரியினி டத்திற் பிறந்த மாமணி
குழூறு வளைக்கட்டு ளைந்த மாமணி பலதோடு

கொழுவி விருக்கச் சிறந்த தாகிய
மலைவள முற்றப் பிறங்கு நாடுயர்
குறவர் குலத்திற் புரந்த தாகிய வளிமாதை

மருவு புயத்திற் கணிந்த மாமத
அருமை படைத்தற் கெழுந்த சேவக
வளைதொடு வித்தற் கிணங்கு வோனென உலகோது

மகிப புரத்தற் கிசைந்து நீதயை
தருகவி ருப்பத் திருந்து காதிரு
மலைசிக ரத்திற் றுலங்கு தேவர்கள் பெருமாளே.

தானன தனத்த தந்தந்
தானன தனத்த தந்தந்
தானன தனத்த தந்தந் தன தான

**796.** பாதக பவத்தி லொன்றும் காயம தனைத்து நொந்தும்
பாடிய புகழ்க் கிணங்குந் தாமான

பாதக மலத்தை யென்றன் சீர்சிர மிருத்தி பண்டின்
பாதக மலத்தை கொன்றிங் கருடாராய்

காதக குலத்தை யன்றுன் பேரயில் விடுத்த ருந்துங்
காலர் களெடுக்க வுந்துஞ் செகவீரா

காமனை நிகர்த்த சந்தம் சூடிய தாத்த னந்தங்
காரண வளிக்கு கந்தம் புயவேளே

பூதகர் புறத்தி லங்குங் கோமள மிகுத்த பண்பின்
போதக திருத்த மிஞ்சுஞ் சிகிவீர

பூவல நடத்தி யன்றங் கேய்கனி விருப்ப மொன்றும்
பூரண நலத்தி யங்குந் தகையாளா

சாதக தவத்த ரன்பின் பேரர சிருக்கு மென்றன்
ருயக மனத்த குன்றின் குடிவாழ்வே

தாமரை யிடத்தி லங்கும் பூமகள் பொருப்பி னின்றந்
தாலம தளிக்கு மின்பொன் பெருமாளே.

தனத் தத்த தான
தனத் தத்த தான
தனத் தத்த தான தன தான

797. கடைப்பற்றி னேடு முனைப்பற்று நேயர்
கடப்பற்றி லேறி விளையாடி

கறைப்பற்று ளான பவப்பற்ற தோட
கதிர்ப்பற்று லாவ வருவோனே

சடைப்பற்று ளோனை மறைப்பற்று தேரு
தரப்பற்ற ளுக வருள்வோனே

தவப்பற்றி லாரை பிறப்புற்ற நேக
சலப்பற்றி லோய விடுவோனே

விடைப்பற்று நாத சுதப்பற்று ளாதி
மிளிர்ப்பற்று வேலை யுடையோனே

வினைப்பற்றி னேழை திடப்பற்றி லாத
விதிப்பற்று ளேனு மெளியேனை

தடைப்பற்றி லாத மனப்பற்றி னேடு
சகப்பற்று தீர வரவேணும்

தளிர்ப்பதற்று சோலை வளைப்பற்று ஞுக
தளிப்பற்றுண் மேவு பெருமாளே.

தந்தன தான தந்த
தந்தன தான தந்த
தந்தன தான தந்த தன தான

798. நஞ்செசன லான பெண்க ளன்புற வான பண்பை
நம்பிய நேயர் தங்க ளுறவாகா
நம்படி யார்க ளன்பு தங்களை வாணர் தங்கள்
நன்பத சேவை யின்ப மருள்வாயே
அஞ்சிட வேதை தந்து பங்கம தாக வொன்று
தொன்பவ மாய்கை யின்க ணுழல்வேனை
தொண்டிடையே புரந்து அன்யருள் சேம துங்க
சுந்தரமார் முகுந்தன் மருகோனே
கொஞ்சுத லோடமைந்த புன்குற மாதமைந்த
குஞ்சர மாதணைந்த முருகோனே
குண்டுணி கோள்க ளஞ்சு வன்சொலி ஞாடங்க
கொன்றயி லேவி நின்ற வொருவீரா
மஞ்சளை யாள வென்று செம்பத மீய வந்து
வஞ்சக மேது மின்றி யருடாராய்
வண்டிரு நாகமர்ந்து அன்பர்க ளோடுயர்ந்த
மன்பொரு ளீயநின்ற பெருமாளே.

தந்த தனனு தனன
தந்த தனனு தனன
தந்த தனனு தனன தன தான

799. நெஞ்செரிவி னோடுளைவு வந்தபிணி யானவிய
நின்று விளையாடி வரு பலநோவால்
நின்சரணமே பரவு கின்ற வெளியே னெனது
நிந்தை பிணியே வொழியு மருடாராய்
அஞ்சலருள் வாய் குமர தஞ்ச முருகா மலையில்
அங்கயல்க ளுள்வளியின் மணவாளா

அம்பிகை சுதா கழுகு தங்கு மலைமேலிலகு
அன்பமை குகா வரத முடையோனே

கஞ்சமல ரேயனைய பஞ்சணைய தாளினிய
கங்கரிமி ஞடமுவு மு நகோனே

கங்கை மதியோ டரவு கொண்ட சிவனர் மதலை
கந்த வரதா பழனி மலைவாழ்வே

மஞ்சி னிறைவே கமமு பொங்கர் பொழிலூ ரினிடை
வந்த பரமே யருமை யுடையோனே

மங்கை திருமாது மகிழ் கின்ற திருமா மலையில்
வண்கர விலாச முயர் பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

800. பொருள் வறுமையி லெனை கடமுடை படவடர்
பொருபவ வினையினி லுழல்வேனை

புனிதவ முடையவர் செலும் வழி மனமுற
புகழருள் தருததி வரவேணும்

மருள் மன முடையவ ரெனை யிகழ் பலமொழி
மருவுற விடுபவ ரறவீழ

வரவயில் விடுபர பலமுள குருபர
மகதவ முடையவ ரகவாழ்வே

தெருணட மிடுமுனி வரர்துதி பனுகிய
சிவனுதல் தரவரு மொருவீரா

செறி குழலுமை யவள் பயிரவி பகவதி
திரிபுரை குமரித னருள்பாலா

தருநிரை மிகமலி பொழிலில வியநகர்
சரவண பவனென வுலகோது

தமிழரு ளியகுக திருமலை முடிமிசை
தனதனை நிகரிய பெருமாளே

தனத்த தன தான தன
தனத்த தன தான தன
தனத்த தன தான தன தன தான

801. உருக்க மிகலான வினை தனக்கு நிகரான குக
உளத்தி னிறை வானபர முருகோனே
உமைப் புதல்வனே குமர அருட் பகவனே பழனி
யுதித்த சிவமே கழுகு மலைவேளே
அருக்கனி கரான வயில் பிடித்த கரனே மதுரம்
அமைத்த மொழி யாளனெனு மயில்வீரா
அறத்தி சிவகாமி யுமை பரைச்சிய பிராமி யென
தகத்தி னிறைவாகி வள ரெமதாயி
தருக்க மிடுவோர் களுடல் பகுத்த திரி சூலமுள
சகத்தி கவுமாரி யெழில் மகதேவி
தவத்தில் வருவோ யமரர் தழைக்க வருவோ யினிய
தமிட்கு முதல்வா கரியின் மணவாளா
பெருக்க மிகவேறி வளர் பொழிற் குளுயர் வானநகர்
பிறக்க வருவோய மரர் பெருவாழ்வே
பிணைத்த மலர் மாலையணி திருக்கு வடுலாச பர
பிழைக்க வருள் மேவி வளர் பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

802. மன மேறி நின்று விளையாடு கின்ற
மகிபா குறிஞ்சி யுடையோனே
மதியாத வஞ்ச முடையோர்கள் நெஞ்சு
வரையே பிளந்த முறைபோலும்
தனமா யரிந்து விடவேலை கொண்ட
சதுரா யிலஞ்சி நகர்வாழ்வே
தன தான தந்த வென நாடகஞ் செய்
தலைவா பொதும்பு ருடையோனே

அன மேவு கின்ற தட மேவு பண்பை
யாசே நலங்கொ ளபிராமி
அழகான மைந்த யெனை யாளு கின்ற
அருளை வழங்க வரவேணும்
தினைமேவு புன்செய் தனையே புரந்து
தினமேவி நின்ற வளிமாது
திகையா தணைந்த வொருதேவ கந்த
திருநாக மர்ந்த பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

**803.** கங்கை பாலவ ரோதய பூரண
வெங்க ணாத குகாக ருணாகர
கந்ததேவ மயூர தராதல முடையோனே
கண்கொளா வெழின் மேவிய சேவக
தும்பி யானை பிறைல்வரு காரண
கம்பனேய மகா குருவாகிய முருகோனே
செங்கை வேல்கர னேகிரு பாகர
பங்க யாசன னோடுகை ரா முறை
சிந்த வோதிய பேரமே சுரி மணவாளா
சிந்து மாநக ராசன நாயக
பொங்கர் சூடிய மாநக ழ காசல
தென்றன் மேவிய மாதிரி கூடவின் வடமேல்பால்
தங்கும் யோசனையே யசையா யமர்
கின்ற மாபொழி லூரினிலே யுயர்
தண்ட யாளம காவுரு வாகிய வொருதேவா
தந்தி யோடரியே விளையாடுக
லங்கள் மேவிய நாடொடு மாமலை
தந்த மாவநதி மார் நதியால் விளை வளநாடா
மங்களா கீர வாரண நாதர்கள்
பங்கின் மேவிய வாநல சாதனை
வந்த பேரறி வாளர்க ளோடுறை பெருவாழ்வே

மஞ்சு சேர்தரு வால் நிறைவாகிய
பொங்கரூ டுறை மா திரு மாமலை
வண்பொனு லய நாவல மேலவர் பெருமாளே.

தந்ததன தான தந்த
தந்ததன தான தந்த
தந்ததன தான தந்த தன தான

**804.** சிந்தை மெலிவாகி நொந்து பந்த வினையூடு ழன்று
தின்று வர லான துன்ப வகையோடு
சென்டு நிகரா யெழுந்து பங்க வழியே ததும்பு
திண்டன மினார்க ளின்ப மாயூடு
நொந்த ழிய வோ தவஞ் செய் கின்ற வர்க ளோடி ணங்கு
நொன்ப தத யாள மென்ப தடைவேனோ
நுண்டுளிச தாவ ழங்கு கொண்டல் பொழிலூர மைந்த
நுண்டுகளி ஞலி லங்கு நுதல்வேளே
கந்த சிவ காமி யம்மை மங்கை பர மாயி யென்ற
கண்டு நிகரான செஞ்சொ லபிராமி
கந்தி பல மாவு தெங்கு தங்கு பொழி லூரு றைந்து
கம்ப மத யானை தந்த வொருதேவி
தந்த சிவ பால னெந்தனன்பி னுறைவா யமைந்த
சங்கரி மகா முகுந்தன் மருகோனே
தண்ட மிழி னுரி றைந்த பண்பை மலை மேலி லங்கு
சந்தன புயா வயங் கொள் பெருமாளே.

தந்த தனதான தந்த
தந்த தனதான தந்த
தந்த தனதான தந்த தன தான

**805.** துன்ப பவ வாழ்வி லொன்று கின்ற வெளியே னின்ன்பு
தொரந்த முறவே வுனன்பு தரவேணும்
துஞ்சு மிடி யால் நலிந்து நொந்த ழியவோ இடைஞ்சல்
துண்டு படவோயி தொன்றும் அறியேனே
என்புருக லாக வந்து மண்டு மிடி யாலு ளைந்து
என்றொ ழியுமோ பவங்க ளெனலோடு

இஞ்சி தின லான மந்தி யென்ற விதமேய லைந்து
இண்டில் தலையே புகுந்த படியாக

வன்பிணி யினுலு முந்தை பந்த வினையாலும் நொந்து
மங்கி விடவோ கரைந்து வுழல்வேனோ

வன்குறவர் மாதணைந்த சந்த மருமா செயந்தி
மண்டல மெலா நிறைந்த முருகோனே

உன்பணி சதா புரிந்து வந்த வெளியே னிரங்கி
உன்ற னருளால் புரந்து மிடிதீர

வொன்று மனதோடு வந்து நன்றி யருள் சேமதுங்க
உம்பர் திருநாக மர்ந்த பெருமானே.

தந்த தானன தானன தந்தன
தந்த தானன தானன தந்தன
தந்த தானன தானன தந்தன தன தான

806. வந்த வாதை யினுலெளி யேன்படு
புன்கணோ வொடுநீள் மிடி சாம்பிணி
மன்ற வோட விடேனென லாஞ்சொலி னடைவோடு

மண்டு தேயிதை யாரிடை யான்சொல
கந்த தேவவ ரோதய வான்கரி
மங்கை நாயக தாயக பூம்பொழி லுடையோனே

எந்த வேளையு மேவுனை யான்றுதி
கொண்ட நேர்மை யினேனெளி யேன்றனை
இன்ப வாழ்வினி லேவுற வீண்டருள் புரிவாயே

இந்து சூடிய தேசிக னேஞ் சொலி
னொன்று நேர் பொருளே பெறவோர்ந் தவை
இஞ்ச வோதிய போதக சாந்தணி எழின்மார்பா

மந்த மாருதம் வீசிய தேன்பொழில்
கந்தி மாபல வோடமு காம்புனை
வண்செய் வாழைகள் பாளைகள் தேங்கொடு பலபாலும்

மஞ்சு லாவிட மாமயி லாண்டமை
வுண்டு நாடக மாடிட பூங்குயில்
வண்டு கூவிடுமீ மென வேய்ந்துள் வளநாடா

சொந்த மாமது ராபுரி யாண்டவ
இந்தி ராதிய ரோடிகல் போம்படி
துஞ்ச வீசிய மாவளை யேந்திய வொருமாறு

துன்ப வாசக மோதிய தாந்தனை
எனறி லாளுவை யோயிதை யீங்குரை
தொண்டர் சேர் திருமாமலை யாண்டருள் பெருமாளே

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

807. மிடி யால லைந்து பிணியால் வருந்தி
மெலி வேனை யுந்த னருளாலே

வினைபோக வென்று வுரையே வழங்கி
மிருதார் பதங்கள் தரவேணும்

கடியாரு கொன்றை முடிமீத ணைந்து
கயிலாச மென்ற மலைமீது

கதிராக நின்று வுலகேழ் புரந்து
கறை யேறு கண்ட னைனமேலோடு

துடிமீறு கங்கை தலைமேல ணிந்து
சுடராக நின்ற வொருதீரன்

சுதனை குறிஞ்சி மலைநாடு கொண்ட
சுமுகா செயந்தி வளைவாழ்வே

படிமீது பண்பை நகராளு கின்ற
பகவாமு குந்தன் மருகோனே

பகர் மாலி ணங்கு திருமேவு கின்ற
பதிநாக மர்ந்த பெருமாளே.

தந்த தன தன
தந்த தன தன
தந்த தன தன தன தான

808. அஞ்சலென வொரு செஞ்சொன் மொழிதரும்
அன்பு வுனதிட மிலைபோலும்

அண்டியெ வரிடை சென்று மொழி குவல்
அங்க ணுல குயர் முருகோனே

மஞ்ச னென வெனை யன்பின ருள்புரி
மங்கை குற மகள் மணவாளா

வஞ்சி நிகரிடை தந்தி தரு மகள்
வம்பு பனுகிய குழல்மாது

கொஞ்சவ வளொடு மின்ப மருவிய
கொண்க குருபர வாதீபா

கும்ப முனி வரர் பண்பி னுயர் வுற
கொண்ட ரகசிய முறைகூறும்

அஞ்சொ லுடையவ தஞ்சமுன திணை
அம்பொனி கரிய பதமீவாய்

அண்டு பவர் துயர் விண்டு விட வரு
ளன்ப திருமலை பெருமாளே.

தனத்த தனதன
தனத்த தனதன
தனத்த தனதன தன தான

809. இரக்க முனதக வுருக்க மிலையிலை
இதற்கு யெவரிட முறையோதி

எனக்கு னருடர வுரைக்க விடுவது
இனத்த தமிழ்மொழி யுடையோனே

தரத்தி லுயரியர் தனத்தி லுயரியர்
தமக்கு வருடர வருவோனே

தவத்தர் புகழறு முகத்த குருபர
தழைத்த சிகியுறை முருகோனே

வரத்தி னிலவிய முனிக்கு முறைதரு
மனத்த வினியவ னெனலான

வணத்த தகர்மிசை யிருக்கு மொருமுதல்
மதித்து வருபவ ரகவாழ்வே

திரத்தி னெளிபடர் தரத்தி னவிர்தரு
திருத்த புவிதரு வுறைவாகி

செழித்த திருமலை வுயர்த்த குடுமியில்
செகத்தர் பணிவுறு பெருமாளே.

தனத் தன தனத்த
தனத் தன தனத்த
தனத் தன தனத்த தன தான

810. பதிப்பவ ருளத்தி விருப்பவ வெனக்கு
பகைப்பிணி யொதுக்க வருவோனே

பருப்பத மெடுத்த தசத்தலை யசுரர்க்கு
பலத்தினை யளித்த வொருவீரன்

மதித்திடு மகர்க்கு பொருட்டெளி வளித்த
மகத்துவ மிகுத்த பெரியோனே

வனக்குற மகட்கு திருப்புய மளித்த
வனக்கரி மகட்கு மணவாளா

திதித்திடு மொழிச்சி சிறுத்திடு மிடைச்சி
சிவத்துரை யிடத்தி லுறைதேவி

சிரித்தக மகிழ்ச்சி யுறக்கர மணைத்து
திருச்சுத னெனச்சொல் பெறுவோனே

கதிக்கர செனச்சொல் குகப்பர வெனக்கு
கதிர்ப்பத மளிக்க வரவேணும்

கனிப்பொழி லுடுத்த திருப்பொலி மலைக்கு
கதிர்க்கெழின் மிகுத்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

811. மனைமாட தென்ற பொருள்தேடி நின்று
மனமாழ்க வொன்று மெளியேனும்

மயில்மேலிருந்து வுலகாளுகின்ற
மகிபாவு னன்னை யடைவேனோ-

எனையாளுகின்ற வகையேதுமின்றி
யிதுகாறு முந்த னடிபேண

இசையாத சிந்தை முழுமூட னென்று
இகழ் வீணி னின்ற கொடியேனை

தனை யான மைந்த னென லோடு வந்து
தன தாண லங்கள் தருவாயோ

தருவே செறிந்த மலை மேவி லங்கு
தலைவா குறிஞ்சி யுடையோனே

தினை மேவி நின்று புன மேவி நின்று
தினைமா வளர்ந்த குறமாது

திருமார் பிலங்க வுடன் மேவி நின்ற
திருநாக மர்ந்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

812. செகநாத கந்த முருகா குறிஞ்சி
செறிநாக மர்ந்து விளையாடி

தினை காவல் கொண்ட வொருமா திணங்க
தின மேவு கின்ற மணவாளா

அகமேவ வென்ற மறவாத சிந்தை
அடியா ரகங்கள் தனியாக

அமைவோ யறங்கள் புரிவாரி டைஞ்சல்
அறவோத நின்ற பெருவாழ்வே

குகதேவ செந்தில் நகராளு கின்ற
குறவா வணங்க வருவோர்கள்

குணமோ டிலங்க அருளே விளங்க
குருவாக வந்து உபதேசம்

மிகவோதி யின்பம் அருள்வோ யிலஞ்சி
மிளிர்ந் சேம கந்த முருகோனே

மிடி தீரு மன்பு தருநாத பண்பை
விரை நாக மர்ந்த பெருமாளே.

தானா தனந்த
தானா தனந்த
தானா தனந்த தன தான

**813.** மேலான கந்த நாதா வுனன்பு
மேவாத தெந்த வகையாலோ

மேலேறு கின்ற மாசோதி மைந்த
மீதான முஞ்செய் பெரியோனே

பாலான செஞ்சொ லாளா சிவீந்த
பாதா ரவிந்த முடையோனே

பாழாக வென்று மூவா தெழுந்த
பாலூழி னின்று மயல்மூழ்கி

சேலார நஞ்சு வாயார வுண்டு
சேதார மண்டு பகைபோல

தீயேனை முந்தை பாவாதி வந்து
சேராவி தின்று விடுகாமுன்

ஆலால முண்ட ஞாலாதி தந்த
ஆனேறு கின்ற சிவநாதர்

ஆதார மைந்த காவாநல் பண்பை
ஆரோர் நகங்கொள் பெருமானே.

தனத்த தனதன
தனத்த தனதன
தனத்த தனதன தன தான

**814.** இடுக்க ணறவொரு முடுங்கு மயின்மிசை
யிருக்கு மறுமுக வரவேணும்

இமைப்பி லமரர்க டுதிக்கு மொருபரை
எனக்கும் அனையென வுலகோதும்

உடுக்கு நிகரிய விடைச்சி பயிரவி
யொருத்தி திரிபுரை மகமாயி

உவப்பி லெழுகரு முகிற்கு மிளையவள்
உரைக்கு மறைவழி அகராதி

நடுக்க னுறைபவள் பரைச்சி சிவனுறை
நகத்தி லமைபவ ளமதாயி

நலத்தி திருமடி யிடத்தி லகமகிழ்
நடத்தி பகவதி பலகாலும்

ஒடுக்கி மனநிலை திருத்தி யுறுதவம்
உதித்த சுதனெனு முருகோனே

உளத்தி லெனைநினை அருட்பெய் குருபர
உயர்த்த திருமலை பெருமாளே.

தந்தன தனதன
தந்தன தனதன
தந்தன தனதன தன தான

**815.** மங்கல மருவிய செம்பத மருளென
வந்தனை புரிவதை யறியாயா

வண்டொடர் குழல்வளி பங்கினி லுறையிறை
மந்திர குருபர முருகோனே

பங்கய பதமல ரன்புடை யவர்பெற
பண்புட னுதவிய செகநாதா

பண்டரி புரமுறை விண்டு வினிளையவள்
பண்புய ரியமலை மகள்மாது

தங்கிய பொழிலக ரின்குட மிளிரிய
தண்டலை பலுகிய மலைநாடா

சம்புவு மொருமுறை கும்பிட வகர்பொரு
டந்தவ னெனவுல கினிதோது

செங்கர வயிலணி கொங்கவிர் தருபுய
சிந்துர மிலகிய நுதலாளா

சிந்தனை பணுபவ ரின்றுயரற வருள்
திண்டிரு மலைவளர் பெருமாளே.

தந்தா தனந்த தன
தந்தா தனந்த தன
தந்தா தனந்த தன தன தான

**816.** கந்தாவெனன் பினுறை கின்றோ ரிலஞ்சிநகர்
கண்டே பதம்பணியு மடியார்கள்

கண்டாக நின்றுவா மிந்தாவெனுஞ் சொல்தரு
கந்தாரகஞ் செறியு முருகோனே

செந்தா துதிர்ந்துதுளி தந்தே வளங்கனிறை
செந்தூரிடந்தனையு மொருவேளே

சிந்தாகுலம் பொடிய வந்தேவு னன்பையருள்
செஞ்சேவ லின்றுவச முடையோனே

பந்தாடுகின்ற தனம் வண்டாடுகின்ற குழல்
பண்பாடு கின்றமொழி மடமாதர்

பங்கேறி நின்றமய லென்றே யொழிந்துவுயர்
பண்பா ரகங்குழைய வுனையோதி

வந்தேபதம் பெறுவன் மன்றாடி யென்றசிவ
மைந்தா பரங்கிரியை யுடையோனே

மஞ்சாடுகின்ற பொழில் விண்டாலமும் பரவு
மங்காத பண்பைமலை பெருமானே.

தனந் தனந் தனதன
தனந் தனந் தனதன
தனந் தனந் தனதன தன தான

817. உளங்கனிந் தொழுகிய பழந்தருந் திருமறை
உணர்ந்திடும் பெரியவ ரகவாழ்வே

உடைந்திடுங் கடமென வடர்ந்திடும் பவவினை
யொழிந்திடும் படிமயில் மிசையேறி

வளந்தருந் திருவுளம் இசைந்திருந் தினிதமை
வரந்தருஞ் செயல்தர வரவேணும்

மதந்தருஞ் சிறியவ ரிடஞ்செலும் பவவினை
வளர்ந்திடும் செயல்புரி கிறதேவா

தளஞ்செறிந் திடுமசர் கலங்கிடுங் குலமற
சமைந்திடுந் திடவயி லினையேவி

சவந்திரண் டிடுதிற லுயர்ந்திடும் படிபுரி
தரத்திருந்திய குக செகவீரா

கனங்கொளுங் கனறமிட றுகந்தவன் சுதவிதி
கனம்பெறும் புகழ்மறை புகல்வோனே

கவிழ்ந்தெழும் பொழில்வள மிகுந்திடுந் திருமலை
கணின்சிவம் பெருகிய பெருமாளே

தனந் தான தானதன
தனந் தான தானதன
தனந் தான தானதன தன தான

**818.** இடம்பாடி லாது துயர் விடம்பாடி லேவுழல
யிருந்தேசதாவிடரி னிடைமூழ்கி
இசைந்தாட லானபவ முனைந்தே வராதடடி
இழிந்தோர் சிநேகமற வரவேணும்
தடஞ்சேவ காகுமர நலஞ்சேர் தயாளபர
தவந்தோர் மகாகவன ரகவாழ்வே
சகங் காரணு வெளிய னகம் போதிலே மிளிரு
தரம் பூரண மகிமை யுடையோனே
அடங்காத தான துய ருழந்தே னையோ யிதனை
அறிந்தோ ரொணுபுகல வறியேனே
அமைந்தே னுனலடிமை மறந்தா யெனுதருளை
அளந்தீகுவாய் தரும முருகோனே
மடங்காத தானவர்க ளுடைந்தோட வேயவர்கள்
வரந்தாழவே அயிலை விடுவோனே
மகிழ்ந்தேறி யேவுரிமை புரிந்தோட லானதிரு
வதிந்தார்வ மாமலையுள் பெருமாளே.

தந்தனந் தந்த தன
தந்தனந் தந்த தன
தந்தனந் தந்த தன தன தான

**819.** மஞ்சினந் தங்கு பொழில் வண்டி னங்கிண் டுமலர்
வண் பழந் தொங்கு சினை பலவோடு
மண்டடர்ந் தெங்கு முயர் கின்ற பொன் சந்து விரை
வந்திடுந் தொங்கு கமு கிலவாதி
தஞ்ச மென்றன் பினொடு வந்துறைந் திங்கு நிலை
தங்க லென்றிம் பருல கினிதோதும்

தண்டலங் கொண்டவளமுண்டெழும் பண்பைநகர்
தங்கிடுங் கந்த குக முருகோனே

அஞ்சல் தந்தின்ப மருள் பைம் புனந் தங்கு வளி
அன்பு கொண் டென்று மிளிர் மணவாளா

அன்றுமின் றென்று முள நின்றிலங் குங் குமர
அந்தணன் றந்த விதி பலநோவும்

துஞ்சவும் பந்தவினை யஞ்சவுஞ் செஞ்சரண
தொண்டு தந்தென் றனையு னருளோடு

துன்றி நின்றி ன்றருள் செய் பண்பை பொன்குன்றி லுறை
சுந்தரந் தங்கு சிவ பெருமாளே.

தந்த தன தானத் தான
தந்த தன தானத் தான
தந்த தன தானத் தான தன தான

820. பந்தவினை தூரத் தேக வந்தமிடி யோடிப் போக
பண்பு பெறவே நற் சேமம் அருள்வோனே

பங்குறு மயூரச் சேவல் கொண்டவ நியாயத் தோடு
பண்பொழி வினையக்கார முருகோனே

கந்தகுக வோமிற்சேர நின்றபொரு ளுதற்கோது
கந்தர சுவாமிக் கோடி லுறைவோனே

கங்கை பரை தேவர்க் கான யின் பருள் விசாலத் தோகை
கந்தி கமழ காதிச் சாதி நிறையூரில்

வந்தவற மாதுற் றோரின் முந்தை வினை போதற் கான
மங்கை யெனை யாளற் கான மலைமாது

மைந்த தய வாயிப் போது வந்து ரிமை யாகித் தூய
மன்பத தயாளத் தானம் அருள்வாயே

தந்தி முக நாதற் கான தம்பி குற மாதைச் சேரு
தண்புயகு மாரத் தேவ வரதீபா

தண் சுனையுளே நற்போது பொன் புயமதே யுற்றார்பு
தங்கு திரு நாகத் தேறு பெருமாளே.

தான தன தந்தா
தான தன தந்தா
தான தன தந்தா தன தான

821. ஊடு ருகு மன்பே பாட லெழு பண்பே
வோது பவ ரின்பே எனலான

ஊமைமொழி தந்தே சாரகர முந்தோர்
ஓமெனு விளைந்தே யதனோடு

நாடு மகாந்தோய் தாரக விருந்தே
நரியக சிறந்தோ ரகவாழ்வே

ஞால மிசை வந்தோர் பாவ மாதரித் தோய்
நாடி யெனை யஞ்சே லெனவோதி

ஆடு மயில் நின்றே காண வருகின்றாய்
ஆர முதமுண்டே பலநாளும்

ஆளடிமை கொண்டோய் பாதமலர் தந்தாள்
ஆணவமி குந்தோ ரிடமேவா

தேடுமலர் கொண்டே தார்புய மணிந்தோய்
யீசனருள் மைந்தா முருகோனே

ஏழுலக ளந்தோன் மாமனை யிருந்தாள்
ஏர் திருநகஞ்சேர் பெருமாளே.

தனந் தனந் தனதன
தனந் தனந் தனதன
தனந் தனந் தனதன தன தான

822. உளங்கனிந் தொழுகிய மனஞ் சிறந்தமைபவ
ருயர்ந்திடும் படியருள் புரிவோனே

உறும் பவம் பொடிபட மகிழ்ந் தெழுஞ் சிகிமிசை
உறைந்திடுங் குருபர முருகோனே

வளங் கெழும் பொழிலக ரிடங் கொளுந் தளியினில்
வளர்ந்திடும் சிவபரை மகமாயி

வரங்கெழும் பயிரவி தவந் திரண்டிடுமருள்
மகம் புரிந்திடுபவ ளொமதாயி

குழந்தை செம்பொழில்களு மிகுந்துயர்ந் திடுதலை
கொளுந் தரஞ் செறிவுறு வயலூரா
குணந்தருங் கணபதி மகிழ்ந்தகஞ் செறிதுணை
குமைந்திடும் பவவினை யெனலாக
வளர்ந்திடும் பழனியி னிறைந்திடும் பெரியவ
மனந்தளர்ந் திதுவரை யெளியேனும்
வருந்திறந் தெரிகிலை வுணர்ந் துணர்ந் தினிதருள்
மணந்தருந் திருமலை பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

823. மிடியாலு லைந்து படி வாழ்வி லொன்றி
மெலி வேனை பந்த மயலோடு
விதி சார மென்ற நவ கோளி டைஞ்சல்
மிக மேவ னைந்து தடுமாறி
மடியா லெழுந்த கொடியோர் கடங்கள்
மனை மேவி நின்று புகழ்கூற
மதியா திருந்த படியா வினைந்து
மதி மாழ்கி யஞ்சி யயர்வேனை
கடியாரு கொன்றை முடிமேல ணிந்து
கமழீசர் தந்த முருகோனே
கனகா குறிஞ்சி அரசே யிலஞ்சி
கதிர்காம வெங்கள் வரதீபா
விடியா திருந்து யிருளோடு டைந்து
வினைபாவ துன்ப முறுவாழ்வின்
விதிபோக வஞ்சல் தருவீய்நல் பண்ணை
மிளிர்நாகம் நின்ற பெருமாளே.

தனத்த தன தான தன
தனத்த தன தான தன
தனத்த தன தான தன தன தான

824. உருக்குகிற தேன்வினைகள் நறுக்குகிற தேமிடிகள்
உலர்த்துகிறதே பிணிகள் ஞனலோடு

வொருக்க வருதே பகைகள் பொறுக்க முடியாத துயர்
உயிர்க்கு வெம காலனென வரலாலே

இருக்க முடியாது கடமொழிக்க வருவாய் கருணை
இறைப்பர தயாளமுள முருகோனே

எனக்கு யிதுகாறு மருள் கொடுக்க மனமேவ விலை
யெனைப் புரவெனு வெவர்க ளிடமேவி

அருட்செ யெனவே பகரு தரத்தி றமிலேனுனது
அணிச்ச ரணிமேல படியு மருடாராய்

அருக்களிகராக வெழு திறத்தயி னுளாய் குமர
அணிச்ச நிகரான பத குறமாதை

திருத்தி யுறவே மருமமுறத்தழுவியே புனித
சிகிக்க னுறவாயமரு முருகோனே

திருப்பொழி லுளான நகர் குடக்கி னுயர்வாக வளர்
திருப்பொலி மகா மலையில் பெருமாளே.

தனத்த தனத்த
தனத்த தனத்த
தனத்த தனத்த தன தான

825. வறுத்து நொறுக்கி யிடித்து யெடுத்து
மறுத்து வருத்து பவவாழ்வை

மயக்கி மயக்கி திடத்தை யடக்கி
வகுத்த துயர்க்கு ளுழல்வேனை

நறுத்த ணலர்த்து மரைப்பு நிகர்த்த
நரைக் கொள்பதத்தி னருளாலே

நகைக்க வெடுத்த பிறப்பை யொழித்து
நலத்தி னிலைக்கு மருடாராய்

சிறுத்த விடைச்சி பெருத்த தனத்தி
தெளித்த மொழிச்சி சிவகாமி

செகத்தை யளித்து புரக்கு மொருத்தி
திருத்து சுகத்த னெனலாகி

செறித்த வயிற்றை படைத்து புவிக்குள்
திறத்தை நிறுத்து முருகோனே

செழிப்பு மிகுத்த பொழிற்செய் வளைத்த
திருச்செய் குவட்டில் பெருமாளே.

தனனு தனத்த
தனனு தனத்த
தனனு தனத்த தன தான

**826.** பிறவா திருக்கு நெறிமேவு பத்தி
பிரியா வரத்தை யருள்வாயே

பிரகாச முற்ற வயில்வேல் பிடித்த
பெரியோய் கரிக்கு மிளையோனே

மறமாது பெற்ற கொடியோர் குலத்தை
வரையோ டழித்த வொருவீரர்

மலைராயனுக்கு மகளா யுதித்த
மலைமாது பெற்ற முருகோனே

கறவா வினத்தர் பரிபால னத்தர்
கருதாயர் கட்கு மகளான

கனிவாய் படைத்த வொரு மாதினுக்கு
கணுகி பட்ச மறவாத

திறமோர் முகிற்கு மருகா குறிச்சி
செறி வேடர்கட்கு உறவான

செயமேல கலித்த வள்ளி மாதணைந்து
திருமேவு வெற்பில் பெருமாளே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

**827.** அறிவிலாதவமை மூடர்கள் மையை
பலவி ரோதமெனு பல வேதனை
அணுக வேபுரி பூவினி லேயெனை விதுகாறும்

அமைய வேவிட லான்மன மேதுய
ரிடையின் மூழ்கிய நாயினை பேயினை
அறமிலாதக வாழ்வினையே பெறு மடியேனை

தறிம காமுர டாகிய தோர்மர
கெடுவ லாமென வோதுறு பாவியை
சலன சீவியை கோவியை மாசொரு வடிவேனை

தழையு மார்வபொ னேசத மாமென
வுருகு காமியை நீதியி லாதுறை
சவமு தேவியை வீணனை நாளுமெ யுடையேனை

மறிய மாபிணி யாளனை நாடொறு
மினிய வாசக மூடுறை மாமன
வுறுமை யாளனை கோளனை நீயுன தருளாலே

மறுகி டாவிதி யேதர நீதயை
அருள்வை யோவல தாழ்நர கூடுறும்
வழியை யீவது வேமுறை யாமென விடுவாயே

குறிய வாமன ஞர்மரு காகுக
தரும காரண சேமத யாபர
குதலை மாமொழி பேசிய தாமென மகிழ்வாகும்

குணமொ டாதரி மாகிரு பாகர
குறமி னேடிய மாபுய தூயவ
குலவு வார்பொழில் சூழ்திரு மாமலை பெருமானே.

தனதன தனந்த
தனதன தனந்த
தனதன தனந்த தன தான

**828.** மருவார் களஞ்ச வருவீர அங்க
மகதேவ கந்த முருகோனே

வரை யாது தந்து புகழ் மேவ நின்ற
வராரா குறிஞ்சி நிலவாழ்வே

தருவாக நின்று வலகேழ் புரந்த
தயை ரூப மென்ற பெரியோனே

சருகாதி தின்று வுனைமேவு சிந்தை
தவ வேடர் தங்கள் மனமூடு

உருவாகி நின்று விளையாடு கின்ற
உயர்வே யெனன்பி லுறைவாயே

உமைமீதவி கொஞ்சி மகனே யெனுஞ் சொல்
உறவோது மெங்கள் குருநாதா
இருகாது தந்து மறையோத வென்று
இறையே பணிந்த முறையாக
இசையோ டறைந்த செகநாத பண்பை
எழிருக மார்ந்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**829.** அறமே செறிந்த குகநாத பண்பை
யரசே யெனன்பி னுறைதேவ
அவதாறு தந்த கொடியோர் களஞ்ச
அயில்மேலவு கின்ற பெரியோனே
இறமேவு கின்ற பவமூடு பந்த
மிடையே பதுங்கி யிதுநாளும்
எளியேன் வருந்த விதியோயி தென்று
இடைவேலை யெந்த வகையால்நீ
உறமேவி வந்து அருளே பிறங்கும்
உயர் தாள் நலங்கள் தருவாயோ
உனை யானடைந்த படி யானினைந்து
உலையாத துன்ப மிடிதீர
திறமான பைம்பொன் முறையாக மங்கள்
தெளிவோடிலங்க அருள்வாயே
திருவே செறிந்த மலைமேலு யார்ந்த
செகநாத கந்த பெருமாளே.

தனன தந்தன தன
தனன தந்தன தன
தனன தந்தன தன தன தான

**830.** உருகுளங் கனியினி லொழுகுறும் பெருநறை
உணவுறுந் தவவரி யெனலான

உறை பரன் சிவ னுதல் பொரி தருஞ் சுத னென
வுயர் வுறுங் குருபர முருகோனே

தருகுணங் கெழுமிய மனதுகந் தினிதருள்
சரு குணுந் தவமுனி வரோடு

சமய சஞ்சீவி யென நலம மைந்து லகினில்
தரும சிந்தனை மிகு மடியார்கள்

கருத வந்திடு குக வுமை சுதந்தரி சுத
கவன் வந்தண ரக முறைவாழ்வே

கமலை யின்புறு முகில் மருக செந்தி யிலுறை
கவி னிலங்கிய பர செகவீரா

திருநடம் புரியிறை பிரண வந்தரு பொருள்
தெளி வுறும் படி சொலு மெழில்வேளே

செழி வளம் பலுகிய பொழில் நிலந் தழுவிய
திருநகந் தனிலுறை பெருமாளே.

தத்தத் தனந்த தன
தத்தத் தனந்த தன
தத்தத் தனந்த தன தன தான

831. இத்தித் தெழுந்த கனி யிற்பட் டெழுந்த நறை
செக்கச் சிவந்த முத மெனலாகி

சித்தத் துறைந் துரிய அற்பிற் பிறங்கி வளர்
செப்புக் கிணங்கு தன வனமாதை

நத்தித் தெளிந்தகரி யச்சத் தணைந்தவள்த
னட்பைப் பொருந்து பர முருகோனே

நற் சத்தி மங்கை யுமை உச் சத்தி லங்கு பரை
நட்பிற் குகந்த சிவ னெனவோது

முத்திக் கெழுந்த வொளி வித்திற் கமைந்த மூலை
முற்பட் டுயர்ந்த மறை யுரை யோதி

முப்புச் செயுஞ் சரத வித்தைப் பெருஞ் சுருதி
முத்தைப் பகர்ந் தரிய பலநூல்கள்

சத்தைப் பிழிந்தி ரச வித்தைக் கொழுந்து மணி
தக்கச் செயுந்த கமை யருள்வாயே

தட்பம் பொருதும்பர் வளை வுட்பட் டிலங்கு திரு
தக்கற் கெழுந்த மலை பெருமாளே.

தந்தன தான தான
தந்தன தான தான
தந்தன தான தான தன தான

**832.** மந்திர நீறுபூசி வஞ்சுர மோட வீசி
மண்டம ணுதி மான வருவோனே
மங்கை பவானி தேவி யந்தரி வாலை காளி
மண்டற லோதி நீலி மகமாயி
சுந்தர மான வீரி சண்டிகை வாமி காமி
தொண் டுடையார் கணைய முளமாதா
துன்பவ வாதை போக வந்தவ ளாதி நாரி
துன்றிய சேம மேவு மெமதாயி
தந்தவ னுன பால கந்த சுவாமி நாத
தண்டமிழ் வாண னுன முருகோனே
சம்புவு மோமி லேறு வண்பத மேவ னுளில்
தந்தவ ஞான சோதி யெனலோடு
அந்தர தேவர் வாழ இந்திர னும பூர
வம்புற மேவு தேவ வரதீபா
அன்புடனே மைவாழ வந்தருள்வாய் குமார
அம்பொனி னுகை மேவு பெருமாளே.

தனந் தனந் தனந்த
தனந் தனந் தனந்த
தனந் தனந் தனந்த தன தான

**833** அலைந்தலைந் துழன்று மனந்தளர்ந் தழிந்து
அறும் பவந்துடர்ந்த மிடியாலும்
அனந்தரஞ் செறிந்து வருந்தவந் திடைந்த
அவந் தருங் கடங்கொள் பிணியாலும்
உலைந் துலைந் தெழுந்து பலஞ் சிதைந்துறைந்த
உடம்பிடம் பொலிந்த மயலாலும்

உலர்ந் துலர்ந் திடைஞ்சல் தருஞ் சினம் படர்ந்து
உளஞ் சிதைந் தொருங்க வராலாலும்
மலைந் தயர்ந்த தயர்ந்து வருந் திறந் தெரிந்து
வரந் தவம் பிறந்து அருள்வாயே
வளஞ்செறிந் திருண்ட விரும்புறுந் தலங்கள்
வளர்ந்திடுஞ் சிறந்த வயலூரா
அலைந் தெழுந் தரங்க மிகுந்திடுந் தடங்கள்
அனந் தவழ்ந்திலங்கு பொழிலூரா
அமைந்த வன்பிரங்கி புரந்து நன்கிலங்கு
மகன்ற பொன்பிறங்கல் பெருமாளே.

தந்தன தன தன
தந்தன தன தன
தந்தன தன தன தன தான

834. மங்கல மருவிய சங்கரி பயிரவி
வண்டணி குழலுமை மகமாயி
வந்தனை புரிபவர் சிந்தையி லுறைபவள்
வண்டன மலைமக ளெனுமாது
பொங்கர வணிபவர் பங்கினி லுறைபவள்
பொன்பரை பகவதி யெமதாயி
புங்கமெ யுடையவள் எங்கினு முறைபவள்
புண்படர் பலவினை யறவேநீள்
கங்கை சரசுவதி துங்க குமரியென
கண்டு நிகர் வசன முனாதேவி
கந்த வருக வருள் அன்புதர வருக
கண்கொ ளெழில்வருக வெனவோது
செங்கை செறிகடக தண்டை யணிசரண
சிந்தை யடியரிட முடையோனே
செந்திநக ரதிப வந்துபத மருள்செய்
செம்பொனுல வுமலை பெருமாளே.

தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த
தனத்த தன தான தந்த தன தான

**835.** இரக்க முடனே யெழுந்து
வரத்தநிதி யிதாகு மென்று
எழிற் குமரனே பிறங்க வரவேணும்

இசைப் பகவனார் முனஞ்செய்
தவத்தி னுயர்வே குறிஞ்சி
இடத்துறை பராவெனன்பி னுறைதேவே

தரத்தி லெளியே னிடைஞ்சல்
பவத்துறை யுளே மிதந்து
தவித்து நலிவூ டினைந்து தடுமாறு

சளத்தி னிடையே மயங்க
விடுத்த லழகா நிறைந்த
சகப்பிரமமே மறஞ்செய் முறைதேரும்

அரக்கர் குலமே வொழிந்து
படக்கருதினோய் மகஞ்செய்
அகத்தர் குடிவாழ வந்த பெரியோனே

அமைக்கு நிகரா யெழுந்த
வளைக்கரமுளா னிலங்கை
அறப்பகையினால் நொறுங்கு துகளாக

குரக்கி னினமோ டெழுந்து
நிறத்த பல ராணுவங்கள்
குமைத்து வயமார் முகுந்து துணையான

குணத்தி மகமாயி தந்த
திருக்குக சதா விளங்கு
குடத்தில் திருமா நகங்கொள் பெருமாளே.

தான தனதன
தான தனதன
தான தனதன தன தான

**836.** மார்பு குறியென பார்வை யயிலென
மானு முறைபுரி மடமானார்

மாய்கை யிடையிடை தோயு மூளமற
வாழு மருடா வருவாயே

ஆர்வ மிகமலி கான குறமகள்
ஆளு மணிபுய முடையோனே

ஆடு மயின்மிசை யேறி வருகிற
ஆறுமுக பர குருநாதா

சீர்மை தழுவிய தான கணபதி
தேவ னிளையவ னெனலான

தீரமலி யயி லாதி யணிகர
தீப நிறமுக வொருவீரா

நேர்மை யுடனெனை யாள வருகதி
நேடு பதமல ரருள்வாயே

நீதி பதியென வோது திருமலை
நேச குருபர பெருமாளே.

தாந்தன தனதன
தாந்தன தனதன
தாந்தன தனதன தன தான

837. காண்படு பொருளுல காம்பல வுயிர் நிலை
காண்பவ னெனவுல கினிதோது

காங்கய குருபர வாம்பரி தகர்மிசை
காண்பெற வலம்வரு முருகோனே

மாண்பெறு மடியவ ராம்பல முனிவரர்
வாழ்ந்திடு மருடா வருவோனே

மாண்டவ ரலகிலை யூண்டிடு அவவழி
மாய்ந்திது வரையிலு மயன்மூழ்கி

தூண்டியிலமை கயல் நேர்ந்தென மதர்விழி
தூண்டிடு தனவெழின் மடமாதர்

சூழ்ந்திடு குழுநடு வாண் டடைகிற செயல்
தோய்ந்த வருடனக மகிழ்வாகி

வீண்படு மயல்தர வோய்ந்துள வடிமையும்
மேன்படு பதமலர் பெறுவேனோ

மீன்றலை மருவு செய் வான்றரு திருமலை
வேய்க்துள தனிவளர் பெருமாளே.

தான தான் தனத்தத்த தானனு
தான தான தனத்தத்த தானனு
தான தான தனத்தத்த தானனு தன தான

**838.** மாத ராசை மயக்கத்தி லேசதா
சேர நேரு மகப்பற்று ளோருளே
வாழ லான சகப்பற்றி லேறியே யிதுநாளும்

மாய வாழ்வி னிடப்பற்றி லேசுமா
வீழ லான தாரப்பற்று ளேனயோ
வாதை மேவு பவப்பற்றி லேவியா குலமேவி

சாத னேரு மனப்பற்ற ளுகியே
ஆய வாய்மை யினப்பற்றி லாமலே
சாரு கோப முறப்பற்று லாவியே பலகாலும்

தாழ்வி லாத தவப்பற்றி லேசெலா
நீசர் நேச குணப்பற்று ளோர்கள்பால்
தாழ வாழும் விடப்பற்றில் நாயினே னிற்றல்வேனு

நாத சோதி மலைப்பற்ற தேவனே
யீசை யாள வெனக்கற்பு தாமகா
ஞான வீர மறைப்பற்று ளானவா முருகோனே

நாளுங்கேடி புனைப் பற்றினேன்னினே
தானை யீவை மகப்பற்று ளானவா
நாரி வாமி உமைச்சத்தி காடுகா ளெனவோது

வேதமோது புகழ்ப் பற்றுளான சீர்
மாதுதேவி பெறப்பெற்ற வோர்சுதா
வீணிளை கழித்திட்ட பேயினே னெனலாக

வீடனீதி யிலைப்பட்பு தாயகா
வேடர்பேணு குறத்திக்கு நாயகா
மேலவா திருவெற்புற்ற சேமமார் பெருமாளே.

தனந்தா தனன
தனந்தா தனன
தனந்தா தனன தன தான

839. கனிந்தூ றுருகி நினைந்தோ ரறிவில்
கலந்தே வளரு முருகோனே
கரும்பே முனிவர் விருந்தே யடியர்
கணஞ்சேர் பழனி மலைவாழ்வே
மணிந்தோட ரவையணிந் தோனருண்ம
மகன்சேய் முருகு சொலுவோர்பால்
வருந்தா தருளை யுவந்தே யுதவ
வருந்தே வெமது குமரேசா
முனிந்தோர் மரபு துலங்கா தொழிய
முனிந்தாய் பெருமை யுடையோனே
முனின்றே தகரி லெழுந்தோய் கரிய
முகுந்தோன் மருக செகவீரா
குனிந்தார் பொழில்கள் வனைந்தார் நகர
குடஞ்சேர் மலையி லுயர்வான
குலஞ்சீர் தனியில் பலஞ்சேர் குமர
குகன் பேரமுத பெருமாளே.

தானதன தானதத்த
தானதன தானதத்த
தானதன தானதத்த தன தான

840. ஏழை துயருடிளைத்து நாளுமெலி வாயலுத்த
வீதை யெவர் பாலுரைக்க அறியேனே
ஈசர் குருநாத வெற்பை யாளு முருகேச வெற்றி
ஏறுமயிலேறு சப்ர மணியாநீள்
பீழையிடையே மதித்து மூடதுனி யானவித்து
பேதமுறவே வருத்து பிணியாலும்
பேதமை சதா கலிக்க மாமிடியினால் வெறுப்ப
பேசுபவ ராலுழைக்க விடலாலும்

சோழை மனமாக நித்த மேவுபவ வாதைகுற்ற
கூடழியவே குறைத்து வரலாலும்

கூறவரியாத சித்ர மாமயில் லேறியெற்கு
கோதொழிய வேயருட்செய் திடவேணும்

மாழைநிக ரார்கணிச்சி கானகுற மாதினுக்கு
மாதலைவனே குறிச்சி யுடையோனே

மான்றிரு மேவுபட்டை யூர்குடகிலே மிளிர்த்த
மாகமலை சேருவெற்பில் பெருமாளே

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

841. அருளா யெழுந்து வொளிவீசி யன்ப
ரகமே யிலங்கு பெருவாழ்வே

அடியேன் வருந்த முறையோ குறிஞ்சி
அரசே யெனன்பி லுறைதேவே

குருவாக வந்து உபதேச மெங்கள்
குலமே விளங்க அருள்வோனே

குமரா முகுந்தன் மருகா அறஞ்செய்
கொடிபோ லமைந்த இடைமாது

தருபால கந்த செகவீர துங்க
சரதா செயந்தி முருகோனே

சரணு ரவிந்த முடனே வழங்கு
தரமோ டெழுந்து வரவேணும்

திருநீ றணிந்து சுரமோட வென்ற
செயலே புரிந்த குருநாதா

செயமேவு கின்ற திருமா நகங்கொள்
செகமாற வெங்கள் பெருமாளே.

தனதன தந்தன
தனதன தந்தன
தனதன தந்தன தன தான

842. பயிரவி சுந்தரி குமரிப ரம்பரை
பணிபவ ரன்பினி லுறைதேவி

பகவதி யம்பிகை தருமி பயங்கரி
பரம சுதந்தரி கலியாணி

கயிலையி லெம்பரர் பரவ விளங்கிழை
கருணை நிறைந்தவ ளுமதாயி

கனிவுல கெங்கணு முளவுமை யந்தரி
கமைதழை கின்றவள் மகமாயி

செயிரறு மந்தணர் பிரியமு றும்பரை
திரிபுரை செண்பகி மலைமாது

தினிதவ மும்புரி முறையி லெழுந்தருள்
சிவசுத சந்தண மணிமார்பா

அயில்கர வன்பர்கள் பகையற வென்றவ
அருடர வந்தினி தருள்வாயே

அறுமுக பண்பொழில் குடவயின் மன்றிரு
அணிமலை தங்கிய பெருமாளே.

தனனு தன
தனனு தன
தனனு தன தன தான

843. சரணுகதி யுனையே யடை
தமியேனிடர் களைவாயே

சனகாதியர் தொழுமேலவ
தணிகாசல முறைவர்ழ்வே

பரன்மேவிய குறமாதனை
பகவாவயி லுடையோனே

பரசேவக கருணுகர
பரமேசுர முருகோனே

அரனேயென வடியாரகு
வாசேருக வதீபா
அணிசேர் பொழி னசுபாதிப
அரனூர்சுத னெனவோது
தாநாயக செக காரண
தலைவா பரை மகமாயி
தனையா மகிழ் திருமாமலை
தனில் மேல்வளர் பெருமாளே.

தாந்த தந்தன தன
தாந்த தந்தன தன
தாந்த தந்தன தன தன தான

844. தேன் கலங்கிய மொழி மான் கலங்கிய விழி
சேண் கலங்கிய மய லுடையோராய்
தீங்கரும்பிய குழல் மாங்கரும்பிய வுடல்
தேய்ந்தரும்பிய நடு வெனலோடு
கான்கலங்கிய விரைதான் கலங்கியவுடல்
காம்பருந்திய கர மடமாரூர்
காண் கலங்கிய வினைபோங் கலங்கிய முறை
காண்கவந் தினிதருள் புரிவாயே
வான்கலங்கிய பொழில் தேன்ற ரும்பிய மலர்
வாய்ந்தரும்பிய பல பலவோடு
மாண்டடர்ந் திடவளை வாண்டிலங்கிய நகர்
வாய்ந்தரும்பிய வரு ளுடையோனே
கூன்கரும்பியகைதை தாங் கரும்பிய நதி
கூர்ந்தரும்பிய செநெல் வயல்சூழும்
கோங்கரும்பிய மலை பாங்கமைந்துள திரு
கூர்ந்தரும்பிய நக பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

845. எனதுயி ருடல்வினை மனதொடு முனதடி
இறையென மருவுற விடலான

இசைவினை யறிகிலை யெனிலெவர் வயமுற
 யிதை வுரை தரமுறை யறிவேனே
இனமறை ரகசிய முடிநட மிடுகுக
 இமையவர் பணிபுரி முருகோனே
எழினிறை வுறுபர வறுமுக பழனியி
 லிலகிய சரவண பவநாதா
உனதடி மலரிணை புணையென வடைபவன்
 உளமறி குவையினி தருளோடு
வொளிர்தரு மயின்மிசை வருதகி யிதுவென
 வுடனுய ரருடர வரவேணும்
கனகனை வுயிர்பரு கியமுகி விளையவள்
 கருதிய பிரபல சுதவேளே
காமழியல் புளபுழு கொழுகிய திருமலை
 கனதளி யழகிய பெருமாளே.

தனந்த தந்தன தன
தனந்த தந்தன தன
தனந்த தந்தன தன தன தான

**846.** உளங்க னிந்துறை பொருள் வளந் திரண்டெழு பொருள்
 உவந் தனந்தரு பொரு ளெனமேலொடு
உடைந்த செஞ்சடை யவர் விளங்க வந்தருள் பொருள்
 உறுந்தவஞ் செறி பொருள் கொடிதான
களங் கெழுங்கறை மிட றினின் சிவன்றரு பொருள்
 கனிந்த வன்பினர் பொரு ளுருவாகி
கடந்தொறும் பரவிய சுதந்தரந் தழைபொருள்
 கவின்றருந் திறபொரு ளினைவீயாடு
குளந்தரும் பொரிவழி யெழுந்திடுஞ் சுகபொருள்
 குலந்தழைந் திடுபொருள் சிவகாமி
குணந்தவந் தவமொழி யிலொருங்கமைந் திடுபொருள்
 குளிர்ந்தெழுஞ் சிவபொருள் மயமாகி
இளங்குகன் குருவென வணங்கிடும் பெயர்நலம்
 இணைந்திடுஞ் சரதமெ யுடையோனே

இறும்பவந் தருஅயர் வருந்தவுந் தருள்புரி
இசைந்தெழுந் திருமலை பெருமாளே.

தான தன தந்தா
தான தன தந்தா
தான தன தந்தா தன தான

**847.** ஊடுருகு மன்பே பேர்பரவு பண்பே
வோதுபவ ரின்பே யெனலாகி

ஓமுறை விருந்தாய் நாளுமலி கின்றாய்
ஊமைவிழி யின்பே நகவாழ்வே

நாடுசுக ரஞ்சேர் வானபொரு ளொன்றே
நாடுத லடைந்தே னிதுநாளும்

நாடியுனை நெஞ்சா லாரநினை வின்றாய்
நாணினி லழிந்தேன் இனியேனும்

பாடுபுகழ் கொண்டோர் நாவினி லுறைந்தோய்
பாவவினை யின்சேர் பறவோட

பாலகுக கந்தா மாமயிலில் வந்தே
பாதசர ணந்தா முருகோனே

தேடிவரு செந்தூர் ஊரிடை வதிந்தோய்
சேமமலி கண்டே யெனலான

தீரவா ரங்கா மாபொழி லிலங்கார்
சீர்திரு நகஞ்சேர் பெருமாளே.

தந்தனந் தனந்த தந்த
தந்தனந் தனந்த தந்த
தந்தனந் தனந்த தந்த தன தான

**848.** மஞ்சினம் படர்ந்தெழுந்து தங்கமைந் திலங்கு பொங்கர்
வண்டினம் பொலிந்து தங்க முறையான

வண்சுரந் ததும்ப ரும்பில் மண்டிடுந் தளங்கள் விண்டு
மன்றிறஞ் செறிந்த தென்ற மழைபோல

கஞ்சமுஞ் செருந்தி சந்து குங்குமந் துலங்கு கொன்றை
கண்டொறும் பொழிந்த பண்பை யுடையோனே

கங்கையுங் குறைந்த விந்து வுந்திலைத் தயங்கு சங்கு
கந்தரம் பொருந்து நஞ்சை யணிவிபன்

எஞ்சியம் பதங்கடந்த சுந்தரந் திகழ்ந்த கந்த
இன்பகங் குளிர்ந்தெழுந்து மயில்மீது

இங்கடைந் தயர்ந்த தென்ற பொன்பதம் படிந்து தங்கும்
இன்சொலும் பிறங்கு மன்பும் அருள்வாயே

கொஞ்சிடுங் குறிஞ்சி மங்கை பின்புறம் படிந்த சிந்தை
கொண்டிடுஞ் செயந்தி தங்கு முருகோனே

குண்டமைந் திடுந்தரங்க மன்பெறுந் தடம் பிறங்கு
குன்றுயர்ந் திலங்கு பண்டை பெருமாளே.

தானனந் தனதன
தானனந் தனதன
தானனந் தனதன தன தான

**849.** தாயினுந் தயைமிகு பூரணஞ் செறிகுக
தாரகன் சிதைவுற வயிலேவி

தாமதம் பணுவரை யோடவன் குலமற
சார்வயம் பெருகிய முருகோனே

நாயினுங் கடையனை யாள்வதுன் கடென்ன
நானடைந் திடுமுறை யறியாயா

நாத பண்பொழி லுறைமா நலந்திகழ்குக
நாம வந்தருள்வது மெதுநாளோ

பேயினுங் கொடிதமை பாவியென் றெளியனை
பேணுறுந் தமில னெனலாகா

பீடமைந்திடு தவ ஞான சுந்தர பர
பேணி வந்தினிதருள் புரிவாயே

வேயினுங் கனிமொழி மாது சங்கரி தரு
மேலவன் புகழ்பெறு மொருதேவா

மேவு பொன்கிளர் திரு வாழுகின் றெழின்வரை
மேலுறைந் தருள்புரி பெருமாளே.

தனன தந்தன தன
தனன தந்தன தன
தனன தந்தன தன தன தான

**850.** உருகி வந்தனை புரிபவர்கள் சிந்தை யினிடை
வுலவு கின்றவனென வுலகோது

உசித சந்தன வரை மருவு சுந்தர பர
வுயர்வு தங்கிய மறை முடிமீதே

பெருகு செண்பகி டவை குமரி யந்தரி வுமை
பிரிய மிஞ்சிய சிவ னிடமேவு

பெருமை கொண்டவளுல குரிமை கொண்டவள் மலை
பெறவு வந்தவ ளெழி லபிராமி

முருகு பொங்கிய குழல் வனிதை யம்பிகை கலை
முழுதுணர்ந்தவ ளுமை யருள்தேவி

முடிவி லன்பொடு பணி பவர்க ளெஞ்சினிலுறை
முதல் விதந் தருள்சுத முருகோனே

திருகு கொம்புயர் தகர்மிசை யிலங்கிய குக
சிறிய னென்றனை யுன தெழிலோடு

தினமுவந் தருள்புரி பகவ பண்பொழின் மலை
திகழ நின்றருள் வளர் பெருமாளே.

தந்தா தனந்த
தந்தா தனந்த
தந்தா தனந்த தன தான

**851.** நெஞ்சூ டுறைந்து குன்றா தொளிர்ந்து
நின்றே விளங்கு முருகோனே

நின்பா லடைந்த பண்பே யமைந்த
நின்பால னென்ற முறையோடு

அஞ்சாதி யென்று வந்தே வழங்கும்
அன்பே பிறங்கும் அருடாராய்

அங்கோடுறைந்த வன்சூரை வென்று
அம்பார் தரங்க மிக லோடு

பஞ்சாடு பொங்கரின் சார்பமைந்த
வண்சேர் செயந்தி வரைவாழ்வே

வண்டாடுகின்ற தண்டாரணிந்த
மன் பேரிலங்கு மணிமார்பா

செஞ்சேவல் கொண்ட துங்காதி கந்த
திண் பாதகங்கள் அறவீனே

செந்தா துறைந்த வண்சோலை பண்பை
செங்கோடிலங்கு பெருமாளே.

தந்தன தனன
தந்தன தனன
தந்தன தனன தன தான

**852.** அன்பருளுருவ இன்பமை முருக
அந்தரி குமரி மகமாயி

அம்பிகை கவுரி சுந்தரி புவனை
அண்டிடு பவர்கள் பவநோவார்

துன்பற வருள்செய் சண்டிகை விமலை
தொண்டர்க ளிலகு செகமாதா

துஞ்சுறு மிடிகள் பஞ்செரி நிகரு
துன்புற வுதவு சிவகாமி

பின்புறு புதல்வ சங்கரி மருக
என்றுய ரொழிய வாவேணும்

இம்பர்க ளமரர் பண்பினி லுறையு
மென்குரு பழனி மலைவாழ்வே

தன்பர வரத பண்பொழி னகர
தண்டளி யிலக வருவோனே

தண்டலை மருவு பங்கய முதல்வி
தங்கிய மலையில் பெருமாளே.

தந்தன தனன தான
தந்தன தனன தான
தந்தன தனன தான தன தான

**853.** மங்கல மருவு சேம பங்கய முதல்வி வாணி
வந்தடி பரவு நாரி திரிசூலி

வண்டணி குழலி சோம சுந்தரி கவுரி மாரி
வம்பிறு கியவு லாச தனமாதா

பொங்கர வணிம னோடு பங்கமை பவட யாளி
பொங்கிய கருணை வாரி யெனலான

பொன்பரை தாணி பீட மன்பக வதி நியான
புந்திய ரகமு ளான வெமதாயி

சங்கரி வடுகி வாலை பண்பமை மதுர மான
தண்டமிழ் வசன வாமி சிவகாமி

தண்டன வமுத மேவி யுண்டவ வமரர் வாழ
தண்டயில் பயிலும் நீள்கை யுடையோனே

திங்களொ டரவு சூடு கின்றவ னருமை பால
தென்குற மகட னேய முருகோனே

சிந்தனை புரியு மேழை வந்தருள் குமர நாத
செந்திரு வரைவி லாச பெருமாளே.

தந்தன தான தான
தந்தன தான தான
தந்தன தான தான தன தான

854. பங்கய மாது வாணி தங்கிய சேம மேவு
பண்பொழி லூரில் வாழு முருகோனே

பண்பமை வாக நேடு அன்படி யார்தனுது
பங்குறை வான தூய குணவாழ்வே

சங்கரி தேவி வாலை செண்பக மேவு காளி
தங்கிய சூலி காளி யெமதாயி

தண்டையை யாளு நேர்மை கொண்டவள் தீதி லாத
சண்டிகை வீரி மாரி கவுமாரி

எங்கணு மாகி வோமி னின்றவள் நாத ராதி
இன்புரு வாக நாளும் வளர்தேவி

என்பணி யாளனேய பண்பபி ராமிவாமி
இங்கித மானவாலை மகமாயி

கொங்கவி ரோதிநீலி தன்றவ ரூபமாகு
குன்றுறை ஞானமோன வாதீபா

குஞ்சரி பாகவேழை வந்தருள் வாய்தயாள
கொன்பொனி ஞாகமேவு பெருமாளே.

தந்தன தனதன
தந்தன தனதன
தந்தன தனதன தன தான

855. இங்கித குணகரி சங்கரி மனோகரி
என்று நிலையாகிய செகமாது

என்பணி விநோதனை டன்பிவர் பராபரை
இந்திரை பராவிய மகமாயி

கொங்குலவு வார்குழல் கொண்டபரி பூரணி
குஞ்சர விநோதனி னையான

கொண்டணி கராகிய சங்கரி சகோதரி
கொண்டத வமேவொரு வுருவாகி

தங்குகுக காரண சந்தவரை யேறிய
தம்ப மௌனலாகிய முருகோனே

சம்புவு முனிவில் கும்பிடு வரோதய
சந்தத தயாளமு முடையோனே

பங்கய மகாபொறி தங்குபொழி லூரினில்
பண்புரிமை யாகிய வெழில்வேளே

பண்டடிமை யாதரி சுந்தர மயூரநல்
பண்பைமலை மேலுறை பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

856. அருளே நிறைந்த கடல் வாய் திறந்து
அடியார் களென்ற வயல்மீதார்

அடைவாய் பிடுங்கி வயல் பாய நின்ற
அரசே செயந்தி முருகோனே

தெருளே திரண்ட வுருவாக வந்த
சிவமே குறிஞ்சி நிலவாழ்வே

தினமே வணங்கி வருவோரி டைஞ்சல்
திரளான பந்த பவமூடை

உருளோட வென்று சரணாலயங்க
ளுறவே வழங்கி வருதேவா

உயர்வான கந்த முருகா விலஞ்சி
யுறை வோய் சிறந்த மயில்வீரா

மருளோர் பவங்கள் எனைவாதை கொண்டு
வரலாலறிந்து னருளாலே

வயமே புரிந்து எனையாள் வைபண்மை
மலைமேவி லங்கு பெருமாளே.

தான தானன தானன தானன
தான தானன தானன தானன
தான தானன தானன தானன தன தான

**857.** பூத நாயக போதக நாயக
நீதி நாயக நேயர்க ணாயக
பூமி நாயக பூரண நாயக னெனலான

பூதி நாயக பூவல நாயகா
ஆதி நாயக வாரண நாயக
பூவி னாயக பூமறை நாயக முருகோனே

மாதர் நாயக மாதவர் நாயக
தீதி லாதமை தேவர்க ணாயக
வானளாவிய மாபொழி னாயக வயலூரா

வாரிநாயக மாமலை நாயக
சோதிநாயக தூயவர் நாயக
மாரிநாயக வானவர் நாயக வரதீபா

நாத நாயக நாவலர் நாயக
சேவனாயக சேவக நாயக
ஞானநாயக நான்மறை நாயக பலகோடி

நாதர் நாயக வீரருணாயக
பால நாயக பாவலர் நாயக
நாடி நாயக நாடிடு நாயக முதலான

தாதநாயக சாதனை நாயக
யோக நாயக யூகிகணாயக
தானையீயவு ளுதார மோடருள் தருவாயே

தாது தூவிய மாபொழி லூர்குடம்
மேவு மாதிரு மாமலை மீதுறை
சாமி நாதபுராதன மார்முக பெருமாளே.

தனனா தனத்த தன
தனனா தனத்த தன
தனனா தனத்த தன தன தான

858. பிறவா திருக்கு நெறி யுறவே யெனக் கருள்செய்
பிரகாச முற்ற குக முருகோனே
பெருமா னெனப் பகரு முதல்வா கரித்துணைவ
பிரபாக முற்ற முகில் மருகோனே
குறமா தினுக்கு வளை பகர்வோய் எனக்குரிய
குரவா மலைச்சிகர முடையோனே
குறுமா முனிக் குயரு தமிழோதி வைத்த சிவ
குருவே கரிக் குரிய மணவாளா
அறமே படைத்த பரை மகனே மறைக் குரிய
அரசே வணக்க முறும் அடியார்கள்
அகமே லிருக்கு மொரு கனியே கனிக் குளொழும்
அமுதே திதிக்கு மொழி யெழிலாளா
மறவீர ரச்சமுறு அயில்வேல் பிடித்த கர
வளமேவு பட்டை நக ருறைவாழ்வே
மலர்மா திணக்க முற வளர்சேம முற்றதிரு
மலைமே லுதித்த பர பெருமாளே.

தனதன தத்த தனந்தா தானன
தனதன தத்த தனந்தா தானன
தனதன தத்த தனந்தா தானன தன தான

859. அரியத வத்தி லுயர்ந்தே மாதவர்
மனதுரு சித்த அரும்பே தானவர்
அழிய வளைத்த விருந்தே மாதிர முடனாகி

அணுவி லொளித்து ளிருந்தே மாவுல
கெவணு முதித்த பெரும் பேறெயென
அமையும் விதத்தை யுணர்ந்தே நாதர்கள் முறையாக

உரியப தத்தை நினைந்தே நாடொறு
மறைகளு ரைக்க நிறைந்தே யாயிடை
ஒருநிலை பற்றி யிருந்தே வாரணை மொழிகூறி

உறுதவ சித்தர் செறிந்தார் மாபொழில்
வளைவு ணகர்க்குளி ருந்தே யேழையை
உடைதுயர் பற்றி யரிந்தே மாதனம் அருள்வோனே

பிரிய மிகுத்தவெ னன்பே ஆதவ
னிகரு மயில்க்கை மருந்தே போதக
பெருமை படைத்த சிலம்பே வேதனை சிறையூடே

பிழையி லடைத்த வருங்கோ வேவுன
தடிமை யெனக்கு நலன்பே நீமுறை
பெருக நிலைக்க வரந்தா கோமள முருகோனே

உரிய வனைக்கு நிகர்ந்தே நாடொறு
மமுது படைக்க வருந்தா தாதிப
உவமை யொழித்த வரும்பா கேயென வுலகோர்கள்

உயர வுரைக்க வருந்தே மாமறை
பரவு பதத்தொ டெழுந்தோய் மாதிரு
உறைபு மலைக்கு ளிருந்தார் தாரக பெருமாளே.

தனந்த தந்தன தன
தனந்த தந்தன தன
தனந்த தந்தன தன தன தான

860. ஒழிந்து நின்றனை கொலோ மறைந்து நின்றனை கொலோ
உயர்ந்து நின்றனை கொலோ அலைதேமை

உடைப்புணி ன்றனை கொலோ வழங்கு கின்றனை மொழி
உவந்த னந்தா முள முருகோனே

வழிந்து சிந்துறு நறை மிகுந்த பங்கய மலர்
மருங்கு நின்றி டவரி தெணவோது

மணந்த செம்பத குக வணங்கு கின்றவ ருளம்
மகிழ்ந்த பொன்ற ளியென வளர்வோனே

இழிந்த கந்தலை யணி யரன்ப ரம்பரை சுத
இழங்கு ளுந்தவ முனி வரர்நேயா
இளர்ந்த முன்பவதுடர் வருந்த வந்தெனதுடல்
இரங்க நின்றிடு வகை தரலாலே
அழிந்து நைந்திட விடல் சிறந்த சந்தன மலை
அறஞ் செறிந்திடு மன முடையோனே
அமர்ந்த பண்பொழி னகர் குட ங்கணின் றெழினிறை
வணிந்திடுந் திருமலை பெருமாளே.

தானு தனந்த தந்த
தானு தனந்த தந்த
தானு தனந்த தந்த தன தான

**861.** மாயா தெழுந்த பந்த மோயாமனின்று நின்று
வாதாடுகின்ற தெந்த முறையோதி
வாளா விருந்த னந்த நாளாகி வுந்த னன்பு
வாரா தமைந்த தெந்த வகையாலோ
யீயாத மைந்த வஞ்ச மாயா தகஞ் செறிந்த
வேதோடகம் படிந்த கொடியோர்கள்
யேனுத பண்பை தங்கு நாதா வழங்கு கொண்ட
லீசா நயம் பிறங்கு முருகோனே
தாயாகி வந்து முந்தை பாலாதி தந்து தந்து
சார்பாக நின்று பன்றி வடிவாகி
தானு யகம்பு ரந்து மாமா வணங்குகின்ற
தாளா னலம்பு ரந்த மகமாயி
சேயே யெனுஞ் சொலன்பு ளாளாயிதம் புரிந்த
தேவே பழங் களிந்த பொழிலூரா
சேமா திலங்கு செந்தில் நாதா சிறந்த பண்பை
சேர் நாக குன்றமர்ந்த பெருமாளே.

தனத்த தன தான
தனத்த தன தான
தனத்த தன தான தன தான

**862.** மனைக் கவலையுடு விதித்திடு விமோத
வாத்துடை யோடு வுறவாடும்

வழக்கமற நீதி படைப்பது மொராளில்
  மனத்தொடுமயூர  மிசையேறி

கனத் தருணையான அருட்பெய தயாள
  கருத்தினொடு வாய்மை  யருள்வாயே

கருத்த முகினொரு விதத்து நிறமான
  கடத்த முகினைய  மருகோனே

சினத் திரளினொடு மிகுத்த கணமான
  திரத்தசுர்கள் மாய  விடும்வேலா

செகத்த குகநாத வளிக்கு மணவாள
  திருச் சரண மீய  வரவேணும்

வனத்த கரிலேறு விருப்புடைய ஞான
  மகத்துவ வுலாசு  முருகோனே

வளத் தினிறைவான திருக் குவடுலாவு
  வணக்க முடையோர்கள்  பெருமாளே.

தனன தத்தன
தனன தத்தன
தனன தத்தன  தன தான

863. எனை யடுத்தவர் நல முறத்தயை
  யினி தளிப்பவ  னெனலான

எழி லருட்குக குமர வற்புத
  இசை நடச்சிகி  யுடையோனே

வனை வயக்கழ லுடைய சுப்பிர
  மணிய விற்பன  ரகவாழ்வே

மதி படைத்தவர் தம தருட்டுணை
  வளர நித்தலு  முறவாகி

பொனையளிப் பவ சரத மெய்த்தவர்
  புகழு முத்தம  முருகோனே

புனித சற்குருவென திடத்துற்ற
  புதுமை பற்றிய  செகவாழ்வே

அனை யெனத்தின மமுதளித்துண
  தடியி லிற்றிடும்  அருடாராய்

அணி பொழிற்றலை முகில் படைத்தமை
அணிகொள் பட்டைநல் பெருமாளே.

தனந்த தனன தனன
தனந்த தனன தனன
தனந்த தனன தனன தன தான

864. கரும் பிரதமே மதுர மிகுந்த பழமே எனது
கனிந்த மனமே வடிய ரசவாழ்வே
கவிழ்ந்த பொழிலூடழகு சொரிந்த பொழிலூரிலகு
கவின்கொள் குகனே குமர னெனவோது
அரும்பு மலரே மலரி லெழுந்த நறையே நறையில்
அமைந்த சுவையே சுவையி னுயர்வாக
அளைந்த முதமே கடலி லுறைந்த பதமே பழனி
அடைந்த சிவமே யுருகு தவநேசர்
பெருந் தணரசே எனது கருங் கண்மணியே மணியில்
பிறங்கு மொளியே யொளியி லெழுசேயே
பிழிந்த ரதமே யதனுள் துலங்கு மயமே கருணை
பிறந்த மலையே மலையு ளுயர்வோனே
விரும்பு மறையே மறையு ளெழுந்த பொருளே பொருளில்
விரிந்த குகனே குறமி னுடையோனே
விளங்க வருவா யெனது பவங்களறவே மகிமை
மிளிர்ந்த திரு நாகமுறை பெருமாளே.

தான தந்த தான தந்த
தான தந்த தான தந்த
தான தந்த தான தந்த தன தான

865. காலனஞ்ச மாய்கையஞ்ச பாவமஞ்சவேதையஞ்ச
காம மஞ்ச நீயெழுந்து மயில்மீமேலே
காணவந்து சேம வின்ப ஞானவின்ப யோனவின்ப
காவினின்ப மேவு மன்பு தருவாயோ
ஆலமஞ்ச காலனஞ்ச வேலுமஞ்ச வாழியஞ்ச
ஆடல்கண்க ளாலமைந்த மடமாதர்

ஆசை கொண்ட தானடந்த மாய்கை வந்து மோசமொன்ற
ஆளுகின்றதாக நின்று புவிமீது

சீலமென்ற வாய்மையின்றி தேரு துன்ப மாயமைந்து
சேவகஞ்செய் தாவநின்ற பவமுடை

சேடமுண்டு நாளும் நைந்து வாடலுண்டு நாணி நின்று
தீபமென்ற சோதியுந்த னடிபேண

பாலனென்ற யேழை யெந்த நேரமுந்த னேய வன்பு
பாடிவந்து வோது கின்ற தறியேனே

பாருகொன்ற தான செஞ்சொ லார்குறிஞ்சி மாதணைந்த
பால பண்ணை நாகமர்ந்த பெருமாளே.

தன தான தந்த தான
தன தான தந்த தான
தன தான தந்த தான தன தான

866. கொடிதான பந்த மோடு மிடிபூடி டைந்துலாவு
குலவினர் தங்களோடு உறவாடி

குறைவான துன்ப பீடை யிடமேவி நைந்து ஆவி
குடிபோக வந்த தாக நலிவேனை

இடிமேல் விழுந்த நாக மெனலாக வொன்றி யேழை
இதுகாறு நொந்து மாள விடலாமா

எளியே னிடைஞ்சல் தீர அருளீவ தெந்த நாளில்
இலையேல் வகிர்ந்து சாக விடவேணும்

கடிமேவு கின்ற சோலை வளநாட பண்ணை நாத
கதிர்காம வெங்கள் சேம முருகோனே

கனகா குறிஞ்சி மேவு மொருமா திணங்க மேலை
கரிவா வெனுஞ்சொ லோது மொருதேவா

வடிவா யெழுந்த வேலை பிடியோக துங்கமான
மதவீர மொன்று நாத வரதீபா

மகிபா யிலஞ்சி யாளு முதல்வா பொதும்பர் சூழு
மகிழ்மா நகங்கொள் தேவ பெருமாளே.

தனன தனதன தான தானன
தனன தனதன தான தானன
தனன தனதன தான தானன தன தான

**867.** மனது கலைவுற லான வாதையி
லடிமை படுதுய ரூடுலாவிய
வரவை யெவரிட மேவி யோதுவ லெனநாளும்

மடிய வருபவ மோடெனு ளினும்
அழிய விடுவது நீதியா யிதை
மயொ டறிகுவை கோலமா மயி லுடையோனே

தனத குருபர நாத நாயக
குமர பரிமள மேவு மார்புள
சரத வளிமண மேவு கானிடை தனியேகி

சரச மொழிபல கூறியே யவள்
மகிழ மருவிய வாத யாவமெய்
சமய வாரிதி யேநலா லய முருகோனே

எனது கனவினி லேமுழு ளொரு
மனுவை யுதவிய வாத யாபர
இரத மணிமுறை யோதி நீதயை தரவேணும்

இனிய மொழி சிவகாமி மாபரை
குமரி பயிரவி வாமி கோமதி
எழிலி நிகர்குழ லாயி பான்மதி முதன்மாது

வனச மலர்பத தேவி யாமளை
யுறையு ளொனவள ரீசனார்சுத
மறையி னடமிடுவோய் நலாதர மெனலான

வரத பரிமள மார்ப தேவர்கள்
சிறையை விடுதலை மேவ வாழ்வருள்
மகிப திருமலை வாச நேசர்கள் பெருமாளே.

தத்த தந்தன தன
தத்த தந்தன தன
தத்த தந்தன தன தன தான

**868.** கற்கரைக் திடுமொழி யிற்கமைந் திடுதயை
கற்கவந் தி ளிதருள் புரியாத

கட்டடங்கிய வர ளிட்டடங் குவையெனில்
கட்டமுண் டிடுமென றியாயா

சொற்கரைக் தெழுபொரு ளிற்குயர்ந்திடு பத
சொற் பிறந்திடுமறை யுடையோனே

சுத்த சந்தன புழு குற்ற குங்கும விரை
தொக்க கின்றெழில் புய வரதீபா

மற்கடஞ் செறிவளை முற்ற செண்பக டவி
மத்தணிந்தி டுபடை மகமாயி

வட்டி ருண்டெழு தன சத்தியைத் தொழில் புரி
மச்சளின் சகோதரி சிவகாமி

எற்கனக் தருபவை பட்செறிந் திடுமொழி
யிற் சுதன்குக னென வருபாலா

இந்த லந்தனில் பொழில் மிக்குயர்ந்திடு திரு
விட்ட மிஞ்சிய மலை பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**869.** மறவாத நெஞ்ச முறவாக வென்ற
வரமே வழங்க வருவோனே

மகிபா குறிஞ்சி முதல்வா யிலஞ்சி
வரதா செயந்தி யுடையோனே

குறமா திணங்க வனமீ தணைந்த
குறவா முகுந்தன் மருகோனே

கொடியோர் களஞ்ச பரைபாவ மஞ்ச
குலகால னஞ்ச மிடியோடு

இறமேவு கின்ற பிணியாதி யஞ்ச
இடரோ டியஞ்ச மயில்மீது

எழிலோ டிலங்கி வரமே வழங்கி
யிசைமேவு நண்பை யருள்வாயே

அறமாரு கின்ற பெரியோர் நிறைந்த
அழகான பண்பை நகர்வாழ்வே

அமுதா யெழுந்த அருளாக நின்ற
அழகேறு குன்றில் பெருமாளே.

தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த தன தான

870. அடைக்கல மாக வுந்தன் மலர்ச்சர ணயங்கள்
அடுத்துனையே வணங்கு மெளியேனை
அடிக்கடி மோத வந்த பவப்பிணி யாலிடைந்த
அனித்திய வாழ்வை நம்பி யுழல்வேனை
கொடைக்கரசே செயந்தி புரத்தரசே சிறந்த
குணத்தரசே வயங்கும் அடியார்கள்
குலத்தரசே வழங்கும் அருட்கரசே யறஞ்செய்
குடிக்கரசே மறஞ்செய் பவர்வீழும்
படைக்கரசே யிலஞ்சி நகர்க்கரசே குறிஞ்சி
பதிக்கரசே குளிர்ந்த குணவாணர்
பழக்கரசே வுயர்ந்த வழக்கரசே நிறைந்த
படிக்கரசே யெனுஞ்சொல் பெரியோர்கள்
நடைக்கரசே நலஞ்செய் பவர்க்கரசே செறிந்த
நகத்தரசே விளங்கு பொழிலூரா
நதிக்கரசான கங்கை சுதற்குக நாத பண்டை
நகத்தனியூ டமர்ந்த பெருமாளே

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

871. இனிதாக வந்து உமையாடு கின்ற
எழிலான கந்த முருகோனே
இசைபாடு கின்ற தனிவாணர் இன்ப
இனமாக நின்ற பெரியோனே
கனிவாகு மன்பர் மனமே விருந்து
கதிராக நின்று விளையாடு

களிறோ குறிஞ்சி மலைநாட வெங்கள்
கனகா முகுந்தன் மருகோனே
செனியா றிலங்கு மொருதேவ செந்தில்
தினமேவி நின்ற பெருவாழ்வே
இசைமோது கின்ற நதிசூடு பொங்கர்
செறிவான பண்ணை வளநாடா
அணியாய மிஞ்சு கொடியோர் கலைஞ்ச
அயிலேவு கின்ற செகவீரா
அடியே னினைந்த படியே நலைஞ்செய்
அருள் மாநகங் கொள் பெருமாளே.

தனனத் தானன தானன தந்த
தனனத் தானன தானன தந்த
தனனத் தானன தானன தந்த தன தான

**872.** வறுமைப் பேய்பிடி யாமனு னன்னை
அருளைத் தாமத மாகிஉ டம்பு
மடியக் கூயி லேவிவ கிர்ந்து விடவேணும்
மகதிக் கேகிக ராகிய செஞ்சொல்
பகர்நற் கானவர் மாமக ளின்பம்
மருவற் கேபுன மேவிய ணைந்த வெறுிதல்வேலா
தறுகட் சூரரும் மாதவர் முன்செய்
கொடுமைப் பாதக மானப வங்கள்
தகரச் சேவக மாகவெ ழுந்த செகவீரா
தருமிக் காகமு ஞளுயர் சங்க
வவையிற் சீபனை வாதினில் வென்று
தனைபொற் காசுளை வோர்கிழி கொண்ட சிவநாதன்
உறுகட் பாய்பொறி யாறினை யங்கி
சுமைபெற் றேகவ யோவென நைந்து
உறைதட் பாகிய மாசுனை யின்கண் விடலாலே
உதயத் தேவரு மாரவி யொன்ற
பதுமப் பாயலி லேதவழ் கின்ற
உரிமைப் பாலக மாபழை கொற்கை முருகோனே

குறுமைக் கானமை காமுனி சிந்தை
பருகற் கானமை காமனு வுஞ்சொல்
குமரப் போதக நாயக வுந்த னடிபேணி

கொளுதற் கேவமை யேழையை யென்று
னடியிற் சேரவு ளாருளொன் றல்
குலமிக்கேர் திருமாமலை யன்பர் பெருமாளே.

தான தத்தன
தான தத்தன
தான தத்தன தன தான

**873.** ஆடு கட்டிய தூறெனப் பல
ஆடுணப் படு கடமூடு

ஆவி கட்டிய நாத விற்பனம்
ஆரணத் துறை முருகோனே

வேடுவச் சியை நாடி புற்றினை
மேவு மப்புன மிடையேகும்

வேள் குகப்பர மோக முற்றிய
வீர வற்புத முடையோனே

பாடு முத்தமி ழாக மத்துயர்
பால குக்குட கொடியாடு

பார சித்தர்கள் தேடு நிர்க்குண
பால னெற்குண் தருடாராய்

கேடு கேட்டலை மாதர் பற்றிய
கீணரற் பற மயில்மீது

சேண்மை யற்பொடு வாநல் பட்பொழில்
சீரணுக் கருள் பெருமாளே.

தான தானன தாத்தன தானன
தான தானன தாத்தன தானன
தான தானன தாத்தன தானன தன தான

**874.** பாவ வாதையி னுற் படுபாடினை
யோதி யோதி கராப்பிணி வாயிடை
பாவியேபடுவாட்டினை வோதிய படியாக

பாரிலே யொரு கீழ்த்தர மாகிய
நாயையே நிகர் பாக்கிய பேயனை
பாழிலே பல நாட்கழி யேழையை மடையேனை

சாவ வேணுமெ னத்துதி கோழையை
கோவ மேவுரு வாய்ச்சமை தீயனை
தானை மேவவு ணுக்கமி லாதமை கொடியேனை

சாத னாதிகள் போக்கிய வீணனை
கோள்க ளாலிடர் பூட்டிய பாழனை
சாது மாதவர் பாற்றுதி யாதவ னெனலாகி

ஆவலோடன மூட்டிய மூடனை
பேதை யாளியை நாத்திக வாதியை
ஆளும் நாளுள் தேற்சிறியேனிட ரறவோட

ஆடு மாமயில் மேற்புற மேவிய
சீர்மை யோடெனை காத்தருள்வாய் கடன்
ஆரவோதிய பாற்கர னேரிய முருகோனே

காவ லாளகு காப்பரமேசுர
சோலை சூழிய மாப்பொழிலூரதி
காரதேவ சிலாக்கிய மாகிய வரதீபா

கான வானவர் மாத்திரளாதியர்
வாணர் பாடகர் சாத்திர வாதிகள்
காண வாழ்வுயர் மாக்குவ டேறிய பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

875. எளியே னிடைஞ்ச லறவோத வுந்து
எதுநாள் நலங்கள் தருவாயோ

இமை சேது பந்த துடர்பா விலங்கை
எலைமேவி பொங்கு மடல்வீரன்

களி வீறடங்கி யவன் வாழ்வு பொன்ற
கணைமே புரிந்த ரகுராமன்

கனிவான தங்கை மகமாயி தந்த
கனகா சிறந்த முருகோனே

வளிமா தணைந்த மருமா செயந்தி
மலைமே லுயர்ந்த குருநாதா

வரதீப மென்ற வணமா யிலஞ்சி
மகிழ்வோய் குறிஞ்சி யுடையோனே

அளிசேரு பண்மை நக ரூடிலங்கும்
அரசே யறஞ்செய் பெரியோர்கள்

அருளாக நின்று விளையாடு கின்ற
அணிமா நகங்கொள் பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**876.** அதிகார கந்த விதிநோ வெழுந்து
அநியாய மிஞ்சு படியாக

அடியேன் வருந்து விதமாக வந்து
அரிவேதை கொண்டு பலநாளும்

ததிதோறு முந்த னடிபேணி நின்று
தமிழோது கின்ற முறையோடு

சணமேனு மன்பு குறையா திருந்த
தாமேவு முந்த னடியேனை

மதியாத ருந்து பவமூடை தந்த
மயலாலி டைந்து தடுமாறி

வழியேது மின்றி நலமேது மின்றி
வதைவேதை யின்க ணுழல்வேனோ

பதிமேவு செந்தில் குருநாத பொங்கர்
பழமே சொரிந்த பொழிலூரா

பவவீண ர்பஞ்சு படமோது பண்மை
பரனே நகங்கொள் பெருமாளே.

தனத்த தனதன
தனத்த தனதன
தனத்த தனதன தன தான

**877.** நினைப்பி னருள்தரு பெருக்க மருவிய
நிருத்த னுதவிய முருகோனே

நிலைத்த வருமறை முடிக்க ணிலவிய
நினைக்கு மினிரிய புகழ்பாடும்

எனக்கு னுயரிய குறித்த பதமல
ரிணைக்கு ளடைவது மெதுநாளோ

இசைத்த தமிழ்மொழி வளர்த்த குருமுனி
யிடத்தி லருளிய குருநாதா

சுனைத்த ணறலிடை யுதித்த நறுமலர்
தொடுத்த மருபுய முடையோனே

சுகிர்த்தி னொடுகுற மகட்கு மனமயல்
துதிக்க மருவிய எழில்வேளே

வனைத்த பொழில்வள முடுத்த பொழினகர்
வரத்த பழனியி லுறைவோனே

மதிக்கும் அடியவ ருளத்தி லுறைதிரு
மலைக்கு ளிலகிய பெருமாளே.

தானன தனதன தானன தானன
தானன தனதன தானன தானன
தானன தனதன தானன தானன தன தான

**878.** பானய முளமொழி யாமளை கோமளை
பூரணி யெனதனை யாகிய கோமதி
பார்பதி பகவதி ஆரண மருவிய வொருதேவி

பாவல ரகமுறை தேவிப ராபரை
மாபர பயிரவி காளிபு ராதனி
பாரரு டிரிபுரை பாபவி மோசனி யெனுமாதா

வானவர் பரவமை வாலைந லாதர
மாகிய மலைமகள் வீரம னோன்மணி
மாவரி புறமுற மேவிய தாயவ ளபிராமி

மாமலை யுதவிய தாயக மாமகள்
வேலினை நிகரிய மாவிழி யாளுமை
மாதவ முனிவர ரோடுறை வாமியு மெனலாகி

கானவ ணரிபரி யாய்வர வேபுரி
தூயவ னொடுமிட மாயமை வானவள்
கானட மிடுபவள் சேமமு ளாளரு ளபிராமி

கான்முளை குருபர வீரம காமயி
லாதன மிலகிய வேல்வல பாவல
காமளி னுயரிய பேரெழி லானுயர் பதவேளே

தானவர் குலமெழு வீரம காதிட
மோடுயர் கிரியுட லாருயி ரேயற
சாரயில் விடுமதி காரகு ணுகர முடையோனே

தாயக மெனவுனை யேயடை யேழையை
ஆரமு துதவியி டைதி யாதரி
சாறமை திருமலை மேல்தனி யூடமை பெருமாளே.

தாந்தா தனதன
தாந்தா தனதன
தாந்தா தனதன தன தான

879. தேன்பால முதெனை லாம்பாவிய மொழி
தேங்கா ரழகிய குழன்மாதுர்

தீண்டா வறநெறி பூண்டோ ருளமுள
சேந்தா குருபர முருகோனே

ஆன்பாவி னைதலை தோய்ந்தே நதிதலை
ஆய்ந்தே முழுகிய வொருமாயன்

ஆங்கா னிடைனிரை மேய்ந்தே வருமுறை
ஆய்ந்தே மகபதி மழையேவ

வான்பான் விழுமுறை தாங்கா தெனமலை
வாங்கார் குடைநிழலி வாவூத

வாழ்ந்தே மெனநிரை பாங்கே வமைவுறு
மாண்சே ரியன்முகின் மருகோனே

மான்சார் தருசுனை தீன்சா ரியமுண
வான்சார் புனமறு கினிலேறி

வாய்ந்தோர் குறமினை சேர்ந்தோய் அருள்புரி
வான்றோர் திருமலை பெருமாளே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

880. பிறவியாழ் கடலூடுழ லேழையை
சகவிரோதம தாகிய கூளியை
பெரியர் கேண்மை யிலாதமை நாயினை யனையேனை

பெருகுமா மிடியாளனை யேர்பிணி
வருடநாளுமனேது யராலழி
பிசகிலே வருபேதமை யாளியை மடையேனை

அறமதே நினையாதவ ரோடுற
வுகொளு நேயனை மாய மனோலய
அறிவிலாத வியாகுல மேவிய சிறியேனை

அடியரோ டுனையேபர வாமலுள்
இருளைநேரு தயாளமிலா தெழு
அழிவில் வீணனை கீடமாகிய கொடியேனை

மறவி யோருருவாய்சகம் வோதிய
பொறுமையே பிறவாத சொல் கூறியை
மவுன யோக மிலா நிருமூடனை யொருபோதும்

வசன சேமமிலா கொடுமூடியை
விசனமேவு புராதன வாழியை
வலிய கோளிடரா னலிவாகிய கயவேனை

பறவையா மினமாமென வோடிய
சிறுமையாளனை நாடொறு மேவுண
பசியின் வாதையினால் துயரூடமை கொடியேனை

பரம பூரண காரண நாயக
அருமை யோடினி தாதரவாலருள்
பகவமா திருமாமலை மேவிய பெருமாளே.

தனதன தனன
தனதன தனன
தனதன தனன தன தான

881. இழிபொடுரை கூறி வருகொடியரீசம் மிகவாகி
இசைபல துவேசு

எனது முறையான உனது திருநாளில்
எனை மயல வேதை புரிவோரும்

பழியிசை வுணுடி யெளிமை பலதோடு
டகர்தரு விலாச முடையோரும்

பல பெரியரோடு உறவுகெட வேண
படிபுகல் பொருமை யுடையோரும்

கழிய வயிலேவுகிற வயிரவீர
கனக னுடல்பீறு மொருமாயன்

கன மருகனை யொரு முருகனுத
கமலை பணிதேவி சிவகாமி

வழிமுனை யெனுரு மகிழுறு தயாள
மவி கிருபை மேவ வரவேணும்

வளமலி பொனுகம் நிகர் திருவிலேறு
மலை வரத நாத பெருமாளே.

தனுை தனந்த
தனுை தனந்த
தனுை தனந்த தன தான

**882.** கனியே கனிந்த வடியா ரிடைஞ்சல்
களைவே ரரிந்த முருகோனே

கதிர்காம சந்த மலைமே விலங்கு
கடலே யிலஞ்சி யுடையோனே

துனியா விடைந்து வருபாவ பந்த
துடர்பூ டுடைந்து தடுமாறி

சுகமேது மின்றி பவுவாழ்வ ருந்து
துறைமேன் மயங்க விடலாமா

அணியாய மொன்று கொடியோரை யண்டி
அரசே யெனுஞ்சொல் பல்பேசி

அவரோ டிணங்கி யுனையே மறந்து
அழிவேனை யுந்த னருளாலே

இனிதாக நின்ற மயின் மீதெழுந்து
எனையாளு கின்ற படிவாராய்

ஏழிலாரு கின்ற திருநாகமர்ந்த
இசை சேமகந்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**883.** மனதாடுளைந்து வருநோவறிந்து
வரமே வழங்க வரவேணும்
வரதா செயந்தி முருகா யிலஞ்சி
வயலூ ருறைந்த குருநாதா
அனமே லெழுந்த பிரமாவை யன்று
அறிவோ மிதென்ற பொருள்கூறி
அருளாதரங்கள் பெறவோதி நின்ற
அரசே சுகந்த மணிமார்பா
இனமேல நிறைந்த பிறவாழி துஞ்சு
மெழிலார் பதங்கள் தரவேணும்
இலையேல் பதுங்கு மிடமேது மின்றி
யிழிவாக நின்று படிமீது
அனலூடு கண்ட புழுவாகி நைந்து
அழியேது வின்க ணலிவேனே
அழகான பண்பை மலைமே லிலங்கி
அடியார் வணங்கு பெருமாளே.

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தன தான

**884.** உருக்க மிஞ்சிய வடியவ ரகமலை
ரிருக்கு மந்திர வடிவழ கியகுக
உரைத்த செந்தமிழ் மலைமுனி பரவிய முருகோனே
உயர்த்த மன்றினி னடமிடு பரனெனிர்
மிகுத்த செஞ்சடை பயிலிய வரவொடு
உதித்த கங்கையு மிளமதி யணிபவ னெனலான

ஒருத்த னின்சுத பயிரவி பரிமள
முடைத்த சந்தன மொழுகிய மலைகள்
உமைப் பரன்பரை திரிபுரை மறைபர வியதேவி

உரத்தி லம்பர முதலிய பலவுல
கனைத்து மின்றவளற மொருவுரு வென
உலப்பி லம்பிகை தருசுத குருபர செகவீரா

நெருக்க மன்பொழி லிலகிய பொழினக
ரிடத்தி லன்பினி லுறைபர சிவமுதல்
நிருத்த செஞ்சிகி புறமிசை யிலகிய வொருதேவா

நினைத்தி னந்தின மருவிய மனதொடு
துதித்து வந்தனை புரிகிற வியல்பினை
நினைத்து வுன்சர ணருடர விதுதகி வரவேணும்

தருக்கடர்ந்திடு கொடியவர் குலமற
விருத்தி கொண்டயில் பழகிய வலகர
சலத்தை வென்றவ ரிடர்களை கிறகுக வரதீபா

தகுத்தகுந்திமி திமிதிமி திமியென
வகுத்த மங்கல முரசதிர் கடையருள்
தளிர்த்த பங்கய மலர்மக ணகமுறை பெருமாளே.

தனன தந்தன தன
தனன தந்தன தன
தனன தந்தன தன தன தான

885. சரண பங்கய மலர் பரவி வந்தனை புரி
தரும சிந்தனை தர வருவோனே

சமய சஞ்சிவி யென மருவு சுந்தர குக
தரணி யந்தர முனை முருகோனே

பரணி லன்றொரு குற மகள் மணந்தெழில் புய
பகல டர்ந்திடு மயி லுடையோனே

பயிலு மந்தணர் துதி பெருகு சந்தன வரை
பகவ சங்கர குரு பரநாதா

அரணடர்ந்திடு பொழி லிலகிலஞ் சியிலுறை
யருமை தங்கிய வர நிதியான

அரச வென்றனை யுன தூரிய மைந்தனு மென
அருள் சுரந் தழகிய மயிலேறி
அருண பங்கய பத மலர் புகுந்திட மொழி
அருள வின்றமை தர வரவேணும்
அளிமு ரன்றிட நறை மழை பொழிந்திடு பொழில்
அணி கொளுந் திருமலை பெருமாளே.

தனத்த தத்தன தன
தனத்த தத்தன தன
தனத்த தத்தன தன தன தான

**886.** கிருத்திகைப் பணிவிடை முறைப்படிச் செயவருள்
கிடைத்திடப் பொருடர வருவாயே
கிளைத்தநற் றமிழ்மொழி யகத்தியற் குதவிய
கிரித்தினப் புனவளி மணவாளா
பெருத்த கைத்திற வயில் படைத்த கைத்திற குக
பிணைத்த நற்றமிழ் தொடை யணிவோனே
பிலத்தி டைத்த வழுகி குலத்தை முற்றுற முடி
பிளக்க வைத்தல கொடு நலமேவு
நிருத்த முற்றிடு சிகி புறத்தி லற்புத முற
நிலைத்த சற்குரு பர முருகோனே
நிணத்தையுட் கொளு மசுர் கணத்தை பற்பல துகள்
நிறைக்க வெட்டிய பல முடையோனே
திருத்த முற்றிடு பொழில் வளைத்த பொற்பதி யுறை
சிறக்க நற்பவ னியில் வருவோனே
செயத்தில் நித்தமு முயர் படுத்த பொற்றிரு வரை
திருக்க ணுற்றமை யெழில் பெருமாளே.

தனன தத்தன
தனன தத்தன
தனன தத்தன தன தான

**887.** பொருண் மயக்கிடை யெனை வருத்திடல்
புவியிலற் புத முருகோனே

புனித சற்குணவரத நித்திய
    பொறுமை வித்தென வளர்வோனே

அருள் கொழித் தெழு கடல் படைத்தவ
    அரனு மைக் கொரு சுதவேளே
அரு மறைத்தலை யதனி னிர்த்தன
    அழக செப்பறை வளரீசா
தெருள் பெறப் பொருள் அனி யளித்தவ
    தினத சுப்பிர மணியாநீள்
செகபரப் பொருள் அறுமுகக் கடல்
    திகழு முத்தம முடையோனே
திருவளர்ப் பதி பொழி னகர்க் கிறை
    தினமும் வெற்றியை அருள்வோனே
செக தலத்திடை வளர் திருப்பதி
    திருமலைக் கொரு பெருமானே.

தனன தன தான தத்த
தனன தன தான தத்த
தனன தன தான தத்த தன தான

888. பரவு மடியேயனுளத்தில் துயர்கள் மிகவே படைத்து
    பருக விடலா விளைத்து மெலிவேனை

படவு முடியாதனுத்துமெலியு மெனியேனினைத்த
    படி கிருபையே கொடுக்க வருவாயே

அரவு கடியானவித்தகொடிய விடமே வொழித்து
    அருமை யுடனே புரப்ப தெதுநாளோ

அறநெறி யுறுத சித்த முடைய மடநாயை சித்தி
    யணுகு முறை யோதுவிப்ப தெதுநாளோ

காவினுளமே கவித்த முறைமை யறவே கதித்த
    கமலபதமே யளிப்ப தெதுநாளோ

கடவ சடமூட மட்டி யரிய மறையாக மத்தில்
    கடுகள விலாதபத்தி யுடையேனை

இரவு பகலோத வீற்றயிடமதனிலே யுளத்தை
    யிசையு நிலையேபதிப்ப தெதுநாளோ

இணையில் பொழிலால் வளைத்த திருமலையிலே நிலைத்த
    எழில்கொள் குகமாத வத்தர் பெருமானே.

தத்தன தனனா தான
தத்தன தனனா தான
தத்தன தனனா தான தன தான

**889.** சற்குண மிலாத லோபி பத்திமை யிலாத பாபி
சத்தியமிலாத கோபி யெனலாகி
தற்புகழினோடு மூழ்கி உத்தம சகாதியான
சற்சனர்களோடு கூட வறியாத
புற்குண விவேகமூட மட்டியை தயாளமீகை
பொட்டிய சதா விசார முடையேனை
பொற் புகழிலாத நாயை பட்டினி யுளானதீது
பொத்திய வகோரமேவு பவவாழ்வை
எற்குணமுனே வுளான வித்தினை வுளாறு மாய்கை
யெத்திய வியாதியாளி விடநோய்நேர்
இற்றிடு குலால பால தத்துவ விரோதியான
எற்கினி மனோ தயாளம் அருள்வாயோ
பற்குனன்முனே விலோடு வுற்றிடு புராரி பால
பக்குவ முளோர் கணேய முடையோனே
பத்தர்கள் விநோதசேம வித்தக மகாதியாக
பட் பொழிலுளே யுலாவு பெருமாளே.

தனன தனதன தன
தனன தனதன தன
தனன தனதன தன தன தான

**890.** கருணை யொழுகிய விழி யமுத மொழுகிய மொழி
கனக மொழுகிய மிளி ரியன்மேனி
கதிரி னொழுகிய வொளி யயிலி னொழுகிய கர
கவன மொழுகிய வடி யவர்பாலில்
பொருளை யுதவிய சிவ குமர பயிரவி யுமை
புனித பகவதி குண சிவாகாமி
பொறுமை யுடையவ டனை யருமை யுடைய வனை
பொருவி விளகிய மன துளதேவி

தருண முகிலென வருள் பொழியு மரகத வரை
தழுவு சுதை யெனவரு மகமாயி

தரும சுதபர வர முருக சரவண பவ
சமய வர நிதியென வுலகோது

மருமமிசை தொடை யணி பெருமபழனி யினுறை
வரத குருபர வளி மணவாளா

வளரு மருட்ட ராவி து ததியி னுதவுவை செக
மகிப திருமலை செயு பெருமாளே.

தாந்த தனதன
தாந்த தனதன
தாந்த தனதன தன தான

891. சாந்து திமிரா மேந்து குருபர
சாந்த மருவிய முருகோனே

சார்ந்த வடியவ ரார்ந்து வுயர் தனி
தாங்க வளர் கிற பெரியோனே

தீந்தண முதென வாய்ந்த மணி மொழி
தேர்ந்து பரவிய முனிவோர்கள்

சேர்ந்த குகை மலை நீந்து சுனை கரை
தேன் கொள் பொழில் பணை நதிமேடு

பாந்த ளுணு மயி லேய்ந்த புறமிசை
பாய்ந்த வுலகளை வனுவாகி

பாங்கி னலமுற வோங்கு மொரு மணி
பாம் பனருளிய வொருதேவா

காந்து பிணி மிடி மேய்ந்து வருதுயர்
காய்ந்த பருவர விடை மூழ்கு

காங்கை யறவருள் தாங்குத தியிது
காண்க திருமலை பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

892. அருளொழுகிய விழி பொருளொழுகிய மொழி
அழகொழுகிய வெழி லுடையோனே

அணி யிலகிய பணி பணி யிலகிய மணி
யணி யிலகிய உர முருகோனே
தெருளமை தருமதி மதியமை தருதயை
தினமமை தருகுண வடியார்கள்
செயல் செயமுற வருள் பொழி செயலுறு முக
திருமறை முடிதரு வியதேவா
உரு ளொழுகிய தன வளி யொழுகிய தினை
யுண வொழுகிய கிளி கலையோட
உயர் பொழுகிய நறை நிகர் பொழுகிய மொழி
யுற வொழுகிய சொலி மணவாளா
தரு வொழுகிய பொழி னிரை யொழுகிய முகில்
தர வொழுகிய வள மலைநாடா
தமியனு னருள் பெறு தரமென வருள் புரி
தளிர் திருமலை வளர் பெருமாளே.

தனனத் தனதன
தனனத் தனதன
தனனத் தனதன தன தான

893. கருணைத்தட முகில் அருமைக் கொரு முதல்
கனிவுக் கொரு கனி வெனலாக
கருதுத் தமமுனி வரர்கட் கருளிய
கதிரற் புதகுக முருகோனே
பொருநைத் திருமலை யதனிற் குடியுறை
புகணற் குருபர சிவநாதன்
பொரு வுத்தம குரு அடிமைக் கொரு மறை
புகனற் சரதமெ யுடையோனே
அருணைப் பெயர் மருவிய பொற் படிமை சொல்
அருளிற் புகழணி மணிமார்பா
அழகிற் கெழுகுற மகளைத் தினவன
மதனிற்ற டமுற வணைவோனே
திருநெற் பயிர் முகில் தழுவப் பொழில் வளை
செறி நற்பல மலி வளநாடா

செனனப் பிணியற வருளத் ததியிறு
சிமையத் திருமலை பெருமாளே.

தனன தனதன
தனன தனதன
தனன தனதன தன தான

894. கருணை நிறைவிழி மதுர மிளிர்மொழி
கவிகள் சொலுமடி யவர்பாலில்
கனக மலையருள் குமர குருபர
கவிழு பொழினக ருடையோனே
அருணடன மிடு முனது தெரிசனை
யடிமை பெறுவது மெதுநாளோ
அருணை கிரிமுன முனது திருவரு
ளமைய வுதவிய முறைபோல
பெருமை தருமுன திதய முகில் மழை
பெருக பொழிவது மெதுநாளோ
பிருகு குருமுனி வரர்கள் துதிபணு
பெருமை வெனதக முறைவாழ்வே
தருண மிதுததி மிடிகள் பொடிபட
சரண புறமிசை வரவேணும்
சரத பயிரவி புதல்வ திருமலை
சமய வாரிதி பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

895. அருளா னிறைந்த குருநாத வெங்கள்
அரசே முகுந்தன் மருகோனே
அநியாய மிஞ்சு படிமே லிடைந்து
அடியேன் வருந்த விடலாமா
தெருளாரு கின்ற முனிவோ ரகங்கொள்
சிவமே வணங்கு மடியார்கள்

செயலேது மின்றி துயரூடுளைந்து
சிதறு நலங்கள் தருவோனே

மருவே செறிந்த குழலா ரிணங்கு
மயல்போக வந்த னருளாலே

வரமே வழங்கு முருகா விலஞ்சி
மகிபா செயந்தி யுறைவாழ்வே

தருவே செறிந்த பொழிலூ ருறைந்த
தருவே நிறைந்த கொடையாளா

தமியே னிறைஞ்சு முறை வாழ்வு தந்த
தனநாக பண்டை பெருமாளே.

தந்த தன தான தான
தந்த தன தான தான
தந்த தன தான தான தன தான

896. பஞ்சுபட லான நோவில் நைந்து வுயிர் போக மேவு
பண்புபவ வாழி மீதி லெளியேனும்

பண்படகி லாது லாவி எண்பட விலாச மான
பைங்கரை யுறுமலேழை யிதுகாறும்

அஞ்சு தலி லேயே நாளு மிஞ்சுமுற வாய தாகி
ஐம்புல விரோதி யோடு தடுமாறி

அந்தி பகலேவு ருத சந்தி யறியா விசார
அந்தி தெரியா தெனுரு மயன்மூழ்கி

விஞ்சை யறியாத மாட லுதின்று பெரியோர்கள் கூற
வெந்தவுட லாயநீதி யடைவேனோ

வெம்பு பிறவாழி மேட தென்ற படியாக மூடி
வென்றி பெறவே வுலாசு மயிலேறி

அஞ்சலெனவோதிபாத பங்கயமிதே சதாவும்
அன்புரிமையாக வாழ்வை யெனலினி

அஞ்சொலருள் வாய்குமரா பண்டை குருநாதசேமம்
அண்டுதிரு நாகமேவு பெருமாளே.

தந்த தன தானத் தான
தந்த தன தானத் தான
தந்த தன தானத் தான தன தான

**897.** மங்கையர்களாசைப்போதில் வண்டுலவல்போலெப்போதும்
வந்துபிற வாழிக்கான மயன்மூழ்கு

மண்டுதவி லேயெக்காலும் நின்றுவிளை யாடிப்போதை
மங்கவிட வேவுற்றோர்கள் வழிகூடி

சங்கையில வாகத்தால மொன்று பவவிணர்க்கான
தந்திரவு பாயத்தோடு இதுகாறும்

தந்தவித மேவுற்றோரி னைந்துபலமே யற்றோடி
சங்கட விசாரத்தோடு மெலிவாகு

பங்கையுற வாகத்தேடி நின்றநெடு நாளைக்காணில்
பந்தபிற வாழிக்கேது வெனலாலே

பண்மைபை நகரீசர்க் கான சுந்தர குமாரத் தேவை
பண்புருக நாடிப் பாடி பலகாலும்

தங்க வளர் ஞானத்தோடு வென்று நிலையாகச் சேரில்
சந்தத தயாளத்தோடு இனிதான

தம்பதியானைப் போதை தந்தருளு வாய்நட்போடு
தங்கு திருநாகச் சேம பெருமாளே.

தந்தந்த தான தன
தந்தந்த தான தன
தந்தந்த தான தன தன தான

**898.** கண்டொன்று பேசியவர் பின்பொன்று கூறிவரு
கங்கென்று பேசுவரும் அறிவினர்

கண்கண்ட மாமறையை புண் கண்டமாக நினை
கம்பொன்றலான தடி முழுமூடர்

எண்கண்ட மாபெரியரின் கண்ட தூயமொழி
என் கண்டதாகு மென வுரையாடி

எங்கெங்கு மேவி பவ துன்பங்களே புரிய
என்றென்றுமே வளரு கொடியோர்கள்

மண்கண்ட மீது நரசன் மங்களாறறிவு
வம்பென்றதாய் மிருக மெனலாகி

வன்பங்க மேவ வுயிர் நைந்தங்க மாக சிதை
வன் சிந்தைமேய நெறி வினையாளர்

அண்டிநந்த லோகமிசை என்றுன் பவாழியற
அன்பொன்று நீயருள வருவாயோ

அம் பண்பைநாத திருவின் குன்றிலே வளரும்
அம்பொங்கமேவு குக பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

**899.** துன்ப வேதை பிணுழல் வாழியை
நைந்து ளாருயிரே யறவே புரி
தொந்த மார்பவ மேவிய பேதமை யுடையேனை

துங்க மார்பத மாகிய தாமரை
யெந்த வேளையில் நீதருவாயென
தொண்டிலே மனமேவிய பாவியை இனியேனும்

அன்பினோ டரிதாகிய மாபத
வின்பமே வளர்தாயகமே யருள்
அம்பை நீலிகு மாரிச தாதயை யுளதேவி

அங்கணாயகி மாதுமை யாளருள்
மங்கை வாலை மனோன்மணி நாயகி
அந்த காரமகா குழலாளெழின் மகமாயி

பொன்ப யோதரி நாரிவாரி நல்
அன்பர் நேய மனோகரி காரணி
புந்தி வீழர னேடுறவாடிய செகமாதா

புன்செய் கானக சூரி குணைகரி
செண்பகாடவி வாழு தயாபரி
புன்க ணோர்துயர் தீரவ ரோதய சிவகாமி

என்கணாடுறை மாமறை யாசனி
தந்த பால விநோத நலாதரம்
என்றதேவ குகாபரவேரக முருகோனே

இஞ்சி மாதுளை மாபல வார்க்கமு
கென்று மேயடர் சோலைகள் சூடிய
இந்துமே வருமா திரு மாமலை பெருமாளே.

தான தன தான தான
தான தன தான தான
தான தன தான தான தன தான

**900.** மாதவர் தயாளா மான வேல்முருக நாதசேம
வாரணகுகா குமார முருகோனே

வாலையபி ராமி தேவி நாரிகவு மாரி காளி
மாவரதியான மோன மகமாயி

சாதனை யிலாத பேர்கள் பாவிலணு காத மாது
தாப தர்களோடு லாவு மெமதாயி

தாரணி குமாரி வாமி பூரணி வராகி காமி
சார் தரணிபீட மேவி வளர்வீரி

வேதுகவி வாணர் நாவி லேவுதயமான நீலி
வேர்முறை விசால மான பரமாயி

ஊர்வன பலான தான சீவனை யாகி நாளும்
ஊறறம காதியாக மனதோடு

வேதனை யிலாது மீய ஆறுமுக நாதனென
வீர குருவான ஞான முடையோனே

வீணில் பிறவாத சேம மான திபாத மீவை
மேன்மை திருநாக மேவு பெருமாளே.

தனதன தனனா
தனதன தனனா
தனதன தனனா தன தான

**901.** மரகத மலைமே லிலகிய முருகா
வரபர குமரா சேகவீரா

மணி யொளிர் முகின் மால் மருமக னெனவே
வருசிவ சுதனே குகவேளே

அரவணி சிவனார் தெளிவுற மறையோ
தறுமுக சூறமா தணைவோனே

அலைகட லுலகூ டெனை யொரு நாளு
வமைவுற முனமே யருளோடு
தரவிது வரை நான் மனமய விடையே
தளர்வுற விடலா லெளியேனும்
ததிதொறு வருமா பிணிமிடி பகையால்
தமியனு மிகவே தடுமாறி
உரமுடை வதனு விடிபடு பணிபோல்
வுறவெனை விடலா லுலகோர்கள்
ஒருவரு மதியார் கருணை செய்பரனே
உயர் திருமலை மேல் பெருமாளே.

தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன
தந்த தானன தானன தானன தன தான

902. கந்த நாதகு காகருணாகர
செந்திவேல மயூர தயாபர
கங்கை மாமதி கூவிள மோடரு கிவையோடு
கண் கொளாவிட மேவிய மாபணி
தங்கு மாபரணாதிக ளோடுயர்
கண்ட மீமிசை மாவிடமே கொளு மொருவீரன்
அந்த மார்பரை நாடகமே செய
வொன்ற வாடியுளே நகை யோடவள்
அஞ்ச கான்விரன்வார் குழையோடுற நடமாடி
அம்பை நாணுறவே வயமாகிய
செஞ் சொலாதரன் மாமறை யாசனன்
அங்கியாக மகாகரி தோலணி சிவநாதன்
பந்த மாயையினுலடர் வேதனை
யஞ்சி யோடசதா தெளிவே யருள்
பண்பினேய குணாலய னாகிய மகதேவன்
பண்பை வாணக ரீசனு மாபரை
தங்கு வாமமுமே வமைவாகிய
பங்கை யாளிப யோதர நேரிய கொடையாளி

தந்த பாலக நாயக தாயக
எந்தை யாரண மேலுறை தூயவ
தந்தி மாமுகனன கணாதிப விளையோனே

சங்கையாளி சகோதரி காள்முளை
அன்பினோடினிதார் நலமே யருள்
தண்டலா கரமா திரு மாமலை பெருமாளே.

தந்தன தன தானன தானன
தந்தன தன தானன தானன
தந்தன தன தானன தானன தன தான

903. சங்கரீ செக மாது மனோன்மணி
அன்பராதர மாபரி பூரணி
தண் குணகரி சேல்விழி மாதுமை மகமாயி

தண்டயாளை மஞ்சரி மாமறை
யின்கணே யுறைதேவி பராபரை
சந்திரோதயமே நிகர் பானகை யெமதாயி

பொங்கரா விரன் மோதிர மாமென
வுஞ்சதா வணிவீரி நலாதர
புந்தி வீழ்மக மாதவர் பாலுறை சிவகாமி

பொன்செய் வார்நக மாமி மயாசல
மங்கை நாரிச தாபணி வோருமை
பொங்க மேறு வரோதய காரண செகமாதா

திங்கள் சூடர னொரு பாலமை
யெங்களுயகி காடு கிழாணளிர்
சிங்க வாகன மேறிய மாரியு மெனலாகி

செண்பகாடவி வாலையெ னோடுறை
கின்றதாய் பவ வாதனையே யற
சிந்து கோப முளாளினி தோடமை திரிசூலி

கொங்குலாவிய கார் குழலாடர
வந்த பாலக சேம தயாநிதி
குன்று தோறுயிர் பரினிறைதா பதர் பெறுவாழ்வே

கொண்டலே படிமா பொழிலூரிறை
யந்தணோ ரியனேயாதர வாலருள்
கொஞ்சு மாதிரு மாமலை மேவிய பெருமாளே.

தானன தனந்த தான
தானன தனந்த தான
தானன தனந்த தான    தன தான

904. நானெனு மகந்தைமேவு பேதமை யிணங்கரோடு
நாடொறு மலைந்துலாவி    வினையாடி
நாணுறு சினம்பராவு பாதக விரும்பியாகி
நாணிலி வடைந்தபேய    னெனலாகி
தானென நிறைந்தஞான வாழ்வினை புணர்ந்திலாது
தாய்கரு விருந்துமேனு    மிடர்மூழ்கி
தாரக மெனுஞ்சொலோமி னாரிய பதங்கணுடி
தாயக மறிந்திடாத    படியாக
ஊனெனு மதந்தளாடு பாரிடை பிறந்தனேக
ஊர்தொறு முழன்றுவீணி    லலையாமல்
ஓமென விளங்குமோன தாமரை நினைந்துணைய
ஊகுறி லடைந்துவாழும்    அருள்தாராய்
மானென வுயர்ந்தகானம் வாழ்மறை தருந்தயாள
மால்மகள் குறிஞ்சி வேடர்    மகளாகி
மார்பிடை பொருந்த யானை யேவர மணந்த தேவ
மால்திரு நகங்கண்மேவு    பெருமாளே.

தனந்த தானன தானன தானன
தனந்த தானன தானன தானன
தனந்த தானன தானன தானன    தன தான

905. அகந்தை மேவிய கூடினை யேசின
மிகுந்து லாவிய பாவினை நீசிறி
தறிந்து பேதமை போய்விட வோர்மொழி    தரவேணும்
அகன்ற பூவிடை யேகர ணயெனை
யிருந்து வாழலொடம காவிபி
அழுந்தமே வரைமா வயனர்பொறி    யறவேசீர்
சுகந்த பாதமெனுர் சிரமேவுற
நலங்கள் சேர மனேலய வாழ்வினை
சுரந்து நீதி யெனுளினிலேதா    வருவாயோ.

துதைந்த மாமல ராணிறை வார்பொழி
லுறைந்த மாநக ராலய மாடமா
சொரிந்த மாமழை யானிறை நாடக முடையோனே

புகழ்ந்து தேவர் பராவிய மாகமு
கிருந்து வாழ்மலை யாசன மார்தனி
பொருந்து ஞான வரோதய சேவக மயில்வீரா

புனைந்து தேனுறையே நிறை மாலைகள்
வனைந்த மார்ப பயோதரமே நிகர்
பொருந் தயாள மகா கொடையாளியு மெனவான

அகஞ் சதாநிலை வாரண மேலுயர்
குகன் பராபரை மாரி வராகி பொன்
அமைந்து சேர்குழல் வாய்மொழி மாதுமை மகமாயி

அருந் தபோ நிலையால் வரு பாலக
சிறந்து வாழ் திருமாமலை மேவிய
அறஞ்செய் வோருள்மே னிறைகாரண பெருமாளே.

தானந்த தான தான
தானந்த தான தான
தானந்த தான தான தன தான

906. ஆனந்த ரூப மான மோனந்த வாழ்வி னேயம்
ஆரன்பரோடு ளான முருகோனே

ஆறொன்று பூமி மீதிலே நின்ற வேழை யேனை
ஆள்கின்ற தான பாவ மயலூடே

தானந்த வோடி யாடி மானந்த மாதர் மீது
சார்கின்ற தான மாய்கை யிடைமூழ்கி

தாலங்களூடு வலான விறங்கிமேவ நாளை
சாலங்களாக நீட விடலாமா

மானந் தியாக மேவு கோனங் குமார நீலி
மாதம்பை காளி சூலி மகமாயி

வார்கின்ற வோதி யாதி சேர்கின்ற மாரி வீரி
மாறங்கை யார் வராகி யெனுமாதா

கானம்பு வீரர்களோடு தானின்று காவலாக
கூறொன்ற லாகமேவி யருள்வோனே

காமன் சதாதி யான மாயென்று மேவு சேம
கார் பண்பை நாகமேவு பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

**907.** படமுடியாத பந்த வினையிடை யேழை நைந்து
பவவுடலாக நின்ற வெளியேனை

பகையென லாக வொன்ற இகழ்மொழி யாலினைந்து
பதறுற வோது கின்ற கொடியோர்கள்

கடமறவே லெறிந்து பிளவேழவே வகிர்ந்த
கனை கடலாக நின்ற மயில்வீரா

கதி தருவேளை யென்று குருபர நாத கந்த
கருணையினு லிரங்கி யருள்வாயே

திடல் திடலாக நின்ற படையுடனே யெழுந்து
செறுமசு ரோட வென்ற பெரியோனே

திருகியதான கொம்பர் தகர்மிசை யேறி யண்டர்
செயமுறவே யெழுந்த வொருமேதவா

நடமிடு நாரி யம்பை பயிரவி நீலி நங்கை
நயனனுகா தெழுந்த மகமாயி

நவிர் தவமே வளர்ந்த வொருசுத ஞான பண்பை
நகை திருநாக மர்ந்த பெருமாளே.

தனதன தனதன
தனதன தனதன
தனதன தனதன தன தான

**908.** இனிவுலகி டையுறை முறை தாமிலை யிலை
யிதுவொரு சரதமெய் அறிவாயே

எளியவ னெனபல கொடிய வருறை சொலு
மிழிவினி லிதுவரை யடியேனும்

பனிவுறுது யரினில் மயலுற விடுவதில்
பயனிலை மலைமக ளபிராமி

பரைவுமை பகவதி திரிபுரை யறமகள்
பயிரவி மருவிய சிவநாதன்
தனிநுதலி னிலெழு பொறி யொரு வுருவென
தழைவுறு குருபர முருகோனே
சரவண பவகுக வெனதகை மலருறை
சதுர் மறை பரவிய செகதீரா
மனிதரி லெனை யொரு பவ வடிவினனென
மருவிய சிறியபுன் மதியேனும்
மகிழுற வருடரி யிதுவென பதமருள்
வளமலி திருமலை பெருமாளே.

தனதன தனன
தனதன தனன
தனதன தனன தன தான

909. மனமய விலாத வணமுயர் தயாள
மதியினை யெனுளி லருள்வாயோ
மகிதலமு ளோர்கள் இகழு நெறி பேணு
மடைமை யுடையோர்கள் பவமூடர்
தன துரிமையாக பிறர் பொருளை வாது
தருவிரகி னோடு பலகாலும்
தன மலிய நேடு கொடிய வினையாளர்
தரமிலுரை யாடு கொடியார்கள்
இன மொடுரை கூறி செல பினுரை வேறு
இசைய மொழி கூறு மிழியாளர்
எனை யொருவி ரோதி யென பலது பேசு
மிசை மனது வேச முடையோர்கள்
தன மொடவர் வாழ்வு மகள் சுதர்கள் மாள
சரணமிசை யேறி வரவேணும்
தழை பொதுளு சோலை நடு நகர் விலாச
தளிமலிகுநாக பெருமாளே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

910 வரத குருநாத கந்த குமரி சிவகாமி மைந்த
மகிப குறமாதணைந்த முருகோனே
வழி யடிமையாகி வந்து வுனது கழலே படிந்து
மருவு மெளியேனை யுந்த னருளாலே
இரத முறைகூறி யன்பு பலுகு முறையோ டெழுந்து
இது தநியிலே வழங்க வரவேணும்
எளிய னெனலாக யிந்த வுலகின் மிசையே நலிந்து
இடரிலுடைவாகி நைந்து உழல்வேனோ
சரத முறையாக மங்கள் தவறு தலிலாதுணர்ந்த
தவவிரதர் பாலமைந்த குருநாதா
சருகுபல மூலமுண்டு குகை யினிடமே வதிந்து
சபரி முறையே புரிந்து வருவோர்கள்
வர தருமமே குறிஞ்சி நிலவு தயமே மறஞ்செய்
மரபினுரமே யிலஞ்சி நகர்வாழ்வே
மழைகள் மிகவே பொழிந்து வளரு பொழிலூர் குடங்கள்
மகிழ்செய் திருநாக மர்ந்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

911. மிடியூ டிடைந்த படிவாழ்வி லொன்றி
மெலிவாகி நைந்து பலநோவும்
மிகமேவி யெந்த னுயிர்மாள வந்து
விளையாடு கின்ற வினையாலே
தடியா லுடைந்த வனைபானை யென்ற
தரமாக நின்று மனமாழ்கு
தமியேனு மெந்த விதமாய் நினைந்து
சாணுலயங்கள் பெறுவேனோ.

துடிமீறு செங்கை யயில் வேலணிந்த
துரையே இலஞ்சி வயலூரா

துதி பாடுகின்ற கவிவாணரின் சொல்
தொடையா விலங்கு மணிமார்பா

கடிசேரு பொங்கர் வளை யூடிலங்கு
கனிமேவுகின்ற பொழிலூரா

கனசோதி யண்டர் பெரு வாழ்வு தங்க
கதிர் நாக மர்ந்த பெருமாளே.

தனந்த தானன தானன தானன
தனந்த தானன தானன தானன
தனந்த தானன தானன தானன தன தான

912. மலர்ந்த வாசக மாமறை மாமனு
வுணர்ந்த தேவர்கள் தேடிய வாபர
வரைந்த மாபொரு ளாதர மாகிய முருகோனே

வணங்கு நேயர்க ளோடுற வாடிய
முகுந்த னூர்மரு காகுக மாதவர்
மகிழ்ந்த வோமுறை மேலுறை வாகிய பெருவாழ்வே

அலர்ந்த பூவென வாடுற வேவிடல்
நினைந்து நாடொறு மேபணி யேழையை
அறஞ்செய் வாரக மேவிய பூரண முருகோனே

அனங்க னேரில தாமெழி லாலமை
சிறந்த மாகரு ணாலய வாரிதி
அடர்ந்த கானிடை மாகுற மாதணை புயவேளே

சலந்த ளாடும காகொடி தாகிய
மனஞ்ச தாதுயர் மூழ்கிய மூடனை
தழைந்த பாவம தேபுரி வாதியை மடையேனை

தவஞ் செயாதவ னாகிய காமியை
இடைஞ்ச லோடுறை யேழையை கோழையை
தனங்கள் தேடுறு வேதையி லேவுழல் எளியேனை

இலங்க வாழ்வருள் வாயல தேயெனில்
வயங்கொள் வேலினை யேவி யெனாருடல்
இறந்து வீழ்பட வேபுரி வாய்ததி முருகோனே

இரங்கி யாளு மனோலய மோயிலை
வருந்து தேகமு மோமெலி வாயின
இறைஞ்ச வேவள்ர் மாதிரு மாமலை பெருமாளே.

தனந்த தானன தானன தானன
தனந்த தானன தானன தானன
தனந்த தானன தானன தானன தன தான

**913.** கடந்த ளாடிய தாதலி னோவினி
இருந்து வாழ மனோலய மோயிலை
கரைந்து கூறிய தோர்கிலை யாதலி னெளியேனை

கழிந்த நாயினை யாள்பவர் வேதனை
மிகுந்த தாமென கோல்கொடு மாவினை
கடிந்து வீடுவ ராமெனு மோர்முறை யதுபேணி

அடர்ந்த வேலினை யேவி யெனுருடல்
பிளந்து ளாவினை நீகொளு வாயெனில்
அறிந்து ளோர்களு மேபுகழ் பேசுவ ரதனாலே

அமைந்த தாயக மேனுறை பூரண
சிறந்த தாயக மாகிய சேவக
அருந்து மேதவமு தாகிய வாசக முடையோனே

படந்த மாவகி வாசுகி வாயுடல்
வருந்த மேவிய மாரண வேதனை
பறந்து வோடிட வேபுரி நாயக முருகோனே

பறந்தெ ளுவினை நீகொளு வாய்ததி
முகுந்து மாதவ னோர்மரு கூருக
பலங்கொள் வேலம யூரப ராபர வாதீபா

இடங் கடோறு முலாவிய மாசிவ
சுதன்றயாள மனோகர நேயர்கள்
இடைஞ்சல் தீர சதா நலமேசெயு மொருதேவா

இலஞ்சி மாபொழி லூரினில் வாழ்பவ
துலங்கு வேத மகாமுடி மேலுறை
இலங்கு மாதிரு மாமலை மேவிய பெருமாளே.

தன தான தத்த
தன தான தத்த
தன தான தத்த தன தான

914. அனலூடு பட்ட புழுவாக நித்தம்
அழிவான சித்த முடையேனை
அருளால் நிலைத்த பதவாழ் வளிக்க
அரசே யெனக்கு னருடாராய்
முனமார் கரிக்கு மிளையோய் கரிக்கு
முதல்வா வளிக்கு முரியோனே
முருகா பரைச்சி சிவகாமி பெற்ற
முதலே தவத்த ரகவாழ்வே
அனமார் மடுக்கள் பல தாயடுத்த
அழகே நிருத்த மிடலான
அணியாரு பட்டை நகரே நிலைக்கும்
அமுதாக நிற்கு முருகோனே
சினமே மிகுத்த கொடியோர் குலத்தை
சிறுநாள் படுத்தி சுரர்வாழ்வு
திறமாய் நிலைக்க வரமே யளித்த
திருநாக முற்ற பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

915. எனைவாதை யின்க ணொன்றி விடமோது கின்ற பங்கம்
இணைபாவ துன்ப மென்ற வொருதேவு
எழிலோட வந்து துன்ப மயமாகி நின்றுடன்ற
இசை வேதியும் பணிந்து மிதுதாறும்
தினையாதி யென்ற பங்கு மிளகாத பண்மைந்த
செயலே நினைந்துனைந்து வொழிவேனோ
தினைகாவல் கொண்டடர்ந்த குழன்மாது கொண்ட கந்த
திறலோய் முகுந்து வந்து மருகோனே

அனைபோ லிரங்கு மன்பு புரிவோய் மனங்கனிந்து
அருகாக வந்துவுந்த னருளாலே
அடியேனை யஞ்சலென்ற படியாக இன்சொல் தந்து
அடிசேரு கின்ற பண்பை யருள்வாயே
பனைபோலு ருண்ட தும்பி கரமா முகன்றனன்பு
படரா ரணஞ் செறிந்த முருகோனே
பழமேவு கின்ற பண்பை குடமேவு கின்ற வன்பர்
பதிமேவு கின்ற குன்றில் பெருமானே.

தனந்தன தான தான
தனந்தன தான தான
தனந்தன தான தான தன தான

916. வருந்திய யெனுளு மோதி வருந்திற மோர்கிலாது
மறந்தனை யாகிலேழை யெவர்பாலில்
வணங்கிய நேர்மையோடு புகன்றிட வேறுவாகும்
வரைந்தறி சேமநாத முருகோனே
அருந்திய பாவமுடை துடர்ந்தெனை நோவ நோவ
அறுங்கட மாகவீழ விடலாமா
அமைந்த வெனுவி மாய விதந்தெரி யாதுலாவி
அழிந்தனனே மயூர முடையோனே
பொருந்திய ஞான வாழ்வு தெரிந்தில னுகிவிண்ணர்
பொருந்திய தான மேவி யுறவாடி
புகன்றிட வேதையான பவந்தரு காமபீடை
புலன்கெட வோடி வோடி வரலாலே
மருந்தருளாவி ஞான மெனுந்தகை யானசோதி
வளம்பெற ஆளவேணு முருகோனே
வளம்பொழி லூரின்மேலை பழம்பொழில் சூழலூடு
மணந்திரு நாகமேவு பெருமானே

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

917. குருவாக வந்து குருவே புகன்று
குணமே வழங்க வரவேணும்

கொடிதான பந்த பவமுடை கொண்ட
கொடியே னிலங்கு புவிமீதில்
உருவாக வொன்றி இதுநா ளமைந்த
வுணர்வேது மின்றி உலைவேனோ
உனையே யடைந்த யெனையாள வென்று
உயிர்போ கணைந்து விடுகாமுன்
அருகாக வந்து வுளமே புகுந்து
அரசேபதங்கள் தருவாயே
அனையா தரங்க டருவோ யெனன்பி
னமைவே சிறந்த மயில்வீரா
பருகாதல் கொண்ட குறமாத ணைந்த
பகவா செயந்தி வரைவாழ்வே
பதிமேவு பண்பை திருநாக மர்ந்த
பலமேறு கின்ற பெருமாளே

தனந்தன தனனா
தனந்தன தனனா
தனந்தன தனனா தன தான

918. இனந்தய விலையா மனங்கசி விலையா
இவண்தய விலையே லெவர்பாலில்
எழுந்துரை புகல்வேன் மனந்தளர் வுடையேன்
இசைந்திடு மருளே புரியாயேல்
சினந்தரு மயிலால் வகிர்ந்திட வருவாய்
திடம்பெறு முருகா வரதீபா
சிதம்பர மனுநீள் முனம் பகீரவா
திருந்திய வரமே யருள்வோனே
அனஞ்செறி வயல்சூழ் தடம் பொழில் வளமே
அடர்ந்திடு பொழிலூ ருடையோனே
அனந்தசு முனையே அடைந்தவ னெனவே
அறிந்திலை யெதனை லறியேனே
கனம் பெறு முதல்வா தவம்புரி பெரியோர்
கணந் தழுவிய சீர் வயலூரா

கமழ்ந் தெழுபுழுகே வழிந் தொழுகியமா
கனிந்துறை மலைமேல் பெருமாளே.

தனந்தன தனனா
தனந்தன தனனா
தனந்தன தனனா தன தான

919 மறந்துனை யறியே னினைந்துனை யறியேன்
மகிழ்ந்துனை யறிவே னெனவ்லான

மனந்தரு குமரா அறந்தரு முருகா
வனந்தரு பொழிலூ ருடையோனே

பிறந்தனன் முனைநாள் எழும் பவவினை யால்
பிறங்கிய தலமே புரியாத

பெரும்பத மெனவே தருஞ்செய லறிவே
பிறந்திடு மௌியே னிதுநாளும்

கறங்கினு மரிதாய் சுழன்றிடு பொறியே
கழிந்திடு பெரியோ ரிடமேவா

கணங்களி னிடையே வதிந்தனன் முறையே
கனஞ் செறி பொழில் சேரெழினுடா

அறம் புரிபவ ரோ டிலங்கிய பகவா
அனஞ்செறி வயலூர் கதிர்காமம்

அமைந்தருள் புரியும் நலந்திகழ் முகிலே
அணிந் திருமலை மேல் பெருமாளே.

தனத்தனத் தனனா
தனத்தனத் தனனா
தனத்தனத் தனனா தன தான

920. சொலிச்சொலித் தயரா லுத்தினைத் தனனே
துணைப்பதத் தினையா திதுகாறும்

சுமைப்பவத் திடையே அமிழ்ந்தி யெற்கினிதார்
சுகிர்த்தளித் திலையால் மனமாழ்கி

கலிப்பிணிப் பகையால் புலப்பிணிப் பிதனால்
கருப்பபாற் குடைவே மிகலாகி

கரைத்துடற் சுடுகா டிடைப் படற்கியல் பாய்
கழித்தெனக் கருளா தநிறைலே
பலிக்கொளற் குரியோ ரெனக்கரத்த யிலால்
பகுத் தொழித்திது நாள் புரிவாயே
பசித்தழற் கிடையே மிடித்தழற் கிடையே
பகைத்தழற் கிடையே தடுமாறி
நலித்துடைத் தனனல் இனிப்படக் கழியா
நமற் கடுக்கவுமோ விடலாகா
நளிர்ப் பொழிற் கிடையே வரப்பொறிப் பறியார்
நதிக்கு வட்டமுகேர் பெருமாளே.

தன தான தான தந்த
தன தான தான தந்த
தன தான தான தந்த தன தான

921. கருகூல மேசிறந்த குகவோல மேயிறைஞ்சு
கதிரோல மேவணங்கும் அடியார்கள்
கனிவோல மேகுறிஞ்சி நிலவோல மேசெறிந்த
கணவோல மேநிறைந்த உலகேழின்
உருவோல மேமகிழ்ந்த மனவோல மேவிளங்கும்
ஒளிவோல மேயெனுஞ்சொல் பலபேசி
உயர்தாளை யேநினைந்து வருமேழை பாவபந்த
உறைவான மூடைகொண்டு பலகாலும்
நிருமூட மாகியன்பி லுருகாத தீயசிந்தை
நெடிதாகி நாளுநைந்து மயல்மூழ்கி
நிலையே யிலாதமைந்த மிடிவாழ்வி லேமயங்கி
நிலையாத மாதரின்ப உறவாடி
மருவாசை யானிறைந்த கொடியேனை யாள்வதென்று
மறைபேசு வாசகங்க ளிலையேனும்
வராசனையிரங்கி யருள்வாய்கு மாரகந்த
கெடாத யாளபண்பை பெருமாளே.

தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தன தான

922. மனத்தமை துயர்க்கட லினைப்பொடி படுத்திரவல்
வரத்தினை யளிப்பது மெதுநாளோ
மதிப்புவ ருளத்திடை யிருப்பவ பவத்தினை
மணித்தருள் செயச்செய மயின்மீது
தனத்தன தனத்தன வெனப்புக னடத்தொடு
தளித்தெனை பணிக்கொள வரவேணும்
சகத்தெழு பிறப்பினி லிளைத்தன னிதுத்துணை
சகத்திர சகத்திர மெனலாக
கனத்திரள் படுக்கிய யுகத்திடை படைத்தது
கணக்கிடு தொகைக்கெலை மிகலாலே
கதிர்க்கட னிகர்த்தவ யிருட்கட லொழித்தொரு
கணத்தினில் பதத்துணை யருள்வாயே
வனப்பொழி லுடுத்திய திருப்பொழி னகர்க்கிறை
வனப்பமை குறக்கனி மணவாளா
வரைக்கர செனப்புகல் திருப்பதி மலைத்தளி
வகித்துறை குகப்பர பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

923 மனதுபு ணுகி நொந்து கடமெலி வோடுளைந்து
வறுமையி னுலைந்து மனமாழ்கி
வருதலி லேபடர்ந்த கடைகொடி யேனை யுந்தன்
மலர்சர ணூல யம்பொ னருளாலே
தனமிகவே நலஞ்செய் முறைமையி லேசிறந்து
தருநெறி யேபிறங்க வரவேணும்
தவமுனி வோர்கள் கெஞ்சு கிறபர நாத பண்பை
தலமுறை யோக செந்தி லுடையோனே

அனவர தாதி யண்டர் பரவிய சேம விந்த்ரன்
அருள்கரி மேவு துங்க மணிமார்பா

அருவரை சார்பமைந்த தினைபரி பாலனஞ்செய்
அணிகுற மாது கொஞ்சு முருகோனே

கனகனை தூணி னின்று பிளவெழ மோதி நின்ற
கருமுகில் மாம னென்ற முறையாளா

கயவர்க ளேற வஞ்ச திறமுறை வாயெழுந்த
கதிர் திருநாக மர்ந்த பெருமாளே.

தந் தனத் தன தன
தந் தனத் தன தன
தந் தனத் தன தன தன தான

924. அன்பெனப் படர்கொடி மன்புவிக் குடலுயிர்
அஞ்சலித் திடுமடி யவரோடு

அந்தரத் தமரர் செய் வந்தனத் தருள் தர
அஞ்சிகிப் புறமிசை வளர்வோனே

இன்பெனப் பரவிய உன் புகழ்க் கவிசொலி
யெந்தை யெற் கருளென வுனையோதும்

என்றனக் குனதரு ளன்றியைத் தாமன
தின் றிலெற் கருள்பவ ரெவராகும்

பொன் பதச் சரவண பன்னிரு நற் குருபர
புன்பவத் திடையிடை யுழல்வேனை

புங்கவற் பவகுக சங்கரற் கொருசுத
புந்தியிற் பொடுமருள் தரவேணும்

வன்றிறத் தழகிய கந்துடைப் பிணிமுக
மண்டபத் தெழிலமை முருகோனே

மந்திரத் திருமலை யம்பதிச் சிரமிசை
வண்குணத் திலகிய பெருமாளே.

தனன தன தான தத்த
தனன தன தான தத்த
தனன தன தான தத்த தன தான

**925.** கருமபவமே மிருத்த கொடியவினை யாவி லாத்த
கடவசட மூடமட்டி யெனலான
கடையனெளி யேனை நித்த சலன மன தேபடைத்த
கபடுடைய நாயை யெத்தி விதுநாளாய்
தருமபதி யேனி கர்க்கு மென்பெரிய ரேவுமைக்க
தனது வெளிவேச முற்ற கொடியேனை
சலமி கவுமே படைத்து தளர்வி னிடையே யலுத்து
தவறு தவிலேவ லுத்த மடையேனை
வருமவனமே பழித்த சிறுமை தனிலே நிலைத்த
வாவி னிடையே கலித்து மடியான
வருமிடிய தேதா வைத்து பிணிது யரிலேச வித்து
வலிய ரவமே கடித்த விதியேனை
உருமு படுநாக மொப்ப மெலிவினுறு மேழை சித்தம்
உயுமுறைமை யான சித்தி தருவாயே
உயருமொழி லாரிடத்தில் பவனி வருவோய் தவத்த
பொரிகொடிரு மாமலைக்குள் பெருமானே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

**926.** உலகி னிடையே யிருந்து வரமுனதி லாது நைந்து
உழலு மெளியேனை யுந்த னருளாலே
உபய பதமே வணங்கு முரிமை மிகவே வழங்கி
உதவி புரி வாயிலஞ்சி யுறைவாழ்வே
பலகலை சதா வணங்கு முறை நிறைவிலே யெழுந்து
பரிவு குகநாத செந்தி லுடையோனே
பழவடிமை யாகி வந்த சிறிய னெளியே னிறைஞ்ச
பதமலரிலே யிணங்கும் அருடாராய்.

நலமலி விசால பண்ணை பழனி மலையோடு கங்கை
நகமுலவு நாத கந்த முருகோனே
நளின பதசே மதுங்க குமர சிவகாமி மைந்த
நளிர் கொடிருமால் முருகந்தன் மருகோனே
தலமகிமை யாகி யென்று மிவிரு புகழாக நின்று
தவவடிவிலே விளங்கு மலைதோறும்
தவசு புரிவோர் கடங்கள் அகமுதல் தாய மைந்து
தனிரு திருநாக மர்ந்த பெருமாளே.

தனதன தனத்த
தனதன தனத்த
தனதன தனத்த தன தான

**927.** உலகினில் வசிக்கு முறையினை யொடுக்கி
உனதருள் பதத்தை யருள்வாயே
உலைவிடை படுத்து மயவினி லலுத்து
உனைவுறு தாத்தி விதுநீறும்
சலமுற வமைத்த படியினை உரைக்க
தமிழ் மொழி யினுக்குள் அறியேனே
தவமனர் களுக்கு புவிமுத லளித்த
தருமுதல் வனுக்கு மருகோனே
பலகலை படைத்த குருமுனி வருக்கு
பகாரு மறைக்கு உமையோதி
பலமுழு வளித்த குருபர வெனக்கு
பவமற நலத்தை யெதுநாளில்
நிலைபெற வகுப்பை யலுதெனில் கடத்தை
தினதயில் பிளக்க விடவேணும்
நிசி நிற மூடுத்த பொழில் வள மிகுத்த
நிதி திருமலைக்குள் பெருமாளே.

தந்த தனத்தன தானன தானன
தந்த தனத்தன தானன தானன
தந்த தனத்தன தானன தானன தன தான

928. வஞ்ச மனத்தினிலாகிய வேழையை
கஞ்ச மனத்தினரோ டுறவாடியை
வம்பு பழுத்தமைவாகிய பேழையி லுழல்வேனை

வண்டர் களுக்கெலை யாகிய பாதக
முண்ட விடத்தன கோபியை சாதனை
வந்த கணத்தவ ராலிகழ் வாதியை முடையேனை

தஞ்ச மடுத்தவர் பால்வினை மூடியை
வெம்பி வருத்துசதா துயர் சூடியை
தம்பு பவக்கட லூடிறைபேய கொளு மெளியேனை

சண்டை பிடிப்பதிலே மிகு காமியை
பம்பு முடற்பிணியா னலிவாளியை
சங்கடமுற்ற வியாகுல மேவிய கொடியேனை

அஞ்ச லெனச்சொலு மாதர வாகிய
செஞ்சொலினைத் தருவாயெனவே துதி
அன்பை நினைத்துன தாண் மலரே தர வருவாயே

அம்பிகை சிற்பரை தேவி மனோன்மணி
சங்கரி சற்குண மாது தயாபரி
அந்தரி யற்புத காளி குணாலய முளதேவி

கஞ்ச பதச் சிவகாமி பராபரை
மஞ்ச சகத்திர நாம வரோதய
கந்த செகப்பர நாத மயூரமு முடையோனே

கங்கை யுதித்தன வேசனை கூடிய
பொங்கர் வனத்தணியார் திருமாமலை
கண்டு நிலைத்தருகா கிருபாநிதி பெருமாளே.

தனன தனதன
தனன தனதன
தனன தனதன தன தான

929. இரத மணிமுறை யதனை நலமொடு
பிணி தின்றருள் செய வரவேணும்

எமது குருபர முருக மருவிய
இசை கொளடியவ ரகவாழ்வே
வரத நடமிடு மயிலின் மிசைவரு
மகிப மலைமக ளபிராமி
வனிதை பகவதி குமரி பயிரவி
மகமு னறுவொரு கணமேவி
சரத முறையிலை யெனவு மதையழி
தருமி யுலகனை யெனலாகி
தயவினிலகிய கமலை பரவிய
சரதி யருளிய முருகோனே
மர மிளிருகிற பொழிலி னிடையமை
வளமை நகருள பெரியோனே
வளரு திருமலை முடியி லிலகிய
வரத தயைதரு பெருமாளே.

தனன தனதன
தனன தனதன
தனன தனதன தன தான

930. கருணை யுருவென வளரு மறுமுக
கருது மெனதுள முறைவோனே
கனகவ யில்தரு முறைமை யுதவிய
கமழு பரிமள முருகோனே
அருணை கிரி தனி லருணை கிரி முனம்
அருளை யருளிய பெருவாழ்வே
அமரர் துதிபணு பெருமை யிலகிய
அழகு கெழுமிய செகவேளே
தெருளி னடமிடு முனிவர் பரவிய
திகழு பொழினக ரிறையேசர்
திவவு தனகுற மகளை மருவிய
செயலி லொழுகிய மணிமார்பா
அருமை மனையினு முரிமை யுயரிய
அருமைநிறைதரு குகநாதா

அடிமை கருதிய தகைமை யருள்புரி
அணி கொடிருமலை பெருமாளே.

தனத் தன தான தந்த
தனத் தன தான தந்த
தனத் தன தான தந்த தன தான

931. அருட் குருவாய செந்தில் பொருப் பிடைவாழு கின்ற
அனைக்குயர் வானகந்த முருகோனே
அடிக்கடி யோது கின்ற முறைப்படியாக வந்த
னருட் பெயவே சிறந்த மயின்மீது
தெருட் குருவாக வந்து ரசத்துறையே கைகண்ட
திரட்டினை யோதி யன்பு தருவாயே
திருச்செழி லான கொம்பர் தகர்ப்புற மேவி யன்பர்
திருப்பெறு கோடி செம்பொ னருள்வோனே
உருட்டன மாதர் தங்கள் மருட்டினிலே மயங்கி
உருத் தெரியாத லைந்து தடுமாறி
உனைப் பரவாத வஞ்ச மனத்து டையேனை யஞ்சல்
உரைத்தெனை யாளு கின்ற தெதுநாளோ
திருட்ட சுராதி யஞ்ச நுதித்தயி லேவு கின்ற
திருக்குமரா விலஞ்சி நகர்வாழ்வே
திருப்பொழி லூரி லங்கு குகப்பொருளே சிறந்து
திருக்கு வடேறி நின்ற பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

932. படமுடியாத துன்ப வலைபிணி மேலழை நைந்து
படவிதியோ யிதென்று தடுமாறி
படுபவ வாதை யின்க ணுலை தாலாகி நொந்த
பழவடியேன் விளங்க வருளாலே
திடமுறு சேம வின்ப நல முடனே யெழுந்து
செயமருள் தேவ கந்த முருகோனே

சிறியவனே மைழயென்ப துணர் கிலையோ சிறந்த
திருமருகா செயந்தி வரைவாழ்வே
கடமுடி வாக வந்து பத மலரிய சந்த
கவிபல நூறிலங்க முறையோதல்
கடு களவேனு முந்தன் மன முருகா மனின்று
கவலையிலே வருந்த விடலாமா
படவசு ராதி யன்று முடிவுற வேலை கொண்ட
பர குருநாத பண்பை யுடையோனே
பழகிய*தான மஞ்சு பொதுளிய சோலை தங்கு
பதி திருநாக மர்ந்த பெருமாளே.

தனதன தனனா
தனதன தனனா
தனதன தனனா தன தான

933 இகழுல கிடையே மடமை யனை ளியேன்
இதுவரை உலமே யறியாமல்
இசைவழி யறிவே செலவறி விலியாய்
எனை யொரு நரனா மெனவோடு
குகவுன தெழின் மா பதமலர் பரவா
கொடியனை யெதுநாள் மனமேவு
குமரனு மெனவே யருள்செய வருவாய்
குருபர முருகா வரதீபா
பகர் தருமறை நா யகமணி யடியார்
பழவினை யறவே வருவோனே
பணியுணு மயின்மே லிலகிய சிவமே
பரையுமை சிவகா மியுமாகி
மகமற முனைநா ளினிலெழு மலைமா
மகள்சுத வடிவே னுடையோனே
வளமலி திருமா மலைமுடி தனிலே
மிகபதி மருகா பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**934.** நினை வூடிருந்து விளையாடுகின்ற
நிமலா வெனன்பி யுயர்வாழ்வே
நிதியே விளங்கு மணியே அறஞ்செய்
நெறியேறி நின்ற முருகோனே
கலையார் தரங்க நதி சூழுகின்ற
கமமார் பொதும்பர் வளைவூடு
கனமா வளர்ந்த பொழிலூ ரகந்த
கனகா முகுந்தன் மருகோனே
உனையே யடைந்த வெனையாள் வதென்று
உலைவாகி நைந்து பலகாலும்
உறவான பந்த மயலால் வருந்தி
உடைவான சிந்தை யுடையேனை
தனையாய் நினைந்து மனுவோதி யஞ்சல்
தருவா யிலஞ்சி குமரேசா
தருகாதல் கொண்ட குறமா தணைந்த
தனமா நகங்கொள் பெருமாளே.

தந்தன தான தந்த
தந்தன தான தந்த
தந்தன தான தந்த தன தான

**935.** நெஞ்சு புணுகி நொந்து நைந்திட வேதை யுண்டு
நின்பாமே யடைந்த வெளியேனை
நின் கனிவாய் திறந்து செஞ் சொலினு விடைஞ்சல்
நின்றிடும் வாழ்வை யென்ற மொழிகூறி
அஞ்சலை யோதி மைந்தன் என்றெனையாள் வதென்று
அம்பர யோக துங்க முருகோனே
அந்தணராதி வந்து பைஞ்சுனை மூழ்கி செம்பொ
னம் புயமான வுந்த னடிபேணி

கெஞ்சு சொலாரனந்த புங்கவராதி வந்து
இண்டரி போது சந்தம் இவையோடு

கிண்கிணி சூடியன்பு வந்தனைகூறி வெந்து
இண்டிய பாகை முன்பு இடவேதான்

தஞ்சமெனு வழங்கு மன் சொலினுர் புகழ்ந்து
சந்ததமே வணங்கு பொழிலூரா

தண்டலை சூழுகின்ற பங்கய மாதுறைந்த
தண்டிரு நாகமர்ந்த பெருமாளே.

தானந்த தான தந்த
தானந்த தான தந்த
தானந்த தான தந்த தன தான

936. தானென்ற தான பங்க மானந்தவே நலஞ்செய்
தாளன்பினே வழங்க வரவேணும்

சாரங்க மோடெழுந்த பேரங்க மாமுகுந்து
சாரங்கமான தங்கை மகமாயி

வானென்ற தாய் வழங்கு பேரம்பை யான மங்கை
மாதங்க மான செங்கை வடிவாயி

மாசண்டிடாத வன்ப ரோடொன்றியே கனிந்து
வாழன்பினைய கங்கை யெமதாயி

ஊனென்ற தாய் நிறைந்த பாரெங்கு மாகி நின்று
ஊணந்தவே வழங்கு மொருதேவி

ஊவென்ற போதமைந்த நாதந்தனோ டுறைந்த
ஓநின்ற நாரியெந்த னறிவாகி

வானென்ற தான சந்த பாதந்த வாணி அன்பு
வார்கின்ற சேம செஞ்சொ லபிராமி

மாமைந்தனே வளஞ்செய் சூழ்பண்பை மேலை நின்ற
மாகுன்றிலே வுயர்ந்த பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

937 கனிவான அன்பி னுருவா யெழுந்து
கனிவாய் திறந்து மொழிகூறி

கதியே வழங்கு குருவே புகன்று
கனமே பிறங்க வரவேணும்

கனியே நிறைந்த பொழில்மேல் வளைந்த
கதிர்காம செந்தில் வரைவாழ்வே

கருதாத வம்ப ரறவீசு கின்ற
கரவே லணிந்த முருகோனே

பணிசேரு கின்ற மலைநாட் டணிந்த
பதிமேவி நின்ற குமரேசா

பயில்வேத மந்த்ர முறையால் வணங்கு
பவரோடு றைந்த குருநாதா

இனியேனு முந்த னருளா லிரங்கி
இதுவேளை யெந்த னுளமேவி

இருள்போக வுந்தன் நலமீவை பண்டை
இசைநாக மர்ந்த பெருமாளே.

தானா தனத்த தன
தானா தனத்த தன
தானா தனத்த தன தன தான

**938.** போரா தரித்தருமை யாளா வெனக்குரிமை
பேணு திருப்பதுவு மழகாமா

பேயாயிருக்கி லருள் தாயார் விடுப்பதிலை
பேடார் குணத்தயவை யுடையோனே

நாராயணக் கடவு ளோடே வுதித்த பரை
நாளாய் வளர்த்து வரு மெழில்வேளே

நாடா தவர்க் கருளை யீயா திருக்கு மொரு
நாதா குகப்பரம முருகோனே

காராயுதித் துலகை யாள்வோய் மனத்துயர்கள்
காணு தொழித்து விட வரவேணும்

கானார் குறத்தி மக ளோடே பழக்கமுறு
கார்மா கரிக்குரிமை மணவாளா

வாரார் மதத்தகரி யாமான னத்தியவுள்
மாருதவற் பிவரு துணையான

மாதேவ பட்டைமலை மேலே விளக்க மொடு
வாழ்வேற நித்தமுறை பெருமாளே.

தனதான தந்த
தனதான தந்த
தனதான தந்த தன தான

939. மகதேவ கந்த குருநாத சந்த
மலைமீமே விருந்து விளையாடும்

மகிபா குறிஞ்சி வரதா விலஞ்சி
வளமாக நின்ற பெருவாழ்வே

பகடேறு கின்ற வெமனோடை வென்று
பரமாக நின்ற வொருதேவன்

பகரோமி னின்ற பொருளோ தவென்ற
படியோதி நின்ற குருநாதா

சகமேழ் புரந்து வருசோதி யெங்கள்
தனமே யறஞ செய் பெரியோர்கள்

தவமாக நின்று நலமே புரிந்த
தருவே சிறந்த புகழ்வீரா

மகநாளெழுந்து அடியார் வணங்க
வரமே வழங்கு வயலூரா

வளமேவு பண்மை நகர் மேலை நின்ற
மலைமேவி லங்கு பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

940. நிலையர்க நின்று யெனை வாடவென்ற
நெடிதான பங்க பவமூடை

நிறைசேவ் சுமந்து தேடுமீறி நொந்து
நிதி யேதுமின்றி யுழல்வேனை

விலை மாதரின்ப மா மூடுடைந்து
மிடியாளி நொந்த விதியாளர்

மிக மேவுகின்ற படிமீது நைந்து
மெலிவாகி யுந்த னடிபேணி

கலைமேவு சந்த சொலிமேலே யனந்த
கவியாலணிந்து புகழ்பாடு

கடையே னிடைஞ்சல் மயலே லொடுங்கு
கனமே வழங்க வரவேணும்

உலையாத தந்தி முகதேவ னன்னை
உடையா யெனன்பி லுறைவாழ்வே

உமை மாது கொஞ்சு முதலே நல் பண்பை
உயர் நாகமர்ந்த பெருமாளே.

தந்தனந் தானத் தான
தந்தனந் தானத் தான
தந்தனந் தானத் தான தன தான

941. வந்தனம் பாடிப் பாடி நெஞ்சுளந் தேடித் தேடி
வந்திடும் பேதைக்கான பவமூடை

வந்திறுந் தேகத்தோடு வொன்றிடும் பேதிப்பான
மன்றிறங் கூறிக் கூறி யிதுகாறும்

நொந்துளந் தேறித் தேறி வந்தடைந் தேழைக்கான
நுன்பதஞ் சேரற் காகு முறையோதி

நொன்பவந் தூரத்தேக மன்றவஞ் சேரற்காக
நுங்கினந் தேனைப்பான புகழ்பாடி

சந்ததஞ் சேமத்தூடு தங்கமைந் தாகத்தேறு
சஞ்சலம் போகச் சீர்மை யருள்வாயே

சந்து வந்தேகிப் பேத மன்றறும் பாதைக்கான
சங்கடந் தீரச் சேரு மானார்தன்

மைந்த வண்டாடித் தேற லுண்டிடுஞ் சோலைக்கேறி
மஞ்சினம் பேயற்கான பொழிலூரர்

மந்தி கொண்டாடிக் கூடி யின்பமைந்தார் நற்சேர்லை
வண்கொளுங் கோடிற் சேம பெருமாளே.

தந்தா தன தன
தந்தா தன தன
தந்தா தன தன தன தான

**942.** அஞ்சே லெனவுயர் பொன்போ லொருமொழி
யன்போ டுதவிட வரவேணும்
அம்பாள் பயிரவி செம்பா தலமுதல்
அம்பா ருலகினை யருள்தேவி
மஞ்சாடிடு பொழில் வண்டோ விடுமலர்
வுண்சே றிடுவயல் பொழிலூரா
மங்கா தெழிலுறை சங்காடி டுகுழை
மன்சேர ரனருள் சுதவேளே
பஞ்சாடி டுபத மூஞ்சேர் குறமகள்
பண்டேய் மொழிவளி யுடையோனே
பஞ்சாயுத முகில் தங்காய் தருமுளை
பண்பாரிய குண வரதீபா
செஞ் சேவலி லெழு குன்று மெனவுயர்
சிந்தா வயமலி கொடியாளா
திண்பாதல முதல் விண்பூ வரை வளர்
தென்சீர் திருமலை பெருமாளே.

தன்னன தனதன
தன்னன தனதன
தன்னன தனதன தன தான

**943.** பொன் மயமென வளர் நன்மைகள் மிகமலி
புண்ணிய வுருவென வுலகோது
புன்னகை மருவிய நன்னற வினுமுயர்
டொன் மொழி தரவரு முருகோனே
மன்மாபி னினுயர் நன்மர பியல்புள
மன்னவர் நிலைபெற வருவோனே
வன்மன நிறவயில் நுண்ணுதி பொரவிடு
மன்னல சிகிபுற மயில்வீரா

என்னர செழிலனை யென்னவு முனையடை
இன்னலி லுருகிய வெளியேனை
இன்னணம் அருளொடு நன்னிலை பெறும் வழி
என்னிதி யருடர வரவேணும்
பன்னக முனிதுதி வன்னக முனிதுதி
பண்ணக முனிநுதி வொருதேவு
பன்னல தவவுரு வென்னவும் வருசுத
பண்ணவர் திருமலை பெருமாளே.

தான தான தனத்தன தானன
தான தான தனத்தன தானன
தான தான தனத்தன தானன தன தான

944. ஏழையாக நினைத்தெனை நாடொறும்
வீண தான பிழைக்குறை பாடுகள்
ஏதிலோது மனத் துறையாளர்க ளிவரோடு
ஏசு நாச குணத்தினர் பாதகர்
பாட லோத வெறுத்திழி மூடர்கள்
ஈறிலாத பதத்துணையே கெதி யெனலான
பீழை யாளி யிடத்தினிலே வுழல்
காய நாயை மனத்துயரே கொள
பேசுவாய் மத முற்றவர் கோளர்கள் பகையாளர்
பேதமான வுளத்துணிவாலெனை
மோசமாக வுரைப்பவர் தீயவர்
பீடுறு நிலை யுற்பணியாமென விகழ்வோர்கள்
வாழைசாயும் விதத்தினிலேயவர்
மாள வீழும் அயிற்கை யுளாய் குக
வாச வீச பருப்பதமேவிய முருகோனே
மாத யாளமிகுத்த குணாகர
சீலமேவிய வற்புத காரண
வாதுளோர் களறப் பொடியேபண்ணு முருகோனே
மாழைநேர் விழியுற்ற பயோதர
மேவுமாதர் மயக்கிடையே யெனை
வாழ நீவிடலற்பிலை யாதலு னருளாலே

மாசிலாத மனத்துறை பேதமை
போகும் நீதி மலர்ப்பத மீகுவை
மாதியாக திருக் குவடேறிய பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

945. பலவிதமான துன்பம் இடை யிடை மேவிவந்து
பயில் தரணுக நின்ற வெளியேனை

படிமிசை யேழை யென்றபடி பலபேர்கள் வன்சொல்
பகர்வதினு னலிந்து மனமாழ்கி

உலகிடை வாழ்வ தென்ற செயலறி யாது நைந்து
உணர் விலனுகி நொந்து பலகாலும்

உலைவடை வேனை யெந்த வகை நிலையோ டெழுந்து
உனதருளே வழங்க வருவாயோ

குலபிரகாச துங்க வரநிதியான கந்த
குருபரசேம செந்தில் முருகோனே

குண முடையோர்க ளன்பினுறை பரஞான பண்பை
குக சிவகாமி மைந்த னெனவோது

வல வயிலாள சங்க பொருணிலை நேர்மைகண்ட
வள தமிழாள பொங்கர் வளைவூடு

மயிலின மாடுகின்ற செயலமை மாதவஞ்செய்
மலை திருநாக மர்ந்த பெருமாளே.

தந்தா தனந்த தந்த
தந்தா தனந்த தந்த
தந்தா தனந்த தந்த தன தான

946. மஞ்சாடு கின்ற பொங்க ரின்சார் பெழுந்த னந்த
வண்டாட லுண்டி றங்கு மதுவாலும்

மங்கா தரம்பை யின்க னின்றே பழம்பி திர்ந்து
வந்தோடு கின்ற துங்க நறவாலும்

எஞ்சாத குன்றிணங்க நின்றே விளங்குகின்ற
எண்சார மாங்கடந்த நறையாலும்

இங்கோது கின்ற நஞ்சையின் பாசனம் படிந்து
எண்டாழவும் பொலிந்த வினைவாகி
செஞ் சாலியுஞ் செறிந்த குன்றாகி நின்றளந்து
திண் பாரடங்கு பண்டி வழியாக
திண் கோடினஞ் செறிந்த பண்கோட கங்கிடங்கில்
சென்றாரவுஞ் சொரிந்த பொழிலூரா
அஞ்சே லெனுஞ் செழுஞ் சொல் தந்தாளிதம் புரிந்து
அன்பார் நலங்கனிந்த முருகோனே
அங்கார் வளந்து தைந்து பொன்சேர் நலம்பொருந்து
அங்கோடி லங்க நின்ற பெருமாளே.

தனஞ தனந்தனந்த
தனஞ தனந்தனந்த
தனஞ தனந்தனந்த தன தான

947. நினை ஆடிருந் திலங்கு குமார நலங்கனிந்த
நிதியே வளஞ் சிறந்த பொழிலூரா
நெறியாக மங்கடந்த பசை மாதுளம் படிந்த
நிலையாயிருந் தனந்தம் அடியார்கள்
தனையே புரந்தடர்ந்த பவமே நொறுங்கு மன்பு
தருவோய் பிறங்கு சந்த மணிமார்பா
தமியேனை யஞ்ச லென்று வருநாள் மனங்குளிர்ந்து
தருவாக வந்து வந்து னருளாலே
எனையாளு கின்ற தெந்த வுகையோ பவந்துடர்ந்த
எளியேன் மயங்கி நைந்து பலநாளும்
இடிமேல் விழுந்து நொந்த அரவாக நின்று நின்று
இறவேதை கொண்டுடன்ற படியாக
இனை வேனையும் புரந்து பரி பாலனஞ் செயன்ப
இணைபாதபங்க யங்க டாவேணும்
எழின் மாபொருந்து கின்ற மலைமேல மர்ந்த கந்த
இசை பாடுகின்ற தொண்டர் பெருமாளே.

தன தான தந்த தான
தன தான தந்த தான
தன தான தந்த தான தன தான

**948.** கனிவான செஞ்சலோதி வருநாள ளிந்திடாது
கரை யேறுகின்ற நாளு மறியேனே
கடல் நேருகின்ற தான யிடளுடு ளைந்து ளாவி
கழிவாகி நைந்து வீணி லழியாமல்
இனியேனு முன்றயாள மிக மேவுகின்ற சேம
இயல்பே வழங்க நீயும் வரவேணும்
இசை நாடுகின்ற தேவர் சிறை மீள வந்ததேவ
எழிலேறு கின்ற தூய முருகோனே
இனிதான செஞ் சொலாள மணியே நலந்தியாக
இறையே இரங்கு ஞான வரதீபா
இடரானவன் சொல் கூறி வருவோரி றந்துவீழ
எறிவே லணிந்த வீர முடையோனே
பனிமேவு கின்ற சோலை வளநாடு கொண்ட நேக
பலமேவு குன்றுலாவு மொருதேவா
பயில்வேத மந்த்ர மோது சிவபால பண்பை மேலை
பதிமேவு குன்றிலான பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

**949.** படமுடியாத துன்ப விடவம வானுமிழ்ந்த
பனி மதியாக வைந்த படியாக
பவவிட வாய மைந்து நலிதலி லை வுழன்று
பயின் மிடியாள நின்ற வெளியேனின்
கடமுண்ட வாகி வெந்து பிறகுன தாணலங்கள்
கடையனை யாளு மெந்த முறையேயோ
கழிகிற நாளி னைந்து துயர் கடலூடு லைந்து
கரை தெரியாத லைந்து தடுமாறி

அடலுற மேழை யெக்த வகை யினில் நேர்மை கொண்டு
அனுபவமேவு மின்பம் அடைவேனோ

அருணி றைவாகி யெங்கு முறை சிவஞான முண்ட
அறுமுகமேவு மெங்கள் முருகோனே

வடவரை மேரு கொண்ட மதமற வாட வென்று
வரையடி சேம முண்ட வொருதேவா

வரபல மேவுகின்ற குருபர தூயகந்த
மகிழ் திருநாக மர்ந்த பெருமாளே.

தனன தனத்தன தான தானன
தனன தனத்தன தான தானன
தனன தனத்தன தான தானன தன தான

**950.** மனது வருத்த மிலாத தாகிய
பெருமை யளிக்கு முதார தாரக
வரத நிருத்தம யூர சேவக முருகோனே

வறுமை படைத்து சதாவி யாகுல
மடையு மெனக்கு தயாள மேவிய
மகிப பொலத்தை யெனுளிலே யருள் புரிவாயோ

உனது பதத்தை யலாது வேறொரு
நினைவு படைத்தி லனுன வேழையை
உழலு மனத்தினி லான கோழையை யொருகாலும்

உயரு தவத்தினர் பாலுறு நிலை
யதனை விருப்பொடு மேவு பாவியை
உலக மயக்கினிலே வுலாவிய எளியேனை

கனக கடத்தினை நேர்ப யோதர
வுடைமை படைத்தவர் பூவி ஞடிய
கவன வுளத்தை யெனுளு மேவிட அறியாத

கசடு படைத்த வனுன சீவியை
முரடு படைத்த குணுல மூதியை
கயவு படைத்த சிநேகர் வீதியை யுடையோனே

தினமு முறைப்படி யேகுகா வெனு
மருமை மகச் செயலிலாத நாவியை
திறமைய கத்தையுளேற நாவியை யனையேனை

950ம் பாட்டு கயவு — மேன்மை.

தினத வருட் பெயெனு முனிவரு
தகைமை படைத்திலி மூடனு தரி
செய திருவுற் பவமான மாமலை பெருமாளே.

தானு தனந்த தன
தானு தனந்த தன
தானு தனந்த தன தன தான

**951.** மாயாத பந்த வினை யோயாமல் வந்தணுகி
வாதாடு கின்ற செயு லறியாயா
மாதே வுகந்த குக நாதா குறிஞ்சி நில
வாழ்வே பிறங்கு நல முடையோனே
தாயா யெழுந்து வுல கேழே ழையும் தனது
சார் பால் புரந்து வரு மொருதேவி
தானே யிலஞ்சி யுறை கோவே யெனன் பில்வினை
தாதா கடம் பணியு முருகோனே
வாயார வுந்த னெழில் பாதார விந்த மது
மாதார கந்தருவ தெதுநாளோ
வானேதி னைந்துருகி னேனே வுனன் புதவ
வாதா இரங்கி யருள் புரிவோனே
சேயான மைந்த னென நீகா செறிந்த பொழில்
தேனாடு கின்ற வள மலைகாடா
சேமா நலஞ்செய் பொழி லூரா புரிந்து திரு
சேர்மா நகங்கொள் வளர் பெருமாளே.

தனத்தனத் தனத்த
தனத்தனத் தனத்த
தனத்தனத் தனத்த தன தான

**952.** உரைத்தனுத் தரைத்த படிக்கெனக் கருட்பெய்
உரித்துளப் பொறுப்பை யுடையோனே
உனைக்கடைப் பிடித்த முறைப்படிக் கெனக்கு
உரித்தினிற் பதத்தை யருள்வாயே
பரைச்சியந் புதத்தி வலைச்சிசிற் றிடைச்சி
பருப்பதத் துதித்த வொருதேவி

பழிச்சிவெற் பினுக்கு நிகர்த்த பொற்றனத்தி
பவப்பெருக் குடைத்த சிவகாமி

துரைச்சிகற் பகத்தி னிறைத்தெழிற் படைத்த
சுகத்திவிற் பனத்தி யெனலாகி

தொகுத்தறத் தொருத்தி சகத்தவர்க் கனத்தை
சுகித்திடக் கொடுக்கு மகமாயி

வரைக்கிணைப் பொருத்த மிகுத்தநற் றவத்தை
வளர்த்திடத் துதித்த முருகோனே

மகத்துவத் திருக்கு மெழிற்பொழிற் குவட்டில்
வரைத்திருத் தளிக்குள் பெருமாளே.

தனந்த தனனா தனன
தனந்த தனனா தனன
தனந்த தனனா தனன தன தான

953. மயங்க வருதே மனது உறிஞ்ச வருதே வினைகள்
வருந்த வருதே பிணிக ளெனலாக

வரைந்த கவியூ டிதனை பொருந்த வுரையே பகர
மனங்க வனமே வவிலே யெதினாலோ

கயங்கிவுயிர் போன பினர் வழங்கு முறையா வுரிமை
கனம் பரவு நாதருக முருகோனே

கனிந்த கனியே மதுர முதிர்ந்த முதமே விழியில்
கலந்த வொளியே வொளியி லுயர்வாழ்வே

செயங்கொள் குமரா பழனி யமர்ந்த முதல்வா கருணை
செறிந்த வரதா வடிய ருடையோனே

செயந்தி நகராதிபதி பரம்பரை மகா கவுரி
தினம் புகழலான சுத வரதீபா

பயங்களறவே மயிலி லெழுந்துவர் வேணுமைய
படர்ந்த பொழிலூ டிலகு பொழிலூரா

பரிந்து மலர் மாதுவுறை சிறந்ததிரு நாகம் வளர்
பலங்கொளயின் மேவுகர பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

**954.** மனவாதை யென்ப தின்றி யெனையாள் வதென்ப தென்று
மகதேவர் கொஞ்ச நின்ற முருகோனே

வளமேவுகின்ற செந்தில் பதி மேவுகின்ற துங்க
வாதீப மென்ற எங்கள் குருநாதா

தனதான தந்த தந்த வென நாடகஞ் செய்கின்ற
தனிராக மங்கடங்கு மொருதேவா

தனியான கண்டி லொன்று சுவையே வணங்கு மன்பர்
தயையே மனங் கனிந்த பெரியோர்கள்

நனவாக நின்றருந்த வமுதே வழங்குகின்ற
நதியே யெனன் புறைந்த செகவாழ்வே

நளிரேறுகின்ற பொங்கர் வளகாட ணிந்த பண்பை
நலமே யிலங்குகின்ற வயலூரா

அனமாதரங் கடந்து எனையாள வந்துனன்பை
அருள்வா யிரங்கு மன்ப ருடையோனே

அனமேவுகின்ற புங்க சனை மேவுகின்ற மங்கை
அலர்மேவு நங்கை குன்றில் பெருமாளே.

தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த
தனத்தன தான தந்த தன தான

**955.** மிடிப்பகை யூடடைந்து நகிக்குற லாகி நின்று
விதிப்பகையே நினைந்து மனமாழ்கு

விடப் பெருவாழி யின்க ணலைப் படவோ நலிந்து
மிகைப்படவோ யிதன்றி பலநாளும்

அடிப் புகையான வஞ்சர் மனப் பகையாறி வந்து
அடித்திடவேதை தந்த படிவாழ்வில்

அடர்ப் படவா யிதன்றி விடப் படவாவு னன்பு
சுகப்பர நாத கந்த முருகோனே

அடிக்கடியே வருந்த விடப்படுமா புரிந்து
அருட்டயவே பிறங்கும் வரதீபா

அகத்தினிலே பிறங்கு குகப்பரமே இலஞ்சி
அருட்கரசே செயந்தி வளர்வாழ்வே

மடிக்கிடாாக வந்த தாக் கொடியேனை யுந்தன்
மலர்ப்பத மேவு பண்பை யருளாயேல்

மடித்திட வேலை யுந்தி ஒழித்திடவேணு மெந்தை
மகிழ்த் திருநாக மர்ந்த பெருமாளே.

தான தன தன
தான தன தன
தான தன தன தன தான

956 வாதை தருமிடி யோடு முறைபிணி
வாழு மிடமென வுலகோது

மாசு பரவிய தான கடமுறு
மாய்கை யிடையிடை எனைமோது

தீதை மருவிய தாக வளர்புவி
சேரு பவமிடை யுழல்வேனோ

சேவனுயர் கொடி யாள மதுரையில்
தீய வமணர்க ளவையேறி

மாதைரிய மொடு வாதி னிடையவர்
மாள கழுவினி லவரேற

வாழ சிவமதம் மாளவ மண்மதம்
மாறனி லைபெற வருள்வோனே

காதை மருவிய தாக குழையணி
காலனுதை படு மெமனுன

காலனருள் சுத சேம திருமலை
காணியென வளர் பெருமாளே.

தனன தந்தான தான
தனன தந்தான தான
தனன தந்தான தான தனு தான்

957. அருளலங் காரமான குமரவண்டாரு மாலை
அணியலங் காரமேவு முருகோனே.

அகிலசெஞ் சோதியான வொருவசந்தான மார்ப
அணிநடஞ் சேர்மயூர முடையோனே
உருளலங் காரமான தனவலங்கார மேன்மை
உடையலங் காரமான வடிவாயி
உறைவளந் தேடிநாடி நலமொடுஞ் சேமலாப
உரைகடந் தார்வமான மயலோடு
தெருளலங் காரமேயெ னுளவலங் காரமாகி
திவவுலங் காரவேடர் மகளாகி
தினையலங்கார காவல் புரியலங் காரமான
சிறுமியென் றேதியோதி யவளோடும்
மருவலங் காரரூப தருமசிந்தூர யேழை
வளர அன்பான வாய்மை யருள்வாயே
மழையலங்கார சோலை வளையலங்கார மாமின்
மகிழலங்கார நாக பெருமாளே.

தன தான தந்த
தன தான தந்த
தன தான தந்த தன தான

**958.** மதியாத வஞ்ச முடையோர் களஞ்ச
வருவீர சிங்க மெனலான
வரதீர செந்தி லுறைதேவ கந்த
மகிபா இலஞ்சி நகர்வாழ்வே
எதிராக வந்து பகையாக நின்ற
இழிபாளர் தங்கள் குலமாள
எரிவே லெறிந்து அவர்வாழ்வு பொன்ற
இடுவோய் சிறந்த முருகோனே
கதிவேணு மென்ற படியாக வந்து
கவிபாடி யுந்த னடிபேணு
கடையேனை யெந்த வகையாக வந்து
கனிவாய் திறந்து அருள்வாயோ
சதிராக மீங்கள் முடிமே லிருந்து
தழைவோ யெனன்பி லுயர்கோவே

தனிமேறு பொங்கர் வளைவூ டிருந்த
தனைமா நகங்கொள் பெருமாளே.

தன தந்த தான
தன தந்த தான
தன தந்த தான தன தான

**959.** அருள்கின்ற ஞான வுருவென்ற தாக
அமைகின்ற சேம முடையோனே
அமசென்றதீர வராதுங்க நாத
அமைவென்ற தோளி னெழிலோடு
தருவென்ற வீகை யருளென்ற நாம
தயையென்ற ரூப மகமாயி
தனிநின்ற தேவி சிவனென்று காமி
தழைகின்றவாலை யெனவோடு
பொருளென்று நாடு மறைகண்டி டாத
புகழ் கொண்டலான வெமதாயி
புரிகின்ற தான தவமென்ற பால
புணிலொன்ற வேலை யிடலைபோல்
வருகின்ற பாவ மிடிதந்தெ னேடு
வளர்கின்ற தீதை யெவர்பாலில்
மனமொன்றி யோத திருதங்கி வாழு
மலையின் கண்ணை பெருமாளே.

தனன தனதன தனன
தனன தனதன தனன
தனன தனதன தனன தன தான

**960.** அருமை பெருகிய குமர மதுர முருகிய வசன
அழகு கெழுமிய வதன முருகோனே
அடிய ரகமிசை மருவு பரம குருபர சரத
அருண டனமிடு பகவ னெனவோது
பெருமை பெருகிய கவுரி முருக வருகென பகரு
பிரிய மிலகிய வரத முடையோனே

பிணைய லணிகிற மருமு தருமு வுருவென வளரு
பெரிய வுலகள வுநிறை வாதீபா

கருமு வினையெனை யரிய வருது யரைவுன து புகழ்
கவியினிடை யிடைபகரு முறையோடு

கமல பதமலர் பரவி வருமடிமை மிடிபகைகள்
கழியவருள் புரியததி வரவேணும்

உருமு நிகரிய வவுணர் பொடிகள் படவிடு மயில
உகர மீரமுடி யிலுறை வொருதேவா

உயரு பொழிலிடை நகர குடகு திசைமரு வுதிரு
வுறைகொள் மலைதனி யிலகு பெருமாளே.

தானன தந்த தான
தானன தந்த தான
தானன தந்த தான தன தான

961 ஓயாத நிந்தையான தீவாச கங்கள் கூறி
வூடாடு கின்ற தீய கொடியோர்கள்

ஊறாட டைந்து பாப வீடேறி நின்று மாய்கை
ஊழேறி னைந்து மாள விடுவேனே

ஆயாத சிந்தை நேய மூறாத பண்பு ளோர்கள்
ஆறாத துன்ப வாதை யிடைமூழ்கி

ஆயாச முண்டு மாள வேலேவு கின்ற தீர
ஆறான கங்கை தேவி மகமாயி

தாயாகி யெங்குமான பாராளு கின்ற தேவி
சாராத வஞ்சரீறு வருவீரி

தாராள மென்ற ஈகை யாலேவி ளங்கு நீவி
தாதாருகின்ற மாலை வனைமாது

வீயாருகின்ற சோலை யூடாரு பண்பை நாரி
மேலாக நின்ற வாலை தருபாலா

மேலான அன்பை யீவை மாவேறு குன்று லாவு
மீதான கந்த நாத பெருமாளே.

தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன தன தான

**962.** மதுர மிஞ்சிய வாசக நாயக
கருணை தங்கிய வாவிரு பாகா
மயிலி னஞ்செறி மாமலை மேலுறை யெழில்வேளே

வரத வந்தண பூரண மாமறை
முடிவ னடம்பணு வீரவ ரோதுய
மகித லந்தனி லேநிறை வாகிய முருகோனே

சதுர சந்திர பாதியெ னுதல்
மிளிர வெண்பொடி பூசிய பேரெழில்
தளிரு கின்றவ மாபர காரண னெனவோது

சரத சங்கரி பாலக னேகுக
பிரண வந்தனி லேவள ராதிப
தனத செந்தித யாநிதி மேலவ பகவாழ்வே

முதுமை தங்கிய தாக முனோர் தின
மருவி வண்புன மேவிய மாதினை
முதிர பைங்கிளி யேவுண வேபடி தலினாலே

மொழிதலின் றிறமோடு சதாகவ
ணெறிபு மங்கை பயோதர நாடிய
முதல்வ வங்கவ ளோடுறவாடிய மணவாளா

குதுகுலந் தழை மாபொழி லூரிறை
பரவு மன்பர்கடேடிய வாசிவ
குமர பொன்பத மேதர நீதயை யருள்வாயே

குளிரு தண்டலை மேல்தலை மேல்முகில்
துகிலு கின்றன மாமலர் மாநறை
சொரிதல் மிஞ்சிய மாதிரு மாமலை பெருமாளே.

தனதான தந்த தந்த
தனதான தந்த தந்த
தனதான தந்த தந்த தன தான

**963.** மனவேதை கொண்டடர்ந்த சகவாழ்வி லொன்றி யொன்றி
வளர் மாய்கையின் கணின்று தடுமாறி

மதியாத நெஞ்சர்வன் சொலிடைமூழ்கி யஞ்சி யஞ்சி
மடி மூடுகின்ற பந்த பவவாழ்வின்

இனமேவி நைந்து நைந்து கெடு மூடனென்று வுந்தன்
எழில்பாத பங்க யங்க ளடைவேனோ

எதிராக வந்து வஞ்ச மொழி கூறுகின்ற பங்க
இழி பாள ரஞ்ச அஞ்ச அயிலேவி

மனவீறு கொண்டரிந்து விடவேணு மென்றனந்த
வகையான சந்தமைந்த கவிபாடு

வணமாகவும் புகழ்ந்து வருமேழை துன்ப மொன்றி
வரவே புரிந்த வஞ்ச முடையோரை

சினவேலை யுந்தி யுந்தி பிளவாகவும் பிளந்து
செருதீ யருந்தருந்த விடவேணும்

செகநாத கந்த துங்க வரவீர பொங்கர் தங்கு
திருநாக குன்றமர்ந்த பெருமாளே.

தந்தன தனதன
தந்தன தனதன
தந்தன தனதன தன தான

964. பண்மொழி னகர்நிலை நின்றருள் புரிகிற
பண்பமை குருபர முருகோனே

பங்கய மலரிறை யின்கர விபியொடு
பங்கம தறுபவ வினையோட

நண்பருள் பாருக சங்கரி தருமூனே
நன்செய்கள் பனுகிய வயலூரா

நம்பியு னடிமலர் வந்தனை புரிசெயல்
நன்கறி கிலையெளி லெவர்பூவில்

வண்புகழ் பலசொலி யென்றுயர் கெடயினி
மஞ்சரி பலகவி யினையோத

வம்புடை யவருரை புன்சொலி னிழிவொடு
மண்டிடு மிடியிடை யுழல்வேனை

எண்புகழ் கெழுமிய அந்தண ரகமுறை
என்குரு செகபர முருகோனே

இன்றொரு குருமுறை செஞ்சொலி லினிதுரை
எண்டிரு மலைவளர் பெருமாளே.

தனன தனந்த தந்த
தனன தனந்த தந்த
தனன தனந்த தந்த தன தான

965. அருளால் விளைந் தனந்த வுருவா யெழுந்த சங்க
அரசே முகுந்த வந்த மருகோனே

அலையாக வந்து வந்து மலையாளு நின்ற கந்த
அணியே நிரம்பு கின்ற மணிமார்பா

உருளா யெழுந்த னங்கள் மதன கமம் பொருந்தும்
உருவா யமைந்து கந்த மலர்சூடி

உலகே மயங்க நின்ற குழலா ரிடங் கனிந்து
உரையாடி யந்தரங்க மயல்மீறி

விருதாவழிந்தழிந்து பவமூ டுடைந்துடைந்து
மெலிவாய் பிறந்திறந்த படிவாழ்வின்

விளையாடலின்க ணொன்றி வுனையே மறந்தழிந்து
மிடியால் வருந்த நின்ற வெளியேனை

தெருளாரு கின்ற சிந்தை புகமேவு கின்ற சந்த
செறிவே விளங்கு மன்பு தருவாயே

செனலாரு கின்ற பண்கொள் வயல்சூழு கின்ற பண்பை
திருநாக மர்ந்துயர்ந்த பெருமாளே.

தந்த தான
தந்த தான
தந்த தான தன தான

966. அஞ்ச லோது செஞ்சொ லோடு
அன்பொ டாள்வ தெதுநாளோ

அந்தயாள விந்தையாள
அஞ்சிடாத வசுரேசர்.

மஞ்சரோடு நஞ்சுபோக
வந்த வீர முருகோனே
வம்பு பேசுகின்ற நீயர்
மங்க வேலை விடுவோனே
கஞ்சிமாது விஞ்சைமாது
கங்கை மாது பரைமாது
கம்பமாது அம்பைமாது
கண்ட பூால வரதீபா
தஞ்ச மேழை வந்தி ளுளில்
தண்டயாளம் அருள்வாயே
தண்பொன் மேவு குன்றிலேறு
சங்க நாத பெருமாளே.

தனன தனதன
தனன தனதன
தனன தனதன தன தான

967. வசிய சிவவென சிவய வசியெனு
மனுவை முறையொடு முனைநாளில்
மரபினருளிய குமர குருபர
வரத சரவண முருகோனே
வசிய நிலை மறையதனை நிறை வுற
வழியி லுதவிய குருநாதா
வறுமை யறவொரு முறைமை தருததி
மகிழ மயின் மிசை வரவேணும்
வசியின் வளமலி பொழிலி னக்கெழின்
மருவு பழனியி லுறைவாழ்வே
மகிடன் முடி பொடி படவு முடிபரை
மகதி நிகரிய மொழிமாது
உசித சுக குக கருணை மழைபொழி
யெளி கொள் பிரபல முடையோனே
உயரு திருமலை முடியின் மிசையரு
ளொழுகு மறுமுக பெருமாளே.

தனன தனதான தந்த
தனன தனதான தந்த
தனன தனதான தந்த தன தான

968. கனவினிடையே யெழுந்து வருகுமர நாத கந்த
கவுரி சிவகாமி மைந்த னெனவோது
கனக குகவீர சந்த வைவர தயாள துங்க
கமழு பயபாத பண்டை யுடையோனே
அனவரதமே வணங்கி வரு மெளியனே னிடைஞ்சல்
அணுக வுரையே புகன்ற கொடியோர்கள்
அறுதி யுறவே பிறங்கு நுதிய வயிலேவி வஞ்ச
அடையலர்களை நொறுங்க விடவேணும்
தனபர தயாள மென்ற வடிவ கனிவாய் திறந்து
தனைய னெனவே வழங்கு முறையோடு
சமய நிதியாகவந்து வுதவு குருவே புகன்று
சகல கலையாக மங்கள் தரவேணும்
பனச நிறைவான பொங்கர் தலையெழிலியே முழங்கி
பலுகு கிளையார் பலங்க ளினமேவு
பலவித விநோத பண்டை குட திசையிலே வளர்ந்து
பரவு திருநாகமர்ந்த பெருமாளே.

தனதான தந்த தந்த
தனதான தந்த தந்த
தனதான தந்த தந்த தன தான

969. அருகாக வந்து வந்து கனிவாய் திறந் துளஞ்சல்
அருள்வா யெனன் புறைந்த முருகோனே
அணி யாருகின்ற செங்கை குறமாதணைந்த கந்த
அரசே பழங் கனிந்த பொழிலூரா
உருகாத வம்பர் நெஞ்சம் அணுகா திருந் தனந்த
உருவாக நின்றிலங்கு மொருதேவா
உனையே யடைந் திரங்கி புகழ்பாடு கின்ற பண்டை
உடையே னெனுந்தாங்க ளறியாயா

முருகா வுளங் கனிந்து வருவாய் தனஞ் செறிந்த
முதல்வா தினம் பணிந்து வருமேழை

முரிவா யிறந் தரும்பு பவ மூடுடைந் தழிந்து
முடிவாகவும் பிறந்து வுலகூடே

வரு பாதகம் பொருந்து கடமோ டலைந்தலைந்து
மறியாது செம்பதங்கள் தருவாயே

மறமீறு கின்ற வம்பர் பொடியாக நின்ற பண்பை
மலைமேல் விளங்கு கின்ற பெருமாளே.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தன தான

970. கொடிய தானம காபவ மூடியை
எளிய னாகிய மாமிடி யாளனை
குணமி லாசின மேவிய தீயனை மடையேனை

கொலைசெய் வாரொடு நாடொறு மேபயில்
கடைய னாயின பாதக ரூபியை
குறைவி லேபடர் மாபிணி யாவிடர் படுவேனை

கெடிய பூவிடை யோர்நர னாமெனும்
வடிவ மேவிச தாதுய ரேவுற
நிலையி லாமன வாதியை பேயனை சிறியேனை

நிமிட மேனுந லாதர வாலுனை
பரவு வாசக மேவமை யாதவ
நெறியி லோடிய காமியை நாசகர் வழிகூடி

படியி லேபிற வாழியி லேவளர்
பகைமை தேடிய தேதொழி லாமென
பகரு வீணனை வீணிதி யாசையி லுழல்வேனை

பசியி னோடொறு மாதுய ரானலி
வடையு மேழையை கோழையை பீழைகள்
பலுகி வாழிட மேயென சேர்கட முடையேனை

மடிகொள் பாவியை மாதவ சாதனை
யடைய நேர்மையி லாகெடு வாழியை
மனதி னேடினி யாவென வோதுதன் முறையாமா

வரத நாயக தாயக வானவர்
பரவு தேவபு ராதன மாமகிழ்
மலையி லேறிய தாபர் தேடிய பெருமாளே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

971. உனது தலை வாயல் வந்து யெனது வினை போகு மன்பு
உதவி யருள்வா யெனுஞ் சொல் பலபேசி
உடையு மெளியேன் முனஞ்செய் பவவினையி னலிந்து
உருகி மெலிவாகி நைந்து வுழல்வேனோ
கனக மயமான கந்த பரவி மொழி வாசகங்கள்
கவிபு கழிலான சந்த முறையோடு
கருதிசா ஞலயங்கள் இடை யிடை விடாதழுந்து
கடை மிடியனு வடைந்த வெளியேனை
மனது கனிவாயிரங்கி அருளுருவமா யெழுந்து
வரத முறையான வஞ்சல் தரவேணும்
வழி யடிமை யேழை யென்ப துணர் குருபரா செயந்தி
வரைவள தயாள பண்பை யுடையோனே
எனது தயையே யெனன்பி லுயரு மணியே குறிஞ்சி
இரு நிதியமே நிறைந்த பொழிலூரா
எழில்வி மிகலான பொங்கர் வளைவினிடையே யுயர்ந்த
இசை கொடிரு நாகமர்ந்த பெருமாளே.

தன தான தந்த தன
தன தான தந்த தன
தன தான தந்த தன தன தான

972. சிவனார் சிவந்த நுதல் பொறி யாறில் வந்தசுத
சிவமே குறிஞ்சி வளர் முருகோனே
தினமோதி வந்தனை செய் பவரோடிணங்கி யுறை
தெளிவே இலஞ்சி நக ருடையோனே
அவமாயிருந்து பவ வுருவா யமைந்துலகி
லழிவாகி நொந்திழித லடையாமல்

அரிதான செம்பதும மலர்பாத வந்தனைக்
ளணு வேணுமின்றி நித முழல்வேனோ

தவமே பணிந்தவர் களகமே னிறைந்திவரு
தனமே சிறந்த பொழில் வயலூரா

தருவே செறிந்தவள பொழி லேறுகின்ற முகில்
தழை வேறுகின்ற மலை வளநாடா

பவ வாதையின் கணுறு மெளியேனிடங் கருணை
பரிபாலனம் புரிய வரவேணும்

பலமேவு பொங்கர்மலி திருநாக மர்ந்ததுறை
பகவாவெனன் பிலுறை பெருமாளே.

தான தானன தானன தானன
தான தானன தானன தானன
தான தானன தானன தானன தன தான

973. பாவநீர் நிறை வார்பிற வாழியி
லோய் விலாதலை மேலமை வாமனு
பாழி லாடியதா மெனு மானுட வடிவான

பாவி யேழைச தாமயல் மீறிய
தாகி நோய்பிணி யாதனை யானுடல்
பாழ தாய்நலி வூடுறலே தொழி லெனநாளும்

ஆவலோடுனையே துதி யாமலும்
நேயமான மனோநிலை யாளர்கள்
ஆறு கூடவி ரோதமு மாகிய கொடியோனாய்

ஆரோடுமிடி யாலுழல் பேயனை
நாமெனா வரு மோரக வாதினை
ஆசை மீறிய தீயனை நாயினை யனையேனை

கோவ ரூபியை மாபழி யாளனை
ஆளும் நீதிம காமறை வாசக
கூறிலே சொல வேயிலை யாகினும் அருளாலே

கோல மாமயி லேறியு னாரு
ளீய வேணுமெனா துதி பேணிய
கோலமோர் கிலையா தலினாலினி யெளியேனும்

சாவ நேர்வரு மாபிணி யாலுளை
வாகி னாளும ழிந்திட மேயறு
சார்பி லாகின னோர்கெதி யோயிலை யுணர்வாயே

சாம வேதகியான பராபரை
பாலனை குகா கருணாகர
தான மாதிரு மாமலை மேவிய பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான.

**974.** நிலைதளராத சிந்தை தருததி நாத கந்த
நிருமல சோதி யெங்கள் முருகோனே

நினை மறவாத வன்பர் அகமுறைவாகி யெங்கும்
நிலைபரமாய் நிறைந்த வொருதேவா

கலை மறையாதி கண்ட பிரமனை மேலை யஞ்ச
கரமடியால் சினந்த வாதீபா

கதிரயிலாள கந்த வரை குமரேச வின்ப
கனி தமிழாள பண்டை யுடையோனே

விலைதரு மாதரின்ப முறைவழி யோடுகின்ற
விதி யுடையோர் களன்பி விதுகாறும்

வெகு விதமா யுழன்று வொரு தரமேனு மின்றி
மெலிவதி னலிடைந்து பலநாளாய்

தொலை வருபாவ பந்த வினையெனை நாடிவந்து
சுடலையிலேக வொன்ற வாலாமே

துணை யிலனாக நின்ற வெளியனையாள்வை பண்டை
சுடர் திரு நாகமர்ந்த பெருமாளே.

தன தனன தான தந்த
தன தனன தான தந்த
தன தனன தான தந்த தன தான

**975.** பிணி மிடியினு ழலைந்து கொடிய பவமேன் மிதந்து
பெருகு துயரா னலிந்து மதனோடு

பிறை நுதலினார் செழுஞ்சொல் அமுதமெனவே யருந்தி
பிறவி யறவே வொதுங்கு நெறிபேணு

துணிவு நடமாடுகின்ற கொடிய விடமா யமைந்த
துறையி லுறைவாக நின்ற கெடுமூடன்

துணைகொள் சரணாலயங்கள் பரவு தலிலாது வஞ்ச
துடர்பிடை சதா மயங்கு மறிவீனன்

திணிய சிலையான நெஞ்ச முடைய சிறியேன் மறஞ்செய்
செருந ரொடுமேகி நின்ற முழுவீணன்

சிமைய முகடேறு கின்ற வொரு முசுவெனு வழங்கு
செயல் மனதுளே னலங்க ளறியாத

பணிவிடையிலே பயின்ற கரும வினையே னிடைஞ்சல்
பலுகு பகையே துடர்ந்த பழையேனும்

பதும நிகர் தாணலங்கள் பெறவு முறையோ வளங்கள்
பதி கொடிரு நாகமர்ந்த பெருமாளே.

தன தனன தான தந்த
தன தன்ன தான தந்த
தன தனன தான தந்த தன தான

976. உடலை மெனுள் வழங்க கருணை நிறைவோ டெழுந்து
உதவி புரிவாய் சிறந்த முருகோனே

உனையல்து வேறு யெந்த வகையு மிலையே கனிந்து
உருகு மடியாரிடைஞ்சல் களைவோனே

நடன மயில் மீதமர்ந்து வரு குமரனே யறஞ்செய்
நளின குணமான கந்த னெனலான

நவ நிதியமே யெனன்பில் வளர் திருமமே யிலஞ்சி
நகருதயமே பலங்கொள் பொழிலூரா

கடல் மடையெனு நிறைந்து வருமறலெனு நலங்கள்
கருது மடியாரிலங்க அருள்வோனே

கவன குறமாதணைந்த குருபர தயாள கந்த
கமழு சரணாலயங்க ளுடையோனே

மடலவிழ் மரா கடம்பு அணிபகவ நாத செந்தில்
வாத சிவகாமி யம்மை மகமாயி

மகனெனவுமே யெழுந்து பிரமதொழிலே புரிந்து
வளருதிரு நாகமர்ந்த பெருமாளே.

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தன தான

977. உருக்க முந்தயை யருளொரு வுருவென
வுதித்து யென்கன வினிடை யிடுபர
உலப்பி லந்தண ரகமுறை கிறருக னெனவோது

உகர்க்கு ணின்றல களவுறை பலவுயி
ரிடத்து றைந்தவ விழுமி யமறைமுடி
உயர்த்த நின்றவ அருள்மழை பொழிகிற முருகோனே

நெருக்க மிஞ்சிய பொழில்தலை மழைமுகில்
துயிற்கொ ளுஞ்செயல் நிலைபெறு பலவளம்
நிருத்த மும்புரி கிறவியல் புளமலை வளநாடா

நிலைத்த தண்பணை வரையிடை வளையின
முயிர்த்த தண்டர ளமுமிளிர் பலகதிர்
நிகர்த்த தென்றுள வுரைசொல நிலவிய வயலூரா

செருக்க ளந்தனி லசுரரி னுயிரற
வகிர்த்த திண்டயில் கரமில கியருக்
திருத்த மிஞ்சிய வடியவ ரகமுற பலவேதை

செயத்த குங்குண முடையவர் குலமறு
சினத்தி னின்றவ கரிமரு வியபுய
திருப்ப ரங்கிரி தனிலுறை குருபர முருகோனே

விருத்தி யன்பொடு பரவிய முனிவரர்
களுக்கு நின்றவ வுனையடை யெளியனின்
விதிக்கு ணின்றவ பதமல ரருளுவ தெதுநாளோ

மிகுத்த தண்டலை பொதுளிய நிறைவொடு
செழித்த தண்பணை வளைஇய பொழினகர்
விதிக்கு டந்தனி லுயரிய திருமலை பெருமாளே.

தானன தந்த தந்த
தானன தந்த தந்த
தானன தந்த தந்த தன தான

978. ஆரேறு கின்ற பண்பை நாடாளு கின்ற கிந்த
ஆரேறு கின்ற தந்தி மணிமார்பன்

ஆனேறு கின்ற சங்கு காதேறு கின்ற நந்தி
ஆடேடு கின்ற மைந்த னெனலான

பாறேடு கின்ற வண்டர் பேறேறு கின்ற விண்டு
பாறுறு கின்ற செஞ்சொ லபிராமி

பாவோது கின்ற பைஞ்சொ லாலோது கின்ற அன்பர்
பாடோது கின்ற சந்த புகழாளா

வீறேறு கின்ற தன்ப போராடு கின்ற வம்பர்
மேவீறு கின்ற திண்கொ ளயில்வீரா

மேலேறு கின்ற செந்தில் வாழ்வேறு கின்ற தொந்த
வீயேறு கின்ற பொங்க ருடையோனே

மாறோடு கின்ற வண்ப ரூடேறு கின்ற வெந்தை
மாலோடு கின்ற வுந்த னருடாராய்

மாவாழு கின்ற குன்றி லேவாழு கின்ற பண்கொள்
மாவாரு கின்ற தொண்டர் பெருமாளே.

தனதன தனதன தனந்தா தானன
தனதன தனதன தனந்தா தானன
தனதன தனதன தனந்தா தானன தன தான

979. வினைவலி பெரிதென வுணர்ந்தே நாடொறும்
உனையடை யெளியனை நினைந்தா யோயிலை
வெகுவித கபடொடு வளைந்தே யாவியை பலவாறாய்

வெளிவர வுடலற சினந்தே வேதைசெ
யிடிபடு மரவென முனிந்தே மேலையின்
வினைவழி வருதுய ருளைந்தே மாய்கையி லுழல்வேனோ

உனைவழி படுமெனை யிகழ்ந்தே கூறிய
சிறியவர் மொழிபல நினைந்தே வாதுசெய்
உளமொடு மலைவுற லடைந்தே நாடொறும் மனமாழ்கி

உலைவிடை படவிடல் அறந்தா னோவொரு
உருவென வளர்பர நலஞ்சேர் நாயக
உயர்பொழி லகிரிறை யெனும்பே ராதர முடையோனே

கனைகட லறுமென மொழிந்தே மாமறை
பரவிய குருபர வயஞ்சேர் தாரயில்
கரமிலகியகுக கடம்பார் நேர்சினை யதன்மீது

கவிழிணர் மலர்தொடை யணிந்தோய் மாபரை
பயிரவி திரிபுரை புரந்தீ தாயமை
கமைநிறை வுடையவள் அறம்பே ருகிய வொருதேவி

அனையினு மருடவை மிகுந்தே தேவர்கள்
வழிபடு மலைமக ளெனுந்தாய் பூவிடை
அரனொடு முறைபவள் பணிந்தோர் நாவிடை வளர்தேவி

அறமொடு பலதவ விருந்தாய் மேலையில்
வருமறு முகமுள சுதன்பே ருகிய
அணிதிரு மலைவளர் குகன்று தாவுயர் பெருமாளே.

தன தனந் தான தந்த
தன தனந் தான தந்த
தன தனந் தான தந்த தன தான

980. சொலிலடங்காத செந்தில் பதியிருந் தாளுகின்ற
சுகமுகந் தேவழங்கு முருகோனே

துடர்பெனும் பாவ பந்த வினையடர்ந் தேமனஞ்சு
சுடுசரந் தூவ நின்ற படிவாழ்வில்

வலிமிகுஞ் சேம மின்றி கலிவடைந் தாசை மிஞ்சி
மதியெனும் போத மின்றி மடமாதர்

மயலிடஞ் சேர வொன்றி மிடியுறுங் கேடமைந்து
மனமுடைந் தாடி நொந்து பலநாளும்

மெலிவுறும் பீடை வந்து வுயிர்கொளுந் தோதில் நின்று
வினைசெயுந் தீதருந்த வுழல்வேனோ

மிருவளஞ் சூடு பொங்கர் தலைபலஞ் சூடுகின்ற
மிளிர்தடஞ்சேர் குறிஞ்சி வளநாடா

கலியுகங் காணிதென்று வுலகங்கூற நின்ற
குடையுகங் காவல் கொண்ட மயில்வீரா

கவிகொளுந் தேவ வன்பர் துதிகொளுந் தூய பண்பை
கமலையின் பேறு குன்றில் பெருமாளே.

தன தந்த தான
தன தந்த தான
தன தந்த தான தன தான

981. அருள்கின்ற ஞான வுருவென்ற தாக
அமைகின்ற சேம முடையோனே

அரசென்ற தீர வரதுங்க நாத
அமைழவென்ற தோளி னெழிலோடு

தருவென்ற வீகை யருளொன்ற நாம
தயையென்ற ரூப மகமாயி

தனிநின்ற தேவி சிவனென்று காமி
தழைகின்ற வாமி யெனவோடு

பொருளென்றுநாடு மறைகண்டிடாத
புகழ்கொண்டலான வெமதாயி

புரிகின்றதான தவமென்றபால
புணிலொன்ற வேலை யிடவேலைபோல்

வருகின்ற பாவ மிடிதங் தெனேடு
வளர்கின்ற தீதை யெவர்பாவில்

மனமொன்றியோத திருதங்கி வாழு
மலையின்கணுனை பெருமானே.

தனதன தனன தான
தனதன தனன தான
தனதன தனன தான தன தான

982. மனநிலை நிலாதநேக வழிதெறு முலாவிநாளு
மயலுறவி லேயுளாழு முறையாக

வருபவர் களோடு கூடி தருமநெறியே யுறாத
மறவினையிலே பயிலு நெறியாரும்

இனமுறை யுளோர்களான கொடியவர் களோடெநாளு
இறுதி நிலையாக நீகை விடலாமா

இரு சமய வாதிலேறி சமணரறவே முனாளில்
இடு கழுவிலே யுளேற விடுவோனே

கனகனற தூணுளாகி வருமுகிலை மாமனுக
கருதி யுரை யோது நாத முருகோனே
கனப புழுகாதி நான நறு விரை விநோதமாக
கமழ் மருமஞான மேவு பொழில்வேளே
அனமுறை தடாக வாவி நிறைவு மிகலான சோலை
அழகு குடியாக வாழு மலைநாடா
அணிலறியவே ருணுதை தருநிரைகளால் விதான
அணிகொடிரு நாகமேவு பெருமாளே.

தானன தந்த தந்த
தானன தந்த தந்த
தானன தந்த தந்த தன தான

983. பாழாக நொந்தழிந்து வீணுக வும்பிறந்து
பார்மீதலைந்த பந்த முடையேனை
பாராதிருந்த தென்ற நூலோதுகின்ற பண்பு
பாமாலையும் புரிந்த புகழ்பாடி
தாழா திலங்குமன்பி னூடாரு கின்ற கந்த
தாதா வனம் புரந்த குறமாது
தானுகவும் பொருந்த வேயானை வந்தடைந்த
சார்பாக நின்ற பண்பை முருகோனே
கூழாருகின்ற செஞ்சொலாலே வழங்கு மஞ்சல்
கூறுதிருந்த தெந்த முறையேயோ
கோவே குறிஞ்சி நின்ற தேவே வணங்கு மன்பர்
கோளோட வென்ற சந்த மலைவாழ்வே
எழாகவுந் திரண்ட பாரேழையும் புரந்து
ஈடேறவும் புரிந்த செகவீரா
ஏரார்கடம்பு சந்து சூழ்சோலையும் பொலிந்து
ஏர்மா நகம் பிறங்கு பெருமாளே.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தன தான

984 கடுகள வேனுமன்பு கொளவிலை யேலடைந்த
கடையனை யாள்வதெந்த முறையாமோ
கனிமன மாகி யெங்கு முறுபரமான துங்க
கதிரயிலான கந்த முருகோனே
கடுவகி கோதுகின்ற சிகிபுற மேவு மெங்கள்
கனகுக நாத செந்தி லுறைவாழ்வே
கனிநிறை வான பொங்கர் மலைவள மேவுகின்ற
கரிவள நாட பண்டை யுடையோனே
உடுநிக ராக நின்ற நடுகுற பாதணைந்த
உமை சிவகாமி மைந்த னெனவோத
உறுபர ஞான தந்தி மருவிய சேம செஞ்சொ
லுதவிய தான அஞ்சல் அருள்வாயே
வடு நிகரோது கின்ற விழி மடவார் களின்ப
வர வறவே யுகந்து னருளாலே
மதி தருவாய் சிறந்த பொழில் நகர் மேலை நின்ற
வரமலை மேலமர்ந்த பெருமாளே.

தனதான தந்த தந்த
தனதான தந்த தந்த
தனதான தந்த தந்த தன தான

985. அரமேறி நின்று கொஞ்சு நீதி கூர்மை கொண்டிலங்கும்
அயிலேறு நின்ற செங்கை யுடையோனே
அணியார் கடம் பணிந்த புயனே விளங்கு தண்டை
அழகார் பதந் துலங்கு முருகோனே
திரமார் வளஞ் சிறந்த பொழிலூரிடம் புரிந்த
திருவே வறந் தழைந்த செயலாளா
செகநாத கந்த வெங்க டுரையே பழம் பொருந்து
செயல் சேர் முகுந்து தங்கை மகமாயி

வரமா யிலங்க நின்ற மகனே குறிஞ்சி யின்ப
வரையே பிறங்க நின்ற பொழிலூரா

மற சூரருஞ் சிதைந்து விட மேருவுங் கலங்க
வருமேவாய் முழங்கு கொண்டல் வளநாடா

கரமா பினின்ற துங்க குகனே வயம் பிறங்கு
கதிரேசகம் புரந்த வொருதேவா

கறியோடு மஞ்சளிஞ்சி வளர்நாடணிந்த துங்க
கருணா கரஞ் சிறந்த பெருமாளே.

தனத்த தன தான தான
தனத்த தன தான தான
தனத்த தன தான தான தன தான

986. மயக்க மிக மேவி மேவி வருத்த வரு தேத யாளம்
வகுக்க மன மேயி லாத முறையாக

வகைக் குவடுளான தேவ மறைக்கு முயர்வான ஞான
வரத்துடையவா குமார முருகோனே

பயக்கவலை யாலநேக திருப்புகழினால் பராவு
பழக்க முடையே னியாய முடையோர்கள்

பதத்துணை யிலே யெநாளும் இருக்கு மெளியேன் விசார
பவத்தி லணுகாத பாதம் அருள்வாயே

செயக்குமரனே வுலாச மதத்துணைவனே முநாளில்
தெளித்த தமி ழோதியோதி யருளோடு

திருத்தமுறு நீறுபூசி எனக்குரிமை யான வாய்மை
சிறக்கு முறை கூறலான வொருதேவா

உயப்பவ மதால் தளாடி நெருக்கு பிணி யூடுலாவி
ஒழிக்க வருதே யிதோடு முழல்வேனே

உயர்த்த திரு நாகமேவி யிருக்கிற மயூர வீர
உவப்பெழுதி யாகமேசம பெருமாளே.

தனன தன தான தான
தனன தன தான தான
தனன தன தான தான தன தான

987. நடனமயின் மீதிலேறி வருகுமர னேதயாள
நளினகுண சேம நாத முருகோனே
நவ நிதியமே சுகானு பவவரதமே நியாய
நளிருபுலமே தியாக முடையோனே
கடல முதநேர்மையான இனிய வசனு குமார
கருணையரசே தியான வழிகூடி
கருது மடியார்கள் சேம நிலைய வடிவான தாகி
கமழு சரணாலயாதி எனலான
அடலயில் கராவி சாக தினவு தயமான சோதி
அறுமு கவிலாசவாய்மை யுறுவாழ்வே
அடிமையெளியேனெனும் மிடியிலுழை வாகி மாழ்கி
அழிய விதியோ மயான மெனலான
சுடலையினி லேகி நீறி விடவுமுன தார்வமோ சொல்
சுருதி நிறைவாகி நானு முறைவோனே
சொரியுமழை மேகமேவு பொழினகருளான தேவ
சுடர் செய்திருநாக ஞான பெருமாளே.

தான தான தனு தன தானன
தான தான தனு தன தானன
தான தான தனு தன தானன தன தான

988. பாவி யேழை சதாபடு பாடினை
யோதி யோதியு ளாரு ளோரிலை
பாலஞான மயூர பராபர முருகோனே
பாரமாவினை யாளுத ளுய்க
நீதிமேவு தயாளமனோகர
பாடலோதிய தேதெரிழி லாகிய வெளியேனின்
ஆவிபோக வுளுதா வாகிய
வேலையேவி யினுடல் போய்விட
ஆவதான யமனுநிலை யோடிவண் வீரவேனும்

ஆசிகூறி மகாதவ யோகிக
ளோடுலாவிய தாயக தூயவ
ஆசிலாதவ மாதவ சேவக னெனலான

மாவிநோத வமோதய காரண
பூமிநாத புராதன தேவர்கள்
வாழ நேர்மை யிலேமன மேவிய முருகோனே

மாசிலாதவ ரோடுற வாடிய
ஞான பாலத யாபர மாமலை
வாழுமோய குணாகர தூபத ரகவாழ்வே

தேவி வாலைம னோன்மணி யாமளை
நீலி கோமதி மாரிப ராபரை
சீயமேவு வராகி சுதாகல முடையோனே

தேடநாளுமகோனத மாய்வளர்
தீதிலா திரு மாமலை மேலமர்
தீரவீர குகா கிருபாகர பெருமாளே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

989. கருணை மழையாகி யிந்த வுலகபரி பாலனஞ்செய்
கனக மயமாய் நிறைந்த முருகோனே

கருது மெளியேனி டைஞ்ச லொழிய மயின் மீதெழுந்து
கனிவு மிகவேபி றங்க வரவேணும்

அருணகிரி நாதரின் சொல் புகழ் மருமமீத ணிநத்
அணிகொள் முருகா வெனன்பி னுறைவாழ்வே

அறுமுகத யாளகந்த அமித செக நாததுங்க
அறிவினறி வாயமைந்த பெரியோனே

தெருணடன மாடுகின்ற பரம சிவமே வணங்கு
திரகு ரவனே செயந்தி வரைவாழ்வே

திருவுறை மகா முகுந்த மருக சிவகாமிமைந்த
செய லருமையாள னென்ற வடிபா

அருணய விலாச பண்பை நகர் திபனு யெழுந்த
அருமை நிறைவான தந்தை யெனலான

அதிபவுன தாணலங்கள் தருத தியிதே வழங்கு
அழகுதிரு நாகமர்ந்த பெருமாளே.

தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த
தன தான தந்த தந்த தன தான

990 மிடியால முண்டு கண்ட படியாக நின்றருந்தும்
விதமாக மண்டு துன்ப மயலாலே

வெறியூடி நின்ற பஞ்ச படுபாடி னைந்து நைந்து
மிகுவாதை யின்க ணின்ற வெளியேனை

படியாத வஞ்ச நெஞ்சமுடை யேனையின் சொலின்றி
படி றேறுகின்ற புன் சொலு டையேனை

பணிபேணு கின்ற வன்பிலனுகாம னின்று நின்று
பத மீவை யென்று கெஞ்சு மடையேனை

தடியாக நின்றிணங்க முடியாது மூன்று மூன்று
தவறேறு கின்ற வன்சொ லினை நாளும்

சரியான தென்றறிந்து கரி யோடறைந் தறைந்து
சமமா யறிந் துணர்ந்த நெறிபேண

மடி யேறுகின்ற சிந்தை பிடிவாதமுந் துடர்ந்த
வழி யேறுகின்ற பண்பி னுறைவாகி

வரு மேழையின் கணன்பு தருவாய் நலஞ் சிறந்த
வளமா நகங்கொள் கந்த பெருமாளே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

991. மிடிவெறியு டாடநைந்து பவ நாலை மேல மிழ்ந்து
வெகு விதமனோ லயங்கள் தடுமாறி

விரத நெறி சாதனங்கள் புரிமவுன யோக மென்ற
விதிவழிப னூறு மின்றி யிதுகாறும்

பொடி யணி புராரி தந்த குருபரச தாவணங்கு
புல நிலையிலாத மைந்த வெளியேனை

புயவென வுமேனுடு கொஞ்சு மன நிலை யிலாதடர்ந்த
பொறுமை சிறிதேனு மின்றி முரடான

தீடிமா மெனு விளங்கு மனமுடையனுக வொன்று
தமிய னெனையாள வந்து னருளாலே

சகல கலையாக மங்கள் சொலு முறையிலே நடந்து
தரும நெறிமேவுமன்பி னிடமாக

முடிவு பெறு மாதவங்கள் பெறு முறுதி யாக வந்து
முன மருள் செய்தே வுகந்த முருகோனே

முருகுபொழி சோலை யண்ட ருலகு வரைமேய் வளர்ந்த
முதிய திரு நாகமர்ந்த பெருமாளே.

தனன தன தனன தன
தனன தன தனன தன
தனன தன தனன தன தன தான

992. மனது பாவச முறவுனருமை தர வருகததி
வரதகுரு பாகுமர முருகோனே

மகிழு பழனி யிலுறைபு மறுமுகவ சரதவனி
மருவுபுய பரசமய குலகாலா

வனச மலருறைகமலை நடனமிடு பொழினகரில்
வருண மயின் மிசைபவனி வருவோனே

மகதி தழுவிய முனிவர் சுருதி நெறி மறைபுகல
மலைய முனிவரர் பரவு மொருதேவா

தனத தன தடியாக மிசை வளருமொரு முதல்வ
தருண தயை தருவரத முடையோனே

சரண மடியவர் தனது வுரிமை யென வருஞ்சிற
சரதபரி மளமரும வரதீபா

தினதகரி வர தயவு பெருமை பெருகிய தரும
சிவனு தலிலெழு பொறியில் வருவோனே

செயக மலமுறை கமலை மலையி தென வுலகுபுகழ்
திருமலை நல் சிமையமுயர் பெருமாளே.

தனன தனன தன
தனன தனன தன
தனன தனன தன தன தான

993. அருள் பெருகிய துறை தெருள் பெருகிய மறை
அணி பெருகிய நிறை வெழிலாளா
அணி பெருகிய பொழில் தரு பெருகிய சினை
அமை பெருகிய மலை வளநாடா
உருள் பெருகிய தனவணி பெருகிய மய
லூற பெருகிய தினை வனமேவி
உரை பெருகிய மொழி தா பெருகிய களி
உற மிளிரிய வுர முடையோனே
மருள் பெருகிய மண துருள் பெருகிய நார்
வழி பெருகியவுல கிடையேகீள்
மதிபெருகிய முக வரை பெருகிய தன
மலர் பெருகிய குழன் மடமானார்
தருபெருகிய மய விடை பெருகிய வெனை
தளிர் பெருகிய மலர் சரணவாய்
தனில் பெருகிய வருளிட பெருகிய ததி
தனி திருமலை வளர் பெருமாளே

தான தன தான தந்த
தான தன தான தந்த
தான தன தான தந்த தன தான

994. சேவக மயூர கந்த பாவல தயாள துங்க
தேவர்கள் மனுலயக் கொள் பெருவாழ்வே
தீதமை விநோத வஞ்ச பாதக முனோர் களஞ்ச
சேயவயிலோ டெழுந்த செகவீரா
காவரசனுதி யண்டர் மாமுனிவரோடு வந்து
கால் பரவு சேம சந்த வரை நாதர்
காதல்புரிமாதர் தங்கள் மாயவலை யாலுழன்று
காசினியிலே பிறந்து வெகு நாளாய்

தாவர மதாயிலங்கு சேமசாணலையங்கள்
சாரு நிலையேது மின்றி யழிவேனோ
சாலவரு பாவ பந்த மூடு கட மூடை கொண்டு
தாரணியிலே மயங்கி யிதுகாறும்
மாவரத மேவு மன்பு பாவனையிலே நடந்து
மாழு மெளியேனை யுந்த னருளாலே
வாழு மருளே புரிந்து சேம முறவே வழங்கு
மாதிருமகா நகங்கொள் பெருமாளே.

தனத்தா தனந்த தன
தனத்தா தனந்த தன
தனத்தா தனந்த தன தன தான

995. கடத்தால் வருந்துதுனி யறுத்தே யெறிந்துனது
கழல்ச் சேருகின்ற நிலை யடைவேனோ
கமச் சூலினந்தவழு பொழில்ச் சூழ் பிலங்கு நகர்
கதிர்க்கோவிலஞ்சி யுறை பெருவாழ்வே
அடத்தால் வருந்திரளை யழித்தே செயந்திபுர
அருட்கோ புரந்தழுவு தளிவீரா
அரற்கோ மறைந்தபொரு ளுரைத் தோய் குறிஞ்சி நில
அமைப்பேர் பொருந்துகிற வெழில்வேளே
குடத்தோ டெதிர்ந்ததன மடத்தோ ரிடஞ்சரச
குணத்தோடிருந்தவர்கள் மயன்மூழ்கி
குறிப்பாயிருந்த நர ககத்தே விழுந்து துயர்
குமைத்தே யருந்த விட வினியாகா
படக்காடெழுந்த பணி யுடற் கூறெழுந்த பிணி
பதைத்தோடிடும் கருணை புரிவோனே
பகற்காடெழுந்த வயில் பிடித்தே சிறந்திரு
பதிச் சீர் பொருந்து மலை பெருமாளே

தனத்தன தனத்த தான
தனத்தன தனத்த தான
தனத்தன தனத்த தான தன தான

996. உடற்சுக மளிப்பதான பொறுப்பினை விடுக்கி லேழை
உடற்பிணி படைத்த நாயை நிகராக

உடைத்திடு பவத்திலாழ வழுக்கிட வருத்த மேவ
உளைச்சலை விதித்ததான முறையாகும்

கடற்பவ வவற்குளான தூரத்தினை யெடுத்து நீதி
கணித்தவர் நலத்தை மேவ அருள்வோனே

கணக்கண சிகிக்கு மேலை யிடர்க்கிட ரளித்த சேம
கதிர்க்கடலெனக்கு மேன்மை தரவேணும்

திடத்தசுர் பொரித்த வேலை வலக்கர மிருப்பதான
செயக்குக குறத்தி தேடு மணவாளா

திருத்த மெயவர்க்குணைய விருப்பம தளிக்கு மூல
செகப்பர கரிக்கு மாலை புனைவோனே

தடப்பொழிலுடுத்த வூரினிடத்தமை சுகத்தமேவர்
தமைப்புர விருத்தி மேவ வருவோனே

சகத்தவர்களுக்கு வாய்மை நிலைத்திட வுருக்கமோடு
தனத்திருமலைக்குண் மேவு பெருமானே

தன தனன தான
தன தனன தான
தன தனன தான தன தான

997. மனமெலிவுருத முறைமை தேனிலேழை
வாத முறு சேம நெறிதாராய்

மக பதிப்ராவு குமர குருநாத
மகிப செகவீர முருகேசனே

அனவாத ஞான மொழிப் பரமயோக
ஆதிபதி சகாய முடையோனே

அறிவி னறிவாகி வுருவி னறிவாகி
அருள் புரிதயாள முறுவாழ்வே

தனமலி குபேரனிகரெனவு மாக
தனதடியர் வாழ அருள்வோனே

சகல கலையாதி முடிமிசையுலாவு
தலைவ புலவோர்க ளுளநேயா

எனதருமையான குண நிதிய மேவு
ளிருநிதிய மேவும் அருடாராய்

எழில் பொழிலுளான பொழினகரின் மேவு
இமையவர் குலேச பெருமானே

தான தான தனதன தானன
தான தான தனதன தானன
தான தான தனதன தானன தன தான

998. வாதவாயு வயிறிடை யூதிய
தான தீய பிணியினிலேபடு
வாதை யாளி மெலிவமை நாயினை யனையேனை

மாதர் மோக மருவிய பேயனை
பாவரூப மிலகிய கோபியை
வாதின் மோதுகிற கடுவாழியை கடையேனை

தீததான செயலினையே புரி
வார் கணேச மனதியை கோளனை
சேமமேது மறிதலிலாதமை கொடியேனை

தேறனோ ரவரு தமிழ் வாசக
மானபாடை யியல் கலையாதிகள்
தேரு நேர்மையில தமை பாழனை மடிமேவி

போத ஞானமுடைய வரோடுற
வாட தூயகுணமிலி தேர்மையை
பூவிலே மிடி நலிவ தான்வரு மெளியேனை

பூதி பூசி மன நிலை சாதனை
யாதி சேரு முறையிலனுகிய
போலியான கயவனை மாய்கையி னுழல்வேனை

கோத சீதி பயிலிய கேடனை
சாதனோ ரமன மிசை வாழியை
கூவியாள வருவதெனுளென மனமாழ்கு

கோல மேவு மறிவிலியாமெனை
ஞானதீப பிரபை யிலாளுதல்
கூடுமான திருமலைமேல்வளர் பெருமாளே.

தனதன தனந்த
தனதன தனந்த
தனதன தனந்த தன தான

**999.** பிணியினி லுடைந்து மிடியினி லுடைந்து
பிடிநடை யுடைந்த மடமாதர்
பெருமய லருந்த வளர்பவ மருந்த
பிழையிடை வருந்த விடலாமா
மணியழ க்மைந்த தொகைபல சமைந்த
மயின்மிசை யெழுந்த முருகோனே
மவுனம தமைந்த குருமுனி சிறந்த
மதிபெற நிறைந்த குருநாதா
தணிகையி லிருந்து வளர்பர முழங்கு
சதுர்மறை வணங்கு முருகோனே
தமியனை வருந்த விடிலது பொருந்து
தரமிலை முகுந்தன் மருகோனே
மணிபல வரன்றி யெறிகிற தரங்க
மலிகுள மிருந்த பொழிலூரா
வரதிரு வளர்ந்த மலைமிசை விளங்கு
மதிதயை முதிர்ந்த பெருமாளே.

தான தந்தன தந்தன தானன
தான தந்தன தந்தன தானன
தான தந்தன தந்தன தானன தன தான

**1000.** பாவ வஞ்சக மிஞ்சிய கோளர்கள்
தீய வம்பினி கழ்ந்திடு பாவிகள்
பாவி தண்டமி ழின்புல வோர்களை யவமாக
பார வஞ்சனை புஞ்செய வேகினை
வோடு கின்றவர் பண்பிகழ் வாதிகள்
பாலு கந்தவர் நஞ்சென வேமொழி பகர்வோர்கள்

ஆவ லன்பையி கழ்ந்தவர் மாய்கையில்
சால நின்றவர் வன்கணர் பாரிடை
ஆறறி ந்தவர் நொந்திடு மாறிகழ் கொடியோர்கள்

ஆர வின்றின நன்பணி யாளரை
சீறு கின்றவர் பொன்பத சேவையின்
ஆறெ ழுந்தவர் நைந்திடவே மொழி சொலுவோர்கள்

கோவை மிஞ்சித வஞ்செறி மாதவர்
பால வம்புரி நெஞ்சின ரோடிவர்
கூறு கண்டுடல் சிந்திட வேல்விடு முருகோனே

கோவ ணஞ்செறி சங்கர னேமுரை
தேற நின்றவ சங்கரி பாலக
கோல செந்தினை யின்புன மேவிய குறமாது

மாவ கன்குளை வுங்கொள மேவிய
தூய வன்புநி றைந்தகு ணாகர
மால கன்றிட வுன்பணி யேதர வரவேணும்

வாழை தெங்குக டம்பெழின் மாதுளை
மாம ரம்பல வின்குழு சூடிய
மாவ திந்துறை குன்றுறை மேலவர் பெருமாளே.

தந்தன தான தந்த
தந்தன தான தந்த
தந்தன தான தந்த தன தான

1001. வஞ்சகமான வின் சொல் நெஞ்சக மேவுகின்ற
வம்புடையோர் கடங்க ளுறவாகா

மந்திர மாவ தென்ற வெண்பொடி நீறு பூசி
வன்சுர மோடவென்று மதியாத

வெஞ்ச மணுதி துஞ்சி முன்பமை வாதி லஞ்ச
வென்றவ னுன கந்த முருகோனே

வெங்கனல் வாயுமிழ்ந்த முன் பவவாதை வந்து
மென்றெனையே யருந்து முறையாலே

அஞ்சு தலாகி நொந்து வெம் பிணியாலுழன்று
அன்புடையோர்களின்றி யுழல்வேனை

அந்தரி வாமி கங்கை சுந்தரி தேவி யிந்த
அம்புவியாளு கின்ற செகமாதா

மஞ்சனு மாகி யென்ற னன்புறை தேவுமாக
வந்தவனென கந்த வரதீபா

மன்பொழி லூரிலன்பர் வந்தடி பேண நின்ற
மங்களமாய் நிறைந்த பெருமாளே.

தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன தன தான

1002 உனதுபி பங்கய மாகிய தாண் மலர்
பரவு பண்பின னாகியயேழையை
உரிமை யன்பொடு மாதர வாலருள் புரியாது

உலைவு றும்பவ வாதையி லேயிடல்
பயிலு கின்றவ னாகினை யாதலின்
உயிர் கொளும்படி வேலினையேவிட வரவேணும்

கனகி செண்பகி மாதர சாகிய
புனிதை யந்தரி கோமளை யாமளை
கருது கின்றவ ரோடுற வாடிய வொருதேவி

கமலை யும்பணி மாகரு ணாகரி
குமரி சண்டிகை வீரிய ராபரை
கனிவு னுஞ்சுத னாகிய கோமள முருகோனே

தனத முந்தையி லேயொரு வேடுவ
னெனவெ ழுந்தவ மாசிவ பாலக
சரத சந்தன மாவரை மேவிய செகநாதா

தமிழ்த ழைந்தவ மாமலை யாசன
அமுத செஞ் சொலி னலைய மீனவ
சருகு தின்பவ ரோடுறை மேலவ ரகவாழ்வே

மனது கந்துனையே பணி மாதவ
ரிட நிறைந்தவ னேயதயாபர
வளியணைந்தவனே யருமாசல முடையோனே

வளரு பண்பணை யோடெழில் சோலைகள்
மருவு பண்பொழில் மேல்புற மாதிரு
வதிய நின்றுயர் மாமலை மேவிய பெருமாளே.

தன தனன தான
தன தனன தான
தன தனன தான தன தான

1003. உடனல மிலாத படியெளிமை நாளும்
உலைமெழுக தாக பலவாறாய்

உயிர் பிரிய வேதை தரு பிணியி னூடு
உலை யபவ மூடு கொடியேன்முன்

நடன மயில் மீதில் பயிலுரிமை மேவு
நளினமொடுலாவி வரவேணும்

நகாதிபனுன சிவகுமர நாத
நல மிலகு சேம முடையோனே

அடலவுணர் மாள கொடியிமை முனக
அறவகிருவேல் கொள் கரவீரா

அரச ரெகு நாதன் மருக குருவாகி
அருள் புரிய வேணு முருகோனே

திடமுறதியான மனவுறுதி யோர்கள்
தெளிவுபெற நாளும் அருள்வோனே

செயகமலை வாச மருவு மலைமீதில்
திகழு மருமேனச பெருமாளே

தன தான தந்த தன
தன தான தந்த தன
தன தான தந்த தன தன தான

1004. முறியாத பந்த வினை யினை வாடவென்றுவரு
முறை யோதியும் பனுவல் பலகுடி

முருகா நலம்பெயென நூனையே வணங்கு நெறி
முறையாகவும் பாவு மெளியேனை

தறிமேலெரிந்துவரு எரி மீவுகின்றதென
தளர் பாவமுந்தை வினை மிகமேவி

தனியே யருந்துகிற செயலே யறிந்துரிமை
தனிலேதுமின்றி நிதம் உழல்வேனோ

அறியாத பண்டைபுரி கொடிதான துன்பபவ
அமைவா யெழுந்த கட முடையேனை
அருள் சேருகின்ற மயில் புறமே லெழுந்துனது
அடி சேருகின்ற தரம் அருள்வாயே
குறிதாய் விளங்கு மொரு முனிபேர் விளங்கு மறை
குணமாய் மொழிந்த குரு வெனவோது
குமரா பலங்கள் மலி வொழிலூர் குடங்கண்வளர்
குலைமேவுகின்ற மலை பெருமானே.

தனத்த தன தான தன
தனத்த தன தான தன
தனத்த தன தான தன தன தான

1005. சகிக்க முடியாத பிணி வருத்துகிறதே யிதனை
தழைத்த கவியாலுனது புகழ்பாடு
தாத்தி லெளியேன் முறையி லுரைத்த படியே பரவு
தயத்தை நினையாது விடல் அழகாமா
சுகிர்த்தையுடையா யெனது மனத்துறை பாரா கருணை
தொகுத்த கடலே யருமை யுடையோனே
துணைச்சரண மேயலது கதிக்கு வழியேது மிலை
துரைச்சி மகனே யிமய மகராஜன்
வகித்த வொரு பேரனென வுதித்த குமரா கழுகு
மலைக் குளரசே பழனி மலைவாழ்வே
மதிப்புடையவா குகையி லிருப்புடையவாவுயரு
மனத்துறவு ளோர்களுற வுடையோனே
அகிக்க வுவலாள மயில் புறத்துறைகுகா பகவன்
அருட்சுத தயாள மன முடையோனே
அறத்திறை வான பொழின் நகர்க்கதிபனே கமலை
அருட்பெ யுருவான மலை பெருமானே.

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தன தான

**1006.** வணக்க மிஞ்சிய வடிய ரகமிசை
யிருக்கு மந்திர முதலிய குருபர
வரத்தி ரண்டெழு மொருமுகி லெனவரு முருகோனே

மனத்தி லுன்றனை யலதிலை கெதியென
வுரைத்த செஞ்சொலை யிதுவரை யுணர்கிலை
வழக்கி டுந்தர முடையவ னெனுகிலை யறியாயோ

குணக் கொழுந்தென மலைதொரு மிளிரிய
தவப் பெருந்திரு மலைமக ளருள்சுத
குறத்தி யிங்கித மொழிதர வனமிசை கடிதேகி

குறிப்ப வண்கரி வரபுய மருவிய
தாரத்தி லன்பொடு மயிலவ னெனவுயர்
குடிக்கொழுந்தெழ புளகிதமுற தழு வியவேளே

மணக் கடம்படி குடிகொளு மொருமுதல்
யெனைத் துடர்ந்தமை பவமற மயின்மிசை
வரைக்க ணின்றவ சரவண பவகுக செகவீரா

மதிக்கு மன்பர்கள் மனமகி ழுறபல
னளித்து வந்தவ கதிரவ னிகரிய
வரைத்த சந்தன பரிமள களபமெ யுடையோனே

பிணக் கொடுந்துணி புரிபவ ரெனவிடர்
படைக்கும் வன்றிர ளுடையவர் குலமற
பிளக்க நின்றயில் பயிலிய வலகர முறுவேளே

பெருக்க மிஞ்சிய பொழில்வள மலிநகர்
குடக்கருந்தவ முயரிய தெனவளர்
பிறக்கு தென்றிரு மலையுறை வலநல பெருமாளே.

தனன தன தான தந்த
தனன தன தான தந்த
தனன தன தான தந்த தன தான

**1007** பவ வுருவ மேவளர்ந்த மடமை நிறை னாயமைந்து
பயிலு மொழி நாடகஞ் செய் முறையாலும்

பவளநிற மேயி கழ்ந்து கயி ரவம தாக நின்று
பருகு மித மூறலெழுந்த வெழிலாலும்

கவர் மதியமே முகந்த வதன மெனவே விளங்கு
கனகமெனவே பிறங்கு முகமாலும்

கமகமெனவே வணிந்து நறு விரைச தாமணங்கொள்
கமழுகட மேவிலங்கு மிழையாலும்

குவடு நிகரா மிதென்று புகலு முறைமையோ டெழுந்து
குலவு பணியாடுகின்ற தனமாலும்

குமைய பிறவாழியின்க ணலிவு மிகவே பிறந்து
குமரவுன தாண லங்க ளறியாமல்

அவமுறு தலாவிடைந்த பவ வினையுமே ளிலங்கும்
அறுமுக குகா பதங்க டருவாயே

அரச குருநாத பண்பை குடகுதிசை பால்தவங்கள்
அணிகொடிரு நாகமர்ந்த பெருமாளே.

தான தானன தானன தானன
தான தானன தானன தானன
தான தானன தானன தானன தன தான

1008 ஏழையா லுனையே புகழ்பாசுரம்
நீடு வாழ சதா பிரயாசைகள்
ஏவ லோடுமனே நிலை மேவிய பெரியோர்கள்

ஈறி லாமொழியாகிய தாய் தமிழ்
ஓதியேவுண ராதவனாகிய
ஈன வாழ்வின னாலுமை பாடல்க ளினிதாக

பீழை போக பணேடினிதே சொலும்
ஆவலாளர்கள் நேயர்கள் ஆரவில்
பேணு கான்மலர் சூடிய மாமன முடையோர்கள்

பேத நாயினையே நிகர் தீயனை
நேருவாய்மை யிலாகெடு மூடனை
பீடுளேனெனவே நினை வாவர்கள் அனைபோல்வார்

பாழை மேவிய தாயக மாதர்கள்
சால மேன்மையினாலிவர் நாடொறும்
வாழ நீதையை யேதர மாமயில் மிசையேறி

மாத யாளவி சாலம தாலிவண்
வாகுகா கருணாகரனே யருள்
வாலை தேவிப ராபரை தேடிய சுதவேளே

கோழை யேவுரு வாகிய மாவசுர்
தீய வேல்விடும் வீரவ ரோதய
கோடுலாவிய மாபணை சூழ்வள முளநாடா

கோதிலாதவ ரேவுறை மாநகர்
மீதுவாழ்வுறு பால குணாகர
கோலமார் திரு மாமலை மேலுறை பெருமாளே.

முற்றிற்று

குமரன் திருவடிகளே சரணம்.

ஓம்






லோகாம்பிகை பிரஸ், தென்காசி—'40.